# தொல்காப்பியத் தொடரியல்

முனைவர் செ.வை. சண்முகம்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாவது முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப்
பயிலக வளாகம், தரமணி, சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Tolkāppiyat Toṭariyal |
| Author | : | Dr. S.V. Shanmugam<br>194, Mariappa Nagar<br>Annamalai Nagar - 608 002<br>Ph: 04144-238246 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai - 600 113.<br>Ph: 044-2254 2992 |
| Publication No. | : | 526 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | viii + 408 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs. 120/- (Rupees One hundred and twenty only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road, Luz,<br>Mylapore, Chennai - 600 004<br>Phone : 24984693, 24661807 |
| Subject | : | Syntactical Study of Tolkāppiyam |

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113.

## அணிந்துரை

பழந்தமிழ் இலக்கணப் பனுவலான தொல்காப்பியத்தின் தொடரியல் கோட்பாடுகளைச் சில விதிகளாக வகைசெய்து இலக்கண, இலக்கிய உரையாசிரியர் சிலர் தம் உரை நூல்களில் காட்டியுள்ளனர். விளக்க மொழியியலைக் கற்றுத் தேர்ந்த தமிழறிஞர்கள் தொல்காப்பியத் தொடரியல் கல்வி மரபை மொழியியல் நோக்கில் இருபதாம் நூற்றாண்டின் மத்தியில் மீட்டெடுத்தனர். புனேயிலுள்ள தக்காணக் கல்லூரி இந்திய அறிஞர்களின் மொழியாய்வுக்கு அடித்தளம் அமைத்துத் தந்தது. ஆயினும் அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் உயராய்வு மையம், கேரளப் பல்கலைக்கழகத் தமிழாய்வு மற்றும் மொழியியல் துறைகளே இம்மீட்டெடுப்புக்கு முன்னோடிகள் ஆயின.

சென்னைத் தமிழ்ப்பேரகராதி வெளிவந்தபின் அண்ணாமலைச் செட்டியார் அமைத்த அறக்கட்டளை மூலம் தோற்றமெடுத்த கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை சங்கத் தமிழ் இலக்கியங்களுக்குத் தொடரியல் அடிப்படையில் சொல்லடைவுகளைத் தொகுத்த காலக்கட்டத்திற்குப் பின், ஆய்வு மாணவர் பலர் பழந்தமிழ்ப் பனுவல்கள் முதல் தற்காலத் தமிழ்க்கவிதைகள் வரையிலான நூல்களின் சொல்லடைவுகள் மற்றும் இலக்கணப் பதிவுகளை மொழியியல் அடிப்படையில் தயாரிக்கத் தொடங்கினர். சென்னை மாநிலக் கல்லூரியில் இதே காலக் கட்டத்தில் பேராசிரியர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனாரின் மேற்பார்வையில் முதலிலும் பின்பு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் இவ்வாறான சொல்லடைவுகளும் இலக்கணப் பதிவுகளும் 1960களில் வெளிவந்த நிலையில் அமெரிக்க நாட்டு நோம் சோம்ஸ்கியின் மாற்றிலக்கணத் தொடரியல் கோட்பாடுகள் உலகமெங்கும் மொழியியலாரிடம் உற்சாகத்தைத் தூண்டின. அதைத் தொடர்ந்து தமிழ் மொழி மற்றும் இலக்கியங்களையும் மாற்றிலக்கண விதிகளால் விளக்கி, இலக்கணப் பதிவுகளைத் தமிழ் மொழியியலார் மேற்கொள்ளத் தொடங்கினர். இந்நிலையிலேயே தொல்காப்பியத்திலும் உரையாசிரியர்களிடத்தும் அமைந்துள்ள தொடரியல் கோட்பாடுகள் மாற்றிலக்கணக் கோட்பாடுகளுக்குச் சற்றும் குறையாதவை என இவ்வறிஞர்கள் கண்டறிந்தனர். அதன் அடிப்படையிலேயே தொல்காப்பியத் தொடரியல் கோட்பாட்டுக் கல்வி வளர்ந்தது.

தொல்காப்பியத்தில் உள்ள கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல் எனும் இயல்களிலும் எஞ்சிய பிற இயல்களிலும் உள்ள ஏவல், வினாத்தொடர்கள், எச்சத்தொடர் அமைப்புகள், உவமைத் தொடர்கள், உம்மைத் தொடர்கள், எதிர்மறைத் தொடர்களும், செய்யுளின் சொன்மை யையும் பொருண்மையையும் காண்பதற்கு உரையாசிரியர்கள் கையாண்ட மாட்டெறிதல், வருவித்துரைத்தல், வினைமுடிபுகள் காணுதல் போன்ற அமைப்புகளுமே மேற்சுட்டிய மொழியியல் மற்றும் தமிழறிஞர்களுக்கு வழிகாட்டிகளாக அமைந்தன. இப்பாரம்பரியக் கல்வி மரபுகள் அனைத்தும் ஒருங்கே கைவரப்பெற்ற அறிஞர் முனைவர் செ.வை. சண்முகம் அவர்கள் இந்நிறுவனத்தில் வருகைதரு பேராசிரியர் நிலையில் தனித்திட்டமாகச் செய்து அளித்த **தொல்காப்பியத் தொடரியல்** எனும் இந்நூல் பண்டுதொட்டு இன்றுவரை தமிழறிஞரிடையே இருந்துவரும் தொடரியல் அமைப்புகளை மொழியியல் நோக்கில் முறைப்படுத்தி அமைக்கப்பட்ட சிறந்த நூலாக அமைந்துள்ளது. தொல்காப்பியச் சொல்லதிகாரம் தொடரியல் செய்திகளைக் கொண்டிருக்கின்ற நிலைகளை இந்நூல் பத்துத் தலைப்புகளில் விளக்குகின்றது. மேலும் உரையாசிரியர்களின் தொடரியல் கோட்பாடுகளையும் இறுதியில் ஆராய்கின்றது.

தொடர்களில் வழு ஏற்படுதல், அதை நீக்குதல், எழுவாய்-பயனிலைத் தொடரில் ஏற்படும் அவாய்நிலை போன்ற தொடரியல் கோட்பாடுகளையும் கிளவியாக்கம் என்ற தலைப்பு ஆராய்கிறது.

தொடர்களில் வரும் பெயர்களின் இயல்பைப் பேசும் இயலாகப் பெயர்த்தொடர் எனும் பகுதி இந்நூலில் இடம் பெற்றுள்ளது. பெயர்த் தொடர் எனும் மேற்பகுதியிலேயே வேற்றுமை சுட்டப்பட்டாலும் வேற்றுமை எனும் தனிப்பகுதி அமைக்கப் பட்டுத் தொல்காப்பியத்தில் வரும் வேற்றுமைத் தொடரியல் விளக்கமாக ஆராயப்பெற்றுள்ளது. வேற்றுமையின் வகைகளும் உருபுகளும் மரபு மற்றும் மொழியியல் அடிப்படைகளில் மதிப்பிடப்பெற்றுள்ளன.

பெயர்களோடு தொடர்புடைய மற்றொரு தொடரியல் அமைப்பு 'தொகை' என்பது. இது இந்நூலில் விரிவாகவும் சிறப்பாகவும் ஆராயப்பெற்றுள்ளது. தொகைத் தொடர்கள் பற்றி உரையாசிரியர்களிடையே ஒன்றுக்கு மேற்பட்ட கருத்துகள் உள்ளன. தொல்காப்பியம் முழுமையும் பரந்து கிடக்கும் இத்தொடரியல் வகைகளை ஓரிடத்தில் கொண்டுவந்து தொகுத்து முறைப்படுத்தி விளக்கியிருப்பது இப்பகுதியின் சிறப்பாகும்.

வினைத்தொடர் எனும் பகுதியில் வினையைச் சொல்லியல் நோக்கில் தொல்காப்பியம் மிகுத்துக் கூறுவதாயினும் தொடரியல் சார்ந்த வியங்கோள் தொடர், ஏவல் தொடர், வினைமுற்றுத் தொடர், வினாச் சொற்றொடர்கள் என்பனவும் இடம்பெறுகின்றன என்கிறார்

இந்நூலாசிரியர். முன்னிலை, ஏவல், வியங்கோள் எனும் தனிப்பகுதியிலும் இவை விளக்கம் பெறுகின்றன. உரையாசிரியர்கள் இவற்றிற்குக் காட்டும் இலக்கிய மேற்கோள்களோடு இவற்றின் தொடரியல் அமைப்புகள் தக்க சான்றுகளுடன் விளக்கம் பெற்றுள்ளன.

தொடரியல் அமைப்புகளில் எச்சத் தொடர்களே மிகவும் இன்றியமையாதவை. பெயரெச்ச, வினையெச்சத் தொடர்களும் அவை சார்ந்தனவுமே இங்கு ஆய்வுசெய்யப்படுகின்றன. தொல்காப்பியத்தில் பல பகுதிகளில் இவை பேசப்படுவதாகக் கூறி, உரையாசிரியர்களின் கருத்துகளையும் இப்பகுதியில் எடுத்துக்காட்டிப் புலப்படச் செய்துள்ளார் நூலாசிரியர்.

உயர்வைக் குறிக்கும் சொற்களான தாம், தாங்கள், மற்றும் மார் போன்ற விகுதிகள், ஒருமை பன்மைக்கான சொற்கள் உயர்வுப் பொருளை உணர்த்தும் சொற்கள், அடைகள் போன்றவை தொடர்களில் வரும் இயல்பை விளக்கும் நிலையில் அமைக்கப் பெற்ற பகுதி உயர்சொற்கிளவி என்பதாகும். இச்சொற்களைப் பேசுவோர் கேட்போர் எனும் சூழலில் பார்ப்பதே சிறப்பு. மேலும் அக்காலத்தில் தமிழ்ச் சமுதாயத்தில் தலைவன், தலைவியர் மற்றும் அவரைச் சார்ந்தோர் எவ்வாறு தம்மையொத்தவரையும், சார்ந்தோரையும் அழைத்துக் கொண்டனர் எனும் சமூக அமைப்பு இவற்றுள் அமைந்திருப்பதும் அறியற்பாலது.

தொடரியல் ஆய்வுகளில் மிகவும் இன்றியமையாத பேச்சு மொழி வழக்குத் தொடர்கள் எழுத்து மொழி வழக்குத் தொடர்கள் என்பன மொழிபுணர் இயல்பு எனும் தலைப்பில் இந்நூலில் ஆராயப் பெற்றுள்ளன. இவை தொல்காப்பியம் முழுதும் பரந்துபட்டிருந்தாலும், பிற்கால இலக்கண ஆசிரியர்களாலும் ஏனைய உரையாசிரியர் களாலும் நன்கு சுட்டவும் பெறுகின்றன. சிலரால் தனி இயல்களிலும் பேசப்படுகின்றன. இப் பொருள்கோள்களே இங்குச் சிறப்பாகக் கருதப் பட்டு, அவற்றின் தொடர் அமைப்புகளும் ஆராயப்பெற்றுள்ளன.

பொருள்கோள்கள் பற்றிப் பலரும் பல நிலைகளில் ஆய்ந்துள்ளனர் என்பதும் அறியற்பாலது. ஆனால் தொல்காப்பியர் மொழிபுணர் இயல்பு எனத் தொடரியல் நிலையிலேயே கூறினார் என ஏற்றம் தரப்பெற்றுள்ளதை இந்நூலுள் காண முடிகின்றது. இவ்வகை மொழிபுணர் தொடர்களுக்கு உரையாசிரியர் தரும் சான்றுகள் எடுத்தாளப்பட்டு மதிப்பிடப்பெற்றுள்ளன.

தொல்காப்பியத் தொடரியல் ஆய்வுகளில் இறுதியாக இடம்பெறும் பகுதி எஞ்சுபொருட்கிளவி எனப் பெயர் பெற்றுள்ளது. இதுகாறும் தனித்துக் கூறாததாயினும், கூறப்பட்டு இருப்பதாகக் கருதி ஆராயப்பெற்றிருக்கும் 'கருத்தாடல்' எனும் அமைப்புப் பற்றி நூலாசிரியர் இங்குச் சிந்தித்திருக்கிறார். இது எதிர்கால ஆய்வுக்கு இடமளிக்கும் என்றும் அவர் கருதியிருக்கிறார்.

இந்நூலின் இறுதியில் 'உரையாசிரியர்களின் தொடரியல் கோட்பாடு' எனும் தலைப்பில் இந்நூலாசிரியரால் மேற்கொள்ளப் பெற்றுள்ள ஆய்வுப்பகுதி உள்ளது. இவ்வுரையாசிரியர்களின் தொடரியல் கோட்பாடுகள் தற்கால மொழியியலில் வளர்ந்துள்ள தொடரியல் கோட்பாடுகளுடன் பொருத்திப் பார்க்கப் பெற்றுள்ளன. உரையாசிரியர்கள் தங்கள் தொடரியல் கோட்பாடுகளைத் தனியே சுட்டிக்காட்டுவதில்லை என்றாலும் ஆங்காங்கே வற்புறுத்திச் சொல்லிச் செல்லும் பாங்கிலிருந்தே அவர்களுக்கு அக் கோட்பாடுகள் ஏற்புடையன என அறிந்து கொள்ளலாம். இலக்கண உரையாசிரியர்கள் அன்றியும் அரும்பத உரையாசிரியர்கள் அல்லது பழைய உரையாசிரியர் களாகிய இலக்கிய உரையாசிரியர்களும் தமிழில் தம் காலத்துக்கு முன்பிருந்த தொடரியல் கோட்பாடுகளின் அடிப்படையில் பாடல்களின் பொருள்களையும் அவற்றில் அமைந்துள்ள இலக்கண, சமூகவியல் கூறுகளையும் ஆராய்ந்துள்ளனர்.

இத்தகு சிறப்புகளை ஒருங்கே அமைத்து இந்நூலை உருவாக்கியிருக்கும் பேராசிரியர் முனைவர் செ.வை. சண்முகம் அவர்கள் பாராட்டுக்குரியராகின்றார். இந்நிறுவனத்தில் வருகைதரு பேராசிரியராக இருந்த காலக்கட்டத்தில் அவர் செய்த ஆய்வுப் பணியை அறிஞர் உலகத்திற்கும் ஆய்வாளர்களுக்கும் பயன்படும் விதத்தில் அரிய நூலாக ஆக்கித் தந்துள்ளார். தமிழில் இலக்கியம் மற்றும் இலக்கண உரையாசிரியர்கள் பற்றிய ஆய்வுகள் சுருங்கிவரும் இக்காலக்கட்டத்தில் தொல்காப்பியத் தொடரியல் பற்றி ஏற்றமிகு நூலொன்றை அண்மைக் காலத்தில் அனைவரும் ஏற்றுப் பயன் படுத்தும் மொழியியல் அணுகுமுறைகளைக் கொண்டு ஆய்ந்து உருவாக்கியிருப்பது சாலச்சிறந்தது. இந்நூலை வெளிக்கொணர்வதில் இந்நிறுவனம் பெருமையடைகிறது.

இந்நூலுக்கு மெய்ப்புத் திருத்தும் பொறுப்பை ஏற்றுச் சிறப்பாகச் செய்து முடித்த நிறுவனத் திட்டக்கல்வியர் முனைவர் ஆ. தசரதனுக்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி மற்றும் வணிகவரித்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா இ. ஆ. ப. அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப. அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த நிறுவனக் கணிப்பொறியாளர் திருமதி ந. இலட்சுமிக்கும், அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் பாராட்டுகள்.

சென்னை
*31-12-2004*

இயக்குநர்

# பொருளடக்கம்

# காணிக்கை...

மொழியியல் கல்வியையும், ஆய்வையும் இந்திய அளவிலும்
தமிழையும் தொல்காப்பியத்தையும் உலக அளவிலும்
முன்னிறுத்துவதையே
தன்னுடைய வாழ்நாள் கடமையாகக் கொண்டவர்
'நல்லாசிரியர்', வழிகாட்டி, நண்பர், பவளவிழா நாயகர்
பேராசிரியர் ச. அகத்தியலிங்கம்
அவர்களுக்கு

# முன்னுரை

தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், எச்சவியல் ஆகிய நாலு இயல்களும் தொடரியல் நோக்கு உடையவை. ஏனையவை (விளிமரபு, பெயரியல், வினையியல், இடையியல், உரியியல்) பெரும்பகுதியும் சொல்லியல் செய்திகளையே விவரிக்கின்றன. பின் இயல்களை ஆராய்ந்ததால் என்னுடைய சொல்லிலக்கணக் கோட்பாடு மூன்று தொகுதியும் பெரும்பாலும் சொல்லியல் ஆய்வாக அமைந்துவிட்டன. எனவே தொல்காப்பியத் தொடரியல் என்ற இந்த நூல் என்னுடைய சொல்லிலக்கணக் கோட்பாட்டு ஆய்வு வரிசையில் நாலாவதாகக் கருதத் தகுந்தது.

தொடரியல் ஆய்வு இன்று பூதாகரமாய் வளர்ந்துள்ளது. ஆனால் தொல்காப்பியச் சொல்லதிகாரம் தொடரியல் நோக்கு மிகுந்தது என்று முதன்முதலில் கூறியவர் தெய்வச்சிலையாரே (15ஆம் நூற்.). ஆனாலும் அந்த நோக்கில் ஆராய்ச்சி அதிகம் வளரவில்லை. 20ஆம் நூற்றாண்டில் மாற்றிலக்கண மொழியியல் வளர்ந்த பிறகே தமிழிலும் தொடரியல் ஓரளவு தீவிரமாக மேற்கொள்ளப்பட்டது. அந்தக் கருத்தமைவுகளைத் தொல்காப்பியத்துக்கு முதலில் பொருத்திப் பார்த்தவர், தமிழகத்தில் மாற்றிலக்கண மொழியியலை முதலில் பயின்று முனைவர் பட்டம் பெற்று மாணவர்களுக்கு அறிமுகப்படுத்தியவர் பேரா. ச. அகத்தியலிங்கம் அவர்களே. அவருடைய தொல்காப்பியத் தொடரியல் என்ற கட்டுரை (1969) அந்தத் தலைப்பில் அமைந்த முதல் கட்டுரை (தமிழில் 1985). அவர் தொடர்ந்து தொல்காப்பியத் தொடரியல் ஆய்வுக்கு வளம் சேர்த்துவருகிறார். அவருடன் பழகி அடிக்கடித் தொடரியல் செய்திகளை விவாதித்ததாலேயே நான் இந்த முயற்சியை மேற்கொண்டேன். இங்குப் பெரும்பான்மையும் உரையாசிரியர்களுக்கே முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. அதாவது உரையாசிரியர்களின் கருத்து வழியாகவே தொல்காப்பியத் தொடரியல் விளக்கப்பட்டிருக்கிறது. எனவே இது முதல் முயற்சியாகவே கருதத்தகுந்தது.

தொல்காப்பியத் தொடரியல் என்ற இந்த ஆய்வு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் வருகைதரு பேராசிரியராக இருந்து மேற்கொள்ளப்பட்ட திட்டம் ஆகும். இந்த ஆய்வுத் திட்டத்தை மேற்கொள்ள முக்கியக் காரணமாக இருந்தவர்கள் இந்நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களும் சென்னைப் பல்கலைக்கழக முன்னாள் துணை வேந்தர் பேரா. பொன். கோதண்டராமன் (பொற்கோ) அவர்களும். அவர்கள் இருவரும் நான் இந்த ஆய்வுத் திட்டத்தை மேற்கொள்ளத் தயங்கியபோதும் கூட ஊக்கப்படுத்தி ஏற்றுக் கொள்ளும்படி வலியுறுத்தினார்கள். அவர்கள் இருவருக்கும் என் உளங்கனிந்த நன்றி.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 3 ஆண்டுகள் தமிழ் மாணவனாயும், தொடர்ந்து 37 ஆண்டுகள் தமிழ்த் துறையிலும் மொழியியல் உயராய்வு மையத்திலும் பணி புரிந்துகொண்டு ஆய்வாளனாகவும் பெற்ற அறிவு நலங்களும் வாழ்க்கை நலங்களும் பலப்பல. அண்ணாமலைப் பல்கலைக்கழகம் என் ஞானத் தாயகம். இந்த ஆண்டு அதன் பவள விழா ஆண்டு. அப்போது இந்த நூல் வெளிவருவது மகிழ்ச்சியைத் தருகிறது.

அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் ஆய்வு மையத்தின் முதல் இரண்டு இயக்குநர்களான பேரா. தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரும், பேரா. ச. அகத்தியலிங்கனாரும் தொல்காப்பிய ஆய்வில் அதிக அக்கறை காட்டினார்கள். அதுவே என்னைத் தொல்காப்பிய ஆய்வில் தொடர்ந்து ஈடுபடத் தூண்டியது. எனவே அண்ணாமலைப் பல்கலைக்கழகம், மொழியியல் உயராய்வு மையத்தின் இயக்குநர்கள், மொழியியல் ஆய்வு மையம் ஆகியவைகளைப் பிள்ளைப் பாசத்தோடும் நன்றி உணர்வோடும் நினைத்துப் பார்க்கிறேன்.

மாலை நேர உலாவின் போது தொடரியல் தொடர்பான பல ஐயங்களைப் போக்கித் தெளிவுபடுத்தி ஊக்கப்படுத்திய பேரா. ச. அகத்தியலிங்கம் அவர்களுக்கும் இந்தக் கட்டுரைகளைப் படித்துக் கருத்துரைத்த பேரா. இரா. சாரங்கபாணி அவர்களுக்கும் என் நன்றி.

நூல் வெளியீட்டில் அதிக ஆர்வம் காட்டி வெளியிட்டு உதவிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் பேரா. சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், அதன் மொழி மற்றும் மொழியியல் புலத்தின் பேராசிரியர் முனைவர் செ. ஜீன் லாறன்ஸ் அவர்களுக்கும் என் நன்றி.

# 1
# சொல்லதிகாரமும் தொடரியலும்

## 1.1. முன்னுரை

தொல்காப்பியம் மொழி அமைப்பு இலக்கணத்தை எழுத்து, சொல் என்ற இரண்டு அதிகாரங்களில் ஒன்பது ஒன்பது இயல்களில் விளக்குகிறது. சொல்லதிகாரமே தொடரியலோடு நேரடித் தொடர்பு உடையது ஆனாலும், எழுத்ததிகாரத்திலும் அது பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன என்பதால் அது பற்றி முதலில் விளக்கப்படுகிறது.

## 1.2. எழுத்ததிகாரம்

எழுத்ததிகாரம், எழுத்து என்பதை மொழியியல் நோக்குப்படி ஒலியியல் (பிறப்பு), ஒலியனியல் (நூல் மரபு, மொழி மரபு), உருபொலியனியல் (புணர்ச்சி பற்றி ஆறு இயல்கள்) என்ற மூன்று பெரும் பிரிவாக விவரிக்கிறது. புணர்ச்சியை எழுத்ததிகாரத்தில் விளக்குவதால் அங்குச் சொல்லியல், தொடரியல் உண்மைகளும் புதைந்துள்ளன. ஆனால் தொல்காப்பியர் உருபனியல் - சொல்லியல் ஆய்வு பற்றி நேரடியாகப் பேசவே இல்லை. நன்னூலாரே (13ஆம் நூற்.) எழுத்தியலுக்கும் (ஒலியியல், ஒலியனியல்) புணரியலுக்கும் இடையே பதவியல் என்ற ஓர் இயல் அமைத்துச் சொல்லியல் கோட்பாடுகளைக் குறிப்பாகச் சொற்களைப் பகுப்பதை விளக்கியுள்ளார். ஆனாலும் தொல்காப்பியருடைய புணரியல் விதிகளில் பல நுண்ணிய சொல்லியல் கோட்பாடுகள் புதைந்துள்ளன (சண்முகம், 1978) என்று இன்று கண்டறியப் பட்டுள்ளது.

தொல்காப்பியர் புணரியலில் புணர்ச்சி மாற்றங்களை விளக்குவதற்குச் சொல்லியல் வகைப்பாட்டோடு தொடரியல் வகைப்பாடும் செய்தே விளக்கியுள்ளார். அதாவது பெயர் + பெயர், பெயர் + தொழில் (வினை), தொழில் + பெயர், தொழில் + தொழில் என்று முதலில் (108) சொற்கள் இணையும் முறையைக் குறிப்பிட்டுள்ளார். பெயர் + பெயர் என்பது பெயர்த்

தொடரையும் (முருகன் + நாடு), ஏனைய மூன்றும் பெயர் + தொழில் (முருகன் உண்டான்), தொழில் + பெயர் (உண்டான் முருகன்), தொழில் + தொழில் (வந்தான் போயினான்) என்பன வாக்கியங்களையும் குறிக்கும். ஆனாலும் அவைகளுக்குள் சில வேறுபாடுகள் உண்டு. தொழில் + பெயர் (உண்டான் சாத்தன்) என்பது முன்னிறுத்த மாற்றம் பெற்ற வாக்கியமே. தொழில் + தொழில் (வந்தான் போயினான்) என்பதில் எழுவாய், வினையாலணையும்பெயர் அதாவது எழுவாய் இன்னொரு வாக்கியத்திலிருந்து உண்டான பெயர் இருந்தாலும் புறநிலையில் அவைகளின் சொல்வகைப்பாட்டில் மாற்றம் இல்லை. ஆனால் அச்சொற்களிடையே தொடர் இலக்கண உறவு மாற்றம் ஏற்படலாம். பெயர் + பெயர் தொடர்களுக்குள் தொடர் இலக்கண உறவு மாற்றம் ஏற்படலாம். பெயர் + பெயர் தொடர்களுக்கும் வேற்றுமை உறவு மாறுபடலாம். முருகன் நாடு என்பது முருகனுடைய நாடு என்று ஆறாம் வேற்றுமையாகவும் முருகன் பிறந்த நாடு (முருகன் நாட்டில் பிறந்தான்) என்று ஏழாம் வேற்றுமையாகவும் இருக்கலாம். எனவேதான் இரண்டு சொற்கள் சேரும்போது அவைகளுக்கு இடையே உள்ள தொடரியல் உறவும் முக்கியமானதாகக் கருதப்படுகிறது.

> வேற்றுமை குறித்த புணர்மொழி நிலையும்
> வேற்றுமை அல்வழிப் புணர்மொழி நிலையும்

என்ற (112) அடிகள் மூலம் தொடர்களை வேற்றுமைத் தொடர், அல்வழித் தொடர் என்று செய்த பாகுபாடு தொடரியல் சிறப்பு மிகுந்தது. உண்மையில் வேற்றுமைத் தொடர் என்பது வேற்றுமைத் தொகையாக வரும் தொடர்களையே குறிக்கிறது. அப்படியானால் அவை பெயர்த் தொடர் ஆகும். வேற்றுமை உருபு ஏற்று வரும் தொடர்களில் ஆறாம் வேற்றுமை உருபு ஏற்ற பெயர் தவிரப் பிற வேற்றுமை உருபுகளை ஏற்ற பெயர் பெரும்பான்மையும் வினைகொண்டு முடிவதால் தொடரியல் நோக்கில் வினைத் தொடராகக் கருதப்படும் அவைகளை வேற்றுமை விரி தொடர் என்று குறிப்பிடுவது தமிழ் இலக்கண மரபு.

தொல்காப்பியர் அல்வழித் தொடர்களின் தொகையை எங்கும் வருணிக்கவில்லை. இருந்தாலும் அவருடைய வருணனை அல்வழியில் பல வகைகள் இருப்பதை உணர்த்துகிறது.

வினையெஞ்சுகிளவி (204, 210, 222, 265) என்பது வினையெச்சம் + வினை என்ற வினையெச்சத் தொடரையும் செய்த என்னும் பெயரெஞ்சுகிளவி (210) என்பது பெயரெச்சம்+ பெயர் என்ற பெயரெச்சத் தொடரையும், 'உம்மை எஞ்சிய இருபெயர்த்தொகை' (223) என்பது உம்மைத் தொகையையும் விளிச்சொல் + வினை என்ற விளித் தொடரையும் புணரியல்களில் பெயரிட்டுக் குறிப்பிட்டுள்ளார்.

இனி (236) மீ (250), மன் சின் (333), வயின் (334), பின் (345), முன் (355) ஆகியவை இடைச்சொற்களே. அவைபெயரோடும் (மீந்தோல்/ வினையோடும் (இனிச் சென்றான்) சேரும்போது ஏற்படும் மாற்றங்களைப் பேசுவதால் அவைகளை இடைத் தொடர்களாகக் கருதலாம். ஒட்டுகளாக நிலைமொழியில் வருகிற பல இடைச்சொற்களின் புணர்ச்சி மாற்றங்களையும் தொல்காப்பியர் புணரியல்களில் வருணித்துள்ளார். தேற்ற ஏகாரம் (273), ஓகாரம் (290) முதலியன, மன், சின் (333), முன் (355) முதலியன வெறும் இடைத்தொடர்களாகக் கருதப்பட மாட்டா. அவை ஏற்று வந்துள்ள சொல்லின் இலக்கணத்தையே பெறும். முருகனே என்பது தேற்ற ஏகாரம் பெற்ற பெயர். அது, சொன்னான் என்ற வினையோடு சேர்ந்தால் (முருகனே சொன்னான்) அது பெயர் + வினை என்றே கருதப்படும். யானே கள்வன் என்ற தொடரில் நிலைமொழி ஏகாரம் ஏற்று வந்தாலும் அது எழுவாய்த் தொடராகவே (யான் கள்வன் என்பது எழுவாய்த் தொடர்) கருதப்படும்.

எச்சவியலில் தொகைச் சொற்களின் வகைப்பாடு பற்றிப் பேசுவதால் (895) வினைத் தொகை, (கொல் களிறு), பண்புத் தொகை (கருங்குதிரை), உவமைத் தொகை (மதி முகம்), உம்மைத் தொகை (இராப்பகல்), அன்மொழித் தொகை (கனங்குழை), பெயரெச்சத் தொடர் (உண்ட சாத்தன்) ஆகியவை அவருக்கு உடன்பாடே.

தமிழ்ச் சொல்வகைப்பாடு பற்றி ஒருமித்த கருத்து இன்னும் ஏற்படவில்லை. அதற்குக் காரணம் இடைச்சொற்களும் ஒரு சொல் வகைப்பாட்டில் அடங்குமா என்பது பலருக்கு ஐயமாக உள்ளது. அந்த இயலில் வருணிக்கப்பட்டுள்ள கொன், மற்று, தஞ்சம் முதலிய அடிச்சொற்கள் ஒரு சொல் வகைப்பாட்டுக்கு

உரியவையாகக் கருதத்தக்கவை. (சண்முகம், 1992: 261-84). அது போல உரிசொல் எது என்பது பற்றியும் ஒருமித்த கருத்து உருவாகவில்லை. ஆனாலும் உரியியலில் சில அடிச்சொற்கள் இருப்பது எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. நன்னூலாரும் (152) இடைத்தொடர், உரித்தொடர் என்று கூறுவதால் அது உறுதிப்படுகிறது. எனவே இடைச்சொற்கள் என்பது அடிச்சொல்லாய் ஒட்டிகளை (ஏ, ஓ, உம் போன்றவை) ஏற்று வருபவை என்றும் (சண்முகம் 1992: 259), உரிச்சொற்கள் என்பவை அடிச்சொல்லாய் எந்த விகுதியையும் ஏற்காதவையாய்ப் பொருள்நிலையில் மிகைப்பானாகவும் அடையாகவும் (தடந்தோள்) மட்டும் வருபவை என்ற கருத்தும் முன்வைக்கப்பட்டுள்ளது (சண்முகம், 1986: 173, 4). அவை தீவிர விவாதத்துக்கு உரியவை.

### 1.3. சொல்லதிகாரம்

தொல்காப்பியச் சொல்லதிகாரம் மொழியியல் நோக்கில் உருபனியல் அல்லது சொல்லியல், தொடரியல், பொருண்மையியல், அகராதியியல், கருத்தாடலியல் ஆகியவைகளை ஒன்பது இயல்களில் விவரிக்கிறது. அவைகளில் கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், எச்சவியல் ஆகிய நான்கு இயல்களும் மிகுதியும் தொடரியல் நோக்கு உடையவை; ஏனைய ஐந்து இயல்களும் மிகுதியும் சொல்லியல் நோக்கு உடையவை. இருந்தாலும் தொடரியல் நோக்குடைய இயல்களில் சில சொல்லியல் உண்மைகளும், சொல்லியல் நோக்குடைய இயல்களில் சில தொடரியல் செய்திகளும் காணப்படுகின்றன என்பது குறிப்பிடத்தகுந்தது. உதாரணமாக, கிளவியாக்கத்தில் வினையில் தோன்றும் பால் காட்டும் விகுதிகள் (486-93) ஆறு சூத்திரங்களிலும், வேற்றுமை மயங்கியலில் வேற்றுமை உருபுகளின் மாற்று வடிவங்கள் (592-3) இரண்டு சூத்திரங்களிலும் விளக்குவது சொல்லியல் உண்மைகளே. வேற்றுமையியலில் முதல் மூன்று சூத்திரங்கள் வேற்றுமைத் தொகை, வேற்றுமை உருபுகளின் வடிவம் ஆகியவைகளை வருணிப்பதால் அவை சொல்லியல் சார்ந்தவையே. எச்சவியலில் செய்யுளில் சொற்கள் அடையும் மாற்று வடிவங்களைக் கூறும் ஒரு சூத்திரமும் (885), சில சொற்கள் அடையும் மாற்று வடிவங்களைக் கூறும் ஒரு சூத்திரமும் (885), சில சொற்கள்

பகுபதம் போலத் தோன்றினாலும் அவை பகுக்கமுடியாதவை என்று கூறும் ஒரு சூத்திரமும் (910) சொல்லியல் பற்றியவையே.

இது போன்றே பெயரியலில் விரவுப் பெயர்களின் தொடரியல் பண்புகள் இரண்டு சூத்திரங்களிலும் (657-8) வினையியலில் எச்சங்களின் தொடரியல் பண்புகள் நாலு சூத்திரங்களிலும் (712, 715, 716, 719) விவரிக்கப்பட்டிருக்கின்றன. இடையியலில் 'முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும்' (அது மன் (முன் அடுத்து வந்தது), கொன்னூர் (பின் அடுத்து வந்தது) என்பது தொடரியல் நோக்கு உடையது. இயற்சொல்- ஆர் விகுதி ஏற்றால் வினைமுற்றில் பலர்பால் ஏற்று வரும் (755) என்பது தொடரியல் தொடர்பானதே. உம்மை இடைச்சொல் (768-772) எண்ணிடைச் சொற்கள் (778) பற்றிய சூத்திரங்களும் தொடர் பற்றியவையே. உரியியலில்

> ......... உரிச்சொல் எல்லாம்
> முன்னும் பின்னும் வருபவை நாடி
> ஒத்த மொழியாற் புணர்த்தனர் உணர்த்தல்
> தத்தம் மரபில் தோன்றுமன் பொருளே' (872)

என்று கூறுவது தொடரியல் சொல்லின் சரியான பொருளை உணர்ந்து கொள்ள உதவுகிறது என்பதை விளக்குவதுதான்.

விளி மரபு மட்டுமே முழுவதும் சொல்லியல் பற்றியதாக அமைந்துள்ளது. ஆனாலும்

> தொழிலில் கூறும் ஆன் என் இறுதி
> ஆய் ஆ குும்மே விளிவயி னான (618)

போன்ற சூத்திரங்கள் (624) படர்க்கைப் பெயர் முன்னிலைப் பெயராகி விளி ஏற்பதால் அடையும் மாற்றம் பற்றிப் பேசுவதால் இங்கும் தொடரியல் உண்மை பேசப்பட்டிருப்பதாக ஒரு கருத்து நிலவுகிறது. ஆனால் தொல்காப்பியர் இங்கு ஓர் இலக்கணக் கூறு அடையும் எழுத்து மாற்றங்களைப் பற்றி மட்டும் பேசுவதால் அதைத் தொடரியல் மாற்றமாகக் கருதமுடியாது.

முதலில் தொல்காப்பியர் 'சொல்' என்பதை என்னென்ன பொருளில் கையாண்டுள்ளார் என்று பார்ப்போம்.

### 1.4. 'சொல்'லின் பொருள்

உருபன் (Morpheme), அடிச்சொல் (Root), வார்த்தை (Word), தொடர் (Phrase), பொருள் (Object) என்ற ஐந்து பொருள்களில் 'சொல்' தொல்காப்பியத்தில் கையாளப்பட்டுள்ளது. 'னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்' (488) என்ற சூத்திரத்தில் உருபன் என்ற பொருளிலும், 'தருசொல் வருசொல்' (512) என்ற சூத்திரத்தில் அடிச்சொல் (Root) என்ற பொருளிலும், 'செய்யும் செய்த என்னும் சொல்லே' (719) என்ற சூத்திரத்தில் தொடர் (Phrase) என்ற பொருளிலும், 'முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை எம்முறைச் சொல்லும்' என்ற சூத்திரத்தில் (725) வஸ்து (Object) என்ற பொருளிலும் வந்துள்ளது.

### 1.5. சொல்லியலும் தொடரியலும்

பொதுவாகச் சொல்லியலுக்கும் தொடரியலுக்கும் உள்ள எல்லைக் கோடு தெளிவாக வரையறுக்கப்பட்டதில்லை என்பார் மொழியியலார்.[1] அதற்கு முக்கியக் காரணம் தொடருக்குப் பின்னரும் கட்டுண்ட உருபன் வருவதுதான். உதாரணமாக பத்தில், இருபதில், நானூற்று முப்பத்தாறில் என்ற சொற்களில் முதல் சொல்லான 'பத்தில்' என்பதைப் பத்து + இல் எனப் பிரிக்கும்போது அதாவது ஒரு கட்டிலா உருபன் + வேற்றுமை உருபு என்ற முறையில் அமைந்துள்ளதால் சொல்லியலைச் சார்ந்தது என்பது பொருந்துகிறது. ஆனால் இருபதில், நானூற்று முப்பத்தாறில் என்ற சொற்களில் இருபது, நானூற்று முப்பத்தாறு என்ற தொகைச் சொற்களோடுதான் வேற்றுமை விகுதி சேர்ந்திருக்கிறது. எனவே அங்குத் தொடரியலும் சொல்லியலும் கலந்துள்ளன. ஆனால் அச்சொற்களில் இல் என்ற வேற்றுமை உருபு சேர்ந்து வந்துள்ளதால் பகுக்கும்போது இருபது (இரண்டு x பத்து), நானூற்று முப்பத்தாறு (நானூறு + முப்பத்தாறு) + இல் என்று அமைவதால் தொடரியலும் சேர்ந்து அமைந்துள்ளது.

> "யானைக் கோடு கிடந்தது... என எழுவாயும் பயனிலையும், யானைக்கோட்டை...... என உருபேற்றும் ஒரு சொன்னடையாக வந்தவாறு கண்டுகொள்க"

என்ற தெய்வச்சிலையார் (எச்சம். 23) வாசகம் உரையாசிரியர்கள் சொல்லியலும் தொடரியலும் நெருங்கிய உறவு உடையன என்ற உண்மையை உணர்ந்திருந்தார்கள் என்பதைப் புலப்படுத்தும்.

### 1.5.1. குறிப்பு வினை

தமிழில் குறிப்பு வினை, வினையெச்சம் ஆகியவை சொல்லியல் நோக்கும் தொடரியல் நோக்கும் உடையவையாகவே கருத வேண்டும். வேற்றுமை என்பது சொல்லியல் நோக்கில் எளிமையானது. தொடரியல் நோக்கில் சிக்கலானது. எனவேதான் தொல்காப்பியர் சொல்லியல், தொடரியல் என்று வேறுபடுத்தி விளக்கவில்லை.

தமிழைப் பொறுத்தவரையில் குறிப்பு வினை புறநிலையில் சொல்லியல் நோக்கு உடையது ஆனாலும் அதில் தொடரியல் உறவு இருப்பதைத் தொல்காப்பியரே எடுத்துக்காட்டியுள்ளார். குறிப்பு வினை என்பது குறிப்பு வினை அடி (இதில் பெயரடிகளும், அடிச்சொற்களாக உள்ள இடைச்சொற்களும் அடங்கும்) + இடம்- திணை-பால் விகுதிகள் என்பதே அதன் சொல்லியல் அமைப்பு. ஆனால் அவைகளுக்கு இடையேயுள்ள இலக்கண உறவு - குறிப்பாக வேற்றுமை உறவு மாறுபடுவதற்கு ஏற்பப் பொருள் மாறுபடும்.

> அதுச்சொல் வேற்றுமை உடைமை யானும்
> கண்ணென் வேற்றுமை நிலத்தி னானும்
> ஒப்பி னானும் பண்பி னானும்என்று
> அப்பால் காலம் குறிப்பொடு தோன்றும் (698)

என்பது உயர்திணைக் குறிப்புவினை பற்றிய சூத்திரம். இங்கு மதுரையான் என்ற குறிப்பு வினை மதுரை+ஆன் ஆனால் அது மதுரையில் பிறந்தவன்/படித்தவன் என்ற தொடரிலிருந்து உண்டானதாகக் கருதப்படுகிறது. அதனால்தான், ஏழாம் வேற்றுமை உறவு உடையதாக விளக்கப்படுகிறது. முன்னது சொல் அல்லது வார்த்தை, பின்னது வாக்கியம். எனவே இங்குத் தொடரியலும் சொல்லியலும் கலந்துள்ளன.

### 1.5.2. செய்தென வினையெச்சம்

செய்தென என்ற வினையெச்சம் வினைமுற்று + என என்ற இணைப்பான் சேர்ந்தது. மழை பெய்தெனக் குளம் நிறைந்தது; இதில் 'குளம் மழை பெய்தென நிறைந்தது' என்பதுதான் புதைநிலை வாக்கியம்.




### 1.5.3. வியங்கோள்

வியங்கோள் வினை என்பது வினையடி + வியங்கோள் விகுதி என்று சொல்லியல் நோக்கில் தோன்றினாலும் அங்கு இரண்டு கருத்தாவும் இரண்டு வினைகளும் புதைந்துள்ளன.

வியங்கோள் வினை சொல்லியலும் தொடரியலும் கலந்தது தான் என்பதைத் தெய்வச்சிலையார் விளக்கியுள்ளார். அதில் இரண்டு கருத்தாவும் செயலும் இருப்பதாகக் குறிப்பிடுகிறார்.

'தொழிலைப் பெயர்ப் பொருண்மை கொள்ளுமாறு
வரும் ஏவற்சொல்'

என்பது தெய்வச்சிலையார் விளக்கம் (550). அதாவது வியங்கோள் வினையில் தன்வினையும் (ஏவுவோன்-வியங்கோள் விகுதி) பிற வினையும் புதைந்துள்ளன என்று பொருள். வாழ்க என்னும் வியங்கோளில் 'வாழ்' பிறவினை; வியங்கோள் (-க) தன்வினை என்று பொருள்படும் (முழு விளக்கத்துக்கு, 8வது இயல் பார்க்கவும்).

### 1.6. தொடர்கள் அமையும் முறை

அ) சொற்கள் தொடரில் அல்லது வாக்கியத்தில் அல்லது கருத்தாடலில் அமையும் வரிசை முறையை விளக்குவது தொடர் அமைப்பு முறை, ஆ) ஒரு சொல் அல்லது ஓர் இலக்கணக் கூறு அடுக்கி வரும் அடுக்கு முறை, இ) ஒரு தொடரை அடிப்படையாகக் கொண்டு செருகலும் விரித்தலும் ஆகியவை ஒரு முறை, ஈ) இன்னொன்று: தொடர் அல்லது வாக்கியம் அடையும் மாற்றங்களில் $ஈ_1$) முன்பின் மாற்றம் (Permutation), $ஈ_2$) இலக்கண மாற்றம் (Grammatical transformation), உ) கருத்தாடல் நோக்கில் இரண்டு வாக்கியங்களின் அமைப்பு முறை, ஊ) ஒரு வாக்கியத்தை இரண்டு விதமாக விளக்கும் முறை ஆகியவை விளக்கப்பட்டிருக்கின்றன.

### 1.6.1. தொடர் அமைப்பு முறை

#### அ$_1$) தொடர்

ஒரு தொடரில் சொற்கள் அமையும் முறையை ஒட்டி வண்ணச் சினைச்சொல் என்ற ஒரு தொடருக்குப் பெயர் கொடுத்து வண்ணச்சொல் + சினைச்சொல் + முதல்சொல் என்ற வரிசையில் வரும் என்று ஒரு சூத்திரம் (509) விளக்குகிறது. உ-ம். செங்கால் நாரை.

பெயர்த் தொடரில் சிறப்புப் பெயரும் (புலவர்) இயற்பெயரும் (இளங்கோ) சேர்ந்து வரும்போது சிறப்புப்பெயர் + இயற்பெயர் என்ற வரிசை (புலவர் இளங்கோ) முறையிலும் (524), பெயரெச்சம் + பெயர் என்ற வரிசையிலும் (916) வினைத் தொடரில் வினையெச்சம் + வினை (915) என்ற வரிசையிலும் அமையும்.

#### அ$_2$) வாக்கியம்

முதல் வேற்றுமை கொண்டு முடியும் பயனிலை பற்றிக் கூறும் எளிய வாக்கிய அமைப்பைப் பற்றிக் கூறுவதுதான் (550). வினைமுற்று உள்ள வாக்கியத்தில் எழுவாய்ப் பெயரின் திணை-பாலும், வினைமுற்றின் திணை-பாலும் ஒத்திருக்க வேண்டும் (494) என்பதும் வாக்கியத்தின் ஒரு தொடரியல் பண்புதான்.

#### அ$_3$) தொடர்ந்துவரும் இரண்டு வாக்கியங்கள் அமையும் முறை

பொதுவாகத் தொடரியல் ஒரு வாக்கியத்தின் அமைப்பைப் பற்றி மட்டுமே விளக்கும். ஆனால் கருத்தாடல் ஆய்வுதான் இரண்டு வாக்கியங்களுக்கு உள்ள வரிசை முறை, கேட்போன் (வினா) பேசுவோன் குறிப்பாகப் பதில் சொல்லுவோன் ஆகியோர் இடையே உள்ள வாக்கிய அமைப்பு முதலியவைகளை விளக்கும். சில தொல்காப்பியச் சூத்திரங்களில் கருத்தாடல் நோக்கு உள்ளது சிறப்பானது.

இயற்பெயரை உடைய வாக்கியமும் அதற்கு உரிய சுட்டுப் பெயரை உடைய வாக்கியமும் தொடர்ந்து அடுத்தடுத்து வரும்போது இயற்பெயரை உடைய வாக்கியத்தை அடுத்துச் சுட்டுப்பெயரை உடைய வாக்கியம் வர வேண்டும் என்று ஒரு சூத்திரம் (521) விளக்குகிறது. சுட்டு முதலாகிய காரணக்கிளவி (அதனால்) வந்தாலும் அதே முறையில் வரும் என்று ஒரு

சூத்திரம் (533) பேசுகிறது. அவை வாக்கியங்களுக்கு இடையே இலக்கண இணைவு பற்றிப் பேசுபவை.

உம்மைத் தொடராக வரும் இரண்டு வினைத் தொடர்களில் உம்மையை எங்குச் சேர்க்கவேண்டும் என்று (இறுதித் தொடரில்) ஒரு சூத்திரம் விளக்கும் (769). சாத்தன் வந்தான் கொற்றனும் வந்தான்.

### 1.6.2. அடுக்குநிலை

அடுக்குத் தொடர் பற்றி எச்சவியலில் 4 சூத்திரங்களும் (394, 906-8), வினைமுற்று அடுக்கு பற்றி எச்சவியலில் இன்னொரு சூத்திரமும் (912), வேற்றுமை உருபு அடுக்கி வருதல் பற்றி வேற்றுமை மயங்கியலில் ஒரு சூத்திரமும் (586), வினையெச்சம் அடுக்கி வருதல் பற்றி வினையியலில் ஒரு சூத்திரமும் (718) உள்ளன. இவை ஒன்றுக்கு மேற்பட்ட வாக்கியத்துக்கு உரியவை.

### 1.6.2.1. ஒரு சொல் அடுக்கு

அடுக்கு என்பது மீளுமை (Recurrence) என்ற பண்பை அடிப்படையாக உடையது. அது சொல் நிலையிலும் தொடர் நிலையிலும் அமையலாம்.

> இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தலென்று
> அவைமூன் றென்ப ஒருசொல் அடுக்கே (894)

என்ற சூத்திரத்தில் இசைநிறை என்பது செய்யுளுக்கு உரியது என்று இளம்பூரணரும், இசைநிறையும் அசைநிலையும் செய்யுளுக்கு உரியவை என்று தெய்வச்சிலையாரும் கொள்ளச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் அப்படி இடம் வரையறுக்கவில்லை.

இங்குப் பொருளொடு புணர்தல் என்று ஒரு வகை குறிப்பிட்டிருப்பதால் ஏனைய இரண்டும் பொருள் உடையவை அல்ல என்று கருதத் தோன்றுகிறது. உண்மையில் அவை ஏதோ குறிப்புப் பொருள் உணர்த்தவே கருத்தாடலில் பயன்படுத்தப் படும். 'விரைவும் துணிவும் உடம்பாடும் ஒரு தொழில் பல்கால் நிகழ்தலும் ஆகிய பொருள் வேறுபாடு உடையன' என்று சேனாவரையர் பொருள் வேறுபாட்டை வரையறுத்துள்ளார்.

தெய்வச்சிலையார் ஒழிந்த மூவரும் 'ஏஎ ஏஎ அம்பல் மொழிந்தனள்' என்ற உதாரணத்தையே இசைநிறைக்குக்

கொடுத்துள்ளார்கள். இசைநிறை செய்யுளில் வரும் என்றாலும் உலக வழக்கிலும் வரும் என்பதை மறுக்கமுடியாது. செய்யுளில் ஓசை இன்பம் பயக்க, வழக்கில், தூரத்தில் உள்ளவர்களின் கவனத்தைக் கவருவதற்குப் பயன்படுத்தப்படும்.

துறக்குவன் அல்லன் துறக்குவன் அல்லன்
தொடர்வரை வெற்பன் துறக்குவன் அல்லன்
தொடர்புள் இனையவை தோன்றின் விசும்பில்
சுடருள் இருள்தோன்றி அற்று

என்ற கலித்தொகை அடிகளைத் (41) தெய்வச்சிலையார் எடுத்துக் காட்டி,

'இதனுள் முந்துற்ற சொற்பொருள் உணர்த்திற்று
ஏனைய இசைநிறைக்கண் வந்தன'

என்று விளக்கியுள்ளார். இங்குத் துணிவுப்பொருள் மேல்வந்தது என்று கொள்வதே பொருந்தும்.

இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் அசைநிலையாகச் சொன்னவை இடையியலில் கூறிய சொற்கள் என்று கொண்டு மற்றோ மற்றோ என்ற உதாரணத்தை கொடுத்துள்ளார்கள். உண்மையில் இது கருத்தாடலில் வரும்போது, ஏதோ ஒரு பொருளைக் குறித்து வரும் என்பது மறுக்க முடியாது.

குறங்கென
மால்வரை ஒழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த ஓதி

என்ற சிறுபாணாற்றுப்படை (20-21) அடிகளைத் தெய்வச் சிலையார் எடுத்துக்காட்டி 'வாழை என்னும் சொல் இரண்டனுள் ஒன்று அசைநிலை ஆயிற்று' என்று விளக்கியுள்ளார். இதில் வேடிக்கை என்னவென்றால் முன்னும் பின்னும் அடுக்கு வந்திருப்பதுதான்.

சேர்ந்து உடன்செறிந்த குறங்கின்

என்பது முன்னுள்ள தொடர் (20).

. . . . . . . . . . . . . . . . . ஓதி
நளிச்சினை வேங்கை நாள்மலர் நச்சி

என்பது பின்னுள்ள தொடர். அங்குப் பல சொல்லடுக்குகள் வந்துள்ளன. இது ஓர் இலக்கிய உத்தி. இந்த உண்மை அவரும் நச்சினார்க்கினியரும் காட்டும் நாலடியார் பாடல் அடிகளால் உறுதி ஆகும். ஆனால் அவர்கள் இருவரும் ஓர் அடியை மட்டுமே உதாரணமாகக் காட்டியுள்ளார்கள். முழுப்பாடல்:

நின்றன நின்றன நில்லாஎன உணர்ந்து
ஒன்றின ஒன்றின வல்லே செயின்செய்க
சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்
வந்தது வந்தது கூற்று (நாலடியார் 4)

இங்கு முதல் இரண்டு அடுக்குகள் முழுமைப் பொருளையும் (நின்றன எல்லாம் ஒன்றின எல்லாம்) மூன்றாவது விரைவுப் பொருளையும் கடைசி அடுக்கு உறுதிப் பொருளையும் உணர்த்துகின்றன.

'பொருளொடு புணர்தல்' என்பதற்கு இளம்பூரணர் பெயர்ச்சொல் அடுக்கி வருவதைக் கொடுக்க, சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் பெயரும் வினையும் அடுக்கி வருவதை உதாரணம் கொடுத்து மேலே எடுத்துக்காட்டியபடி அவை பல பொருள் உடையன என்று சுட்டிக்காட்டியுள்ளார்கள். பாம்பு பாம்பு, வைதேன் வைதேன் முதலியன.

மேலும் இசைப்படு பொருள் நான்கு முறை அடுக்கி வரும் (906) என்றதன் உட்கிடை புலனாகவில்லை. விரைவுக்காக ஒரு சொல்லை மூன்று முறை அடுக்கி வரலாம் என்றும் ஒரு சூத்திரம் (907) விளக்குகிறது. கண்டீரே, கேட்டீரே, சென்றதே என்பவைகளும் அடுக்கி வரும். அவை வாய்மொழி இலக்கியத்தின் எச்சசொச்சமாக இருக்கலாமோ என்று தோன்றுகிறது.

### 1.6.2.2. தொடர் அடுக்கு

'பன்முறையானும், வினையெஞ்சு கிளவி அடுக்கி வருதல்' (718) வினைத்தொடர் என்ற இயலில் விளக்கப்படும். வினைமுற்று அடுக்கி வருதல் (912), வேற்றுமை உருபு அடுக்கி வருதல் (586) ஆகியவையும் கருத்தாடல் நோக்கில் முக்கியமானவை.

### 1.6.3. மாற்றங்கள்

தத்தம் எச்சமொடு சிவணுங் குறிப்பின்
எச்சொல் லாயினும் இடைநிலை வரையார்

என்பது (வினையியல் 38 - 722) பெயரெச்ச வினையெச்சங்கள் தாம் கொண்டு முடியும் சொல்லுக்கு முன் வேறு சொல் இடையில் வரலாம் என்பதால் தொல்காப்பியர் இடைநிலை என்று குறிப்பிட்டுள்ளார். இதைப் பொதுவாக, செருகல் (Insertion) என்று மாற்றிலக்கண மொழியியலார் கூறுவார்கள்.

> 'உப்பின்று புற்கை உண்கமா கொற்கையோனே' என்புழி இன்றி (மூலத்தில் இன்று வடிவமானாலும் வினையெச்சம்தான்) என்ற வினையெச்சத்திற்கு முடிபு உண்க என்னும் வியங்கோட் சொல். இனிப் 'புற்கை' என்பது இடைநிலை'

என்பது இளம்பூரணரின் உதாரணமும் விளக்கமும். 'அடுஞ் செந்நெற்சோறு, அட்ட செந்நெற்சோறு என்புழி, 'செந்நெல்' என்பது இடைநிலை. சூத்திரத்தில் 'சிவணும் குறிப்பின்' என்று குறிப்பிட்டிருப்பதால் 'சிவணாக்குறிப்பு' வரையப்படும் என்று மட்டும் குறிப்பிட்டு உதாரணம் தராமல் அவர் போய்விட்டார்.

இளம்பூரணர் தனிப்பெயர் மட்டும் இடையில் வருவதாக உதாரணம் கொடுக்கச் சேனாவரையர் வேற்றுமை ஏற்ற பெயரோடும் (உழுது ஏரோடு வந்தான்) கொடுத்துள்ளார். அவர் உரையில் மூன்று கூடுதலான செய்திகள் உள்ளன. இடைநிலையாக எச்சமும் (உழுது ஓடி வந்தான், கவளம் கொள்ளாக் களித்த யானை) வரும் என்று உதாரணம் கொடுத்துள்ளார். ஆனால் ஏனைத் தொடர்க் கண்ணும் பிற சொல் இடைநிற்கும் என்பதை உணர்ந்தாலும் தொல்காப்பியர் எச்சத் தொடர் மட்டும் இடைநிற்றலைக் கூறியதற்குக் காரணம் இங்கு எச்சம் பற்றிப் பேசுவதுதான் என்று சமாதானமும் கூறியுள்ளார். அவர் கொடுத்த பிற உதாரணங்கள். 1) சாத்தன் உண்டு வந்தான், 2) அறத்தை அரசன் விரும்பினான், 3) உண்டான் வந்த சாத்தன்.

முதல் வாக்கியத்தில் சாத்தன் வந்தான் அடிப்படை வாக்கியம். அதாவது பெயர் + பயனிலைத் தொடர் வந்தான் என்ற பயனிலை உண்டு என்ற வினையெச்சம் இடைநிற்றலாக வந்துள்ளது என்பது சேனாவரையர் கருத்து. மூன்றாவது வாக்கியத்தில் உண்டான் வந்த சாத்தன் என்ற வாக்கியம் பயனிலை + பெயர்த் தொடர் என்ற அமைப்பு உடையது. இதில் சாத்தன் என்ற பெயரின் அடையாக இடைநிற்றலாக வந்த என்ற

சொல் (பெயரெச்சம்) வந்துள்ளது. அதாவது பெயரிலும் வினையிலும் இடைநிற்றல் வந்துள்ளது. இவை சரியே. இரண்டாவது வாக்கியமான அறத்தை அரசன் விரும்பினான் என்பது அரசன் அறத்தை விரும்பினான் என்ற அடிப்படை வாக்கியத்தின் மாற்று வடிவமே. அதில் அறத்தை விரும்பினான் என்பதை அடிப்படையாகக் கொண்டே அரசன் இடைநிற்றலாக வந்துள்ளது என்று கருதிவிட்டாரோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. அது பொருந்தாது.

இ) 'சிவணாக் குறிப்பின' என்பதை ஒருதலையாக எச்சத்தோடு இயைந்து நில்லாது, நின்ற சொல்லோடும் தாமே இயைந்து 'கவர் பொருள்படுவன' என்று விளக்கி இரண்டு உதாரணம் கொடுத்துள்ளார். கவர்க்கும் என்பது இரட்டித்த பொருள்படுவன (பொருள்படுவது) (சிவலிங்கனார், 1984: 258 அ.கு). உண்டு விருந்தொடு வந்தான் என்பது முதல் உதாரணம். விருந்தோடு உண்டு வந்தான் என வினையெச்சத்தோடும் இயைதலின் கவர்க்கும் என்பது அவருடைய விளக்கம். இதனுடைய சரியான பொருளே மயக்கத்துக்கு உரியது (1). ஒருவன் தான் மட்டும் உண்டுவிட்டு விருந்தினரை அழைத்து வந்தான் அல்லது (2) உண்பதற்கு விருந்தினரையும் அழைத்து வந்தான் (செய்து என் எச்சம் செய என் எச்சமாக மாறியது - வினையெஞ்சு கிளவியும் வேறு பல குறிய (எச்சம் 61) அல்லது (3) அவனும் விருந்தினரும் உண்டுவிட்டு வந்தார்கள் என்று மூன்று வகையில் பொருள் கொள்வதற்கு இடம் உண்டு.

'வல்லம் எறிந்த நல்லிளங்கோசர் தந்தை
மல்லல் யானைப் பெருவழுதி என்ற வழி
வல்லம் எறிதல் நல்லிளங்கோசர்க்கும் ஏற்குமாதலின்
ஆண்டும் பொருள் கவர்க்கும்'

என்பது சேனாவரையருடைய இன்னொரு உதாரணமும் விளக்கமும். அதாவது வல்லம் எறிந்தது கோசர் தந்தையாகிய பெருவழுதி. எனவே எறிந்த பெருவழுதி என்பதே அடிப்படை வாக்கியம். பெருவழுதியின் இடைநிற்றலாக நல்லிளங்கோசர் வந்துள்ளது.

வல்லம் எறிந்த நல்லிளங்கோசர் தந்தை பெருவழுதி



அதனால் வல்லம் எறிந்த நல்லிளங்கோசருடைய தந்தை பெருவழுதி என்றும் பொருள்படும். உண்மையில் இது தொடரியல் மயக்கம் ஆகும்.

வல்லம் எறிந்த நல்லிளங்கோசர் தந்தை பெருவழுதி



அண்மை உறுப்பு உறவு மாறுபடுவதால் இந்த மயக்கம் ஏற்படுகிறது என்று மாற்றிலக்கண மொழியியலார் விளக்குவார்கள். அது பற்றிப் பிற்பகுதியில் விளக்கப்படும். தெய்வச்சிலையாரும் ஓரளவு அண்மை உறுப்பு உறவு மாறுபடுவதைச் சூசகமாக விளக்கியுள்ளது குறிப்பிடத்தகுந்தது.

சூத்திரத்தில் உள்ள 'சிவணும் குறிப்பு' என்ற தொடருக்குத் தெய்வச்சிலையார் ஒழிந்த பிற உரையாசிரியர்கள் பொருந்தும் இடம் என்று கொண்டு பொருந்தும் இடத்திலேயே 'எச்சொல்லாயினும் இடைநிலை வரையார்' என்று கொள்ளத் தெய்வச்சிலையார் 'சிவணும் குறிப்பினை உடைய யாதாயினும் ஒரு சொல்' என்று பொழிப்புரை எழுதியது அடையாக வருதல் அல்லது தலைச்சொல்லோடு சிவணுதல் என்று பொருள்பட்டு அண்மை உறுப்பு உறவு பற்றிய விளக்கமாக அமைந்துவிட்டது. அவருடைய உதாரண விளக்கம் இன்னும் அந்தக் கருத்தைத் தெளிவுபடுத்துவதாக உள்ளது.

> 'கொல்லும் காட்டுள் யானை, கொன்ற காட்டுள் யானை இவை பெயரெச்ச இடைக்கிடப்பு அவற்றுள் இடைக்கிடந்த சொல் (காட்டுள்) யானை என்பதனோடு சிவணுதலின் அமைக்கப்பட்டது'

என்பது அவரது வாசகம். இங்குக் காட்டுள் என்ற சொல் யானையைத் தழுவி நின்றே அந்தப் பெயர்த் தொடர், பெயரெச்சத்தைத் தழுவுகிறது என்பது அவர்கள் கருத்து. அதைக் கீழ்க்கண்டபடி படம் மூலம் விளக்கலாம்.




வினையெச்சத்தில் இடைநிற்றலுக்கு அவருடைய உதாரணமும் விளக்கமும் வருமாறு:

> 'உழுது ஏரோடு வந்தான், உழ ஏரோடு வந்தான், - இவை வினையெச்ச இடைக்கிடப்பு. இவற்றுள் இடைக்கிடந்த சொல் (ஏரொடு) முடிக்கும் சொல்லோடு சிவணுதலின் அமைதி ஆயிற்று'

என்ற அவருடைய விளக்கம் அதே முறையில் அமைந்துள்ளது.

> 'சிவணாதன: உண்ட சாத்தன் தந்தை என்பது உண்ட என்பதற்குச் சாத்தன் தந்தையை முடிபாகக் குறித்தான் ஆயின் சிவணாதாயிற்று. வினையெச்சத்துட் சிவணாதன வந்த வழிக் கண்டுகொள்க'

என்ற விளக்கத்தில் உண்ட சாத்தன் தந்தை என்பது மயக்க வாக்கியம்.




உண்மையில் இங்கு உண்டது யார் என்பதே பிரச்சினை. அதாவது உண்டது சாத்தனா? (முதல் படம்); சாத்தன் தந்தையா? (இரண்டாவது படம்) என்பதே. பின்னதில் சாத்தன் இடைக்கிடப்பு என்று கொள்ளலாம். தெய்வச்சிலையார் கருத்து மாறுபட்டிருக்கிறது. இது விவாதத்துக்கு உரியது.

இங்கு மொழியியல் நோக்கில் இரண்டு உண்மைகள் புதைந்துள்ளன. அ) பொதுநிலையில் மொழி பயன்பாடு அல்லது தொடரியல் விரிவு. உண்ட முருகன் என்பது வேகமாக உண்ட முருகன், உண்ட அழகிய முருகன், வேகமாக உண்ட அழகிய முருகன் ஆகிய வாக்கியங்களும் பெயரெச்சத் தொடர்களே. தொல்காப்பியப் புணரியலில்

> நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும்
> அடையொடு தோன்றினும் புணர்நிலைக்கு உரிய

என்ற சூத்திரம் (110) தொடரியல் கோட்பாட்டு நோக்கையும் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம். (ஆ) சொற்கள் நீள் வரிசையில் வாக்கியத்தில் சேருவதில்லை; படிநிலை அமைப்பு உடையவை என்ற மொழியியல் உண்மையைத் தொல்காப்பியர் உள்ளூர உணர்ந்ததையும் அதை ஓரளவு தெய்வச்சிலையார் வெளிக் கொணர்ந்ததையும் இந்தச் சூத்திர உரை புலப்படுத்துகிறது. தற்கால மொழியியலின் அண்மை உறுப்பு ஆய்வு இதை மிகத் தெளிவாக விளக்குகிறது.

முன்பின் மாற்றத்தையும் தொல்காப்பியம் விளக்கியுள்ளது. அதைத் தனி வாக்கிய நிலையிலும் கருத்தாடல் நிலையில் ஒன்றுக்கு மேற்பட்ட வாக்கியங்களுக்கு இடையேயும் குறிப்பிட்டுள்ளார்.

> இறுதியும் இடையும் எல்லா உருபும்
> நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார் (587)

தெய்வச்சிலையார் தவிர, பிற உரையாசிரியர்கள் வேற்றுமை உருபு ஏற்றபெயர் + வினை என்ற முறையில் வராமல் வினை+ வேற்றுமை ஏற்ற பெயர் என்று வருவது என்று விளக்கி யுள்ளார்கள். கடந்தான் நிலத்தை, வந்தான் சாத்தனொடு போன்ற தொடர்களை உதாரணமாகக் கொடுத்துள்ளார்கள்.

கருத்தாடலில் குறிப்பாகச் செய்யுளியலில் ஏற்படும் பல விதமான தொடரியல் மாற்றங்களைத் தொல்காப்பியர் மொழி புணர் இயல்பு என்று விளக்கியிருப்பதும் தனி வாக்கியத்தைத் தாண்டி ஏற்படும் மாற்றங்களை விவரிப்பதுதான். அது தனி இயலில் (10) விளக்கப்படும்.

இலக்கணக் கூறு நோக்கில் மாற்றம் பற்றி ஒரு சூத்திரம் உள்ளது.

> செயப்படு பொருளைச் செய்தது போலத்
> தொழிற்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே (731)

இங்கு இளம்பூரணர் திண்ணை மெழுகிற்று கலம் கழீஇயற்று என்ற உதாரணங்களை மட்டும் கொடுத்துள்ளார். சேனாவரையர் திண்ணை மெழுகப்பட்டது என்பதுதான் அப்படி மாறியதாகக் கொடுத்துள்ளார். பிற உரையாசிரியர்களும் இந்த முறையிலேயே விளக்கியுள்ளார்கள். திண்ணை மெழுகிற்று என்ற வாக்கியத்தில் திண்ணை எழுவாய் என்பது சரி. அது எப்படிச் செயப்படு பொருள் ஆகும் என்று விளக்கவில்லை. ஒருவன் திண்ணையை

மெழுகினான் என்பதே சரியான புதைநிலை வாக்கியம். அதன் செயப்பாட்டு வினை வாக்கியமே திண்ணை மெழுகப்பட்டது. அதில் திண்ணை எழுவாயாக வந்துள்ளது. செயப்பாட்டு வினை இல்லாமலும் செயப்படுபொருள் எழுவாயாக வரும் என்பதையே திண்ணை மெழுகிற்று என்ற வாக்கியம் புலப்படுத்துகிறது. அதாவது கருத்தா வெளிப்படையாக வராவிட்டால் செயப்படு பொருள் எழுவாயாக வரும் என்பது வேறு பல மொழிகளிலும் காணப்படுகிறது. ஆங்கிலத்திலும் இப்படிப்பட்ட வாக்கியங்கள் உண்டு.

| | |
|---|---|
| John opened the door | ஜான் கதவைத் திறந்தான் |
| The door opened | கதவு திறந்தது |

தெய்வச்சிலையார் 'கருவியைக் கருத்தாவாகக் கூறலும் கொள்க' என்று கூறி வாள் வெட்டிற்று என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார். இங்கு ஒருவன் வாளால் மரத்தை வெட்டினான் என்ற புதைநிலை வாக்கியமே வாள் மரத்தை வெட்டியது என்றும், வாள் வெட்டியது என்றும் மாறும்.

இங்கு முக்கியமாகக் கவனிக்கவேண்டியது தொல்காப்பியர் வாக்கியத்தில் ஏற்படும் மாற்றங்களை இலக்கணக் கூறு அடிப்படையில் விளக்கமுடியும் என்று கூறியதுதான்.

### 1.7. சில பொருண்மையை வாக்கியம் ஆக்கும் முறை

பொதுவாக வடிவம், எப்படிப் பொருள் உணர்த்துகிறது என்றே மொழியியல் ஆராயும். தொடரியல் ஆய்வில் மாற்றிலக்கண முறை வந்த போது சில தொடர்களின் பொருள் மயக்கமாக இருந்ததால் பொருண்மைக்கு முதன்மை கொடுத்துத் தொடரியலையும் ஆராயும் உற்பத்திப் பொருண்மையியல் (Generative semantics) என்ற ஆய்வு முறை சிலரால் பரிந்துரைக்கப்பட்டது. தொல்காப்பியம் ஒரு கற்பித்தல் இலக்கணம் (Pedagogical grammar) என்ற முறையிலேயே சில பொருண்மையை எப்படி மொழிப்படுத்துவது என்று இலக்கணம் செய்திருக்க வேண்டும். அவை பெரும்பாலும் கிளவியாக்கத்தில் (502, 506, 507, 516, 517, 518 முதலியவை) உள்ளன. வினையியலிலும் அப்படி 3 சூத்திரங்கள் உள்ளன.

எல்லாக் காலத்தும் இருக்கும் பொருளை விளக்கும்போது வினைமுற்று செய்யும் வாய்பாட்டில் இருக்கவேண்டும் என்று ஒரு சூத்திரம் பேசுகிறது.

முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொல் கிளத்தல் வேண்டும் (725)

இங்குத் தெய்வச்சிலையார் ஒரு விதமாகவும் ஏனையோர் ஒரு விதமாகவும் உரைகொண்டுள்ளார்கள். அதற்கு 'முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை எம்முறைச் சொல்லும்' என்ற தொடரை விளக்கும் முறையே காரணம்.

> 'மூன்று காலத்தும் உளதாம் இயல்பையுடைய எல்லாப் பொருளையும் நிகழ்காலத்துப் பொருள் நிலைமை உடைய செய்யும் என்னும் சொல்லாற் கிளக்க'

என்பது சேனாவரையர் பொழிப்புரை. இங்கு எல்லாப் பொருளும் என்பது பொழிப்புரையில் சேர்க்கப்பட்டுள்ளது. மேலும் 'இயற்கை' என்பதற்கு இயற்கைப் பொருள் என்று பிறர் கொள்ள, இவர் வினைக்கு உரியதாகக் கொண்டுவிட்டார் என்றாலும் வினை வடிவத்தைக் கையாளுவதில் கருத்து மாறுபாடு இல்லை.

> 'ஒருவன் உண்பானாக, அகம் புக்கான், அவன் வாயிற்கண் நின்றானை, யாது செய்கின்றான் என் வினாய வழி அவன் செய்கின்ற உண்டற் காலம் உணராமையின் உண்டான் என்னுமாகாது, உண்பான் என்னுமாகாது உண்ணும் என்க'

என்பது உதாரண விளக்க வாசகம். ஒரு குறிப்பிட்ட சூழலை விளக்குகிறது. இயற்கைப் பொருளின் பண்பு மட்டும் அல்லாமல் வழக்கமாக நடக்கிற எல்லாச் செயலையும் (கடைகள் காலை ஒன்பது மணிக்குத் திறக்கும், ஐப்பசி மாதத்தில் நிறைய மழை பெய்யும்) ஒருவனுடைய வழக்கமான செயலையும் (காலை ஆறு மணிக்கு எழுந்திருக்கும்) போன்ற பல வழக்கமாகத் தொடர்ந்து நடக்கும் செயல்களையும் செய்யும் என்னும் வாய்பாட்டால் கூறலாம் என்பதைக் குறிக்கவே 'எம்முறைச் சொல்' என்ற தொடரைத் தொல்காப்பியர் கையாண்டிருக்கவேண்டும்.

தொல்காப்பியர் சூத்திர நடை கவிதைப் பண்பு மிகுந்தது என்றும் அவரே ஒரு கவிஞர் (அகத்தியலிங்கம், 1998: 14, 31) என்றும் கருதுவர். ஆகவே இங்கு எதுகைக்காகக் கையாண்டிருக்கலாம்.

### 1.8. தொடரை விளக்கும் முறை

ஒரு குறிப்பிட்ட வாக்கிய அமைப்பை விளக்கும் முறையையும் தொல்காப்பியர் சில சூத்திரங்களில் விளக்கியுள்ளார்.

> தடுமாறு தொழிற்பெயர்க்கு இரண்டும் மூன்றும்
> கடிவரை யிலவே பொருள்வயி னான (579)

என்பது பரவலாக அறியப்பட்ட சூத்திரம். புலி கொல் யானை என்ற தொடரைப் புலியைக் கொன்ற யானை என்று இரண்டாவது வேற்றுமையை விரித்தும், புலியாற் கொல்லப் பட்ட யானை என்று மூன்றாம் வேற்றுமை விரித்தும் பொருள் விளக்குவார்கள். இரண்டும் பொருள் மாறுபாடு உடையன. முன்னது யானை புலியைக் கொன்றது, பின்னது புலி யானையைக் கொன்றது. இங்கு வினைமுதல் மாறுவதற்கு ஏற்ப வினை வடிவம் மாறுகிறது. மேலும் பின்னதையும் புலி கொன்ற யானை என்றும் எழுவாயாக விரிக்கலாம் என்று அகத்தியலிங்கம் (2001: 7) குறிப்பிட்டு வேற்றுமை விரியாக அதாவது இரண்டு வேற்றுமைகளும், மூன்று வேற்றுமைகளும் அதாவது வேற்றுமை எண்ணிக்கை மயக்கம் (ப. 14) என்று புதிய விளக்கம் கொடுத்துள்ளார்.

இது செயல் வேண்டும் என்ற தொடரில் (728) வேண்டும் என்பது முதல் வினையாகவும் (சாத்தன் உண்ணல் வேண்டும் என்பது சாத்தன் உண்ண விரும்புகிறான் - தன் பாலது) துணைவினையாகவும் (சாத்தன் உண்ணுவதை இன்னொருவன் வேண்டும் - பிறன்பாலது) விரிக்கலாம் என்பதில் கருத்து வேறுபாடு இல்லை. இங்கு ஒரு வாக்கியம் என்றாலும் செயல் வேண்டும் என்ற தொடரில் வேண்டும் என்ற வினையே முதல் வினையாகவும் துணைவினையாகவும் பொருள் கொள்வதற்கு ஏற்ப இலக்கண உறவு மாறுபடுகிறது.

---

* The line of demarcation between morphology and syntax is not always clear cut (Hockett, 1958: 178).

# 2
# கிளவியாக்கம்

## 2.1. முன்னுரை

தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் கிளவியாக்கம் முதல் இயல் ஆனதால் தொல்காப்பியரின் சொல்லிலக்கணக் கோட்பாட்டின் அடிப்படையை அறிந்துகொள்ளப் பலரால் அது ஆராயப் பட்டிருக்கிறது (இராம. சுந்தரம், 1972, சி. சுப்பிரமணியன், 1972). அதற்கு முன்னால் கிளவியாக்கம் பற்றிய உரையாசிரியர்கள் கருத்துகள் கவனிக்கத் தகுந்தவை. அவர்கள் கிளவியாக்கத்தில் விளக்கும் பொருள்பற்றி மூன்று கருத்துகளைக் குறிப்பிட்டுள்ளார்கள். அவையாவன: 1. கிளவிகள் பொருள் மேல் ஆமாறு உணர்த்தினது. இதைச் சொல்லியல் நோக்கு என்று அழைக்கலாம். 2. வழுக் காத்தலும் வழு அமைதியும். இது வழு நோக்கு. இலக்கணம் மொழி கற்றலுக்கு உதவுவது என்ற நோக்கு உடையது ஆகும். 3. தொடரியல் உணர்த்தியது. இதைத் தொடரியல் நோக்கு என்று அழைக்கலாம். இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், கல்லாடர் ஆகியோர் இந்த இயல் சொல்லியல் நோக்கு, வழு நோக்கு ஆகிய இரண்டும் உடையதாகவும், தெய்வச்சிலையார் தொடரியல் நோக்கும் வழு நோக்கும் உடையதாகவும் கொண்டுள்ளார்கள் என்றும் பொதுமைப்படுத்தலாம். தற்காலத்தில் தொடரியல் நோக்குக்கே முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. ஆனால் கிளவியாக்கத்தில் கூறப்பட்டுள்ள செய்திகளில் வேறு பல வகைகளும் அடங்கியுள்ளன என்பது பிற்பகுதியில் விளக்கப்படும்.

## 2.2. கிளவியாக்கப் பொருள்

### 2.2.1. சொல்லியல் நோக்கு

> 'கிளவிகள் பொருள் மேல் ஆமாறு உணர்த்தி னமையின் கிளவியாக்கம் என்னும் பெயர்த்து. என்னை? ஒருவன் மேலாமாறிது ஒருத்தி மேலா மாறிது பலர் மேலாமாறிது, ஒன்றன் மேலாமாறிது பலவற்றின் மேலாமாறிது, வழு ஆமாறிது, வழு அமைதி ஆமாறிது எனப் பொருள்கண் மேல் ஆமாறு உணர்த்தினமையின் இப் பெயர்த்து ஆயிற்று'

என்பது இளம்பூரணர் வாசகம். 'கிளவிகள் பொருள் மேல் ஆமாறு உணர்த்தினது; என்பது வடிவம் பொருள் உணர்த்துவது என்பதுதான். அதைச் சொல்லியல் நோக்கு எனலாம்.

> 'கிளவி என்பது சொல்; ஆக்கம் என்பது சொற்கள் பொருள்கண் மேலாமாறு உணர்த்தினமையின் கிளவியாக்கம் என்னும் பேர் பெற்றது'

என்ற கல்லாடர் வாசகம் இளம்பூரணர் உரையைத் தழுவியது என்பது தெளிவு. அவைகளின் வகைகளை விளக்கிவிட்டு அந்த விளக்கத்தில் உள்ள குறையை உணர்ந்து அவரே கேள்வி கேட்டுப் பதில் சொல்லியுள்ளார்.

> 'ஏனைய ஒத்துக்களுள்ளும் பொருட்கண் மேலாமாறு அன்றோ உணர்த்தினது. பொருள் அல்லனவற்றின் மேலாமாறு உணர்த்தியது இல்லை எனின்; ஏனை ஒத்துக்களுள் பொருட்கண் மேலாய் நின்றவற்றின் இலக்கணம் உணர்த்தினார், ஈண்டு அவை தம்மை ஆமாறு உணர்த்தினர்'

என்பது அவரது வாசகம். கிளவியாக்கம் ஒழிந்த பிற இயல்களிலும் 'பொருட்கண் மேலாமாறு உணர்த்தினது' என்பது. சொல்லதிகாரம் முழுமையும் வடிவத்தின் பொருள் உணர்த்தியது என்ற உண்மையை ஒத்துக்கொண்டுவிட்டு, அதே சமயத்தில் இரண்டுக்கும் உள்ள வேறுபாட்டையும் எடுத்துக்காட்டியுள்ளது, கல்லாடரின் சிறப்பு. கிளவியாக்கம் ஒழிந்த பிற இயல்களில் 'பொருட்கண் மேலாய் நின்றவற்றின் இலக்கணம் உணர்த்தினார்' என்பது இலக்கணம். அதாவது இலக்கண வகை - பெயர், வினை என்ற பாகுபாடு உணர்த்தினார் என்ற கருத்தையும், ஈண்டு (கிளவியாக்கத்தில்) அவை தம்மை ஆமாறு உணர்த்தினார்' என்பது உருபன் நிலையில் மட்டும் விளக்கினார் என்ற கருத்தையும் உட்கொண்டது. இந்தக் கருத்தின் வன்மை மென்மை அடுத்த பகுதியில் விவாதிக்கப் படுகிறது.

### 2.2.2. வழு அமைதி இலக்கணம்

> 'வழுக் களைந்து சொற்களை ஆக்கிக் கொண்டமை யால் இவ்வோத்துக் கிளவியாக்கம் என்னும் பெயர்த்து.... சொற்கள் பொருள்கள்மேல் ஆமாறு உணர்த்தினமையால் கிளவியாக்கம் ஆயிற்று எனினும் அமையும்'

என்பது சேனாவரையர் வாசகம். சொல்லியலுக்கு இரண்டாம் பட்சம் கொடுத்துள்ளதையே புலப்படுத்துகிறது. அதாவது வழு நோக்குக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளார் எனலாம். கிளவியாக்கத்தில் அது பெரும்பான்மையாக விளக்கப்பட்டிருப்பதே அதற்குக் காரணம் ஆகலாம்.

இளம்பூரணர், சேனாவரையர் ஆகிய இருவரின் கருத்தைப் பார்க்கும்போது இளம்பூரணர் இயலின் சூத்திர அமைப்பு வரிசை அடிப்படையிலும் சேனாவரையர் பெரும்பான்மை கருத்து அடிப்படையிலும் இயல் விளக்கம் கொடுத்துள்ளார்கள் என்பது புலனாகிறது.

> 'வழுக் களைந்து சொற்களை அமைத்துக் கோடலின் இவ்வோத்துக் கிளவியாக்கம் என்னும் பெயர் பெற்றது. இனிச் சொற்கள் பொருள்கண் மேலாமாறு உணர்த்தினமையின் கிளவியாக்கம் என்னும் பெயர் பெற்றது என்றுமாம்'

என்ற நச்சினார்க்கினியர் வாசகம் அவர், சேனாவரையர் கருத்தை அப்படியே பின்பற்றியுள்ளதைத் தெளிவுப்படுத்துகிறது.

### 2.2.3. தொடரியல் நோக்கு

> 'அது (கிளவியாக்கம்) கிளவியது ஆக்கம் என விரியும். அதற்குப் பொருள் சொல்லினது தொடர்ச்சி என்றவாறு; சொற்கள் ஒன்றோடு ஒன்று தொடர்ந்து பொருள் மேலாகும் நிலைமையைக் கிளவியாக்கம் என்றார். அது வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகி அதனை உடைய ஓத்திற்கு ஆயிற்று'

என்ற தெய்வச்சிலையார் கிளவியாக்க முன்னுரை வாசகம் தொடரியல் நோக்கு மட்டுமே உடையது. ஆனால் அவர் கிளவியாக்க 11ஆம் சூத்திரத்தில் 'வழுப்படாமல் கூறுமாறு உணர்த்துதல் நுதலிற்று' என்று முன்னுரை எழுதி, கிளவியாக்கத்தில் வேறு பல சூத்திரங்களிலும் (496-501, 509, 510 முதலியவை) வழு பேசப்படுவதாக விளக்கியுள்ளதால் கிளவியாக்கம் வழு பற்றிப் பேசுவது என்பது தெய்வச்சிலையாருக்கு உடன்பாடான கருத்தே ஆனாலும் அதற்கு அவர் முக்கியத்துவம் கொடுக்கவில்லை என்பதைக் கிளவியாக்க முன்னுரை புலப்படுத்துகிறது.

ஆகவே, இங்குச் சொல்லியல் நோக்கு, வழு அமைதி நோக்கு, தொடரியல் நோக்கு, பிற நோக்கு என்ற வரிசையில் உரையாசிரியர்கள் கருத்து விளக்கப்படும்.

### 2.3. உரையாசிரியர்கள் கருத்து மதிப்பீடு

#### 2.3.1. சொல்லியல் நோக்கு

இந்தக் கருத்து, 'னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்' (488) போன்ற ஐந்து சூத்திரங்களை மனதில் கொண்டது. அதை உருபனைக் கண்டறிதல் (Identification of Morphemes) என்ற சொல்லியல் ஆய்வில் முதல் படியைச் சார்ந்தது எனலாம்.

> இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய
> ஈற்றின்நின்று இசைக்கும் பதினோர் எழுத்தும்
> தோற்றம் தாமே வினையொடு வருமே

என்ற சூத்திரம் (493) உருபன்களின் வருமிடம் - பகிர்வு (சொல்லின் ஈற்றில் வரும்) அவை எந்தச் சொல்லுக்கு (வினைக்கு) உரியன என்றும் பேசுவதால் முழு அளவில் சொல்லியல் அமைந்துவிடுகிறது. எனவே கல்லாடர் மொழியில் சொன்னால் பிற இயல்களில் கூறப்பட்டதாகக் கருதப்படும் 'பொருட்கண் மேலாயும் நின்றவற்றின் இலக்கணமும்' இந்தக் கிளவியாக்கச் சூத்திரம் உணர்த்துகிறது. அதாவது இது சொல்லியல் ஆய்வில் இரண்டாவது கட்டமான உருபன் பகிர்வும் (ஈற்றின் நின்று இசைப்பது) வகைப்பாடும் (வினை விகுதிகள்) பற்றியது எனவே கல்லாடர் கிளவியாக்கத்துக்கும் பிற இயலுக்கும் உள்ளதாகக் கூறிய வித்தியாசம் பொருந்தவில்லை. அதாவது கிளவியாக்கத் திலேயே உருபனைக் கண்டறிதல், உருபன் பகிர்வு ஆகியவையும் விவரிக்கப்பட்டுள்ளன.

> வினையின் தோன்றும் பாலறி கிளவியும்
> பெயரின் தோன்றும் பாலறி கிளவியும்
> மயங்கல் கூடா தம்மர பினவே

என்ற அடுத்த சூத்திரம் எழுவாய் பயனிலைகளாக வருகிற முறையே பெயர், வினைகளின் திணை-பால் இயைபு பேசுவதால் தொடரியல் நோக்கு உடையது. அதாவது உருபன்களைக் கண்டறியும் ஐந்து சூத்திரங்கள் கூடத் தொடரியலுக்கு உறுதுணையாக - கருவியாக அமைக்கப்பட்டன என்பதைப் புலப்படுத்திவிடுகின்றன. எனவே 'கிளவிகள் பொருள் மேலாமாறு உணர்த்தினது கிளவியாக்கம்' என்ற இளம்பூரணர் கருத்தும்

அதை ஒட்டிய பிற உரையாசிரியர்கள் கருத்தும். சிறப்பானதாகக் கொள்ளமுடியாது. அதனால்தான் சேனாவரையரும் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் வழு நோக்குக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளார்கள் எனலாம்.

488-93 ஆகிய ஐந்து சூத்திரங்களும் சொல்லியல் நோக்கு உடையதுதான். பால் வேறுபாடு ஒருமை எண்ணுக்கு உரியது என்று கூறும் சூத்திரமும் சொல்லியல் நோக்கு உடையதுதான்.

> ஒருமை எண்ணின் பொதுப்பிரி பால்சொல்
> ஒருமைக் கல்லது எண்ணுமுறை நில்லாது

என்ற சூத்திரம் (527) எண்ணுப் பெயர்களில் பால் வேறுபாடு என்ற ஒன்று எண்ணுக்கு மட்டும் உரியது என்று விளக்குகிறது. அதாவது தமிழில் உயர்திணைப் பன்மையில் ஆண்/பெண் வேறுபாடு செய்வதில்லை. எனவே கற்பித்தல் நோக்கிலேயே இந்தச் சூத்திரம் அமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்று எண்ண வேண்டியிருக்கிறது. ஆக மொத்தம் ஆறு சூத்திரங்களே சொல்லியல் பற்றியவை.

### 2.3.2. வழு அமைதி

> வினையின் தோன்றும் பாலறி கிளவியும்
> பெயரின் தோன்றும் பாலறி கிளவியும்
> மயங்கல் கூடா தம்மர பினவே

என்ற சூத்திரமே (494) எல்லா உரையாசிரியர்களாலும் வழு, வழு காத்தல், வழு அமைதி பற்றிய கருத்துக்கு ஆதாரமாகக் கொள்ளப்பட்டுள்ளது. உண்மையில் கடைசி அடி மட்டுமே அவர்கள் கருத்துக்கு ஆதாரமாக உள்ளதை அவர்களே குறிப்பிட்டுள்ளார்கள்.

> "மயங்கல் கூடா' எனவே மயக்கமும் உண்டு என்று சொல்லப்பட்டதாம்..... மயக்கம் எனினும் வழு எனினும் ஒக்கும்'

என்ற இளம்பூரணர் வாசகம் வழுக் காத்தல் என்ற கருத்தமைவுக்கு உரிய ஆதாரத்தைத் தெளிவுப்படுத்திவிடுகிறது.

வழுவின் பொது இலக்கணம், வழுவின் வகை, அந்தச் சூத்திரத்தில் கூறப்பட்ட வழு வகைகள் ஆகியவைகளை இங்கு உரையாசிரியர்கள் விளக்கியுள்ளார்கள். மேலும் ஒவ்வொரு உரையாசிரியரும் இந்த இயலில் வேறு பல சூத்திரங்களையும்

வழுக்காத்தல் தொடர்பு உடையதாக அடையாளம் காட்டி யுள்ளார்கள். எனவே கிளவியாக்கத்தில் அடையாளம் காட்டப் பட்ட வழு வகைகளைக் குறிப்பிட்டு அவை மதிப்பீடு செய்யப் பட வேண்டும்.

## 2.4. வழுக்காத்தல்

'மயங்கல் கூடா' என்பது 'அவை விராதல் பொருந்தா' என்பது இளம்பூரணர் விளக்கம். விராதல் என்றால் கலத்தல் என்று பொருள். அதாவது ஒன்றுக்கு உரியது அல்லாதது கலத்தல் ஆகும். *அவன் வந்தன/வந்தது போன்றவை அவர் கொடுக்கும் உதாரணங்கள். இங்கு வினைமுற்றுகள் ஆண்பாலுக்கு உரியன அல்லாதன வந்துள்ளதால் வழு ஆகும். இளம்பூரணர் கருத்துப்படி இலக்கண அல்லது தொடரியல் நிலையில் வழுக் காத்தல் அமைந்துள்ளது.

> 'குறித்த பொருளை அதற்கு உரிய சொல்லால் சொல்லுக என்றல் வழுவற்க என்றலாம். குறித்த பொருட்கு உரிய சொல் அன்றாயினும் ஒருவாற்றான் அப்பொருள் விளக்குதலின் அமைக என்றல் வழுவமைத்தலாம்'

என்பது சேனாவரையரின் விளக்கம். சேனாவரையர் சொற் பொருண்மையியல் நோக்கில் மட்டுமே வழுவைக் கொண்டுள்ளார். ஆனாலும் 'அவன் வந்தது அவன் வந்தாள் ...... என மயங்கி வருவன எல்லாம் வழுவாம்' என்ற அவருடைய விளக்கத்தில் தொடரியல் நோக்கே உள்ளது. இருந்தாலும் இளம்பூரணர் எதிர்மறையாலும் சேனாவரையர் உடன் பாட்டாலும் வழுக் காத்தலை விளக்கியுள்ளார்கள் எனலாம்.

தெய்வச்சிலையார் 'மயங்கல் கூடா' என்றதனால் வழூஉப் படுதல் குற்றம் என்பது பெறுதும்' என்று விளக்கி அவன் நெருநல் உண்டான் என்பது திணை வழுவதாயிற்று... அவன் உண்டது திணை வழூஉ' என்ற உதாரணங்களைக் கொடுத்துள்ளதால் தெய்வச்சிலையாரும் இளம்பூரணரைப்போல் தொடரியல் நிலையிலேயே வழுவைக் கொள்கிறார் என்பது தெளிவு.

### 2.4.1. வழுக்காத்தல் வகைகள்

> 'வழுக்காக்கும் இடத்து வழுவற்க என்று காத்தலும் வழீஇ அமைக என்று காத்தலும் என இரண்டு'

என்பது இளம்பூரணர் வாசகம் (கிளவி 11 முன்னுரை). இதை அப்படியே கல்லாடர் தழுவியுள்ளார். 'வழுவற்க என்றலும், வழு அமைத்தலும் என வழுக் காத்தல் இருவகைப்படும்' என்று சுருக்கமாகச் சேனாவரையரும் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் குறிப்பிட்டுள்ளார்கள். வழுவற்க என்பது பொதுவிதி. ஆனால் அந்தப் பொதுவிதியைச் சில இடங்களில் பின்பற்றமுடியாது போகும்போது அதை வழு என்று கொள்ளாமல் ஏற்றுக் கொள்வது வழுஅமைதி ஆகும். ஆனால் இன்று மொழியியலார் அதற்கு ஏதாவது கட்டுப்பாடு உண்டா என்று பார்த்துப் பொதுவிதிக்குக் கட்டுப்பாடு கண்டுபிடிப்பதற்கு முயலுவார்கள்.

கல்லாடர் வழுவற்க, வழு அமைதி ஆகியவைகளுக்கு விளக்கம் கொடுக்கும் முகமாக இலக்கண விதிகள் மூன்று வகைப்படும் என்று பொதுமைப்படுத்திக் கூறிய விளக்கம் சிறப்பானது.

> 'இவ் வதிகாரத்துக் கூறப்படும் விதி (1) மாணாக்கன் ஒரு பொருளைக் கூறுந் திறன் அறியாது இடர்ப் படுதல் நோக்கி, இன்ன பொருளை இன்னவாறு கூறுக என்று இலக்கணம் கூறுதலும்; (2) அதனை அவ்வாறு ஒழியவும் கூறுதலும் என்று கருதினும் கருதற்க என்று அதனை வழுவற்க என்று காத்தலும்; (3) அவ்வாறு வழுப்படக் கூறிய வழக்கினுள் சிலவற்றை (அ) அதனகத்து அவ்வாறு அதற்கு ஓர் பொருட் காரணம் கண்டாதல். (ஆ) அது அன்றிப் பலரும் பயில வழங்குதல் கண்டாதல் அமைதி கூறலும், என மூவகை. அவற்றுள் இச்சூத்திரம் வழுவற்க என்னும் விதி கூறிற்று என உணர்க'

என்பது அவர் வாசகம் (விவாகத்தில் குறிப்பிடுவதற்கு எண் கொடுக்கப்பட்டுள்ளது). முதல் கருத்து இலக்கணத்தின் அடிப்படை மொழி கற்பித்தல் - அதாவது பொருளிலிருந்து மொழிக்குப் போதல் என்பது. இரண்டாவது கருத்து: இலக்கணத்தை அறிந்த பின்னும் அந்த இலக்கணத்தைப் பின்பற்றுவதா? வேண்டாமா? என்ற தடுமாற்றத்தைப் போக்க இலக்கணத்தைக் கடைப்பிடி என்று வற்புறுத்தும் வழுவற்க என்ற நிலை. மூன்றாவது கருத்து: சில வழு வாக்கியங்கள் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கான காரணத்தை அறிந்துகொள்வது. அதுவே வழு அமைதி. வழு அமைதிக்கும் அவர் இரண்டு காரணத்தைச்

சுட்டிக்காட்டியுள்ளார். 1. பொருள் நிலை, அதுதான் சில கட்டுப்பாடுகளைக் கண்டுபிடிப்பது, 2. வழக்குப் பயிற்சி. இவை சிறப்பான கருத்துகள்.

உரையாசிரியர்கள் கிளவியாக்கத்துக்குள் வழுக்காத்தலை விளக்கிய விதமும் அறியத் தகுந்தது.

### 2.4.1.1. இளம்பூரணர்

இளம்பூரணர் இந்தச் சூத்திரத்தை (494 - கிளவி 11) 'வழுக் காத்தலில் வழுவற்க என்று காத்தது' என்று கூறிப் பிற சூத்திரங்களைப் பல வகையாக அடையாளம் காட்டியுள்ளார்.

கிளவி 13, 28, 33, 34, 37, 38, 40, 41-50, 56, 57, 62 ஆகியவை வழுக் காத்தல் என்றும், 15, 17, 21, 51 ஆகியவை வழு அமைதி என்றும் குறிப்பிட்டுள்ளார்.

'வியங்கோள் எண்ணுப்பெயர் திணை விரவு வரையார் (கி. 45) என்ற சூத்திரத்தில் வழு எது? வழுக் காத்தல் எது? என்பதில் உரையாசிரியர்களிடையே கருத்து வேறுபாடு காணப்படுகிறது ஆவும் அயனும் செல்க என்பதே அதற்கு உரிய உதாரணம்.

> 'இஃது இனம் அல்லதனோடு எண்ணினமையின் வழு ஆயிற்று. இனி ஆவும் ஆயனும் செல்க என்றவிடத்துச் செல்க என்னும் வியங்கோள் வினை இரு திணைக்கும் முடிபு ஏற்றமையின் திணைவழுவமைதி யாம்'

என்பது இளம்பூரணர் விளக்கம். ஆனால் பிற உரையாசிரியர்கள் கருத்துப்படி ஆவும் ஆயனும் வெவ்வேறு திணைச் சொற்கள் என்ற முறையில் வழு. அப்படி வரலாம் என்று கூறுவதால் திணை வழு அமைதி என்பது சேனாவரையம். வியங்கோள் பயனிலையாக உள்ளதால் வழுவாகக் கருதவேண்டாம் என்று முதலில் குறிப்பிட்டுப் பின்னர் இரண்டு திணை வந்துள்ளதால் வழுவாகக் கருதப்படவேண்டுமோ என்ற ஐயத்தை எழுப்பி, திணை வழுக் காத்தல் என்ற முறையில் சூத்திரத்தை நியாயப்படுத்தியுள்ளார்.

> 'தன்மைப் பன்மை வினை போலாது வியங்கோள் இரு திணைக்கும் உரிய சொல் ஆகலான் இருதிணைச் சொல்லையும் முடிக்கும் அன்றே! அதனான் ஆவும் ஆயனும் செல்க என்புழி வழு இன்மையின் அமைக்கற்பாற்று அன்று எனின்

இருதிணைப் பொருட்கும் உரித்தேனும் ஒரு திணைப் பொருளைச் சொல்லுதற்கண் இருதிணைப் பொருளும் உணர்த்தாமையின் ஒரு திணையே உணர்த்தல் வேண்டும். ஒரு திணை உணர்த்திய வழி ஏனைத் திணைப்பெயரோடு இயையாமையின் திணை வழுவாம். அதனால் அமைக்கல் வேண்டும்.'

என்பது சேனாவரையர் விளக்கம். அதாவது ஒரு நோக்கில் வழு அல்லாதது இன்னொரு நோக்கில் வழுவாக அமைகிறது. மேலும் அவர் ஆவும் ஆயனும் என்பது மேய்ப்பானும் மேய்க்கப் படுவனவும் ஆகிய இயைபு உண்மையான் உடன் எண்ணப்படு தலானும்' என்று இனம் அல்லாதன வந்துள்ளதால் வழு என்பது பொருந்தாது என்று விளக்கியுள்ளார்.

'எண்ணுங்கால் தனித்தனி எண்ணல் வேண்டுமோ விரவி எண்ணல் வேண்டுமோ என்ன நின்ற ஐயம் நீக்குதலின் இது திணை வழு அமைதியுமாம்'

என்பது தெய்வச்சிலையார் விளக்கம்.

'ஆவும் ஆயனும் செல்க என்றது எண்ணும்மை ஆதலின், சேறல் தொழில் இரண்டிற்கும் எய்துதலின் வழு இன்றேனும் அஃறிணை ஏவல் தொழிலை முற்ற முடியாமை கருதி வழு அமைத்தார்.

என்பது நச்சினார்க்கினியர் விளக்கம்.

சில சூத்திரங்களில் வழுவை அடையாளம் காணுவதில் தடுமாற்றம் இருக்கிறது என்பதையும் உரைகள் புலப்படுத்துகின்றன.

இளம்பூரணர் கொடுத்த வழுக் காத்தல் உதாரணங்களில் 13, 28, 33, 34, 37, 38, 40, 41, 42, 44, 46-50, 56 ஆகியவை வழுவற்க என்ற கருத்து உடையவை என்பது சரியே. ஆனால் 43, 57 ஆகிய இரண்டு சூத்திரங்களும் வழு அமைதியாகவே கருதத் தகுந்தவை. தன்மைப் பெயரும் அஃறிணைப் பெயரும் சேர்ந்து எழுவாய்த் தொடராக வந்து தன்மைப்பன்மை வினைமுற்றைக் கொண்டு முடியும் என்று விளக்குவதே 43ஆம் சூத்திரம். அது வழு அமைதி யாகவே கொள்ளத் தகுந்தது. கிளவியாக்கத்தில் வேறு சில சூத்திரங்களை இளம்பூரணர் வகைப்படுத்தவில்லை. அவைகளில் 19-21ஆகிய 3 சூத்திரங்களும் வழுவற்க என்ற வகையைச் சார்ந்தவை.

மேலும் இளம்பூரணர் 'ஒரு பொருள் மேல் இருபெயர் வழுக் காத்தல்' (கி. 37, 38, 40, 41) ஒரு பொருள் மேல் பல பெயர் வழுக் காத்தல் (42) என்ற இரண்டு புது வகையை இயலுக்குள் குறிப்பிட்டுள்ளார். அவைகளை மரபு வழுக் காத்தலாகக் கருதுவதே பொருந்தும்.

முதல் வகைக்கு உரிய முதல் மூன்று சூத்திரங்களும் பதிலீட்டுப் பெயர்கள் பற்றியவை. 38, 40 ஆகிய இரண்டு சூத்திரங்களும் ஒன்றுக்கு மேற்பட்ட வாக்கியத்தில் இடையே உள்ள கருத்து இணைவு (Coherence) பற்றியவை. 37ஆம் சூத்திரம் கருத்தாடலில் - குறிப்பாகக் கேள்வி-பதிலாக அமைந்த கருத்தாடலில் பதிலீட்டுப் பெயரின் பயன்பாடும் அதன் பொருளும் பற்றி விவரிக்கிறது. 41ஆம் சூத்திரம் ஒருவரைக் குறிக்கும் சிறப்புப் பெயர் இயற்பெயர் ஆகிய இரண்டின் வரிசை முறை பற்றி விவரிக்கிறது/ 42ஆம் சூத்திரம் ஒருவரைக் குறிக்கும் பல பெயர்கள் அவை கிளவியாக்கம் ஒரு வாக்கியத்தைத் தாண்டிய அலகையும் விவரிக்கிறது என்பதைப் புலப்படுத்தி விடுகிறது.

### 2.4.1.2. சேனாவரையர்

'இச்சூத்திர முதலாக (கிளவி 11) இவ்வோத்து வழுக் காக்கின்றது' என்று சேனாவரையர் முதலில் குறிப்பிட்டு இந்தச் சூத்திரத்தில் திணை பால் வழு என்று நேரடியாகவும் இட வழு, கால வழு என மறைமுகமாகவும் சுட்டப்பட்டுள்ளதாக விளக்கி யுள்ளார். கிளவியாக்கத்திலேயே தன்மைச் சொல்லைப் பற்றிப் பேசுவதாலும் (கி. 43) பிற்பகுதியில் (எச்சம் 66) முன்னிலை பற்றிப் பேசுவதாலும் இட வழுவும் 'ஈண்டைக் கொள்ளப்படும்' என்பார்.

சூத்திரத்தில் 'தம்மரபினவே' என்ற தொடருக்கு 'மரபு வழா தம்மரபின என மரபு வழுக் காத்ததாக உரைக்க' என்று மரபு வழுவுக்கும் இந்தச் சூத்திரத்திலேயே இடம் அமைத்தார்.

> 'செப்பு வழாநிலையும் வினா வழா நிலையும் சிறப்பு வகையான் ஓதப்படும். இட வழா நிலையும் இவ்வாறு ஓதப்படும். மரபு வழாநிலையும் ஒழித்து ஒழிந்தன இச்சூத்திரத்தால் காத்தார்'

என்று பல வகை வழாநிலை வழு அமைதிகளை ஒருவாறு தொகுத்துச் சொல்லியுள்ளார்.

சேனாவரையர் வழுவற்க என்பதும் வழு அமைதியும் ஒரு சூத்திரத்திலேயே வந்துள்ளதாக இரண்டு சூத்திரங்களைக் (கி. 18, 40) குறிப்பிட்டுள்ளார்.

> சுட்டுமுத லாகிய காரணக் கிளவியும்
> சுட்டுப்பெய ரியற்கையின் செறியத் தோன்றும்

என்ற சூத்திரத்தின் விளக்கத்திலும் 'இதனால் வழக்கின்கண் மரபு வழாநிலையும் செய்யுட்கண் மரபு வழுவமைதியும் உணர்த்தினார்' என்று கூறுவதற்குக் காரணம் முன்னுள்ள இரண்டு சூத்திரங் களும் இயற்பெயர்க் கிளவியும் கூட்டுப் பெயரும் பற்றியவை என்பதுதான். அங்கு முதலில் இயற்பெயரும் அடுத்துச் சுட்டுப் பெயரும் வரும் என்று பொதுவாகக் குறிப்பிட்டு (கி. 38) அடுத்த சூத்திரத்தில் (கி. 39) செய்யுளில் முறை மாறி வரலாம் என்று கூறியதை ஒட்டியே ஆகும்.

சேனாவரையர் உரைப்படி 61 சூத்திரங்கள் - அவைகளில் 12 சூத்திரங்கள் (11, 13, 26, 42, 43, 44, 48-51, 54, 60) வழுக் காத்தலாகவும், 15 சூத்திரங்கள் (14-17, 21, 23, 27, 32, 37, 39, 45, 55, 56, 57, 61) வழு அமைதியாகவும், சூத்திரங்கள் (18, 40) இரண்டும் (வழக்கின்கண் வழுவற்க, செய்யுட்கண் வழு அமைக்க என்றும்) ஒரு சூத்திரம் (31) இலக்கணமாகவும் (வழுக் காத்தற்கு அவற்றது இலக்கணம்) கூறுவதாகவும் அமைகின்றன. அவைகளில் சேனாவரையர் கூடுதலாக, கி. 22, 23, 32, 35, 39, 54 ஆகிய சூத்திரங்கள் வழு அமைதியை விளக்குபவையாகக் குறிப்பிட்டுள்ளார்.

### 2.4.1.3. தெய்வச்சிலையார்

> "தம் மரபின' என்றதனால் மரபு பெறுதும், 'மயங்கல் கூடா' என்றதனால் வழூஉப்படுதல் குற்றம் என்பது பெறுதும்'

என்று தெய்வச்சிலையார் குறிப்பிட்டு ஓர் உதாரணத்தின் மூலம் விளக்கி வழுக்களின் வகையும் குறிப்பிட்டுள்ளார்.

> 'உதாரணம் அவன் நெருநல் உண்டான் என்பது. இதனுள் அவன் என்னும் உயர்திணைப் பெயர் உயர் திணை வினை கொண்டு முடிதலின் இடம் வழுவாதா யிற்று, நெருநல் என்னும் இறந்த காலப் பெயரோடு இறந்த கால வினைமுடிதலின் காலம் வழுவாதா யிற்று. உண்டல் தொழிற்கு உரியானை உண்டான் என்றமையான் மரபு வழுவாதாயிற்று, பிறவும்

அன்ன. இனி வழுவாமாறு: உயர்திணை மூன்று பாலும் அஃறிணை இரண்டு பாலொடு மயங்குதல் திணை வழுவாம்; அவை தம்முள்தாம் மயங்குதல் பால் வழுவாம்; தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்று இடமும் ஒன்றோடு ஒன்று மயங்குதல் இட வழுவாம். இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என்னும் மூன்று காலமும் தம்முள் மயங்குதல் கால வழுவாம். எல்லாப் பொருளையும் பயின்ற மரபினால் கூறாதது மரபு வழுவாம்.

அவன் உண்டது - திணை வழூஉ
அவன் உண்டனள் - பால் வழூஉ
நீ உண்டனன் - இட வழூஉ
நாளை உண்டேன் - கால வழூஉ
அவன் மேய்ந்தான் - மரபு வழூஉ

பிறவும் அன்ன திணை வழூஉப் பன்னிரண்டு, பால் வழூஉ எட்டு, இட வழூஉ ஆறு, கால வழூஉ ஆறு, மரபு வழூஉ வரம்பில'

என்பது தெய்வச்சிலையார் விளக்கம். மேலும் அவர் பல சூத்திரங்களில் அவைகளை இனம் காட்டியுள்ளார். அதாவது கி. 11, 13 ஆகிய இரண்டு சூத்திரங்களையும் 'வழுப்படாமற் கூறுமாறு உணர்த்துதல் நுதலிற்று' என்று குறிப்பிட்டுள்ளார் வழுக் காத்தல்களாகக் கிளவி 16, 26, 28, 28, 31, 32, 34, 36, 38, 39, 40, 44, 46, 48 என்ற சூத்திரங்களையும் (மொத்தம் 14) வழு அமைத்தல் களாக 14, 15, 17, 18, 27, 30, 33, 35, 41, 47, 49, 55, 58 (மொத்தம் 13) ஆகிய சூத்திரங்களையும் குறிப்பிட்டுள்ளார்.

இந்த இரண்டு செய்திகள் சுட்டிக்காட்டத்தகுந்தவை:

1. தெய்வச்சிலையாரும் சில சூத்திரங்களை அந்த இரண்டு வகையில் சேர்க்காமல் விட்டுவிட்டார். உதாரணமாக 'இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்' (19) முதலான ஏழு சூத்திரங்கள். ஆனால் 19ஆம் சூத்திர உரையில் 'நிலம் வலிதாயிற்று எனக் கூறலாகாது என்னை? ஆக்கம் கொடுப்பின் அதற்கு இயல்பு பிறிதாவான் செல்லுமாகலின் வழுவாம்' என்று கூறுவதால் இந்தச் சூத்திரத்தை வழுக்

காத்தல் என்ற பிரிவில் அடக்கலாம். உண்மையில் இலக்கணத்தை வழுக் காத்தல், வழு அமைதி கூறல் என்ற முறையில் பார்ப்பது அவ்வளவு பொருத்தம் இல்லை என்பதையே தெய்வச்சிலையார் சில சூத்திரங்களை வழுக் காத்தல் வழு அமைதி என்ற இரண்டு வகையிலும் சேர்க்காததை உணர்த்துகிறது.

2. பிறர் வழுக் காத்தலாகக் கூறியதைத் தெய்வச்சிலையார் அப்படிக் கருதாததும் சுட்டிக்காட்டத் தகுந்தது. 'ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல்' (சேனா. கி. 44, தெ. 42) சேனாவரையர் 'பால் வழுக் காத்தவாறு' என்று கூறத் தெய்வச்சிலையார் 'எண்ணு முறைக்கண் ஆண்பாலா யினும், பெண்பாலாயினும் ஒருவர், இருவர், மூவர் என எண்ணின் அல்லது பால் தோன்ற எண்ணப்படாது என்றவாறாம்' என்று பொதுவாகக் கூறியுள்ளார். அப்படியே 'ஞாயிறு காலம் உயிரே உடம்பு' என்ற சூத்திரத்தைச் (சேனா. 57, தெய். 56) சேனாவரையர் திணைவழு அமைதி என்று கூறத் தெய்வச்சிலையார் 'உயர்திணைப் பொருட்கண் எஞ்சியது உணர்த்துதல் நுதலிற்று' என்று விளக்கியுள்ளார். இதுவும் கிளவியாக்கச் சூத்திரங்களை வழுக் காத்தல், வழு அமைதி என்று முழுவதும் பாகுபடுத்துவது பொருந்தாது என்று தெய்வச் சிலையார் கருதுகிறார் என்பதையே வற்புறுத்துகிறது.

#### 2.4.1.4. நச்சினார்க்கினியர்

இளம்பூரணர், சேனாவரையர் கருத்துகளைத் தழுவியே நச்சினார்க்கினியர் உரை அமைந்துள்ளது. ஆனாலும், இளம்பூரணர், சேனாவரையர், தெய்வச்சிலையார் ஆகியோர் வழு அமைதியாகக் கொள்ளாத சில சூத்திரங்களை நச்சினார்க்கினியர் வழுக் காத்தல், வழு அமைதி ஆகியவை உள்ளனவாகவும் அவர்கள் 'வழு, வழு அமைதி என்று கொண்ட சில சூத்திரங்களை அவை இல்லாதனவாகவும் விளக்கியுள்ளார்.

'இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்' (502) என்ற சூத்திரத்தையும் அடுத்த சூத்திரத்தையும் வேறு யாரும் வழுக் காத்தலாகக் கூறாதிருக்க, நச்சினார்க்கினியர் 'மரபு வழுவாமை கூறுகின்றது' என்று குறிப்பிட்டுள்ளார். 507ஆம் சூத்திரம் அவர் கருத்துப்படி வழு அமைதி கூறுகிறது.

| | பிறர் | | நச்சர் |
|---|---|---|---|
| 32 | வினாவழு | | மரபு கூறுதல் |
| 34 | மரபு வழு | | மரபு கூறுதல் |

| | சேனா | தெய்வ | நச்சர் |
|---|---|---|---|
| 37 | மரபு வழா நிலை | செப்பு வழுக்காத்தல் | மரபு வழு அமைதி |
| 38 | மரபு வழா நிலை | செப்பு வழுக்காத்தல் | இருபெயர் வழுக்காத்தல் |
| 39 | மரபு வழா நிலை | செப்பு வழுக்காத்தல் | உரிச்சொல் மரபு காத்தல் |

அதாவது உரையாசிரியர்களுக்குள் வழு, வழாநிலை பற்றிய கருத்தில் ஒற்றுமை இல்லாமை அந்தக் கருத்தமைவு தொல் காப்பியர் நினைத்துப்பார்க்காதது, உரையாசிரியர்கள் வலிந்து கொள்வது என்ற உண்மையைப் புலப்படுத்தும்.

### 2.4.1.5. கல்லாடர்

கல்லாடர் பெரிதும் இளம்பூரணர் கருத்தைத் தழுவி உரை எழுதியிருந்தாலும் இந்தச் சூத்திரத்தில் (கிளவி 11) மூன்று புதிய கருத்துகள் காணப்படுவது குறிப்பிடத் தகுந்தது. அவையாவன: 1. மரபு வழு, 2. செப்பு வினா வழுக்கள், 3. இலக்கணம் பற்றியது. மரபு வழு பற்றியது மேலே விளக்கப்பட்டுள்ளது.

### 2.4.2. வழு வகைகள்

> 'மயக்கம் ஏழு வகைப்படும். திணை மயக்கம், பால் மயக்கம், இட மயக்கம், கால மயக்கம், மரபு மயக்கம், செப்பு மயக்கம், வினா மயக்கம் என'

என்பது இளம்பூரணர் வாசகம். இந்த ஏழு வகை வழுவையும் சேனாவரையர், நச்சினார்க்கினியர், கல்லாடர் ஆகியோர் ஒத்துக் கொள்ளத் தெய்வச்சிலையார் செப்பு வழு, வினா வழு என்ற இரண்டு நீங்கிய ஐந்து வழுக்களையே குறிப்பிட்டுள்ளார். ஆனாலும் 'செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்' (13) என்ற சூத்திர உரையில் 'எனவே வழு எழு வகையாம் என்பது பெற்றாம்' என்ற வினா வழு, செப்பு வழு ஆகிய இரண்டையும் சேர்த்துக் கொண்டு விட்டார்.

### 2.4.2.1. மரபு வழு

தெய்வச்சிலையார் ஒழிந்த உரையாசிரியர்கள் மரபு வழு என்பதற்கு அகராதி நிலையில் மீறலையும் தெய்வச்சிலையார் தொடரியல் கட்டுப்பாடு மீறலையும் உதாரணமாகக் கொடுத்துள்ளார்கள்.

மரபு வழூஉ வருமாறு: மேய்த்தல் ஒப்புமையான் யானை மேய்ப்பானை இடையன் என்றும், ஆடு மேய்ப்பானைப் பாகன் என்றும் சொல்லுதல் என்ற இளம்பூரணர் தந்த உதாரணங்களையே சேனாவரையர், நச்சினார்க்கினியர் கல்லாடர் ஆகியோரும் கொடுத்துள்ளார்கள். அவை இணை உறவு கட்டுப்பாடு (Collocational restriction) மீறல் என்றும் தேர்வுக் கட்டுப்பாடு (Selectional restriction) மீறல் என்றும் மொழியியலார் கூறும் கருத்தோடு ஒற்றுமை உடையன.

> 'ஒரு பொருட்கு உரிய மரபினை ஒரு பொருட்கு உரித்தாகச் சொல்லுதல்'

என்று கல்லாடர் பொதுநிலையில் விளக்கிக் கூடுதலாக

> 'யானையுட் பெண்ணை ஆ என்றலும் ஆவினுட் பெண்ணைப் பிடி என்று கூறினாற் போல்வன'

என்று குறிப்பிட்டு அடிப்படையான ஒரு கேள்வியையும் எழுப்பிப் பதிலும் சொல்லியுள்ளது சிறப்பாக அறியத்தகுந்தது. அது அடுத்த பகுதியில் விளக்கப்படும்.

'அவன் மேய்ந்தான் - மரபு வழூஉ' என்று தெய்வச்சிலையார் குறிப்பிட்டுள்ளார். இது தொடரியல் நோக்கு உடையது. ஏனென்றால் மேய் என்ற வினையடி அஃறிணைக்கு அதுவும் ஆடு மாடுகளுக்கு மட்டுமே பொருந்தும். இங்குத் திணை-பால் இயைபு இருந்தாலும் அது தவறான வாக்கியமே.

எல்லா வழுவும் ஒரு வகையில் மரபு வழுவே. எனவே அதைக் கூடுதலாக ஆறு வகையாகப் பிரிப்பானேன் என்று கல்லாடர் ஓர் அடிப்படையான கேள்வி எழுப்பிப் பதில் கூறியுள்ளது ஒரு வகையில் சிறப்பானது. மற்றொரு வகையில் இலக்கணக் கலைச்சொற்களில் இன்னும் நுண்ணிய வேறுபாடு செய்ய வேண்டும் என்ற உண்மையையும் புலப்படுத்துகிறது.

> 'இவை எல்லாம் (மரபு வழு உள்ளிட்ட ஏழு வகை வழு) மரபு வழு என ஒன்றே ஆகற்பாலன எனின்:- அவ்வாறு ஒன்றாய் அடங்குமே எனினும், அம் மரபினைப் பகுத்து, திணை பற்றிய மரபினைத் திணை மரபு என்றும், பால் பற்றிய மரபினைப் பால் மரபு என்றும்.... இவ்வாறு ஒன்றனையும் பற்றாது வருவதனை மரபு வழு என்று ஒன்றாக்கி இலக்கணமும் வழுவும் கூறினார்'

என்ற வாசகத்தில் மரபு பற்றி இரண்டு கருத்துகள் புதைந்துள்ளன. மரபு என்பது அ) பொதுப்பொருள், ஆ) சிறப்புப் பொருள். 'இவை எல்லாம் (மரபு வழு உள்ளிட்ட ஏழு வகை வழு) மரபு வழு என ஒன்றே ஆகற்பாலன' என்பது பொதுப்பொருள். 'இவ்வாறு ஒன்றனையும் பற்றாது வருவதனை மரபு வழு' என்பது சிறப்புப் பொருள். இதன்படி மரபு வழு என்பது பிற வகையில் அடக்கமுடியாதது என்னும் கருத்தைப் புலப்படுத்துகிறது அப்படிக் கொள்ளாமல் செப்பு வினா ஆகியவை கருத்தாடல் நோக்கும் ஏனைய திணை பால் போன்றவை இலக்கணக்கூறு நோக்கும் உடையவை என்று பாகுபடுத்தலாம். மேலும், சிறப்புப் பொருளில் வரும் மரபு வழு என்பது அகராதி நோக்கு. குறிப்பாகச் சொல் தேர்வுக் கட்டுப்பாடு நோக்கு உடையது என்று விளக்கும்போது சிறப்புப் பொருளில் வரும் மரபு வழுவும் மொழி அமைப்புக்குள் அடங்கிவிடும். அதை இணை உறவு மீறல் அல்லது தேர்வுக் கட்டுப்பாடு மீறல் என்று கொள்ளலாம்.

உரையாசிரியர்கள் மரபு வழு என்பதை இயலுக்குள் வேறு பல விதமாக அமைந்திருப்பதாக விளக்கியுள்ளார்கள். சூ. 33, 34, 44, 46-50, 56 ஆகியவை மரபு வழுக் காத்தல் சூத்திரங்களாக இளம்பூரணர் குறிப்பிட்டுள்ளார். 33, 34 ஆகிய இரண்டும் தனி வாக்கியத்தில் உம்மை கையாளும் இடம் பற்றி விவரிக்கின்றன. எனவே இவை தொடரியல் நோக்கு உடையவை. 44ஆம் சூத்திரம் பால் வேறுபாடு - ஒருவன், ஒருத்தி, ஒன்று என்று எண்ணுப் பெயரில் மட்டும் காணப்படும் என்பதை விளக்குவதால் அது சொல்லியல் நோக்கு உடையது. 46-50 வரையுள்ள சூத்திரங்கள் அகராதியியல் நோக்கு உடையவை. 56ஆம் சூத்திரம் கருத்தாடல் பற்றி வருணிக்கிறது.

'அவன் மேய்ந்தான் மரபு வழூஉ' என்று தெய்வச்சிலையார் குறிப்பிட்டுள்ளார். இது தொடரியல் நோக்கு உடையது. ஆனால் இயலுக்குள் 26, 32, 44, 48 ஆகிய 4 சூத்திரங்களை மரபு வழுக் காத்தலாகக் குறிப்பிட்டுள்ளார். அவை எல்லாம் தொடரியல் சம்பந்தப்பட்டவையே. வண்ணச்சினைச் சொல் பற்றிய 32-ஆம் சூத்திரம் தொடரியல் பற்றியதுதான். 'மன்னாப் பொருளும் அன்ன இயற்றே' என்ற 34ஆம் சூத்திரம் தொடரியல் பற்றியதுதான். ஆனால் அதற்கு முன்னுள்ள சூத்திரத்தைச் செப்பு வழுக் காத்தல் என்று அவர் கூறியதை விட மரபு வழு காக்கின்றது என்பது சிறப்பாகக் கொள்ளமுடியாது.

### 2.4.2.2. செப்பு வினா வழு

கல்லாடர் கருத்துப்படி இந்தச் சூத்திரத்திலேயே (கிளவி. 11) ஏழு வகை வழுவும் அடங்கியுள்ளன. அப்படியானால் பிற்பகுதியில் செப்பு, வினா வழுக்களைத் தனியாகக் கூற வேண்டிய அவசியம் என்ன என்ற கேள்வி எழுவதை அவர் நினைத்துப் பார்த்துப் பதில் சொல்லியுள்ளார்.

> 'எழு வகை வழுவும் இச்சூத்திரத்துள் 'மயங்கல் கூடா' என்றதனால் பெறுதும் எனின்; மேல் 'செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்' எனச் செப்பு வழுவும் வினா வழுவும் கூறல் அமையாது எனின்; அதனுள் அடங்கியவற்றையே உலகத்துச் சொல் எல்லாம் (உள்ளபடி) உயர்திணைச் சொல், அஃறிணைச் சொல் என வரையறையுற்றாற் போல வினாவுரையும் செப்பு உரையும் என இரண்டாக வரையறைப்படுத்து ஓர் நிலைமை கண்டதனை உணர்த்துதற் பொருட்டு, மீண்டும் விளங்கக் கூறினார் என்று சொல்லுப. எழு வகை வழுவிற்கும் இஃதோர் பொதுவிதி கூறியது எனவும் சிறப்பு விதி வேறுவேறு கூறிற்று எனவும் உரைக்கப்படும்'

என்பது அவர் வாசகம். இங்கு ஒரு நோக்கில் பகுதியாக இருப்பது இன்னொரு நோக்கில் தனித்து இருக்க முடியும் என்று அவர் கருத்தைப் பொதுமைப்படுத்தலாம். 'உலகத்துச் சொல் எனலாம்... வினா உரையும் செப்பு உரையும் என்ற இரண்டு வரையறைப் படுத்துதல்' என்பது மொழி ஒரு கருத்தாடல் என்ற இன்றைய கருத்தின் முன்னோடி ஆகும்.

### 2.4.2.3. மதிப்பீடு

'வினையில் தோன்றும் பாலறி கிளவியும்' என்ற சூத்திரத்தில் 'மயங்கல் கூடா' என்று எதிர்மறையானும் 'தம் மரபினவே' என்று உடன்பாட்டாலும் கூறியது தொல்காப்பியச் சூத்திர உருவாக்கம் பற்றியது. அவருடைய சூத்திரம் கவிதை போன்று உடையது; அறிவியல் சமன்பாடு போன்று சுருக்கமும் எளிமையும் உடையது அல்ல என்பார் அகத்தியலிங்கம் (1998: vi). எனவே உரையாசிரியர்களின் இலக்கணக் கேட்பாடே அவர்களை வழு, வழுக் காத்தல், வழு அமைதி என்று பாகுபாடு செய்ய வைத்தது; அதே சமயத்தில் வழு, வழு அமைதிக்கான சில தடயங்கள் கிளவியாக்கத்திலேயே உள்ளதை மறுக்க முடியாது.

'செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்' (496) என்ற சூத்திரம் வழுவற்க என்ற கருத்து உடையதுதான். 'வினாவும் செப்பே வினாஎதிர் வரினே' என்பது வழு அமைதிதான். ஏனென்றால் முன்னதற்கு இது மாறுபட்டது. அப்படியே 'இயற்கைப் பொருளை இற்று எனக் கிளத்தல்' (502) என்ற சூத்திரமும் 'செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்' என்ற அதற்கு அடுத்த சூத்திரமும் வழுவற்க என்ற பாணியில் அமைந்தவையே.

கருத்தாடலின் முக்கிய நோக்கமாக

......வழீஇயினும் வரைநிலை இன்றே
அப்பொருள் புணர்ந்த கிளவி யான (498)

என்பதை வழு அமைதிக்கான பொது இலக்கணமாகக் கொள்ளலாம். பல இடங்களில் மாற்று வடிவங்களைக் குறிப்பிட்டுள்ளாரே தவிர, அவைகளை உரையாசிரியர்கள் போல வழு அமைதி என்று கொள்ளவில்லை. அதனால்தான்

| | |
|---|---|
| வழீஇயினும் வரைநிலை இன்றே | 498 |
| வரைநிலை இலவே | 500 |
| இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல | 510 |
| விரவுதல் வரையார் | 526 |
| விரவு வரையார் | 528 |

என்று எதிர்மறையில் கூறியிருப்பது, பிழை நீக்கந்தான் இலக்கண நோக்கம் என்ற கருத்தில் தொல்காப்பியருக்கு முழு உடன்பாடு இல்லை என்பதைத் தெளிவுபடுத்துகிறது. உண்மையில் வழுக் காத்தல், வழு அமைதி என்று கோட்பாட்டில், சமூக நோக்கில் இலக்கண ஆசிரியரின் சட்டாம்பிள்ளைத்தனம் புதைந்திருக் கிறது. பொதுவாகத் தொல்காப்பியர் பல இடங்களில் மொழியில் உள்ள மாற்று வடிவங்களைப் பதிவு செய்து அவைகளின் தராதம்மியத்தைப் பற்றிக் கவலைப்படாதவராகவே- அதாவது மாற்று வடிவங்களைப் பதிவு செய்யும் இலக்கண ஆசிரியராகவே - வருணனை மொழியியலாளராகவே உள்ளார்.

அ. வழுவற்க, ஆ. வழு, இ. வழு அமைதி என்பவை முறையே இலக்கணம் அ. மொழியில் பின்பற்றவேண்டிய கட்டாய விதிகளை விளக்குவது, ஆ. பிழைகளைச் சுட்டிக்காட்டுவது,

இ அவைகளில் சிலவற்றை ஒரு வகையில் ஒத்துக்கொள்வது என்ற முறையிலும் அமைந்தது. அதாவது இலக்கணம் மொழியைக் கையாளுவோர்க்கு ஒரு கையேடு என்ற கருத்து உடையது.

வழுவற்க, வழு அமைதி என்ற இரண்டு முறையில் சூத்திரங்கள் அமைந்துள்ளன. 494-500, 505, 526-534, 540, 542, 545 ஆகிய 20 சூத்திரங்கள் அதாவது 32 விழுக்காடு இந்த வகையில் அமைந்துள்ளன. உண்மையில் அவையும் தொடரியல் நோக்கு உடையவையே.

### 2.5. தொடரியல் நோக்கு

'பொதுவகையால் கிளவி என்றமையால் தனி மொழியும் தொடர்மொழியும் கொள்ளப்படும்' என்று சேனாவரையர் விளக்குவதால், தொடர் மொழியும் இயல்பானது; உண்டாக்கப் படுவதில்லை என்று கருதுவதால் தொடரியல் அமைப்புப் பற்றி அவர் பேசவில்லை போலும்.

> 'கிளவியது ஆக்கம் கிளவியாக்கம்:... அதற்குப் பொருள் சொல்லினது தொடர்ச்சி... சொற்கள் ஒன்றோடு ஒன்று தொடர்ந்து பொருள் மேலாகும் நிலைமையைக் கிளவியாக்கம் என்றார்...'

என்ற தெய்வச்சிலையாரின் வாசகத்தில் 'சொற்கள் ஒன்றோடு ஒன்று தொடர்ந்து பொருண்மேலாகு நிலையைக் கிளவியாக்கம் என்றார்' என்பது தொடர் உண்டாக்கப்படுவது என்ற கருத்து பெறப்படுவதால் தொடரியல் பற்றிய சிந்தனை அவரிடம் அதிகம் காணப்படுகிறது போலும்.

பொதுவாகத் தொடரியல் என்பது ஒரு தொடர், வாக்கியம் ஆகிய இரண்டின் அமைப்பையும் விளக்குவது. தொடரியல் அமைப்பு என்பது வாக்கியத்தின் அல்லது சொற்களின் வரிசை முறை என்பது, ஒன்று. வண்ணச்சினைச் சொல் என்ற தொடர் அடை, சினை முதல் என்ற வரிசையில் வருவது (509). சொல் அல்லது தொடர் என்னென்ன சொற்களைப் பெற்று வரும் ஆற்றல் உடையது என்று விளக்குவது, இரண்டு. உதாரணமாக ஒரு வினைச்சொல் அதிகப்பட்சம் 8 தொழில் முதனிலைகளை ஏற்று வரலாம் (596); வேற்றுமை ஏற்ற பெயர், கொண்டு முடியும் வினைகள் பற்றிய வருணனை (வேற்றுமையியல்) ஆகியவை. வாக்கியத்தில் சில

தொழில் முதனிலை இடம் மாறியும் வரலாம். ஒருவன் திண்ணையை மெழுகினான் என்பதில் திண்ணை செயப்படு பொருள். ஆனால் திண்ணை மெழுகிற்று என்ற வாக்கியத்தில் திண்ணை என்பது எழுவாயாக வந்துள்ளது. அதைத் தொல்காப்பியர் 'செய்பபடுபொருளைச் செய்ததுபோல...க் கிளத்தல்' என்பார் (731). அதனால் இப்போது வாக்கியம் புறநிலை அமைப்பு புதைநிலை அமைப்பு உடையது என்றும் புதைநிலை அமைப்பு சில மாற்றம் பெற்றுப் புறநிலை வாக்கியம் உண்டாகிறது என்றும் விளக்குகிறார்கள். மேலும் ஒரு புதைநிலை வாக்கியத்தின் மாற்றங்களாகக் கருதப்படுகிற ஒன்றுக்கு மேற்பட்ட வாக்கியங்களின் அமைப்பையும் தொடரியல் விளக்கும் என்பது இன்றைய கோட்பாடு.

கிளவியாக்கத்தில் அப்படி அமைந்த சூத்திரங்கள் சிலவே - 494, 509, 511-513, 528, 529, 530, 532, 534, 537, 538, 540, 541, 542, 543, 545 ஆகிய சூத்திரங்கள். 27 விழுக்காடு, தொடரியல் பற்றியவை. அவைகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். 1. தொடர் அமைப்பு, 2. வாக்கிய அமைப்பு, 3. இரண்டு வாக்கியங்களின் வரிசை முறை என்று மூன்று முறையில் தொடர் அமைப்பு கிளவியாக்கத்தில் விளக்கப்பட்டிருக்கிறது.

### 2.5.1. தொடர் அமைப்பு

வண்ணச் சினைச் சொல் பற்றிய சூத்திரம் (509) ஒரு வகை பெயர்த் தொடர் அமைப்பைப் பற்றி விளக்குகிறது.

இனச்சுட்டில்லாப் பண்பு கொள் பெயர்க் கொடை என்னும்போது ஒரு பெயரடையையே வருணிக்கிறது (501).

பொதுவாகத் தொடரமைப்பை விளக்கும்போது ஒரு குறிப்பிட்ட பெயர்த் தொடர் எப்படிப்பட்ட வினைச் சொல்லை ஏற்கும் என்றும், ஒரு குறிப்பிட்ட வினை எப்படிப்பட்ட பெயரை/ பெயர்த் தொடரை ஏற்கும் என்றும் தொல்காப்பியர் விளக்கியுள்ளார்.

முதல் வகைக்கு உதாரணம் தன்மைப் பெயரும் அஃறிணைப் பெயரும். பெயர்த் தொடராக அமையும்போது பயனிலை வினை பற்றிப் பேசுவது சூ. 526. அப்படி அமைந்த சூத்திரங்கள் 529, 530, 534. இரண்டாவது வகைக்கு உதாரணம் வியங்கோள் வினைமுற்று ஏற்று வரும் பெயர்த் தொடரின் பண்பு பற்றியது (528).

செல், வா, தா, கொடு ஆகிய வினைகள் பயனிலையாக அமையும்போது நாலாம் வேற்றுமை (இன்னாருக்கு என்ற தொழில் முதனிலை) ஏற்பதில் உள்ள கட்டுப்பாடு மூன்று சூத்திரத்தில் (511-3) விளக்கப்பட்டிருக்கிறது.

### 2.5.2. வாக்கிய அமைப்பு

'வினையின் தோன்றும் பாலறி கிளவியும்' என்ற சூத்திரம் (494) எழுவாய்-பயனிலை திணை-பால் இயைபு பற்றிப் பேசுவதால் அது வாக்கியம் பற்றி விவரிப்பதாகக் கொள்ளலாம்.

### 2.5.3. வாக்கியங்களின் வரிசை : கருத்தாடல் அமைப்பு

இரண்டு வாக்கியங்களின் இடையே அமைய வேண்டிய சில ஒழுங்குமுறைகளையும் தொல்காப்பியர் விளக்கியுள்ளார். இப்படி அமைந்த சூத்திரங்கள் ஆறு (496-498, 521-523). அதாவது பதிலும் கேள்வியும் அமைந்த இரண்டு வாக்கியங்கள் ஒத்திருக்க வேண்டும் என்று பொதுவாக சூ. 496 (செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்) கூறுகிறது. இங்கு உரையாசிரியர்கள் கேள்விப் பதில்களில் வரும் எழுவாய்களில் சுட்டும் பொருள் ஒன்றாகவும் வினைச்சொல்லும் ஒத்து இருக்கவேண்டும் (முருகா உண்டாயா? நான் உண்டேன்/உண்ணவில்லை) என்பார்கள். பதில் வாக்கியத்தின் அமைப்பு முறை மாறுபட்டிருந்தாலும் அதன் குறிப்புப் பொருள் கேள்விக்குரிய பதிலாக இருக்க வேண்டும். உண்டாயா? என்ற கேள்விக்கு உண்பேனோ? வயிறு வலிக்கிறது என்று பதில் அமைந்தாலும் அதன் குறிப்புப் பொருள் நான் உண்ணவில்லை என்பதால் சரியான பதிலாக ஏற்றுக்கொள்ளப்படும். எனவே இச்சூத்திரங்கள் இரண்டு வாக்கியங்களுக்குள் உள்ள உறவை விளக்குகின்றன. மேலும் குறை வாக்கியங்களும் இந்த வகையில் அடங்கும்.

அப்படியே இரண்டு வாக்கியங்களில் இயற்பெயர்ச் சொல்லும் (Proper Noun) சுட்டுச் சொல்லும் 'வினைக்கு ஒருங்கு இயலும் காலம் தோன்றினால்' (ஒரே வினை கொள்ளாது பிறிது வினையைக் கொள்ளுதல்) முதலில் இயற்பெயர் வாக்கியத்தையும் அடுத்துச் சுட்டுப்பெயர் வாக்கியத்தையும் அமைக்க வேண்டும் (522); செய்யுளில் முறை மாறி வரலாம் (523); காரண வேற்றுமை அமைந்த சுட்டுப்பெயரும் இந்த முறையைப் பின்பற்றும் (524). எனவே இச் சூத்திரங்கள் பொருள் தொடர்புடைய இரண்டு வாக்கியங்கள் அமைய வேண்டிய வரிசை முறை பற்றி விளக்குகின்றன

### 2.6. பொருண்மையியல்

வடிவம் பொருள் உணர்த்தும் முறை, பொருளை எப்படி மொழிப்படுத்துவது என்று இரண்டு விதமாகப் பொருண்மையியல் நோக்கில் விளக்கப்பட்டிருக்கிறது. வடிவத்துக்கும் பொருளுக்கும் உள்ள உறவு அடிப்படையில் பல பொருள் ஒரு சொல், ஒரு பொருள் பல சொல் என்ற பாகுபாட்டைத் தொல்காப்பியர் உரியியலில் (782:4-5) விளக்கியுள்ளார். இங்கு ஒரு வகையான பல பொருள் ஒரு சொற்களைக் குறிப்பிட்டு அவை பொருள் மயக்கம் நீக்கும் முறை பற்றியும் (535) விவரித்துள்ளார். அதில் உள்ள சொற்கள் (இனம் 536, Hyponyms) கருத்தமைவும் இன்னொரு சூத்திரத்தில் மேனிலைச் சொல் (பொதுச்சொல் 529-Superordinate term) என்ற கருத்தமைவும் புதைந்துள்ளன.

#### 2.6.1. வடிவமும் பொருளும்

பெயர்ச்சொற்களில் பல பொருள் ஒரு சொல்லாக வருபவைகளை வகைப்படுத்தி அவை பொருள் மயக்கம் தீர்க்கும் முறையைத் தொடரியல் முறையிலேயே தொல்காப்பியர் கிளவியாக்கத்தில் விளக்கியுள்ளார்.

வினைவேறுபடும் பல பொருள் சொற்கள் வேறுபடு வினை, இனம், சார்பு ஆகியவற்றால் மாறுபடும் (536, 537). மா என்ற சொல் மாமரம், குதிரை என்று இரண்டு பொருள்படும். மா பூத்தது என்ற தொடரில் பூத்தல் என்ற வினை மரத்தோடு தொடர்பு உடையதால் மா என்பது இங்கு மரம் என்ற பொருளை உடையது என்பது புலனாகிவிடுகிறது. மா ஓடிற்று என்ற தொடரில் ஓடுதல் என்ற வினை விலங்குக்கு உரியதால் மா என்பது விலங்கைக் குறிக்கிறது என்பது புலனாகிறது. அந்த முறையில் மாவும் மருதும் ஓங்கின என்ற வாக்கியத்தில் மருது என்பது ஒரு மரம் என்பதால் மா என்பதும் மரம் என்பது புலனாகும். மாவும் ஆவும் ஓங்கின என்றால் ஆ என்பது ஒரு விலங்கு (பசு) என்பதால் மா என்பது இங்கு விலங்கு என்பது புலனாகும்.

இங்கு 'இனம்' என்பதை உள்ளீட்டுச் சொற்கள் (Hyponyms) என்று கொள்ளலாம். 'வேறு வினைப் பொதுச்சொல் ஒரு வினை கிளவார்' என்ற சூத்திரத்தில் (529) வரும் பொதுச்சொல்லை மேனிலைச் சொல் அல்லது மீச்சொல்லாகக் (Superordinate term) கொள்ளலாம். உதாரணமாக அணி என்பது ஒரு மேனிலைச்

சொல். அந்தப் பெயர்ச் சொல்லைக் கையாளும்போது வினைச் சொல்லும் மேனிலைச் சொல்லாக இருக்கவேண்டும் என்பது இந்தச் சூத்திரத்தின் கருத்து.

தொல்காப்பியர் ஒரு பயனிலைச் சொல் ஒன்றுக்கு மேற்பட்ட இனச் சொற்களை எழுவாயாகப் பெற்று வருவதையும் விளக்கியுள்ளார்.

'வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்' என்ற சூத்திரம் (528) இந்த வகையைச் சார்ந்தது. இங்குச் சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் இனம் இல்லாத சொற்கள் சேர்த்து எண்ணப்படுவது இலக்கிய வழக்கில் வந்துள்ளதை எடுத்துக்காட்டி அமைதி சொல்லியுள்ளார்கள். உண்மையில் இங்குப் பேசுவோன் நோக்கில் ஒரு புதிய மீச்சொல் அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தகுந்தது. இதை உரையாசிரியர்கள் ஒரோ வழி உணர்ந்துள்ளார்களே தவிர, பொதுமைப்படுத்தாததால் மீச்சொல் கருத்தமைவைப் பயன்படுத்தி ஒரே விதமான விளக்கம் கொடுக்கவில்லை.

நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாம்

என்ற புறநானூற்று அடிகளில் (72: 4-5) படர்க்கைச் சொல்லும் அஃறிணைக் கிளவியும் விராய் எண்ணுதல் வழக்குப் பயிற்சி உடைமையான் அடங்கும் என்பார் சேனாவரையர். உண்மையில் அவை நாலு வகைப் படைகள் என்ற முறையில் அமைவதால் 'படைகள்' என்ற மீச்சொல் என்ற முறையில் விரவி வந்துள்ளதாகக் கருதலாம். குறளில் (381) 'படை குடிகூழ் அமைச்சு நட்பு அரண்' ஆகிய ஆறும் அரசனுக்கு உரிய உறுப்புகள் என்று கூறப்பட்டுள்ளது என்பதால் படை என்பதை ஒரு மீச்சொல்லாகக் கருதலாம்.

ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் . . . .
. . . . . . . . . . . . . புதல்வர்ப் பெறாஅ தீரும்
. . . எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்

என்ற புறப்பாட்டில் (9: 1-5) திணை விராய் வந்து முன்னிலை வினைகோடல்... செய்யுள் முடிவு எனப்படும். அவற்றை அதிகாரப் புறனடையால் கொள்க என்பார் சேனாவரையரும் அவரை

ஒட்டி நச்சினார்க்கினியரும். ஆனால் தெய்வச்சிலையார் 533ஆம் (கிளவி 48) சூத்திர உரையில் 'அவையும் உய்யத்தகுவார் இவர் என்னும் இனம் குறித்து நின்றன என்று கொள்க' என்று புதிய மீச்சொல் கண்டுவிளக்கியுள்ளார் (சண்முகம், 2002: 156).

இன்னொரு சூத்திரம் ஒரு பொதுச்சொல் வாக்கியச் சூழலால் ஒரு பாலின் பொருளை உணர்த்துவது பற்றிக் குறிப்பிடுகிறது. ஆயிரவர் போரிட்டார் என்ற வாக்கியத்தில் ஆயிரவர் என்ற பலர்பால் சொல் போரிட்டார் என்ற வினையால் ஆண்களை மட்டுமே குறித்தது. அதைச் சூழல் அல்லது பண்பாட்டு அடிப்படையில் பொதுச்சொல் பொருள் குறுக்கம் ஏற்படும் என்று பொதுமைப்படுத்தலாம். பல பொருள் ஒரு சொல்லின் சில பண்புகளைச் சில சூத்திரங்கள் (535, 536) விளக்குகின்றன.

### 2.6.2. பொருளும் வடிவமும்

கற்பித்தல் இலக்கணம்போல, சில பொருள்களை எப்படி மொழிப்படுத்துவது என்று சில சூத்திரங்கள் விளக்குகின்றன. உதாரணமாக ஒரு பொருளின் இயற்கைத் தன்மையை எந்த வினைமுற்றால் விளக்குவது (502) அதாவது ஒரு பொருளின் இயற்கைப் பண்பை வருணிக்கும்போது 'இற்று' என்ற வாய்பாட்டால் கூறவேண்டும். நிலம் வலிது, நீர் தண்ணிது. ஒரு பொருளின் செயற்கைப் பண்பை உணர்த்தும்போது 'ஆகு' என்ற துணை வினையைச் சேர்த்துக் கூறவேண்டும். நிலம் மெலிதாயிற்று, நீர் சுடாயிற்று. இப்படிப்பட்ட சூத்திரங்கள் 506, 518, 539 முதலியவை.

எனவே கிளவியாக்கம் மொழி அமைப்புப் பற்றிய சில பொது உண்மைகளை ஒன்றுக்கு மேற்பட்ட நோக்கில் விளக்குகிறது என்றுதான் கொள்ளவேண்டும்.

# 3
# பெயர்த் தொடர்

## 3.1. முன்னுரை

தொல்காப்பியர் வேற்றுமையியலில்தான் பெயர், i. வேற்றுமை உருபுகளை இறுதியில் ஏற்று (553), ii. வினையாலணையும் பெயர் தவிர ஏனையவை கால விகுதி ஏற்காதது (554) என்று விளக்கியுள்ளார்.

> கூறிய முறையின் உருபுநிலை திரியாது
> ஈறுபெயர்க் காகும் இயற்கைய என்ப (553)
>
> பெயர்நிலைக் கிளவி காலம் தோன்றா
> தொழில்நிலை ஒட்டும் ஒன்றலங் கடையே (554)

இவை சொல்லியல் நோக்கு உடையவை. இரண்டாவது சூத்திரத்தில் ஒரு விதப் பெயர்ச்சொல் பாகுபாடும் அடங்கியுள்ளது. அதாவது வினையிலிருந்து ஆக்கப்படும் பெயர்களில் வினையாலணையும் பெயர்கள் என்ற ஒரு வகை வெளிப் படையாகக் காலம் காட்டுபவை. எனவே உரையாசிரியர்கள் வினையிலிருந்து உண்டாகும் பல வகையான பெயர்களைப் பற்றியும் அங்கு விளக்கியுள்ளார்கள். அவர்கள் உரையிலிருந்து தொழில் பெயர் (Verbal noun) ஆக்கப்பெயர் (Derivative noun) பற்றிய வேறுபாடு புலனாகியுள்ளது (சண்முகம், 1986: 12-7).

பெயரியலில் முதல் ஐந்து சூத்திரங்கள் சொல்லின் பொது இலக்கணம் விளக்கிவிட்டு ஆறாவது சூத்திரத்தில்

> . . . பெயரெனப் படுபவை தெரியுங் காலை
> உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
> ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்
> அம்மூ வுருபின தோன்ற லாறே (645)

என்பது பெயர்ச் சொற்களைத் திணை அடிப்படையில் செய்யும் பாகுபாடு. அதாவது உயர்திணைப் பெயர்கள், அஃறிணைப் பெயர்கள், விரவுப் பெயர்கள் என்று மூன்று வகை ஆகும். அந்த

இயலின் ஏனைய சூத்திரங்கள் பெரும்பான்மையும் இந்த மூன்று வகைப்பெயர்களின் விவரணமாகவே அமைந்துள்ளன. அவை முன்னரே விரிவாக ஆராயப்பட்டுள்ளன (சண்முகம், 1986: 39-50). எனவே இங்குப் பெயரியல், கிளவியாக்கம், எச்சவியல் ஆகியவற்றில் குறிப்பிட்ட பெயர்த்தொடர் பற்றியவை தொடரியல் நோக்கில் விளக்கப்படுகின்றன.

### 3.2. பெயர்த்தொடர்கள்

#### 3.2.1. இயற்பெயரும் சிறப்புப்பெயரும்

சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர் கிளவி முற்படக் கிளவார் (524)

இங்கு இயற்பெயர் என்பது உயர்திணையில் வழங்கும் சிறப்புப் பெயர் (Personal name) தான். சிறப்புப் பெயர் என்பது ஒருவர் செய்யும் தொழில் காரணமாக வழங்கப்படும் பெயர். உரையாசிரியர்கள் தொழிலால் வரும் சிறப்புப் பெயர் மட்டும் அல்லாமல் குலப்பெயர் ஆகியவைகளையும் சேர்த்துள்ளார்கள்.

இந்த இரண்டு சொல்லும் ஒரு தொடரில் சேர்ந்து வந்தால் முதலில் சிறப்புப் பெயரும் அடுத்து இயற்பெயரும் இணைக்க வேண்டும்.

ஏனாதி நல்லுதடன் சோழன் நலங்கிள்ளி
பார்ப்பான் கண்ணன் அமைச்சர் ஆறுமுகம்
பேராசிரியர் மீனாட்சிசுந்தரன்

இங்குத் தொல்காப்பியர் தொடரில் சொற்களின் வரிசை முறை பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

இன்னொரு சூத்திரத்தில் தொல்காப்பியர் மூன்று சொற்களால் ஆன பெயர்த் தொடரின் வரிசை முறை பற்றியும் விவரித்துள்ளார்.

#### 3.2.2. வண்ணச் சினைச் சொல்

அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல் (509)

இங்கு வண்ணமாகிய அடைச் சொல், சினைச்சொல், முதல் சொல் என்ற வரிசை முறையில் இந்தப் பெயர்த் தொடர் அமையும் என்பதே சூத்திரத்தின் கருத்து. உதாரணம், செங்கால் நாரை. இங்குச் செம் என்பது வண்ணச் சொல், கால் என்பது சினைச் சொல், நாரை என்பது முதல் சொல்.

தொல்காப்பியர் தொடரை வண்ணச் சினைச் சொல் என்று குறிப்பிட்டுவிட்டு சொற்களின் வரிசை முறையைக் கூறும்போது வண்ணத்துக்குப் பதிலாக அடை என்று கூறியதில் ஒரு தொடரியல் உண்மை புதைந்துள்ளது.

> 'இதனாற் பெற்ற பொருள் என்னையெனின், பொருட்கு உளதாகிய பண்பும் சினையும் பொருளொடு அடுத்துக் கூறக் கருதுவானாயின் பொருள்மேல் செல்லாது, சினைமேல் செல்லும் என்பது அறிவித்தற்கு என்க. உதாரணம் செங்கால் நாரை வண்ணம் சினைமேல் ஏறி முதலொடு முடிந்தது'

என்ற தெய்வச்சிலையார் விளக்கத்தில் 'பொருள் மேல் செல்லாது சினை மேல் செல்லும்' என்ற பொது விளக்கமும், வண்ணம் 'சினைமேல் ஏறி முதலொடு முடிந்தது' என்ற உதாரண விளக்கமும் தொடரின் அண்மை நிலை உறவைக் கூறுவதுதான். அதாவது வண்ணம் சினையை மட்டும்தான் தழுவுகிறது என்பதுதான் அண்மை உறுப்பு உறவின் ஓர் அடிப்படை.

செங்கால் நாரை



வரைபடம் 1

செங்கால் நாரை



வரைபடம் 2

இங்கு முதல் படம் மூன்று சொற்களும் நேர்க் கோட்டில் அதாவது நீள் வரிசையில் (Linear) சேருகின்றன என்று ஆகும். அது உண்மை அல்ல. 'அடை' என்று கூறியதன் மூலம் செங்கால் என்ற இரண்டு சொற்களும் சேர்ந்து ஒரு தொடரான பின்பே நாரை என்ற பெயரோடு சேருகிறது என்று கருத்து புலனாகிறது என்பது தெய்வச்சிலையார் கருத்து. அதை மொழியியலார் படிநிலை (Hierarchical) கட்டுமானம் என்பார்கள். இதுவே தொடரமைப்பு (Phrase Structure) ஆய்வில் பயன்படுத்தப் படும் அண்மை உறுப்பு ஆய்வின் (Immediate Constituent Analysis) அடிப்படை ஆகும். மேலும் இது வலது கை பிரிவு (Right hand Branching) என்றும் சிறப்பாகக் குறிக்கப்படும்.

உரையாசிரியர்கள் இங்குப் பல வகையான தொடர்களை எடுத்துக்காட்டி விளக்குவதில் பல தொடரியல் செய்திகள் புதைந்துள்ளமை இறுதி இயலில் விரிவாக ஆராயப்படுகிறது.

உண்மையில் சினைப்பெயரும் முதல் பெயரும் சேர்ந்து வரா. சினைச் சொல் ஓர் அடை எடுத்துவந்தால்தான் முதலோடு சேர்ந்து வரமுடியும். அந்த அடை வண்ண நிறப் பெயராக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. 'செறி எயிற்று அரிவை' தொடரில், எயிறு என்ற சினைப் பெயரின் பண்பான ஒரு வினையடி (செறி 'நெருங்கிய', வண்ணச்சொல் அல்ல. இருந்தாலும் அது அடையாக அதே வரிசையில் வந்துள்ளது. எனவே 'அடை' என்று பொதுவாகக் குறிப்பிட்டதால் அந்த தொடரியல் விதி பொதுமை மிகுந்துள்ளதாகிவிட்டது.

ஒரு நிலையில் வண்ணம் என்பது சொல்லியல் நோக்கு உடையது; அதாவது சொல்லின் வகைப்பாட்டில் ஒரு குறிப்பிட்ட வகை பற்றியது. அடை என்பது தொடரியல் நோக்கு உடையது என்ற மாறுபாடும் உடையது. எனவே சொற்களின் வரிசை மட்டும் அல்லாமல் இரண்டு வேறு வகையைச் சார்ந்த பெயர்ச்சொற்கள் எந்த நிலையில் சேர்ந்து வரும் என்ற உண்மையும் உணர்த்தப்படுவது. தொடர் உருவாக்கக் கட்டுப்பாடும் விளக்கப்பட்டுள்ளதாகக் கொள்ளலாம்.

### 3.2.3. பிற பெயர்த் தொடர்கள்

தொல்காப்பியர் புணரியலில்

> நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும்
> அடையொடு தோன்றினும் புணர்நிலைக் குரிய

என்ற (110) சூத்திரத்தில் 'அடையொடு தோன்றுதல்' என்றதன் மூலம் தொல்காப்பியர் பெயரடை (இடைத் தொடர், உரித் தொடர்), வினையடை (இடைத் தொடர், உரித்தொடர்) எச்சத் தொடர் (பெயரெச்சம், வினையெச்சம்) ஆகியவையும் அடங்கும் என்பதைப் புலப்படுத்தியுள்ளார்.

பொதுவாகப் பெயர்த் தொடர் என்பது பெயரும் பெயரும் சேர்ந்து வருவது என்று கொள்ளவேண்டியதில்லை. பெயர் தலைச்சொல்லாக அமைவன எல்லாம் பெயர்த் தொடராகக் கொள்ளலாம். அந்த முறையில் வினை, (குறிப்பாக வினை அடியும் பெயரெச்சமும்), இடைச்சொல், உரிச்சொல் ஆகியவை அடையாக அமைந்து பெயரைக் கொண்டு முடிகிற தொடர்கள் எல்லாம் பெயர்த் தொடர்களே.

### இடைச்சொல் + பெயர்

*எல் வளை,*
*மற்றைய வழி (தொல். 1048: 15),*
*மற்றைய எல்லாம் (குறள் 661),*
*மற்று ஒன்று (நற். 239: 12)*
*கொன் ஊர் (குறுந். 138)*

### உரிச்சொல் + பெயர்

*தவப்பல*
*உறு பசி*
*உறு வளி*
*தவப் பன்னாள்*
*நனி விருந்து (குறுந். 155: 6)*
*நனி சேய் நாட்டார்*

*நளி கனி (குறுந். 274: 2)*
*நளி புனம் (குறுந். 339: 1)*

*வியன் புலம் (குறுந். 162: 1)*
*வயப்புலி (குறுந். 88: 2)*

போன்றவை பெயர்த் தொடர்களே. அப்படியே

*வந்த பையன்*
*படித்த நூல்*

போன்ற பெயரெச்சத்தொடர்களும் பெயர்த்தொடர்களே. அவை பெரும்பாலும் வாக்கியத்திலிருந்து உண்டான தொடராகக் கருதப்படும். எச்சத் தொடர் ஒரு வாக்கியத்திலிருந்து தோன்றியதாகக் கருத வேண்டும்.

### 3.2.4. தொகைச் சொற்கள்

இந்தச் சூத்திரத்தை அடுத்துத் தொல்காப்பியர் தொகைச் சொல்லும் எழுவாயாக வரலாம் என்று விளக்கியுள்ளார்.

*பெயரி னாகிய தொகையுமா ருளவே*
*அவ்வும் உரிய அப்பா லான* *(551)*

*பெட்டி நல்லது*
*மரப் பெட்டி நல்லது*

தொல்காப்பியர் எச்சவியலில் தொகைச் சொற்களைப் பற்றி விரிவாகப் பேசியுள்ளார் மொழியின் மீளுமைப் பண்பை (Recurring) இது புலப்படுத்துவதாகக் கொள்ளலாம்.

யானைக்கோடு உண்டு/செல்க/வீழ்ந்தது போன்ற உதாரணங்களை இளம்பூரணர் தந்து 'அறுவகைத் தொகைச் சொல்லும் எழுவாய் வேற்றுமைப் பயனிலைப்பாடு பிழையாது வரும்' என்று விளக்கியுள்ளார். மேலும் 'உம்மையான் வினையும் பெயரும் தொக்க தொகையும் எழுவாய் வேற்றுமைப் பயனிலைப்பாடு பிழையாது வரும்' என்று குறிப்பிட்டு, கொல் யானை என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார். வினைத் தொகையும் பெயர்த் தொடரில் அடங்கும் என்பது இதனால் பெறப்படுகிறது.

சேனாவரையர் வேற்றுமை உருபு கெட்டு வருபவைகளையும் தொகையாகக் கருதலாம் என்று குறிப்பிட்டுள்ளது விவாதத்துக்கு உரியது.

> 'பெயரினாகிய தொகையும்' என்னும் உம்மையால் பெயரொடு பெயர் தொக்கனவே அன்றி நிலம் கடந்தான், மாக் கொணர்ந்தான் எனப் பெயரொடு வினை வந்து தொக்க வினையினாகிய தொகையும் உள என்பதாம்; ஆகவே பெயரொடு பெயரும் பெயரொடு தொழிலும் தொக்கன தொகை என்பது பெற்றாம்'

என்பது சேனாவரையர் வாசகம். நிலம் கடந்தான், மாக் கொணர்ந்தான் போன்றவைகளை வினையானாகிய தொகையாகக் கருதமுடியாது. ஏனென்றால் அவைகளை ஒரு சொல்லால் பதிலீடு செய்யமுடியாததாலும், உருபு இல்லாதபோதும் (நிலத்தைக் கடந்தான் என்பதே நிலம் கடந்தான் என்று வந்துள்ளது) இலக்கண உறவு மாறுபடாததாலும் அவைகளைப் பெயர்த் தொடர்களாகக் கொள்ளமுடியாது. தொடரியல் நோக்கில் அவைகளைப் பயனிலைத் தொடர் என்றோ அல்லது வினைத்தொடர் என்றோ அழைக்க வேண்டும்.

### 3.3. திணை-பால் பாகுபாடும் இயைபும்

தொல்காப்பியர் சொற்களின் திணை-பால் பாகுபாடு பற்றிச் சொல்லதிகாரத்தின் முதலிலேயே - கிளவியாக்கத்திலேயே (484-493) விளக்கி அவை வினைச்சொற்களில் ஒட்டு-விகுதி மூலம்

உணர்த்துவதாக அவைகளைப் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார். ஆனால் அங்குப் பெயர்ச் சொற்களின் பால் பாகுபாடு பற்றிக் குறிப்பிட வில்லை.

> வினையின் தோன்றும் பாலறி கிளவியும்
> பெயரின் தோன்றும் பாலறி கிளவியும்
> மயங்கல் கூடா தம்மர பினவே (494)

என்று மட்டுமே தொல்காப்பியர் கிளவியாக்கத்தில் குறிப்பிட்டுள்ளார். பெயரியலில் பெயர்ச் சொற்களின் திணைப் பாகுபாட்டை உயர்திணை, அஃறிணை, விரவுத் திணை ('ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமைய') என்று முதலில் பிரித்து (645),

> இருதிணைப் பிரிந்த ஐம்பாற் கிளவிக்கும்
> உரியவை உரிய பெயர்வயி னான (646)

என்று கூறியுள்ளார் (முழு விளக்கத்துக்கு, சண்முகம், 1986: 21-22). இங்கு 'உரியவை உரிய பெயர் வயினான' என்பதன் மூலம் முழுப் பெயர்ச் சொல்லே ஒரு பாலுக்கு உரியதாகிறது. இதைப் பால் ஒரு அடிக்கூறு (Selective Category) என்பார் மொழியியலார். தொல்காப்பியருடைய இந்த வருணனையில் சில பிரச்சினைகள் இருக்கின்றன. ஒருமைச் சொற்களே (ஆண்பால், பெண்பால், ஒன்றன் பால்) அடிக்கூறுகள், பன்மைச் சொற்கள் ஒட்டு சேர்ப்பது மூலமே உணர்த்தப்படுவதால் அவைகளை அடிக் கூறுகள் என்று கூறமுடியாது. ஆனால் ஒருமையிலும் சில சொற்களில் ஒட்டு இருப்பதால் அவைகளின் நிலை ஆராயப்பட வேண்டும். உதாரணமாக இறை என்ற சொல் சங்க காலத்தில் அரசனைக் குறிக்கும் ஆண்பால் சொல். பின்னர் இறைவன் என்று -அன் விகுதி பெற்றது. பொதுவாகத் தமிழில் பெயர்ச் சொற்கள் பாலை உணர்த்துவது பொருள் அடிப்படையில் என்று சொன்னாலும் சொல்லியல் நிலையில் பால் உணர்த்தும் ஒட்டுகள் உயர்திணையில் இனத்தையும் (Sex - தலைவன் (ஆண்), தலைவி (பெண்)), எண்ணையும் (குறிப்பாகப் பன்மையை (பலர்பால், பலவின்பால்)) உணர்த்தும் ஒட்டுகளும் உள்ளன என்பதை மறுக்க முடியாது. பொதுவாக அந்தப் பெயர்ச் சொல்லுக்கு உரிய திணை - பாலை, அது ஏற்று வரும் வினைமுற்றின் திணை-பாலால் உணரலாம்.

சொல்லியல் நிலையில் பால் காட்டும் விகுதி எப்பொழுதும் ஆக்க விகுதியாக அமையவில்லை என்பது சுட்டிக்காட்டத் தகுந்தது.

குறவன்/குறத்தி/குறவர் போன்ற சொற்களில் குறம் என்ற அடிச்சொல் ஒன்றன்பாலுக்கு உரியது. ஒட்டு மூலமே உயர்திணைப் பால் உணர்த்துவதால் ஆண் பால், பெண் பால் மட்டும் அல்லாமல், பலர் பாலும் ஆக்க விகுதியாகக் கருத வேண்டும் என்பார்கள். தந்தை/தந்தையர்/தாய்/தாயர் போன்ற சொற்களில் தந்தை, தாய் ஆகிய அடிச்சொல் அடிக்கூறாக முறையே ஆண்/பெண் பாலை உணர்த்துவதால் -அர் ஒட்டை ஆக்க ஒட்டாகக் (Derivative) கொள்ளக்கூடாது. திரி ஒட்டாகவே (Inflectional) கருதவேண்டும். வினைச்சொற்களில் திணைபால் விகுதி எப்போதுமே திரி ஒட்டாக அமைகிறது.

பெயரியலில் தொல்காப்பியர் உயர்திணை, அஃறிணை, விரவுத் திணை என்று பெயர்களை மூன்று வகையாகப் பிரித்தது சொல்லியல் நோக்கில்- வடிவ நோக்கில் வருணனை எளிமைப்படுத்துவதற்குத்தானே (சண்முகம், 1984: 213) தவிர, மொழியமைப்பில் மூன்று திணைகள் இருக்கின்றன என்று பொருள் இல்லை. அதனால்தான் விரவுப் பெயர்களாக வருபவைகளின் பால் வினைமுற்றில் வரும் திணை பாலால் தெளிவு பெறும் என்றும் அவரே பெயரியலில் ஒரு சூத்திரம் செய்துள்ளார்.

> இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமையின்
> திரிபுவேறு படூஉம் எல்லாப் பெயரும்
> நினையுங் காலைத் தத்தம் மரபின்
> வினையோ டல்லது பால்தெரி பிலவே (657)

இதன்மூலம் பெயர்ச் சொற்கள் வினைமுற்று ஏற்றுவரும் என்ற தொடர்க் கட்டும் பெயருக்கும் அதை ஏற்று வரும் வினைமுற்றுக்கும் திணை-பால் இயைபு இருக்கவேண்டும் என்ற தொடரியல் கட்டுப்பாடும் புலப்படுத்தப்பட்டுள்ளதாகக் கொள்ளலாம்.

பெயர்ச்சொல்லின் திணை-பால் அடிக்கூறாக அமைந்திருக்கிறது என்று கூறினாலும், சில சொற்கள் உயர்திணைப் பொருளை முன்னத்தின் அதாவது குறிப்பினால் உணர்த்தித் தொடரியல் நோக்கில் - அஃறிணையாக வினைமுற்றை ஏற்று வருகின்றன. அதாவது இங்கு நாம் உணரும் பொருளுக்கும் இலக்கணத்துக்கும் முரண் ஏற்பட்டுள்ளது. எனவேதான் தொல்காப்பியர் அதையும் இலக்கணப்படுத்தி இரண்டு சூத்திரம் (540, 541) செய்துள்ளார்.

### 3.3.1. உயர்திணைச் சொற்கள் அஃறிணை முடிபு

குடிமை, ஆண்மை, இளமை, மூப்பே
அடிமை, வன்மை, விருந்தே, குழுவே
பெண்மை, அரசே, மகவே, குழவி
தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி
காதல், சிறப்பே, செறற்சொல் விறற்சொல்லென்று
ஆவறு மூன்றும் உளப்படத் தொகைஇ

..........................

முன்னத்தின் உணருங் கிளவி எல்லாம்
உயர்திணை மருங்கின் நிலையின வாயினும்
அஃறிணை மருங்கிற் கிளந்தாங்கு இயலும்

என்ற சூத்திரத்தில் (540) 18 சொற்கள் 'முன்னத்தின் உணருங் கிளவிகள்' என்றும் அவை உயர்திணைப் பொருள் உணர்த்தினாலும் அஃறிணை வினைமுற்றைக் கொண்டுமுடியும் என்றும் குறிப்பிட்டுள்ளார். இங்கு இரண்டு கேள்விகள் எழுகின்றன: 1. முன்னத்தின் உணரும் கிளவி என்பது இலக்கண நிலையில் எப்படி விளக்குவது? அதாவது இலக்கண விளக்கப் பிரச்சினை. 2. அவைகளின் சரியான வடிவம் என்ன? அதாவது ஆண்மை, பெண்மை போன்று பண்புச் சொற்களாக இருப்பவை அதே வடிவத்தில் உயர்திணைப் பொருளை உணர்த்துகிறதா? அல்லது முறையே ஆண்/பெண் என்ற வடிவத்தில் உயர்திணைப் பொருளை உணர்த்துகிறதா? அதாவது வடிவப் பிரச்சினை. நச்சினார்க்கினியர் ஒழிந்த உரையாசிரியர்கள் ஒரு திணைப் பொருளை உணர்த்துவதாகக் கொள்ள அவர் உயர்திணை இரு பாலுக்கும் பொது என்று கூறுவதால் பொருள் பிரச்சினையும் அடங்கியுள்ளதாகக் கருத வேண்டியிருக்கிறது.

வடமொழியில் மனைவியைக் குறிக்கும் மூன்று சொற்கள் (தாரா, பார்யா, களத்ரா) இலக்கணப்படி ஆண், பெண், ஒன்று (அஃறிணை ஒன்றன் பால்) ஆகியவைகளைக் குறிக்கும். அதன்படி வினை விகுதி ஏற்றுவரும். அதாவது ஒரு பொருள் பற்றிய இலக்கண அறிவு வேறு; அதன் அர்த்தம் பற்றிய உணர்வு வேறு. பொருள் உணர்வுக்கும் வடிவ உணர்வுக்கும் உள்ள மாறுபாட்டை இலக்கணம் விளக்கவேண்டுமா என்ற பொதுக் கேள்வியும் எழுகிறது. தொல்காப்பியர் இந்த முரண்பாட்டை விளக்குவதால் அவருடைய இலக்கணம் மொழி அமைப்பை மட்டும் விளக்காமல் மொழி பேசுவோரின் உணர்வையும் புலப்படுத்து வதாக அமைந்து விடுகிறது. அடுத்த சூத்திரத்தில் இந்த உணர்வு கொஞ்சம் தூக்குதலாகவே புலப்படுத்தப்பட்டுள்ளது.

பொதுவாகப் பல மொழிகளிலும் பெயர்ச் சொற்களில் பால் காட்டும் விகுதி இல்லாமலேயே பால் உணர்த்த, காலம் செல்லச் செல்ல, பால் விகுதிகள் சேர்க்கப்படும். அது திராவிட மொழி வரலாற்றாலும், தமிழ் மொழி வரலாற்றாலும் உறுதிப் படுகிறது (சண்முகம், 1971 : 30, 1986: 35). பெயர்ச் சொற்களில் சில பால் விகுதி இல்லாமல் உயர்திணை ஆண்/பெண் உணர்த்துவது தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியத்திலும் காணப்படுகிறது.

இறை = தலைவன், அரசன்
அரசு = அரசன்
ஆண்
பெண்
ஐ = சகோதரன், தலைவன் (குறுந். 24.2), தந்தை
நாத்தூண்
மங்கை

முதலியவை விகுதி இல்லாமல் பால் காட்டுபவை. திராவிட ஒப்பிலக்கண ஆய்வாளர்களும் பெயர்ச் சொற்களில் பால் (ஆண்/ பெண்) விகுதி இல்லாமலே உயர்திணையிலும் பயன்படுத்தப் பட்டிருக்கவேண்டும் என்றும், காலம் செல்லச்செல்ல விகுதிகள் சேர்த்துப் பால் உணர்த்தும் முறை தோன்றியிருக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளார்கள். இவைகளில் சில பிற்காலத்தில் பால் விகுதி ஏற்று வர, வேறு சில விகுதி எதுவும் ஏற்காமலேயே இன்றும் உயர்திணைப் பொருளைக் குறிக்கப் பயன்படுகின்றன. ஐ என்பது ஐயன் என்று ஆண்பால் விகுதி ஏற்றும் (ஐயன் = தமையன் - ஐங். 255: 3, நற். 2:7) பலர் பால் விகுதி ஏற்றும் (ஐயர் = தமையன்மார் அகம். 126:7, ஐயன்மார் = தமையன்மார் கலி. 107: 34) குருடன்/குருடி போன்று விகுதி ஏற்று வர விருந்து என்பது விருந்தினர்/விருந்தாளி என்ற விகுதி ஏற்று வந்திருந்தும் விருந்து என்ற சொல் இன்றும் அஃறிணை வினைமுற்றை ஏற்று வருகிறது. விருந்தினர்/விருந்தாளி வந்திருக்கிறார்கள். விருந்து வந்திருக்கிறது. தாய், தந்தை போன்றவை பழங்காலத்திலிருந்தே ஒட்டு எதுவும் ஏற்காமலேயே ஆண்/பெண் பால் உணர்த்தி வருகின்றன.

### 3.3.2. வடிவம்

மேலே காட்டிய சூத்திரத்தில் முதலில் உள்ள பன்னிரண்டையும் தனிச்சொற்களாகவும் ஏனைய ஆறையும்

பொதுச் சொற்களாகவும் எல்லா உரையாசிரியர்களும் கொண்டாலும், தெய்வச்சிலையார் ஒழிந்த பிற உரையாசிரியர்கள் சூத்திரத்தில் குறிப்பிட்ட அதே வடிவத்தை (உதாரணம் ஆண்மை என்பதற்கு ஆண்மை என்பது போல) குறிப்பதாகக் கொள்ளத், தெய்வச்சிலையார் மட்டும் ஆண்மை, பெண்மை என்ற இரண்டும் முறையே ஆண்/பெண் என்ற வடிவத்தையும் குடிமை என்பது குடி, குடிமை என்ற இரண்டு வடிவத்தையும் குறிப்பதாகவும் கொண்டுள்ளார்.

இளம்பூரணர் குடிமை, ஆண்மை, இளமை, மூப்பு, அடிமை ஆகிய ஐந்துக்கும் குடிமை/ஆண்மை/இளமை/மூப்பு/அடிமை/நன்று என்ற உதாரணங்களையும் ஏனையவற்றுக்கு அந்தந்த சொற்களையே எழுவாயாகவும் (அரசு வன்மை நன்று/விருந்து வந்தது போன்ற உதாரணங்கள்) கொடுத்துள்ளார். பிறர் எல்லாரும் எழுவாயாகவே உதாரணம் கொடுத்துள்ளார்கள்.

> 'குடிமையாவது குடியாகிய தன்மை. அது குடியில் பிறந்தாரைக் குறித்து நின்றது. இக்குடி வாழ்ந்தது, இக்குடி கெட்டது என்ப. குடிமை என்பது குடி என வருமோ எனின்
>
> மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு
> அடிமை புகுத்தி விடும் (குறள். 608)
>
> என்ற வழிக் குடி எனப் பொருளாகியவாறு கண்டு கொள்க'

என்பது தெய்வச்சிலையார் விளக்கம். உண்மையில் அடிமை, மடிமை ஆகிய இரண்டு சொற்களின் செல்வாக்கால் குடிமை என்று வந்திருக்கலாம். அதாவது அது முழுக்க முழுக்க செய்யுள் வழக்கு. அதாவது சொல்லியல் விகாரமாகக் கருதத்தகுந்தது. நச்சினார்க்கினியர் 'ஒழுக்கம் உடைமை குடிமை' என்ற குறளை (133) எடுத்துக்காட்டிக் குடிமையாவது குடிப் பிறப்பிற்கு ஏற்ற ஒழுக்கம் என்று விளக்குவதால் அது பண்புப்பெயராய் அஃறிணைச் சொல் என்பது தெளிவு.

### 3.4. பொருள்

இளம்பூரணர் குடிமை போன்றவை ஒரு பாலுக்கு உரியதாக நேரடியாகக் கூறாவிட்டாலும் இன்னொருவர் கருத்தாக

> 'இதுவும் ஒரு சார் ஆசிரியன் உரைப்பது; இனிக் குடிமை ஆண்மை என்று இத்தொடக்கத்தன

ஒருவன், ஒருத்தி, பலர் என்னும் மூன்று பாற்கும் பொதுவாய்ப் பின் முடியுங்கால் அஃறிணை முடிபிற்றாக. . .க் கொள்க'

என்று கூறுவதால் அவருடைய சொந்தக் கருத்து ஒரு பால் உணர்த்துவது என்று நினைக்கத் தோன்றுகிறது. மேலும் 'வன்மை' என்ற சொல் உயர்திணைப் பொருளை உணர்த்துவது வழக்கில் மட்டுமே காணப்படுவதாக அவர் குறிப்பிட்டுள்ளார்.

சேனாவரையர் ஒருமையும் பன்மையும் குறிக்கும் என்று கொண்டாலும் அதற்கு ஏற்ப வினைமுற்று மாறுபடும் என்று குறிப்பிட்டுள்ளார்.

'குடிமை நன்று, குடிமை நல்ல, அடிமை நன்று, அடிமை நல்ல என ஏற்புழி ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்றலும் கொள்ளப்படும்'

என்பது அவரது விளக்கம்.

தெய்வச்சிலையாரும் அந்தச் சொற்களின் பொருள் பற்றி நேரடியாகக் குறிப்பிடாவிட்டாலும் அவருடைய உதாரணங்கள் சூழல் நோக்கி ஒருமையும் (ஆண்/பெண்) பன்மையும் (பலர் பால்) பொருள் உணர்த்துவதாகக் கொள்ள வைக்கின்றன.

அரசு இருந்தது என்ற உதாரணத்தைத் தந்து அவரே 'அரசன் என்பதைக் குறித்தது' என்று விளக்கியுள்ளார். 'ஒரு ஆண் வந்தது ஒரு பெண் வந்தது' என்ற அவருடைய உதாரணங்கள் முறையே ஆண்பாலையும் பெண்பாலையும் குறிக்கின்றன என்பதில் சந்தேகம் இல்லை. மகஎன்பது மகன், மகள் என்னும் முறைப்பெயர் இரண்டற்கும் பொதுவாகி நிற்பது; மக கிடந்தது என்ப' என்ற அவருடைய விளக்கத்தால் 'மக' என்பது இரண்டு பாலுக்கும் பொதுவானது என்பது தெளிவு. இளமை, மூப்பு, அடிமை, விருந்து, குழு ஆகியவைகளுக்கு அவர் தரும் விளக்கம் பலர்பாலை உணர்த்துவதாகவே அமைந்துள்ளது.

'இளமை என்பது இளையாரைக் குறித்து நிற்கும். இவ்வவை இளமை இன்று என இளையாரை இலது என்னும் பொருள்பட வந்தது. மூப்பு என்பது முதியாரைக் குறித்து நிற்கும் இவ்வவை மூப்பு இன்று என முதியாரை இலது என்னும் பொருள்பட வந்தது'

என்ற அவருடைய விளக்கம் அந்த உண்மையைப் புலப்படுத்தும்.

குடிமை, ஆண்மை, இளமை, மூப்பு, அடிமை, வன்மை, குழு, மகவு, குழவி ஆகியவை உயர்திணை இருபாலுக்கும் உரியன என்பதும் விருந்து, அரசு ஆகிய இரண்டும் உயர்திணை இரு பாலும் அஃறிணையும் உணர்த்தும் என்பதும் நச்சினார்க்கினியர் கருத்து என்பதை அவருடைய உதாரண விளக்கங்கள் தெளிவுபடுத்துகின்றன.

> 'மடிமை குடிமைக் கண் தங்கின்' (குறள். 608) என உயர்திணை இருபாலையும் உணர்த்திற்று. ஆண்மை யாவது ஆளுந்தன்மை; அஃது 'ஆயிடைஇரு பேராண்மை செய்த பூசல்' (குறுந். 43) என இரு பாலையும் உணர்த்திற்று. . . இளமையாவது காமச் செவ்வி நிகழ்வதோர் காலம். 'இளமை கழிந்த பின்றை வளமை, காமம் தருதலும் இன்றே' (நற். 126: 9-10) என உயர்திணை இரு பாலும் உணர்த்திற்று. மூப்பு: மூப்புடை முதுபதி என உயர்திணை இரு பாலையும் உணர்த்திற்று. . . அடிமை என்பது அடிமை புகுத்தி விடும்' (குறள்) என உயர்திணை இரு பாலும் உணர்த்தும். வன்மையாவது ஒரு தொழிலை வல்லுதல். அது சொல் வன்மை நன்று என உயர்திணை இருபாலும் உணர்த்தும். ஈண்டு வன்மை வலி அன்று.... குழு: குழுவின் பெயர் எனவும் 'ஐம்பெருங்குழுவும் எண் பேராயமும் (சிலப். 5: 157) எனவும் உயர்திணை இரு பாலையும் உணர்த்தும்.
>
> 'விருந்து: விருந்தெதிர் கோடலும் (சிலப். 16: 73) என உணர்திணை இரு பாலையும் உணர்த்திற்று.' 'ஆங்கவை விருந்தாற்றப் பகல் அல்கி' (கலி. 66) என அஃறிணைக்கும் இது வரும். . . அரசு : அரசுபடக் கடந்தட்டு (கலி. 105.1) என உயர்திணை ஆண்பால் உணர்த்திற்று. பெண் அரசி ஏந்தினள் (சீவக. 736) என ஈறு வேறாய வழிப் பெண் பாலும் உணர்த்தும். இஃது அரசுவா வீழ்ந்த களத்து (களவழி 35) என அஃறிணைக்கும் வரும்.

என்பது நச்சினார்க்கினியர் வாசகம்.

### 3.4.1. உயர்திணைப் பொருள் உணர்த்தும் காரணம்

இங்குப் பொதுநிலையில் ஒன்று தோன்றுகிறது. மொழியில் தொல் வரலாற்றின் எச்ச சொச்சத்தை, மொழி

வளர்ந்து இலக்கணம் அறிவு வளர்ந்த நிலையில் கொடுத்த விளக்கமாக இந்தச் சூத்திரம் தோன்றுகிறது.

> 'குடிமை. . . உயர்திணை அல்லவும் உயர்திணைப் பொருளைச் சார்ந்து நிகழும் குணங்களும் உயர்திணைப் பொருளைப் பற்றுக்கோடாக நிகழ்தலின் உயர்திணையைப் போல வழங்கல் வேண்டுமே எனினும் அஃறிணையைச் சொல்லியாங்குச் சொல்லுக'

என்ற இளம்பூரணர் பதவுரை வடிவத்துக்கும் பொருளுக்கும் உள்ள முரணை உணர்ந்து வடிவ அடிப்படையில் வினைமுற்று வந்துள்ளதை நியாயப்படுத்துகிறது.

> 'குடிமை நன்று, குடிமை தீது: ஆண்மை நன்று, ஆண்மை தீது என வரும். ஒழிந்தனவற்றிற்கும் இவ்வாறு பொருந்தும் வினை தலைப்பெய்க... குடிமை, ஆண்மை, இளமை, மூப்பு, அடிமை, வன்மை, பெண்மை, உறுப்பின் கிளவி, சிறப்புச் சொல், விறற் சொல் என்பன. . . ஆகுபெயராய் அல்லது வாரா. அல்லன இருதிணைக்கண்ணும் ஒத்த உரிமைய எனக் கொள்க'

என்ற சேனாவரையரது வாசகத்தில் அ) சில அடிப்படையாக அஃறிணைக்கும் ஆகுபெயராய் உயர்திணைக்கும் ஆ) வேறு சில இருதிணைக்கும் ஒத்த உரியவை என்ற இரண்டு வகை உண்டு என்பதும்; குடிமை, ஆண்மை போன்றவை ஆகுபெயராகவே உயர்திணை உணர்த்துகிறது என்பதும் அவர் கருத்து என்பது தெளிவாகிறது. அது பிற்கால வழக்கை மனதில் கொண்டது. அதாவது குடி என்பது குடிப்பிறப்பு - அவர் கொண்ட பொருள். ஆனால் சங்க இலக்கியத்தில் குடி என்பதற்குக் குடும்பத்தில் உள்ளோர், குடி மக்கள் என்று பொருளும் காணப்படுகிறது.

> *(கூடு கெழீஇய) குடி (வயினான்) = உழவுத்தொழில் செய்வோர் (பொருநர் 182)*
>
> குடி பதி பெயர்ந்த சுட்டு= மக்கள் தங்கள் இருப்பிடத்திலிருந்து நீங்கும் காரணம் *(அகம். 77.6).* ('மன்னவன் கோன் நோக்கி வாழுங்) குடி' = குடி மக்கள் *(குறள். 542)*

இங்குக் குடிமை, பண்புப் பெயராயினும் குடி என்ற வடிவமே குடிமக்கள்/குடும்பம் என்ற பொருளிலும் வரும் என்பதைத்

தெளிவுபடுத்துகிறது. உண்மையில் இங்குக் 'குடிமை' என்று வந்திருப்பது செய்யுள் இன்பம் நோக்கியதாகவும் இருக்கலாம். எனவே சங்க இலக்கியப் பயிற்சியும் வழக்கும் குடி என்பது மக்களைக் குறித்தாலும் அஃறிணை வினைகொண்டு முடிந்துள்ளது.

சேனாவரையர் கருத்துபற்றி இரண்டு செய்திகள் சுட்டிக் காட்டத் தகுந்தவை: 1. அவை ஆகுபெயராக உயர்திணை உணர்த்துகின்றன என்ற அவருடைய கருத்தில் தெய்வச்சிலையார், நச்சினார்க்கினியர், கல்லாடர் ஆகியோருக்கு உடன்பாடு இல்லை. என்றாலும், அவர்கள் வேறு வேறு காரணங்களால் அவை ஆகுபெயர் இல்லை என்ற கருத்து உடையவர்கள் 2. அவர் இரண்டாகப் பகுத்ததும் பரிசீலனைக்கு உரியது.

> 'உயர்திணைப் பொருளைச் சார்ந்து நிகழும் குணங்களும் உயர்திணைப் பொருளைப் பற்றுக் கோடாக நிகழ்தலின் உயர்திணைப் பொருளைப் போல வழங்கல்வேண்டுமே எனினும் அஃறிணையைச் சொல்லியாங்குச் சொல்லுக'

என்ற இளம்பூரணர் விளக்கம் இந்தப் பண்புகள் உயர்திணைக்கு உரியவை என்பது அவருடைய கருத்து என்பதை உணர்த்துகிறது. ஆண்மை, பெண்மை, மூப்பு, வன்மை போன்ற பல பண்புகள் அஃறிணைக்கும் உரியதானாலும் அஃறிணையின் இலக்கணப்படி ஆண்/பெண் வேறுபாடு இல்லாததால் உயர்திணைக்கே உரியதாகக் கொள்ளப்பட்டிருக்கலாம்.

இங்கு மூன்று செய்திகள் சுட்டிக்காட்டத்தகுந்தவை: 1: அவைகளில் சில பெயர்கள் ஆண்மை (ஆண்), அடிமை, பெண்மை (பெண்), உறுப்பின் கிளவி (குருடு, முடம்) ஆகியவை உயர்திணைப் பொருளை உணர்த்தினாலும் அஃறிணை விகுதி கொண்டு முடியும். இது பழமையின் எச்சசொச்சம் 2. இந்தப் பட்டியலில் சேனாவரையர் சேர்க்காத அரசு, விருந்து, குழவி, மகவு ஆகியவையும் முதல் பிரிவில் அடங்கும். 3. இரண்டு திணைக்கும் ஒத்த உரிமை உள்ளதாக அவர் குறிப்பிட்ட குடிமை, வன்மை (வலி) சிறப்புச் சொல், விறற் சொல், ஆகியவையும் அவர் குறிப்பிடாத காதல் (அன்பு பற்றி உயர்திணைப் பொருளை அஃறிணைச் சொல்லால் கூறுவது: சிறுவனை யானை என்றல்) தன்மை திரிசொல் (அலி, மருள்) ஆகியவையும் இரண்டு திணைக்கும் உரியவை.

குடிமை (குடி), இளமை, விருந்து, குழவி, தன்மை திரிபெயர் (அலி) ஆகியவைதான் இரு திணைக்கும் ஒத்தவை. குழு, வன்மை, சிறப்புச்சொல், விறற்சொல் ஆகியவை சேனாவரையர் கருத்துப்படி இரு திணைக்கும் ஒத்த உரிமையவையான விரவுப்பெயர்ச் சொற்கள். இதன்படி பார்த்தால் முன்னது அடிப்படையில் அஃறிணைப் பெயர்கள் ஒரு காரணத்தால் உயர்திணைக்கு ஆகி வந்தவை. உறுப்பின் கிளவி என்பதை இரண்டாவது பிரிவிலும் காதல், செறற் சொல் ஆகியவைகளை முதற் பிரிவிலும் சேர்ப்பதே பொருத்தமாக இருக்கும்.

> 'இவை எல்லாம் ஆகுபெயர் அன்றோ எனின் ஆகுபெயராயின் தன் பொருட்டு உரிய பாலான் முடியும்; இவை அன்ன அன்றி வேறுபட்டு முடிதலில் குறிப்பு மொழி ஆயின'

என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். சேனாவரையர் இந்த இரண்டு நிலையும் மனதில் கொண்டே சில ஆகுபெயராய் உயர்திணையை உணர்த்தியது என்று கருதியிருக்கவேண்டும்.

தெய்வச்சிலையார் உயர்திணை வழக்குகளாக வருபவைகளை மட்டுமே கொடுக்க, நச்சினார்க்கினியர் உயர்திணை, அஃறிணை ஆகிய இரண்டுக்கும் இலக்கிய வழக்குகளைக் கொடுத்துள்ளார்.

உண்மையில் இங்கு ஒரு வரலாற்று உண்மை புதைந்துள்ளது. இங்கு மூன்று கட்ட வளர்ச்சி புதைந்துள்ளதாகத் தோன்றுகிறது. 1. ஒரு காலத்தில் அவை அஃறிணையாக மட்டும் (வடிவத்திலும் கருத்திலும்) இருந்த நிலை, 2. பின்னர் உயர்திணை/அஃறிணை மாறுபாடு கருத்தளவில் ஏற்பட்டும் வடிவமாற்றம் பெறாமல் இருந்த நிலை. 3. பின்னரே கருத்து மாற்றம் மொழியிலும் - வடிவத்திலும் (உயர்திணை, அஃறிணை என்ற மாறுபாடு - பெயரிலும் வினைமுற்றிலும்) ஏற்படுத்திய நிலை. இந்தச் சூத்திரம் இரண்டாம் கட்டநிலையை விளக்குகிறது.

### 3.4.2. உயர்திணை பால் இல்லாதவை

'காலம், உலகம், உயிர், உடம்பு, பால்வரை தெய்வம் (ஊழ்), வினை, பூதம், ஞாயிறு, திங்கள் ஆகிய 10 சொற்களும் பிறவும் உயர்திணையில் ஆண்/பெண் என்று பிரித்து சொல்லப்படா; எனவே அஃறிணையாகவே சொல்லப்படும்' என்பது 541 ஆம் சூத்திரக் கருத்து. உண்மையில் சமய நிலையில் மட்டுமல்லாமல் மொழி நிலையில் இன்றும் அவை அஃறிணையாகவே செயல்

படுகின்றன. தொன்மநிலையில் மட்டுமே உயர்திணையாகக் கருதப்படுகின்றன. தொல்காப்பியர் அந்தத் தொன்ம நிலையைக் குறிப்பிட்டுள்ளார்.

எப்படியானாலும் இலக்கண நோக்கில் இந்தச் சூத்திரத்துக்கும் முன் சூத்திரத்துக்கும் என்ன வேறுபாடு என்ற கேள்வி எழுகிறது. முன்னுள்ளது சொல்லால் - வடிவத்தால் அஃறிணை; பொருளால் - உயர்திணை; இது வடிவத்தாலும் பொருளாலும் அஃறிணையே; ஆனால் மொழி உணர்வால் உயர்திணை என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். முன்னதில் சில பால் விகுதி பெற்று வந்து உயர்திணையாக மாறிவிட்டன. பின்னதில் பல சொற்கள் எப்போதுமே அஃறிணையாகவே பயன்படுத்தப்படுகின்றன.

இலக்கணம் பற்றிய நம் எண்ணம் இங்குப் புலனாகிறது. எப்படி அஃறிணையில் உயிருள்ள பொருளுக்குப் பால் வேறுபாடு இருந்தும் இலக்கண நிலையில் வேறுபடுத்தாதது போலவே சில சொற்கள் நாம் உயர்திணையாகக் கருதினாலும் இலக்கண நிலையில் அஃறிணையாகச் செயல்படுகின்றன. இந்தச் சூத்திரம் ஓரளவு சமூக அல்லது சமய உணர்வின் நிலையின் பிரதிபலிப்பாக அமைந்துள்ளது.

### 3.5. பெயரின் ஏற்பு இலகுகள்

பெயரின் தொடரியல் அமைப்பைப் பொறுத்தவரையில் பெயர்த்தொடர், பெயர், வினைகொண்டு முடிவது, வேற்றுமையின் தொடர் ஆற்றல் ஆகியவைகளை விளக்கியுள்ளார். பெயர்த் தொடரில் தொகைச் சொற்கள் என்று தனியே விரிவாக 10 சூத்திரங்களில் (895-904) விளக்கியுள்ளதால் அது தனி இயலாக ஆராயப்படும். தொல்காப்பியர் பெயர்ச் சொல்லின் தொடரியல் பண்புகளாகக் கூறியவை மட்டுமே இங்கு விளக்கப்படுகின்றன.

#### 3.5.1. முதல் வேற்றுமை

தமிழில் முதல் வேற்றுமைக்கு அல்லது எழுவாய் வேற்றுமைக்கு உருபு இல்லை என்பதை

எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே (549)

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. ஆனாலும் பிற வேற்றுமை கொண்டு முடியும் சொற்களை விளக்கியதுபோலவே எழுவாய் வேற்றுமை கொண்டு முடியும் சொற்களை ஒரு சூத்திரத்தில் விவரித்ததன் மூலம் பெயர்ச் சொற்களின் தொடரியல்

பண்பு பொதுநிலையில் விளக்கப்பட்டுள்ளது எனலாம். அதைப் பெயரின் 'பயனிலைச் சொற்கள்' (550 - 4) என்பார் தொல்காப்பியர். இதுவே தமிழின் வாக்கிய வகை பற்றிய சூத்திரமும் ஆகும். எனவே அது விரிவான ஆய்வுக்கு உரியது.

> பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
> வினைநிலை உரைத்தல் வினாவிற்கு ஏற்றல்
> பண்புகொள வருதல் பெயர்கொள வருதல் என்று
> அன்றி அனைத்தும் பெயர்ப் பயனிலையே (550)

என்பதே அந்தச் சூத்திரம்.

இளம்பூரணர் ஆ (பசு) என்ற சொல் அடிப்படையிலேயே ஆறு வகைக்கும் உதாரணம் கொடுத்துள்ளார்.

| | |
|---|---|
| ஆ உண்டு | பொருண்மை சுட்டல் |
| ஆ செல்க | வியங்கொள வருதல் |
| ஆ கிடந்தது | வினைநிலை உரைத்தல் |
| ஆ எவன் | வினாவிற்கு ஏற்றல் |
| ஆ கரிது | பண்பு கொள வருதல் |
| ஆ பல | பெயர் கொள வருதல் |

இங்கு முதல் ஐந்தும் வினைச் சொற்கள் என்று பொது வகையில் அடக்கிவிடலாம். எனவே தமிழில் பெயர் + வினை; பெயர் + பெயர் என்ற இரண்டு வகை வாக்கியங்கள் உள்ளன என்று தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. சில இடைச்சொற்களும் தமிழில் பயனிலையாக வந்துள்ளன. உதாரணமாக, 'தஞ்சம்' என்ற இடைச் சொல் (எளிது என்ற பொருள் 'எண்மை பொருட்டே' - 751) பயனிலையாகவே வந்துள்ளது.

> முரசு கெழு தாயத்து அரசோ தஞ்சம் (புறம். 73:3)
> (முரசு முழங்க உரிமையோடு வரும் அரசு எளிது)

> யானோ தஞ்சம் பெரும- (புறம். 341:9)
> (பெரும யான் எளியேன்)

> தம்முறு விழுமம் தமக்கோ தஞ்சம் (அகம். 383:2)
> (தாம் அனுபவிக்கிற துன்பம் தமக்கு எளிது)

இங்குத் தன்மை ஒருமைப் பெயரும் (யான் - யானோ தஞ்சம்), ஒன்றன்பால் பெயரும் (அரசு, விழுமம்) எழுவாயாக (அரசோ தஞ்சம், விழுமம் தஞ்சம்) வந்துள்ளன. எனவே பெயர் + அடை

என்ற சிறுபான்மை வாக்கிய வகையும் தமிழில் அங்கீகரிக்கப்பட வேண்டும் (சண்முகம், 2001:12).

### 3.5.2. பயனிலை

சூத்திரத்தில் உள்ள பயனிலை என்ற சொல்லின் பொருள் ஆய்வுக்கு உரியது.

'முடிக்கும் சொற் பொருள் அத் தொடர் மொழிக்குப் பயன் ஆகலின் பயனிலை' என்பது சேனாவரையர் விளக்கம். அதன் வேர்ப் பொருளின் விளக்கமாகவும் அமைகிறது. தெய்வச்சிலையார் சொல்லதிகார முன்னுரையில் தொடர் மொழியே பொருள் உணர்த்துவதற்குச் சிறந்தது என்று விளக்கும்போது,

> 'சாத்தன் என்ற வழிப் பொருண்மை மாத்திரம் உணர்த்தல் அல்லது கேட்டார்க்கு ஒரு பயன்பட நில்லாமையின் சாத்தன் உண்டான் எனப் பயன்பட வரூஉம் தொடர் மொழியே பொருள் இனிது விளங்குவது என்க'

என்னும் விளக்கத்தில் அடிப்படையில் இந்தச் சூத்திரத்தில் 'பயனிலை என்பது பெயர் வாளாது நிற்குமாயின் செப்பின் கண் பயன் இன்றாம் ஆதலான், அதனை முடிக்கும் சொல் பயனிலை ஆயிற்று' என்று விளக்கியுள்ளார். இதன் அடிப்படையில் நச்சினார்க்கினியர் பயனிலை என்பதையே 'பயனாகிய நிலைமை' என்று பொழிப்பு உரைத்து,

> 'தன்னை முடித்தற்குப் பின் வரும் சொல்லின் பொருண்மையைத் தான் அவாவி நிற்கும் நிலை வேறுபாட்டைப் பயனிலை என்றார்'

என்று விளக்கியுள்ளார்.

> 'நிலை என்னாது 'பயனிலை' என்றது அப்பெயர் களைக் கேட்பின் இப்பொழுது இப்பொருள் இன்ன நிலைமைத்து என உணரும் உணர்ச்சிக்குப் பயன்பட நிற்கும் நிலைமைய'

என்பது கல்லாடர் விளக்கம். இவை எல்லாம் வேர்ப்பொருள் விளக்கம் ஆயினும் மொழி, கருத்துப் பரிமாற்றத்துக்கு -

கருத்தாடலுக்குப் பயன்படவேண்டும் என்ற கொள்கையை மனதில் கொண்டதாகும்.

சேனாவரையர் முதலான உரையாசிரியர்கள் இந்த ஆறு கருத்தையும் விளக்கும்போது சிறுசிறு வேறுபாடு காட்டியுள்ளார்கள்.

> 'உண்டு என்பது பண்பு முதலாயின சுட்டாது உண்மையே சுட்டலின் வேறு கூறினார். பொய்ப் பொருளின் மெய்ப்பொருட்கு வேற்றுமை உண்மை ஆகலின் அவ்வுண்மையைப் 'பொருண்மை' என்றார்'

என்பது சேனாவரையர் விளக்கம்.

'பொருள் தன்னையே சுட்டி அதன் தொழில் முதலாயின சுட்டாது நிற்கும் நிலைமை' என்பது தெய்வச்சிலையாரின் விளக்கம்.

> பொருண்மை என்பது பொருளின் தன்மை : 'பொருள் தன்மையாவது அப்பொருள்களின் சாதித் தன்மை. ஆ என்னும் பொருள் கெட்டதேனும் அவ்வாவினது சாதித் தன்மை எக்காலத்தும் கெடாது நிற்கும் என்பது உணர்த்துதற்கு ஆ உண்டு என்றார். கட் புலனாகிய ஆ கெடவும் இச் சாதித் தன்மை கெடாது என்பது தோன்றப் பொருண்மை சுட்டல்'.

என்பது நச்சினார்க்கினியர் விளக்கம்.

> 'இதன் பண்பு முதலியவற்றைக் கருதாது பொருள் தன்மையைக் கருதி நிற்றல் பொருண்மை சுட்டல்'

என்பார் கல்லாடரும். மொழியியலார் அதை உண்மைநிலை (Verb of existence) வாக்கியம் என்பார்கள். அதன் எதிர்மறை இல்லை என்பதே. அதுதான் தொல்காப்பியர் கூறும் 'மன்னாப் பொருள்' (517). அந்த அடிப்படையில் உண்மைநிலை வாக்கியத்தை 'மன்னு' பொருள் வாக்கியம் என்று தமிழில் அழைக்கலாம்.

### 3.5.3. வினைப் பயனிலைகளுக்குள் வேறுபாடு

பெயர்ப் பயனிலையையும், பொருண்மை சுட்டலையும் ஒழிந்த நான்கையும் சேனாவரையர் இரண்டு வகையாக அடக்க முடியும் என்றும், சில வேறுபாடு கருதித் தனித்தனியாகக் கூறப்பட்டிருக்கிறது என்றும் விளக்கியுள்ளார்.

> 'வியங்கொள வருதல் வினைநிலை உரைத்தற் கண்ணும், வினாவிற்கு ஏற்றல் பெயர் கொள வருதற் கண்ணும், வினைக் குறிப்பாய வழிப்பண்பு கொள வருதற் கண்ணும் அடங்குமாயினும் வினையும் பெயரும் பண்பும் முடிக்கும் சொல்லாதலே அன்றி முடிக்கப்படும் சொல்லாதலும் உடைய. வியங்கோளும் வினாவும் முடிக்கும் சொல்லாய் அல்லது நில்லாமையின் அவ் வேறுபாடு அறிவித்தற்கு வேறு கூறினார்'

என்பது சேனாவரையரின் வாதம். இங்கு முடிக்கும் சொல் என்பது பயனிலையாக வருவது. முடிக்கப்படும் சொல்லாய் வருதல் என்பது எழுவாயாக வருவது. அதன்படி வியங்கோளும், வினாவும் எழுவாய் நிலையில் வரா. தெய்வச்சிலையாரே பயனிலைப் 'பெயர்க்கு முன்னிற்றலே அன்றிப் பின்னிற்றலும் ஆம்' என்று கூறி, உளன் சாத்தன், செல்க சாத்தன், வந்தான் சாத்தன், யாண்டையான் சாத்தன், வணிகன் சாத்தன் என்ற உதாரணங்களைக் கொடுத்துள்ளதால் சேனாவரையர் கருத்து பொருந்தாது என்பது தெளிவு. மேலும் இலக்கியத்திலும் வியங்கோளும் வினாவும் முதலில் வந்துள்ளன.

> வாழி ஆதன் வாழி அவினி (ஐங்குறு. 1)
>
> உண்மின் கள்ளே அடுமின் சோறே
> எறிக திற்றி ஏற்றுமின் புழுக்கே (பதிற்று. 181: 2)
>
> யார் அணங்கு உற்றனை கடலே (குறுந். 163: 1)
>
> யாது செய்வாங்கொல் தோழி (குறுந். 197: 1)

என்பவைகளில் வியங்கோளும் வினாவும் முடிக்கப்படும் சொல்லாகவும் வந்துள்ளன. எனவேதான் தெய்வச்சிலையார், நச்சினார்க்கினியர், கல்லாடர் ஆகியோர் சேனாவரையரின் கருத்தை ஒத்துக்கொள்ளவில்லை.

> 'இவை எல்லாம் (இந்த ஆறும்) பெயர்ப் பொருண்மையைச் சுட்டி நிற்றலின் பொருண்மை சுட்டல் என அடங்கும்'

என்று தெய்வச்சிலையார் கூறிப் பின்னர் இந்த ஆறுக்கும் இடையே வேறுபாடு காட்டியுள்ளார். இங்கு இரண்டு செய்திகள் சுட்டிக்காட்டத் தகுந்தவை : 1. பொருண்மை சுட்டல்' என்பது இங்குப் பொதுப் பொருளில் கையாளப்பட்டுள்ளது.

2. எழுவாயில் உள்ள பெயரைத் தலைப்பு (Topic) என்றால் பயனிலையாக உள்ள பெயரை விளக்கம் (Comment) என்று கொள்ளலாம். பெயர்ப் பொருண்மை என்பது முடிக்கும் சொல் அல்லது விளக்கம் என்ற முறையில் பொதுவானது.

'பொருண்மை சுட்டல் பொருண்மை மாத்திரத்தைக் குறித்தல்' என்று தெய்வச்சிலையார் பிற்பகுதியில் விளக்கினாலும், பொழிப்புரையில் 'எழுவாயாகி நின்ற பொருள் தன்னையே சுட்டி அதன் தொழில் முதலாயின சுட்டாது நிற்கும் நிலைமை' என்று குறிப்பிட்டுள்ளார். பொதுவாகப் பொருண்மை சுட்டலில் பிரச்சினை இல்லை.

'வியங்கொள வருதலாவது தொழிலைப் பெயர்ப் பொருண்மை கொள்ளுமாறு வரும் ஏவற் சொல்' என்னும் போது அங்கு இரண்டு வினைகள் அவைகளின் மூலம் இரண்டு கருத்தாக்கள் புதைந்துள்ளன என்பதும், இரண்டாவது வினை ஏவல் என்பதும் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. மாறாக வினைநிலை உரைத்தல் என்பது 'அப்பொருளின் தொழிலின் நிலைமையை உணர்த்தவரும் சொல்' என்பது புடைபெயர்ச்சி ஆகல்' என்பார். எனவே வினைநிலை உரைத்தல் என்பது ஒரு வினை அல்லது ஒரு கருத்தா கொண்டது என்று கொள்ளலாம். 'வியங்கோளில் இரண்டு வினைகள் உள்ளன' என்பது புதிய கருத்து. எனவே அது தனியே விளக்கப்படும்.

> 'வினைநிலை உரைத்தல் தன் தொழில்; வியங்கொள
> வருதல் மேல் தன்கண் தொழில் நிகழ்வதாக ஒருவன்
> ஏவப்படுதல். இரண்டற்கும் இதுவே வேறுபாடு'

என்று நச்சினார்க்கினியர் இன்னும் கொஞ்சம் தெளிவாக விளக்கியுள்ளார். இங்கு வியங்கொளலை ஏவல் என்பது பொருந்தாது. ஒருவன் வேண்டுதல் அல்லது விரும்புதல் என்பதே பொருத்தமாக இருக்கும். எப்படியானாலும், முருகன் செல்க என்ற தொடரில் செல்- என்பது முருகனின் வினை. பிறவினை, அது முன்னிலையாகவோ அல்லது படர்க்கையாகவோ இருக்கலாம்) -க என்பது தன்வினை - குறிப்பாக - பேசுவோன் வினை. (தன்மை வினை) அதாவது செயல் வினை (செல்), வாழ்த்துதல் (க என்ற விகுதியால் குறிக்கப்படுவது) ஆகிய இரண்டு வினைகள் உள்ளன என்பதை உரையாசிரியர்கள் தெளிவுபடுத்தியுள்ளது மிகவும் சிறப்பானது. இது நுட்பமான

கருத்து, புதுமையானது. இது இன்றைய மாற்றிலக்கண மொழியியலாளரின் சிந்தனையை ஒத்தது. அந்த முறையில் பேசுவோன் ஆணையிடல் என்ற வினையும் கேட்போன் மேற்கொள்ள வேண்டிய செயல் வினையும் அடங்கியதாகக் கருதலாம். புறநிலையில் ஒரு வினையடியே இருந்தாலும் புதைநிலையில் இரண்டு வினைகள் அடங்கியுள்ளதாகக் கொள்ள வேண்டும் (நிர = நிரப்புவான்).




வியங்கோளுக்குத் தொல்காப்பியர் எழுவாய்க் கட்டுப்பாடு விதித்துள்ளதால் அது பற்றித் தனியே விளக்கப்படுகிறது. மீதியுள்ள மூன்று வகை பற்றியும் சிக்கல் எதுவும் இல்லை.

> 'வினாவிற்கு ஏற்றல் அவ்வாறு அன்றி வினாவப்படும் நிலைமையதாகி நிற்றலானும், பண்பு கொள வருதல் அப் பொருள்கண் உள்ளதோர் குணத்தைக் குறித்து நிற்றலானும், பெயர் கொள வருதல் அப்பொருண்மை முழுதும் உணரப் பிறிது ஓர் வாய்பாடாக வருதலானும் வகுத்துக் கூறினார்'

என்பது தெய்வச்சிலையார் விளக்கம். மேலே குறிப்பிட்டபடி தெய்வச்சிலையார் எழுவாயும் பயனிலையும் முறை மாறி வரும் என்று எடுத்துக்காட்டியதை ஒட்டி எழும் ஒரு கேள்விக்குப் பதில் சொல்லியுள்ளது அவர் மாற்றிலக்கணக் கோட்பாட்டின் ஆணிவேரை உணர்ந்துள்ளதை வலியுறுத்துகிறது.

> 'ஈண்டுக் காட்டப்பட்ட உதாரணத்துள் (உளன் சாத்தன், செல்க சாத்தன் முதலானவை) வினை பற்றி வருவன எல்லாம் முற்றுச்சொல் பெயர் கொண்டு முடிந்ததாம், பயனிலை மாறி நின்றன ஆகா எனின்'

என்று இரண்டு மாறுபட்ட கருத்தைக் (1. முற்றுத்தொடர் என்ற புதுவகை, 2. முன்னர்க் குறிப்பிட்ட வகைகளே மொழி மாறி வந்துள்ளன) குறிப்பிட்டு, பின்னதை ஆதரித்துள்ளார். அதற்கு மூன்று காரணங்களைக் காட்டியுள்ளார். 1. 'முற்றுச் சொல்

எனவே முடிந்த சொல் என்பது பெறும், அது பின்னும் மற்றொரு சொல்லை அவாவி நிற்கும் என்றல் பொருந்தாமை, 2.

மற்றுச்சொல் நோக்கா மரபின அனைத்தும்
முற்றிநிற்பது முற்றியன் மொழியே

என்று அகத்தியர் கூறுவது, 3. தொல்காப்பியரே எச்சவியலில் மொழிமாற்று என்பதைக் குறிப்பிட்டிருப்பது.

தெய்வச்சிலையார் தவிரப் பிற உரையாசிரியர்கள் எல்லாம் இளம்பூரணரை ஒட்டி ஆ என்ற அஃறிணைச் சொல் எழுவாயாக வருவதையே உதாரணம் கொடுத்துள்ளார்கள். தெய்வச்சிலையார் சாத்தன் என்ற உயர்திணைச் சொல் எழுவாயாக வருவதை உதாரணமாகக் காட்டியுள்ளார். அதாவது அவை எல்லாம் எழுவாயாகவும் கருத்தாவாகவும் இடங்களிலும் எழுவாயும் கருத்தாவும் ஒன்றாக இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை என்பதைத் தொல்காப்பியரே இரண்டு இடங்களில் கூறியிருப்பது இங்குச் சுட்டிக்காட்டத் தகுந்தது ஒன்று: வேற்றுமையியல் மூன்றாம் வேற்றுமையின் பொருள்களில் ஒன்றாக 'வினைமுதலை' - கருத்தாவைக் குறிப்பிட்டிருப்பது, (557) அகத்தியனால் தமிழ் உரைக்கப்பட்டது என்ற உரையாசிரியர்கள் தரும் உதாரணத்தில் கருத்தா மூன்றாம் வேற்றுமையாக அமைய இங்கு அமைந்துள்ள எழுவாயான - தமிழ் உண்மையில் இரண்டாம் வேற்றுமை ஆகும். அகத்தியன் தமிழ் (தமிழை) உரைத்தான் என்பதே இரண்டு: வினையியலில் செயப்படுபொருளைச் செய்தது போலக் கிளக்கலாம் (731) என்று தொல்காப்பியரே கூறியுள்ளதால் செயப்படுபொருளும் எழுவாயாக வரலாம் என்பது பெறப்படும். திண்ணை மெழுகிற்று என்ற வாக்கியத்தில் திண்ணை எழுவாயாக இருந்தாலும் அந்த வினையின் கருத்தா இல்லை. எனவே இலக்கண எழுவாய் (Grammatical Subject) என்றும் தருக்க எழுவாய் (Logical Subject) என்றும் பிரித்துப் பேசப்படும். அதாவது உரையாசிரியர்கள் காட்டிய உதாரணங்களில் இலக்கண எழுவாயும் தருக்க எழுவாயும் இணைந்து அமைந்துள்ளன. ஆனால் எப்போதும் இரண்டும் ஒன்றாக அமைய வேண்டியதில்லை.

உரையாசிரியர்கள் காட்டிய உதாரணங்களில் இரண்டு சொற்களே - எழுவாயும் பயனிலையும் உள்ளன. தெய்வச்சிலையார் இரண்டு பெயர்களும் ஒரு வினையும் அடங்கிய இரண்டு வாக்கியங்களை எடுத்துக்கொண்டு அவை

மேலே குறிப்பிட்ட வகைகளில் எதைச் சார்ந்தன என்று விவாதித்துள்ளார்.

> 'சாத்தன் தலைவன் ஆயினான், இரும்பு பொன் ஆயிற்று என்பன எவ்வாறு வந்தன எனின், அவையும் பொருளின் புடைபெயர்ச்சி ஆகலானும், ஒன்று ஒன்றாகித் திரிதலாகிய வினையான் வருதலானும் வினைநிலை உரைத்தலுள் அடங்கும். அஃதேல் தலைவன் பொன் என்னும் பெயரை 1. எழுவாய் என்றுமோ பயனிலை என்றுமோ எனின் 2. இரண்டும் அல்ல, தலைவன் ஆதல், பொன் ஆதல் எனத் திரிபு குறித்து நின்றன. 3. பெயர் குறித்து நின்றன எனப்படா என்க.

என்பது தெய்வச்சிலையார் வாசகம். இங்கு இரண்டு செய்திகள் சுட்டிக்காட்டத் தகுந்தவை: 1. 'ஒன்றாய்த் திரிதலாகிய வினையான் வருதலானும் வினைநிலை உரைத்தலுள் அடங்கும்' என்பது. சாத்தன் தலைவனாக ஆனான். இரும்பு பொன்னாக ஆயிற்று என்ற வாக்கியங்களில் முறையே தலைவன்/பொன் என்பது வினைத் தொடரில் அதாவது பயனிலையின் பகுதியாக வரும். அந்தக் கருத்தையே 'எழுவாய் என்றுமோ பயனிலை என்றுமோ எனின் இரண்டும் அல்ல' என்று எதிர்மறையில் விளக்கியுள்ளார். இங்கு இரண்டு கோட்பாடு புதைந்துள்ளது: 1. வாக்கியத்திலுள்ள சொற்களின் அண்மை உறுப்பு உறவு (Immediate Constituent Relation) 2. ஓர் உறுப்பினுக்குள் இருக்கும் உறுப்புகளின் இலக்கண உறவு. உரையாசிரியர்கள் முன்னதில் கருத்துச் செலுத்திய அளவுப் பின்னதில் கருத்துச் செலுத்தவில்லை.




'சாத்தன் தலைவன் ஆயினான்' என்ற உதாரணத்தை நச்சினார்க்கினியர் கொடுத்துப் 'பயனிலைக்கு அடையாய் வந்துள்ளது' என்று குறிப்பிட்டுள்ளார். மாற்றிலக்கண மொழியியலார் இதைப் பயனிலை நிரப்பி (Verb Complement) என்று அழைப்பார்கள்.

தெய்வச்சிலையார் கொடுத்த மற்றொரு உதாரணமான இரும்பு பொன் ஆயிற்று என்ற வாக்கியம் சிக்கலானது.

ஏனென்றால் ஆயிற்று என்பது மாறியது என்று பொருள் உடையது இரண்டும் நிலைமாற்றம் (Change of State) என்றாலும் முன்னது வெறும் நிலை மாற்றம்; பின்னது பருப்பொருள் (Substance) மாற்றமும் பெற்றது. புறநிலையில் பொன் ஆயிற்று என்பது பயனிலைத் தொடராக அமைந்தாலும் அதன் புதைநிலை வடிவம் சிக்கலானது.

நச்சினார்க்கினியர் மேலும் பல வகையான வாக்கியங்களை எடுத்துக்காட்டி விவாதித்துள்ளது தொடரியல் நுட்பம் வாய்ந்தது.

> '1. ஆயன் சாத்தன் வந்தான் எனப் பண்பு ஒட்டு ஆகாது விட்டிசைத்து நின்று மற்றோர் எழுவாயின் பயனிலையோடு தானும் பயனிலை கோடலும், ஆயன் வந்தான் சாத்தன் என வினைப் பின்னும் நிற்றலும், 2. சாத்தன் கண் நல்லன் எனச் சினைவினை முதற்கு ஏற்றிக் கூறலும், 3. இம்மணி நிறம் நன்று எனப் பணபின் தொழிலைப் பண்பு அடைந்த பொருட்கு ஏற்றிக் கூறலும், 4. இக்குதிரை நடை நன்று எனத் தொழிலின் தொழிலைத் தொழில் அடைந்த பொருட்கு ஏற்றிக் கூறலும், 5. இவ் யாறு நீர் ஒழுகும் என இடத்து நிகழ் பொருளின் தொழிலை இடத்திற்கு ஏற்றிக் கூறலும், 6. அ) இறைவன் அருளல் எம் உயிர் காக்கும்; ஆ) இறைவன் அருளலின் யாம் உயிர் வாழ்தும் என அ) எழுவாய்க்குப் பயனிலையாய் வந்த பெயர் தானும் எழுவாயாய்ப் பயனிலை கோடலும், ஆ) அஃது உருபு ஏற்றலும், 8. ஆ செல்க, செல்க ஆ என முன்னும் பின்னும் நிற்றலும் பிறவுங் கொள்க.

என்பது அவர் வாசகம். இங்கு இரண்டு விதமாக வாக்கியங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. முதல் உதாரணம் தொடரியல் உறவு-எழுவாய்-பயனிலை; இரண்டு, மூன்றாம் உதாரணங்கள் பொருண்மையியல் நிலையில் முதல்/சினை, பண்பி/பண்பு; நாலாம் உதாரணம் சொல்லியல் நிலை தொழில்/தொழிலை அடைந்த பொருள், இடத்து நிகழ் பொருள்/இடம். எனவே அவைகளின் புதைநிலை வடிவம் மாறுபட்டது. ஆயன் சாத்தன் வந்தான் என்பது ஆயனாகிய சாத்தன் வந்தான் என்று பொருள்படும் போது ஆயன் சாத்தன் என்பது எழுவாய். மேலும் அது ஒலி

நிலையில் ஆயன் சாத்தன் என்ற இரண்டு சொல்லும் ஒலி இடைவெளி இல்லாமல் உச்சரிக்கப்படும். ஆனால் நச்சினார்க்கினியர் விளக்கப்படி ஆயன், சாத்தன் என்ற இரண்டு சொல்லும் இரண்டு வேறு கருத்தாவைக் குறிக்கும். அப்படியானால் பயனிலை பலர் பாலாக இருக்க வேண்டும். 'மற்றோர் எழுவாயின் பயனிலையோடு தானும் பயனிலை கோடலும், ஆயன் வந்தான் சாத்தன் என வினைப் பின்னும் நிற்றலும்' என்ற அவர் வாசகம் ஆயன் வந்தான், சாத்தன் வந்தான் என்று இரண்டு வாக்கியம் புதைநிலையில் இருப்பதாகக் கருதுகிறார் என்று நினைக்கவேண்டியிருக்கிறது. ஆனாலும் அவர் கருத்து சரியாகத் தெளிவுபடுத்தப்படவில்லை என்றே தோன்றுகிறது.

2. சினைவினையை (சாத்தனுடைய கண் நன்று) முதலுக்கு (சாத்தன் கண் நல்லன்) ஏற்றிக் கூறல், பண்பின் தொழிலை (நிறம் நன்று) பண்பு அடைந்த பொருளுக்கு (பண்பி/மணி) ஏற்றிக் கூறல், தொழிலின் தொழிலை (நடை நன்று) தொழில் அடைந்த பொருளுக்கு (குதிரை) ஏற்றிக் கூறல், இடத்து நிகழ் பொருளின் தொழிலை (யாற்றில் நீர் ஒழுகுதல்) இடத்திற்கு (யாறு) ஏற்றிக் கூறல்.

இங்கு அண்மை உறுப்பு உறவு (Immediate Constituent relation = IC relation) மாறுபடுவது சுட்டிக்காட்டத் தகுந்தது. ஆனாலும் அவை சொற்களின் ஓர் உறுப்பினுக்குள் உறுப்பாய் அமையும்.

நச்சினார்க்கினியர் வாசகத்தில் புதைந்துள்ள இரண்டு உண்மைகள் சுட்டிக்காட்டத் தகுந்தவை: 1. மொழி அமைப்பைப் புறக்கணித்துப் பொருள் நோக்கில் விளக்கம் கொடுத்திருப்பது. அதாவது அவர் கொடுத்த வாக்கியங்களில் பயனிலை எழுவாயின் பண்பைப் பிரதிபலிக்கவில்லை என்பதுதான் அவர் கருத்து. அந்த விளக்கம் ஏற்றுக் கொள்ளக் கூடியதே. உதாரணமாக, முதல் உதாரணத்தில் (சாத்தன் கண் நல்லன்) எழுவாயின் பாலை (ஆண்) பிரதிபலித்தாலும் அந்த வினை எழுவாய்க்கு உரியது அல்ல; எழுவாய் பற்றிய விளக்கம் அல்ல. அந்த வாக்கியத்தில் உள்ள இன்னொரு பெயராக அமைந்த சினைப் பெயரின் பண்பை உணர்த்துகிறது. 2. அதனால் அங்குள்ள இரண்டாவது பெயரின் இலக்கண உறவும் மாறிவிடுகிறது என்பதை நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டாதது ஒரு குறையே. அதாவது கண் என்பது

எழுவாயின் பகுதியாக அமையாமல் பயனிலையின் பகுதியாக (சாத்தன் + கண் நல்லன்) அமைந்துவிடுவது. மேலும் இன்றுள்ள மாற்றிலக்கண அறிவால் அதை இன்னொரு வாக்கியத்தின் மாற்றமாகக் கருதலாம் என்பது.




சாத்தன் கண் நல்லன் என்பதில் சாத்தன் எழுவாயாகவும் கண் நல்லன் பயனிலைத் தொடராகவும் அமையும். பேசுவோன் கருத்து கண்-சினை பண்பு பற்றியதாக இருந்தாலும் வாக்கியத்தில் எழுவாயாகச் சாத்தன் அமைந்திருப்பதால் அதன் (சாத்தன்) பாலை (ஆண்பால்) ஒட்டிப் பயனிலையின் பால் அமைந்துள்ளது. தமிழில் புறநிலையில் எழுவாய்க்கும் பயனிலைக்கும்தான் (திணை) பால் இயைபு உண்டு. கண் முக்கியப்படுத்த வேண்டும் என்றால் சாத்தன் (அது) கண் நன்று என்று அமையவேண்டும்'. அங்குச் சாத்தன் கண் என்பது ஆறாம் வேற்றுமைத் தொகையாகவும் நிற்கலாம். அப்போது சாத்தனது கண் / சாத்தன் கண் என்ற ஆறாம்வேற்றுமைத் தொடர்/ தொகை எழுவாயாகவும் நன்று என்பது பயனிலையாகவும் அமையும். அப்படியானால் சாத்தன் (அது) கண் நன்று என்ற வாக்கியத்தின் மாற்று வடிவமாகச் சாத்தன் கண் நல்லன் என்ற வாக்கியத்தைக் கொள்ளவேண்டும். தொல்காப்பியரே இரண்டாம் வேற்றுமை (செயப்படுபொருள்) எழுவாயாக (செய்வது) வரும் என்று குறிப்பிட்டுள்ளார்.

> செயப்படு பொருளைச் செய்தது போலத்
> தொழில்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே (731)

என்பது அந்தச் சூத்திரம். அந்த முறையில் மூன்றாம் வேற்றுமையும் (கத்தியால் வெட்டினான் --> கத்தி வெட்டியது) நான்காம் வேற்றுமையும் (வீட்டுக்கு வந்தான் --> வீடு வந்தது) ஏழாம் வேற்றுமையும் (கிணற்றில் நீர் ஊறுகிறது --> கிணறு நீர் ஊறுகிறது என்றும் (அகத்தியலிங்கம் 2000: 13) எழுவாயாக அமையும் என்று விளக்குவார்கள். அந்த முறையில் சாத்தன் கண்

நல்லன் என்ற வாக்கியம் சாத்தன் கண் நன்று என்ற ஆறாம் வேற்றுமைத் தொடரை எழுவாயாகப் பெறும்போது எழுவாய்க்கு ஏற்ற அஃறிணைப் பாலை வினைமுற்றை (நன்று) கொண்டு முடிந்துள்ளது என்று கொள்ளவேண்டும்.

3. இம்மணி நிறம் நன்று எனப் பண்பின் தொழிலைப் பண்பு அடைந்த பொருட்கு ஏற்றிக் கூறும்போது இம்மணி எழுவாயாகவும் நிறம் நன்று பயனிலைத் தொடராகவும் அமையும். இதுவும் இம்மணி(யது) நிறம் நன்று என்று (அதாவது ஆறாம் வேற்றுமைத் தொடர் (இம்மணி (யது) நிறம்) எழுவாயாகவும் நன்று பயனிலையாகவும் அமையும்) வாக்கியத்தின் மாற்றுவடிவமாகக் கொள்ளலாம். ஆறாம் வேற்றுமை எழுவாயாக மாறுவதால் பயனிலையும் அஃறிணை பால் விகுதி ஏற்று இம்மணியது நிறம் நன்று என்றாகும். இங்குப் பயனிலையின் பாலில் மாறுபாடு இல்லாவிட்டாலும் விட்டிசை பெறும் இடமும், இலக்கண உறவும் மாறுபடுவதாலேயே பொருள் அழுத்தம் மாறுபடுகிறது.

> இம்மணி + நிறம் நன்று (இங்கு இன்னொரு மணியோடு ஒப்புநிலை புதைந்துள்ளது) (இம்மணி) நிறம் + நன்று (இங்கு அதே மணியின் இன்னொரு பண்போடு (வடிவம்) ஒப்பு நிலை புதைந்துள்ளது).

நச்சினார்க்கினியர் முன்னதே அடிப்படை வாக்கியம் என்று கருதுகிறார் என்பதும் தெளிவு. நிறம் நன்று என்ற எழுவாயின் விரிவாக - நிறம் என்பது மணியின் நிறம் என்பதன் விரிவாகக் கொண்டுவிட்டார். அதாவது இம்மணி/இக்கட்டிடம்/ இப்பறவை நன்று கொண்டால் தலைப்பு (Topic) நிறம் என்பது சரியே. அதனால்தான் பண்பின் தொழிலைப் பண்பு அடைந்த பொருட்கு ஏற்றிக் கூறுவது என்று கொண்டுவிட்டார். இம்மணி நிறம் நன்று என்று கூறும்போது தலைப்பு இம்மணி ஆகும். அது பற்றிய விவரம் (Comment) நிறம்/வடிவம்/குணம் நன்று என்று அமையும். நச்சினார்க்கினியர், நிறம் நன்று/ இப்பறவை நிறம் நன்று போன்ற வாக்கியங்களைக் கொடுத்திருக்க வேண்டும். இம்மணி நிறம் + நன்று, இம்மணி + நிறம் நன்று என்ற வாக்கியத்தைக் கொடுத்துள்ளதால் இம்மணி என்பதே தலைப்பு. இம்மணியில் நிறம் நன்று என்று கூறினால் இம்மணியில் உள்ள நிறம் நன்று (வேறு பண்பு நன்று இல்லை) என்று பொருள்படும். அப்படியானால் அது இரண்டு புதைநிலை வாக்கியத்திலிருந்து

உண்டானதாகக் கருதப்படும். ஆனால் நிறம் நன்று என்று பயனிலைத் தொடராக அமையும்போது நிறம் என்பதும் நன்று என்பதும் வெறும் நிரப்பி உறவு உடையதாகக் கூறமுடியாது. எது என்ற கேள்விக்கு மணி என்பதே பதில். எனவே எதில்/ எதனால் நன்று கேள்வி கேட்டால்தான் நிறம்/வடிவம் நன்று பதில் வரும். எனவே அது காரண உறவு உடையதாகக் கருத வேண்டும். அதனால்தான் அண்மை உறுப்பு ஆய்வு குறை உடையதாக மொழியியலாளரால் கருதப்படுகிறது.

4. இக்குதிரை நடை நன்று எனத் தொழிலின் தொழிலைத் தொழில் அடைந்த பொருட்கு ஏற்றிக் கூறுவது என்பதில் இக்குதிரை எழுவாயாகவும் நடை நன்று என்பது பயனிலையாகவும் அமையும். அதையும் இக்குதிரை நடப்பது நன்று என்ற வாக்கியத்தின் மாற்று வடிவமாகக் கருதலாம். அந்த நிலையில் இக்குதிரை நடை நன்று என்ற வாக்கியம். உண்மையில் இக்குதிரை நன்றாக நடக்கிறது என்பதைப் புதைநிலை வாக்கியமாகக் கொள்ளவும் இடம் உண்டு. அப்படியானால் பல்வேறு பிளவு வாக்கியங்களாக மாற்றலாம்.

நன்றாக நடப்பது இக்குதிரை
இக்குதிரை நடப்பது நன்று

என்ற பிளவு (Cleft) வாக்கியங்களாக மாற்றலாம். அதாவது பொதுவாக எழுவாய் + வினைப் பயனிலை என்பதைப் பெயர்த் தொடராக மாற்றலாம். அதற்குப் பயனிலை வினையை ஆக்கப் பெயராக மாற்றும்போது வினையடையாக உள்ள சொல் வினையாக மாறும். இக்குதிரையின் (அது) நடை நன்று. இதை இக்குதிரை ·நடை நன்று என்று மாற்றலாம்.

இங்கு, இக்குதிரை + நடை நன்று என்றும் இக்குதிரை நடை + நன்று குதிரை, நடை என்ற இரண்டு சொற்களின் இலக்கண உறவு - தொடரியல் உறவு மாறுபடுகிறது.

5. இவ் யாறு நீர் ஒழுகும் என இடத்து நிகழ் பொருளின் தொழிலை இடத்திற்கு ஏற்றிக் கூறுவதில் இவ் யாறு - எழுவாய் + நீர் ஒழுகும் - பயனிலை. இது அவ் யாற்றில் நீர் ஒழுகும் என்ற வாக்கியத்தின் மாற்று வடிவமாகக் கருதலாம். இங்கு ஏழாம் வேற்றுமை (அவ் யாற்றில்) எழுவாயாகவும் எழுவாய் (நீர்) பயனிலையின் பகுதியாகவும்/வினையடையாகவும் மாற்றம் பெறுகிறது.

இவ்வயல் நெல் விளையும் என்ற மற்றொரு உதாரணத்தைக் கல்லாடர் கொடுத்துள்ளார். இங்கும் இவ்வயலில் நெல் விளையும் என்ற வாக்கியத்தின் மாற்று வடிவமாகக் கொள்ள முடியும்.

இவ்வயல் + நெல் விளையும் என்னும்போது இவ்வயல் - எழுவாய், நெல் விளையும் - பயனிலைத் தொடர். இவ்வயலில் நெல் விளையும் என்னும்போது நெல் என்பது எழுவாயாகவும் இவ்வயலில் விளையும் என்பது பயனிலைத் தொடராகவும் அமையும். அதாவது நெல்லுக்கு அடையாக அமையாமல் பயனிலைத் தொடரின் பகுதியாக அமைந்துவிடுகிறது.

மேலே குறிப்பிட்ட இரண்டு வாக்கியங்களிலிலும் புதைநிலை எழுவாயும், இன்னொரு வேற்றுமையாக இருந்த எழுவாயும் அஃறிணை ஒன்றன் பாலாக இருந்ததால் வினைமுற்றில் பால் மாற்றம் நடைபெறவில்லை.

உண்மையில் இவை எல்லாம் ஒரு வாக்கியத்துக்குள் நடைபெறும் மாற்றங்கள் ஆகும். நச்சினார்க்கினியர் இரண்டு வாக்கியம் கலவை வாக்கியமாக மாறுவதைப் பற்றி அடுத்த உதாரணத்தில் குறிப்பிட்டுள்ளார்.

6. அ) 'இறைவன் அருளல் எம் உயிர் காக்கும்; ஆ) இறைவன் அருளலின் யாம் உயிர் வாழ்தும் என அ) எழுவாய்க்குப் பயனிலையாய் வந்த பெயர் தானும் எழுவாயாகப் பயனிலைக் கோடலும், ஆ) அஃது உருபு ஏற்றலும் என்பது'

இரண்டு வாக்கியம் இணைவது பற்றியது. முதல் வாக்கியத்தில் எழுவாய் ஒன்றன்பால் சொல்லே. இங்கு 'இறைவன் அருளல்' எழுவாய், 'எம் உயிர்' செயப்படுபொருள்; 'காக்கும்' ஒன்றன்பால் எதிர்கால வினைமுற்று. 'எம் (உயிர்) அடையாக வந்துள்ளது. இரண்டாவது வாக்கியத்தில் 'இறைவன் அருளலின்' ஏது; 'யாம்' எழுவாய்; உயிர் வாழ்தும் தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று. மேலும் வினைச்சொல் மாறுபடுவதும் கவனிக்கத் தகுந்தது. 1. இலக்கணநிலையில் முன்னது செயப்படுபொருள் குன்றா வினை; பின்னது செயப்படுபொருள் குன்றிய வினை. 2. பொருண்மைநிலையில் முன்னது கூடுதல் பொருள்கூறு உடையது. காத்தலில் வாழ்தல் அடங்கியுள்ளதாகக் கருதலாம். காக்கும் என்ற வாக்கியத்தின் அது என்பதன் விளக்கமாக இறைவன் அருளுவான் என்ற வாக்கியம் புதைந்துள்ளது.




வாக்கியம் பெயரின் நேரடி ஆளுகையில் அமைந்திருப்பதால் வாக்கியம் பெயராகும் என்பார்கள். அதனால் தான் இறைவன் அருளல் என்று பெயராக மாறுகிறது.

இறைவன் அருளலின் யாம் உயிர் வாழ்தும் என்பதில் யாம் (எழு) + இறைவன் அருளலின் (காவே) + உயிர் வாழ்தும் (ப) என்ற அமைப்போடு காரணவேற். என்பது பெயர் + காரண வேற். விகுதி பெயர் இங்கு வாக்கியமாக அமைந்துள்ளது. பெயரின் ஆளுகைக்குக் கீழ இறைவன் அருளுவான் என்பது அமைவதால் அது இறைவன் அருளல் என்று மாறி வேற்றுமை விகுதி (இன்) ஏற்றுவரும்.

இங்குப் பொதுவாகக் குறிப்பிட வேண்டியது வாக்கியத்தில் உள்ள சொற்களின் வடிவம் ஒன்றாக இருந்தாலும் அவைகளின் இலக்கண உறவு அறிந்து பெயரிடவேண்டும் என்றும், அதற்கு ஏற்பப் பெயர்களின் இலக்கண உறவும் வினை செயல்பாடும் மாறுபடலாம் என்றும் நச்சினார்க்கினியர் உணர்ந்திருந்தார் என்பதே. ஆனாலும் ஒரு புதைநிலை வடிவம் புறநிலையில் மாறி வந்திருக்கிறது என்று பொதுமைப்படுத்திக் கோட்பாடாக உருவாக்காமல் விட்டுவிட்டார். அதனால் சில உதாரணங்களை அவர்களால் சரியாக விளக்கமுடியவில்லை அது எல்லா உரையாசிரியருக்கும் பொருந்தும். எப்படியானாலும் அவை மாற்றிலக்கண மொழியியலின் முன்னோடி என்பதில் சந்தேகம் இல்லை.

நச்சினார்க்கினியர் சில சொற்களுக்குப் பொருள் இயைபு இல்லை என்று கூறிவிட்டார்.

> "சிறுமை பெருமையின் காணாது துணிந்தே" -
> சிறுமை பெரிதாகலின் ஆராயாது துணிந்து

கூறினேன் (நற். 30: 7) எனவும் 'கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கி' (புறம். 117: 6) எனவும் வரும்.
1. பண்புகளும் பொருள் இயைபு இன்றேனும்
2. பெயர் கொள வருதற்பாற்படும்'

என்பது நச்சினார்க்கினியரின் வாசகம். அவர் குறிப்பிட்ட இரண்டு செய்திகளும் (1. பண்புகளும் பொருள் இயைபு இன்று. 2. பெயர் கொள வருதற்பாற்படும்) பொருந்தாது. முதல் உதாரணமான 'சிறுமை உதாரணமான 'சிறுமை பெருமையின் காணாது துணிந்தே' என்பதற்கு (என்) சிறுமை பெரிதாகலின் ஆராயாமல் முடிவு செய்தேன் என்று பொருள். பெருமையின் என்பதில் இன் காரணப்பொருள் என்பதில் இணை எதுகைக்காக செய்யுள் விகாரமாக அமைக்கப்பட்டுள்ளதாகக் கொள்ள வேண்டும். அந்த நிலையில் பொருள் இயைபு உடையதாகி விடுகிறது. இலக்கண நிலையில் ஐந்தாம் வேற்றுமை - காரணப் பொருள் பெற்று அடுத்துள்ள வினையைத் தழுவியுள்ளது. 'கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கி' என்பதற்கு 'ஆட்சி செவ்விதாகலின் சான்றோர்கள் பெருக பலராக' என்பது உரையாசிரியர்கள் பதவுரை. இங்குச் செம்மையாக இருத்தலின் என்றும் நேர்ப்பொருள் கொள்ளலாம். நிலைவினை கெடல் வழக்கினும் காணப்படுவதுதான். அவனுடைய நல்ல குணத்தால் செல்வாக்கோடு வாழ்கிறான் என்பது நல்ல குணம் உடையவனாக இருப்பதால் செல்வாக்கோடு வாழ்கிறான் என்றே பொருள்படும். புத்தகம் வாங்குவதற்குப் பணம் கொடுத்தேன் என்பதைப் புத்தகத்துக்குப் பணம் கொடுத்தேன் என்றும் கூறலாம். எனவே நச்சினார்க்கினியர் கூறியது போலப் பொருள் இயைபு இல்லாதது அல்ல. எனவே நச்சினார்க்கினியருக்கு இந்தக் கருத்து உடன்பாடு தான். ஆனால் தெய்வச்சிலையாரும் கல்லாடரும் வினையால் தொகை ஆகும் என்று பேசாததால் அவர்களுக்கு உடன்பாடு இல்லை என்றே கருதலாம்.

'பெயரொடு வினை தொக்கன எழுவாயாய்ப் பயனிலை கொள்ளாது முற்றாய் நிற்கும் என்று உணர்க' (வேற்றுமை, 6 உரை)

என்ற நச்சினார்க்கினியரின் விளக்கம் உண்மையில் தொகையாக அமையவில்லை என்ற கருத்தையே புலப்படுத்துகிறது. வேற்றுமை உருபு கெட்டிருந்தாலும் (இங்கு இரண்டாம் வேற்றுமை உருபு) அதன் இலக்கண உறவு மாறவில்லை என்பதை நச்சினார்க்கினியர்

வாசகம் புலப்படுத்துகிறது. எனவே தொகை என்று அழைப்பதே பொருந்தாது.

பல பொருள் குறித்த பெயரே கொள்ளப்படும் என்று தெய்வச்சிலையார் விளக்கி, யானை குதிரை உள/ செல்க/ வந்தன என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார். அப்படியானால் அவர் உம்மைத் தொகையை என்று கொள்கிறார் என்று பொருள். இது சூத்திரத்தின் பொருளைக் குறுக்கிவிடுகிறது. இருந்தாலும், பல பொருள் குறித்த தொகை பற்றிய பிரச்சனையை எழுப்பிப் பதில் சொல்லியுள்ளார்.

> 'ஒரு பொருட்கண் வரும் பெயரும் தொகை ஆகாதோ எனின், தொகையாம் ஆயினும் இறுதிக் கண் நின்ற பெயர் பயனிலை கொண்டும்; ஏனைய பெயர் பயனிலை ஏலாதும் நிற்கும். இவை இரண்டு பெயர் மேலும் பயனிலை ஒத்து வருதலின் வேறு ஓதப்பட்டன'

என்ற தெய்வச்சிலையார் விளக்கத்தில் தொல்காப்பியரே ஒரு பொருள் வேறு பெயர்க்கிளவி என்ற சூத்திரக் (525) கருத்தை ஏற்றுக்கொண்டு அது ஒரு பயனிலையை மட்டும் ஏற்கும், அதுவும் இறுதியில் வரும் பெயர் மட்டுமே பயனிலை ஏற்கும். பல பொருள் குறித்த பெயர்களில் ஒரே பயனிலை இரண்டு அல்லது எல்லாப் பெயரிலும் வரலாம்.

### 3.6. எழுவாய் வெளிப்படல்

> எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
> அவ்வியன் நிலையல் செவ்விது என்ப (552)

என்ற சூத்திரம் இளம்பூரணர், கல்லாடர் ஆகிய இருவர் கருத்துப்படி சொல்லியல் நோக்கும் சேனாவரையர் தெய்வச்சிலையார் ஆகிய இருவர் கருத்துப்படி தொடரியல் நோக்கும் உடையது. நச்சினார்க்கினியர் இரண்டு கருத்தையும் ஏற்றுக்கொண்டுள்ளார்.

> 'எல்லாப் பெயரும் பயனிலைப்பட நிற்றல் தன்மையில் திரியாமை அதற்குச் செவ்விது என்ப, பிறிது அதற்குச் செவ்வியது ஆகாமையும் உடையது'

என்று பதவுரை இளம்பூரணர் எழுதினாலும் விளக்க உரையாக

> 'உருபேற்றலும் பெயரது இலக்கணம்; அவ்வுருபு ஏற்றலை உடையது ஆகாது எனலும் ஆம். . . நீயிர் என்பது பெயர்; பெயராயினும் நீயிரை என்று உருபு ஏலாது'

என்பார். இந்தக் கருத்தை வேறு யாரும் ஒத்துக்கொள்ளவில்லை. அவர்கள் எல்லோரும் வாக்கியத்தில் எழுவாய் வெளிப்பட்டு வருதல் சிறந்தது என்று இந்தச் சூத்திரம் கூறுவது மிகை என்று கருதி ஒருவன் கேட்ட கேள்விக்கு விடையாக எழுவாய் இல்லாமல் பயனிலைத் தொடர் மட்டும் பயன்படுத்தப்படுவதை எடுத்துக்காட்டி அதாவது எழுவாய் எப்போதும் வெளிப் பட்டிருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை என்ற கருத்தை உணர்த்துவதாகவே கொண்டுள்ளார்கள். கருவூருக்குச் செல்வாயோ சாத்தா என்ற கேள்விக்கு விடையாக, 'செல்வல்' என்று மட்டும் பதில் இறுக்கலாம். இங்கு யான் செல்வல் என்று எழுவாயும் பயனிலையும் இருக்க வேண்டியது எழுவாய் கெட்டு பயனிலை மட்டும் வந்துள்ளது. இப்படிப்பட்ட வழக்குகளை நியாயப்படுத்தவே இந்தச் சூத்திரம் அமைந்துள்ளது என்பது அவர்கள் வாதம்.

### அடிக்குறிப்பு

1. தொல்காப்பியர் விரவு வினையாகக் கருதிய வேறு என்பதும் பயனிலையாக வந்துள்ளது. எனக்கோ காதலன் அனைக்கோ வேறு (ஐங்குறு. 156: 4) 'தலைவன் எனக்குக் காதலன், அன்னைக்கு வேறு (வேறாக உள்ளான்). வேறு என்பது பெயரடையாகவும் (வேறு வகை, வேறு பெயர்க்கிளவி) வினையடையாகவும் (வேறு உணர்ந்து) வந்துள்ளதோடு குறளில் அடையாகவும் பயனிலையாகவும் வந்துள்ளது.

> இருவேறு உலகத்து இயற்கை திருவேறு
> தெள்ளிய ராதலும் வேறு (குறள் 374)

என்னும்போது முதல் வேறு அடையாகவும் (இருவேறு உலகம்), அடுத்த இரண்டும் பயனிலையாகவும் செயல்படு கின்றன.

# 4
# வேற்றுமை

## 4.1. முன்னுரை

வேற்றுமை என்பது பெயருக்குப் பின்னால் வரும் ஓர் இலக்கணக் கூறு. அது பெயருக்கே உரியது.

> கூறிய முறையின் உருபுநிலை திரியாது
> ஈறுபெயர்க் காகும் இயற்கைய என்ப (553)

என்று தொல்காப்பியர் வேற்றுமை, பெயருக்குப் பின்னால் - பின்னொட்டாக வரும் என்று கூறி அதை உருபு என்ற சிறப்புச் சொல்லால் குறிப்பிட்டுள்ளார். 'வேற்றுமை உருபு' (113, 2) என்ற வழக்கும் உண்டு. தமிழில் உருபு என்றாலே வேற்றுமை உருபையே குறிக்கும். தமிழில் அவைகளை இடைச் சொற்களில் ஒன்றாகக் ('வேற்றுமைப் பொருள்வயின் உருபாகுநவும்) கருதுகிறார்கள்.

தமிழில் இடைச் சொற்களில் கால விகுதி, திணை- பால் ஒட்டுகள், அசைநிலைகள், இசைநிறைகள், உவம உருபுகள், சில அகராதியன்கள் (கொன். 'பயனின்மை' (தொல். 739), தஞ்சம் 'எளிது' - தொல். 751) ஆகியவை அடங்கும் (சண்முகம், 1992: 280). கட்டுண்ட உருபனாக இருக்கும் பிற இடைச் சொற்களுக்கும் (கால விகுதி, திணை பால் விகுதி போன்றவை) வேற்றுமை உருபுக்கும் பயன்பாட்டில் வேறுபாடு உண்டு என்பதைத் தொல்காப்பியர் 'வேற்றுமை' என்று பெயர் கொடுத்ததன் மூலமும், உரையாசிரியர்கள் பயன்பாட்டு வேறுபாடு மூலமும் புலப்படுத்தியுள்ளார்கள். தொல்காப்பியர் கருத்து பிற்பகுதியில் விளக்கப்படும்.

> 'வினைச் சொல் இறுதி நிற்கும் இடைச்சொல் தாமே வேறு உணரப்படாது அச்சொற்கு உறுப்பாய் நிற்கும் அன்றே. இவை அவ்வாறு பெயர்க்கு உறுப்பு ஆகாது. தாமே என வேறு உணரப்பட்டு இறுதி நிற்கும் (வேற்றுமை)' (வேற்றுமை 8).

(553 உரை) சேனாவரையர் வாசகத்தில் 'தாமே என வேறு உணரப்படாது அச்சொற்கு உறுப்பாய் நிற்றல்', 'உறுப்பு ஆகாது தாமே என வேறு உணரப்பட்டு இறுதி நிற்றல்' என்ற மாறுபாடு சொல்லியல் நோக்கு விளக்கம். அதைத்தான் சிவஞான முனிவர் முறையே அகத்துறுப்பு, புறத்துறுப்பு என்று தெளிவாக வேறுபடுத்தியுள்ளார். அதாவது வேற்றுமை புறத்துறுப்பு, பிற ஒட்டுகள் அகத்துறுப்பு என்ற வேறுபாடு கோட்பாட்டு நிலையில் முக்கியமானது.

> 'நம்பியை, நம்பியால், நம்பிக்கு என்புழிப் பெயரின் புறத்துறுப்பாய் ஐ உருபு முதலிய இடைச்சொல் ஒன்று வந்தது. தச்சன், தச்சச்சி, முடியினன் என்புழிப் பெயரின் அகத்துறுப்பாய் விகுதி, இடைநிலை, சாரியை, 'இடைச்சொற்கள் பல வந்தன'

என்பது சிவஞான முனிவரின் வாசகம் (நன்னூல் 420 உரை).







அகத்துறுப்பு = ஆக்க ஒட்டு, உள்வட்டத் தொடர் | புறத்துறுப்பு = திரி ஒட்டு வெளிவட்டத் தொடர்

இங்குத் தச்சன், நம்பியை என்ற இரண்டும் பகுபதச் சொல்லாக இருந்தாலும் முன்னதைத் தாய் என்ற பகாபதத்தால் பதிலியாக்க முடியும். ஆனால் பின்னதை எந்தப் பகுபதச் சொல்லாலும் பதிலியாக்க முடியாது. எனவே அகத்துறுப்பு, புறத்துறுப்பு என்பவை ஒட்டு (Affix) என்று பொதுவாகவும், பெயருக்குப் பின்னால் சேருவதால் பின்னொட்டு (Suffix) என்று சிறப்பாகவும் குறிப்பார்கள். அதன் கட்டுமானத்தை (Construction) ஒட்டி ஆக்க ஒட்டு (Derivative) என்றும் திரியொட்டு (Inflection) என்றும் பாகுபடுத்துவார்கள். இந்தப் பகுப்பு சொல்லியல் நோக்கு பற்றியது. தொடரியல் நோக்கில் உள்வட்டத் தொடர் (Endo-centric construction), வெளிவட்டத் தொடர் (Exo-centric construction) என்ற பாகுபாடும் செய்வார்கள். அகத்துறுப்பு என்பது ஆக்க ஒட்டாய் உள்வட்டத் தொடர் என்றும், புறத்துறுப்பு என்பது திரி ஒட்டாய் வெளிவட்டத் தொடர் என்றும் கொள்ளலாம்.

இந்த நிலையில் தொல்காப்பியர் 'வேற்றுமை' என்று குறிப்பிட்டதன் சிறப்பு சுட்டிக்காட்டத் தகுந்தது.

### 4.2. வேற்றுமை – சொல் விளக்கம்

பிற இடைச்சொற்களும் அவை ஏற்று வரும் சொற்களின் வடிவத்தை ஓரளவு வேறுபடுத்துவதுதான். கால விகுதி வரும்போது வினைச் சொற்களில் மிகச் சிலவே வினையடியின் வடிவம் மாறுபடும் வா, தா, நோ போன்ற சில சொற்களே அடிச்சொற்களின் வடிவம் மாறுபடுகின்றன.

| | | |
|---|---|---|
| வா | வந்து | வரு(கிறான்/வான்) |
| நோ | நொந்து | நோ(கிறான், வான்) |

ஆனால் மூவிடப் பெயர்களில் வேற்றுமை ஏற்ற வடிவங்கள் முழுவதும் மாறுபடுவது (யான் -> என், நாம் -> நம், நீ -> நின், நீயிர் -> நும் போன்றவை), அஃறிணைப் பெயர்கள் சாரியை பெற்று வேற்றுமை உருபு ஏற்பது: மரம் -> மரத்து, மரத்தை, வண்டு -> வண்டின், வண்டினை, நாடு -> நாட்டு போன்றவை) ஆகியவை சொல்லியல் காரணங்கள். தொல்காப்பியர் உருபு புணரியல் என்று எழுத்ததிகாரத்தில் ஓர் இயலே அமைத்துள்ளது அதன் முக்கியத்துவத்தைப் புலப்படுத்தும்.

'வேற்றுமைகள் பொருள்களை வேற்றுமை செய்யுமாறு' என்ற இளம்பூரணர் விளக்கம் உண்மையில் சொற்பொருள் அடிப்படையில் அமைந்தது. இதை ஒட்டிச் சேனாவரையர் கூறுவதாவது.

> செயப்படுபொருள் முதலாயினவாகப் பெயர்ப் பொருளை 1. வேறுபடுத்துணர்தலின் வேற்றுமை யாயின. 2. செயப்படுபொருள் முதலாயினவற்றின் வேறுபடுத்துப் பொருள் மாத்திரம் உணர்த்தலின் எழுவாயும் வேற்றுமை ஆயிற்று. 3. அல்லதூஉம் வேற்றுமை என்பது பன்மை பற்றிய வழக்கு ஆயிற்று' (வேற்றுமை 1).

என்பது அவர் விளக்கம். பொதுவாக இது சொல்லியல் நோக்கு உடையது. முதல் கருத்து வேற்றுமை என்பதற்கான காரணத்தை விளக்குவது. அடுத்த இரண்டு காரணங்களும் எழுவாய்க்கு உருபு இல்லாத போதும் வேற்றுமை என்று குறிப்பிட்ட காரணத்தை மாற்று முறையில் விளக்குவது. இங்குப் பெயர்ப்பொருளை வேறுபடுத்துவது என்பது செயப்படுபொருள், கருவி என்று

உருபுகள் சேருவதால் பொருள் வேறுபடுவதால் வேற்றுமை எனப்படும். இது முதல் கருத்து அப்படியானால் முதல் வேற்றுமைக்கு உருபு கிடையாது அல்லவா! அதை எப்படி வேற்றுமை என்று அழைப்பது என்ற கேள்வியை மனதில் எழுப்பிக்கொண்டு அதற்கு மாற்று முறையில் அடுத்த இரண்டு கருத்தும் சொல்லப்பட்டிருக்கின்றன. முதல் வேற்றுமைக்கு என உருபு இல்லாததால் பிற வேற்றுமையிலிருந்து மாறுபட்டிருப்பது/ வித்தியாசப்பட்டிருப்பது என்ற பொருளில் எழுவாயை வேற்றுமை என்று அழைக்கலாம் என்பது இரண்டாவது கருத்து. அப்படியானால் சேனாவரையர் வேற்றுமை என்பது இரண்டு பொருளில் (வேறுபடுத்துவது, வேறுபட்டிருப்பது) கையாண்டுள்ளது கவனிக்கத்தகுந்தது. அதனால் மாற்று வழியாக மூன்றாவது கருத்து தரப்பட்டுள்ளது. எட்டு வேற்றுமைகளில் ஏழு வேற்றுமைக்கு வேறுபடுத்தும் உருபு இருப்பது என்பது பெரும்பான்மை நோக்கியது. இந்தக் கருத்தை பொதுநிலையில் ஒத்துக்கொள்ளலாம் என்றாலும் அறிவியல் முறையில் ஒத்துக் கொள்ள முடியாது. மேலும் வேற்றுமை உருபு இல்லாமலும் பெயர்ச்சொல் இரண்டு, மூன்று, போன்ற வேற்றுமைப் பொருளைத் தொடரியல் நிலையில் உணர்த்த முடியும்.

'நிலம் கடந்தான் - நிலத்தைக் கடந்தான்
நின் பிரியலன் - நின்னைப் பிரிய மாட்டேன்
(இரண்டாம் வேற்றுமை)
கொடுமை நாணி - கொடுமைக்கு நாணி
(நாலாம் வேற்றுமை)
மரம் ஏறினான் - மரத்தில் ஏறினான்

முதலியவை அறிவியலில் ஒரு விதி அமைத்து, பின்னால் அதற்கு விலக்கு விதி இருப்பதை அறிந்தால் விலக்கு விதியாக வருவனவற்றையும் உள்ளடக்கிப் புதிதாக ஒரு விதி அமைக்க வேண்டும் என்பார்கள். சொல்லியல் நோக்கில் மொழியியலார் கூறும் சூனிய உருபு (Zero Morpheme) முதல் வேற்றுமைக்கு இருப்பதாகக் கூறி எட்டு வேற்றுமைக்கும் உருபு இருப்பதாகக் கொண்டு பொதுமைப்படுத்தலாம்.

சேனாவரையர் உரையில் இருந்த குறையை உணர்ந்து கொஞ்சம் மாறுபட்ட முறையில் தெய்வச்சிலையார் விளக்கம் கொடுத்துள்ளார்.

> 'பொருள்களை வேற்றுமைப்படுத்தினமையாற் பெற்ற பெயர். என்னை? வேறுபடுத்தியவாறு எனின்: ஒரு பொருளை ஒருகால் வினைமுதல் ஆக்கியும், ஒருகால் செயப்படுபொருள் ஆக்கியும், ஒருகால் கருவி ஆக்கியும், ஒருகால் ஏற்பது ஆக்கியும், ஒரு கால் நீங்க நிற்பது ஆக்கியும், ஒருகால் உடையது ஆக்கியும், ஒருகால் இடம் ஆக்கியும் இவ்வாறு வேறுபடுத்துவது என்க.'

என்ற தெய்வச்சிலையார் (வேற். 1) வாசகம் தொடரியல் நோக்கு உடையது. ஏனெனில் இங்கு உருபு பற்றிக் குறிப்பு இல்லை. அவரே 'வினையே வினைக்குறிப்பு அவ்விரு முதலில் தோன்றும்' என்ற சூத்திரத் தொடருக்கு (சொல் 69-ம் சூ. (555)) 'வினையும் வினைக்குறிப்பும் ஆகிய அவ்விரண்டு முதற்கண்ணும் தோன்றுவது' என்று பொழிப்புரை எழுதியதோடு

> "முதல்' என்பதனை வடநூலாசிரியர் காரகம் என்ப. அஃதாவது தொழிலை உண்டாக்குவது. அது பல் வகைத்து - செய்வானும், செயலும், செயப்படு பொருளும், கருவியும், கொள்வானும், பயனும், காலமும், இடனும் என'

என்று கூறி,

> 'காரகப் பொருண் மேல் வரும் வேற்றுமை எல்லாம் வினையான் முடியும் என்று கொள்க'.

என்ற விளக்கத்தில் வேற்றுமையை வடமொழிக் காரகம் என்ற கருத்தமைவோடு இணைப்பதைக் காணலாம். காரகம் என்பது வினைக்கும் பெயருக்குமுள்ள உறவைக் குறிப்பது. எனவே அவருடைய விளக்கம் தொடரியல் உறவு அடிப்படையில் அமைந்தது எனலாம். அடுத்துத் தொல்காப்பியர் என்ன பொருளில் கையாண்டுள்ளார் என்று பார்ப்போம்.

தொல்காப்பியர் மூன்றாம் வேற்றுமையின் பொருளாக வினைமுதலைக் குறிப்பிட்டுள்ளார்.

> மூன்றா குவதே
> ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
> வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே (557)

அகத்தியனால் தமிழ் உரைக்கப்பட்டது என்பது வினைமுதலுக்கு உரிய உதாரணம். அதாவது அகத்தியனால் என்பது இங்கு

மூன்றாம் வேற்றுமை உருபு ஏற்றிருந்தும் அகத்தியன் தமிழ் உரைத்தான் என்பதைப் புதை வாக்கியம் என்ற முறையில் அகத்தியன் 'வினைமுதல்' என்று கொள்ளப்பட்டிருக்கவேண்டும். அப்படியானால் சொல்லியல் அடிப்படையில் மூன்றாம் வேற்றுமை, காரக அடிப்படையில் வினைமுதல் என்று கொள்ளலாம். தொல்காப்பியர் முதல் வேற்றுமைக்கு உருபு இல்லை என்பதை அவர் வருணித்த விதம் சிறப்பானது. வேற்றுமை உருபுகளைச் சொல்லதிகாரத்தில் பட்டியலிடும் போது அதைப் பெயர் என்று குறிப்பிட்டுள்ளார்.

> அவைதாம்
> பெயர் ஐ ஒடு கு
> இன் அது கண் விளி என்னும் ஈற்ற (549)

என்று 'பெயர்' என்பதையே உருபு போல வருணித்துவிட்டு

> அவற்றுள்
> எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே (550)

என்று விளக்கும்போது சூனிய உருபு என்பதைப் புலப்படுத்தி விட்டார். அதே சமயத்தில் வேற்றுமைகளை வருணிக்கும்போது புதைநிலை வடிவத்தை மனதில் கொண்டே வருணித்துள்ளதையும் தொல்காப்பியத்தில் காணமுடிகிறது.

நாலாம் வேற்றுமை உருபின் பொருளாக 'அதுவாகு கிளவி' (560:2) என்ற தொடரைக் குறிப்பிட்டுள்ளார். அதற்கு உரையாசிரியர்கள் 'கடிசூத்திரத்துக்குப் பொன்' என்னும் உதாரணத்தைக் கொடுத்துள்ளார்கள். அப்படியானால் பொன் கடி சூத்திரம் ஆகும் என்ற வாக்கியமே 'கடிசூத்திரத்துக்குப் பொன்' என்ற தொடராக மாற்றம் பெற்றது என்று பொருள். இங்கு நிச்சயமாகக் காரகம் என்ற கருத்து புதைந்துள்ளது. 'செயப்படு பொருளைச் செய்தது போலக் கிளத்தல்' என்ற சூத்திரமும்' (731) அந்த உண்மையை வலியுறுத்தும். அதாவது தொல்காப்பியர் வேற்றுமை என்ற சொல்லை உருபு, காரகம் என்ற இரண்டு பொருளிலும் கையாண்டதாகவே கருதவேண்டும்.

### 4.3. உருபும், திணை–பால் கட்டுப்பாடும்

பெயர்ச் சொற்கள் திணை, பால், இடம், எண் என்ற இலக்கணக் கூறுகளை அடிப்படையாகக் கொண்டவை. தமிழில் வேற்றுமை பெயர்ச் சொல்லின் திணை பால் எண் இடத்துக்கு ஏற்ப மாறாது என்பது பெரும்பாலான உண்மையே. இரண்டு

இடத்தில் வேற்றுமை ஏற்கும் பெயரின் திணையை ஒட்டியும், ஓர் இடத்தில் வேற்றுமை ஏற்ற பெயரின் திணையை ஒட்டியும் மாறுபாடு இருப்பது சுட்டிக்காட்டத் தகுந்தது. இரண்டாம் வேற்றுமை உருபு உயர்திணையில் வருவது மட்டுமே கட்டாயம்; அஃறிணையில் வருவது கட்டாயம் இல்லை; உறழ்ச்சியாகவே வரும். தொல்காப்பியரும் எழுத்ததிகாரத் தொகை மரபில் இரண்டாம் வேற்றுமையின் சிறப்புப் பண்புகளைத் தொகுத்துக் கூறும்போது,

> உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்
> அஃறிணை விரவுப்பெயர்க்கு அவ்வியல் நிலையலும்
> *(157: 8-9)*

என்று விதந்து கூறியுள்ளார். மொழியியல் நோக்கில் உருபு மாறா விட்டாலும் அஃறிணையில் சூனிய மாற்றுருபு இருப்பதாகக் கொண்டால் உருபு மாறுபாடு இருப்பது தெளிவாகும்.

தொல்காப்பியர் ஏழாம் வேற்றுமைக்கு உரிய உருபாகக் கூறிய - 'கண்' சொல்லுருபாகக் கருதவேண்டியது. உண்மையில் அதைத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணம் அதுதான் உயர்திணையிலும் அஃறிணையிலும் வரும். -இல்/இன் என்ற உருபு அஃறிணையில் உயிரில் (Inanimate) பொருள்களோடு வர அஃறிணையில் உயிர்ப் பொருளோடும் உயர் திணையோடும் பன்மையில் மட்டுமே வரும்.

> போக்கற் கண்ணும் விடுத்தற்கண்ணும் *(985:2)*
> வேற்றுமைக் கண்ணும்
> மனைவிகண்
> அமரர்கண் முடியும் *(1027:1)*

ஆறாம் வேற்றுமை உருபு வருமொழியின் திணைக்கு ஏற்ப மாறுவதைத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். வேற்றுமை யியலில் 'அது' என்பதை உருபாகக் கூறிவிட்டு வருமொழி உயர்திணையாக இருக்குமானால் -கு ஆக மாறும் என்று வேற்றுமை மயங்கியலில் குறிப்பிட்டுள்ளார்.

> அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
> அதுவென் உருபுகெடக் குகரம் வருமே *(578)*

எனவே அது என்ற உருபு உயர்திணைச் சொல்லோடு சேரும்போது - கு என்ற மாற்று வடிவம் பெறும். மாட்டினது கன்று, நம்பிக்கு மகன் அதாவது வேற்றுமை உருபு வடிவத்தில் வருமொழிக்கு ஏற்ப மாறுபடுகிறது.

இன்னொரு சூத்திரத்தில் நாலாம் வேற்றுமைத் தொகையை விரிக்கும்போது ஆறாம் வேற்றுமை உருபுகொண்டும் விரிக்கலாம் என்பதால் இரண்டு வேற்றுமை உருபும் உறழ்ந்து வருவது உறுதியாகிறது. இங்கு உரையாசிரியர்கள் கொடுத்த உதாரணத்தில் நிலைமொழி உயர்திணையாக உள்ளது. நாகர் பலி -> நாகர்க்குப் பலி - நாகரது பலி, தேவர் பலி -> தேவர்க்குப் பலி - தேவரது பலி.

> குத் தொக வரூஉம் கொடை எதிர் கிளவி
> அப்பொருள் ஆறற்கு உரித்து மாகும் (583)

இன்று நாகர்கோயில் கிளைமொழி வழக்கில் உயர்திணையில் -கு என்பதே பயன்படுத்தப்படுகிறது (எனக்கு மகன்). ஆனால் அங்கு அஃறிணைக்கு நீட்டிக்கப்பட்டுள்ளதும் (எனக்குப் பேனா) குறிப்பிடத்தகுந்தது. இந்த வழக்கும் கிளைமொழி வழக்காகவே கொள்ளவேண்டும்.

### 4.4. சில கட்டுப்பாடுகள்

இங்குச் சுருக்கமாகக் குறிப்பிட வேண்டியது வேற்றுமை உருபு ஏற்பதில் திணை-பாலை ஒட்டி சில கட்டுப்பாடுகள் இருக்கின்றன என்பதும் அவை தமிழ்மொழிக்கே உரியவை என்பதும்தான்.

சில வினைகள் சில பெயருக்கே உரிய என்பது பொருள் நிலையில் எல்லா மொழிக்கும் பொதுவான கட்டுப்பாடு. அது தேர்வுக் கட்டுப்பாடு என்று அழைக்கப்படும். உதாரணமாக ஈன் என்பது பெண்பாலுக்கு உரிய வினை; மேய் என்பது விலங்குகளுக்கு உரிய வினை. செயப்படுபொருள் குன்றிய வினை, செயப்படுபொருள் குன்றா வினை என்ற வேறுபாடு எல்லா மொழிகளிலும் உண்டு. எனவே தொடரியல் ஆய்வில் வகைப்பாட்டு விதிகள் (Categorial rules) என்றும் அவைகளின் உள்வகைப்பாட்டு விதிகளும் (Subcategorisation) முக்கியமான தாகக் கருதப்படுகின்றன. இவை உலகப் பொதுவானவை.

### 4.5. வேற்றுமை எண்ணிக்கை

வேற்றுமை எண்ணிக்கையில் சொல்லியல், தொடரியல் ஆகிய இரண்டு நிலையிலும் வேறுபாடு உள்ளது.

தொல்காப்பியரே எழுத்ததிகாரத்தில் புணர்ச்சி வேற்றுமை, (வேற்றுமை) அல்வழி என்று இரண்டு வகை தொடரியல் உறவு உண்டு என்று முதலில் குறிப்பிட்டு (112) அதன் விளக்கமாக

ஐ ஒடு கு இன் அது கண் என்னும்
அவ்வாறு என்ப வேற்றுமை உருபே (113)

என்று ஆறு உருபுகளை மட்டுமே கூறினாலும் சொல்லதிகாரத்தில் வேற்றுமையியலில்

வேற்றுமை தாமே ஏழென மொழிப (546)

என்று ஏழு வகையும் அடுத்து

விளிகொள் வதன்கண் விளியோடு எட்டே (547)

என்று எட்டு வகையைக் குறிப்பிட்டு அவைகளின் விளக்கமாக

அவைதாம்
பெயர் ஐ ஒடு கு
இன் அது கண் விளி என்னும் ஈற்ற (548)

என்பார். எனவே எழுத்ததிகாரத்தில் கூறியது சொல்லியல் நோக்கு உடையது. முன் இயலில் குறிப்பிட்டபடி முதல் வேற்றுமைக்குத் தனி உருபு கிடையாது. எனவே அது எழுத்ததிகாரத்தில் குறிப்பிடப்படவில்லை. அந்த முரணில் சில கோட்பாடுகள் புதைந்துள்ளன என்பதும் குறிப்பிடத்தகுந்தது.

விளி வேற்றுமைக்கு என்று சில உருபு (ஏ போன்றவை) இருந்தும் அது பிற வேற்றுமைகளிலிருந்து பல விதத்தில் மாறுபடுகிறது. 1. பிற வேற்றுமைகளைப் போல விகுதிச் சேர்க்கையால் மட்டும் விளி வேற்றுமை அமைவதில்லை; கழிப்பு முறையாலும், கழிப்பும் சேர்க்கை முறையாலும், ஈற்றெழுத்து திரித்லாலும் விளி அமைகிறது.

| | | |
|---|---|---|
| அரசன் | அரச | ஈற்றெழுத்து மறைதல்-கழிப்பு முறை |
| வேந்தன் | வேந்தே | கழிப்பும் சேர்ப்பும் |
| கோன் | கோஒன் | அளபெடை மிகல் |
| மகள் | மகளே | சேர்க்கை |

மேலும் அண்மை விளி என்று இன்னொரு வகையும் உண்டு. எந்த மாற்றமும் இல்லாமல், சில பெயர்களை அண்மை விளிகளாகப் பயன்படுத்தமுடியும். எனவேதான் விளிக்குப் பொதுவான உருபு ஒன்றைத் தொல்காப்பியர் அமைக்கவும் இல்லை; விளியை எழுத்ததிகாரத்தில் ஒரு வேற்றுமையாகக் குறிப்பிடவும் இல்லை. அதே சமயத்தில்

1. மூவிடப் பெயர்களான யான், நான், யாம், நீ, நீயிர், தான், தாம், அவன், அவள், அவர், அது, அவை ஆகியவை விளி ஏற்கா.
2. விளி வேற்றுமை பிற வேற்றுமைகளைப் போல சாரியை ஏற்காமலே வரும்.

மரம்/மரத்து என்று (அ)த்துச் சாரியை ஏற்ற பின் இரண்டாம் வேற்றுமை ஏற்க (மரத்தை, மரத்தால்) விளி பெயரோடு நேரே சேரும் (மரமே). தனிக் கிளவியாகவும் செயல்படும் ஆகிய காரணங்களால் சொல்லதிகாரத்தில் பிற வேற்றுமை களோடு விளி வேற்றுமையைச் சேர்த்து வருணிக்காமல் தொல் காப்பியர் தனி இயலாக அமைத்துள்ளார்.

தொல்காப்பியர் மூன்றாம் வேற்றுமை உருபாக ஒடு என்பதைக் குறிப்பிட்டு உடன்நிகழ்ச்சிப் பொருளை விளக்கி யிருந்தும் மூன்றாம் வேற்றுமைப் பொருள்களில் ஒன்றாகக் குறிப்பிடவில்லை. இலக்கண உலகிலும் மொழியியல் உலகிலும் மூன்றாம் வேற்றுமையில் கருவிப் பொருளிலும் உடனிகழ்ச்சிப் பொருளையும் ஒன்றாகச் சேர்த்துக் கூறியதுபற்றி விவாதம் நடைபெற்றுள்ளது.

இலக்கண உலகில் சேனாவரையரே உருபு அடிப்படையில் -ஆன், -ஒடு என்ற இரண்டையும் இரண்டு வேற்றுமையாகக் கொள்ள வேண்டும். ஏன் தொல்காப்பியர் அப்படிக் கொள்ளவில்லை என்ற கேள்வி கேட்டு ஒரு வேற்றுமையாகத் தொல்காப்பியர் கொண்டது சரி என்று வாதிட்டுள்ளார்.

> 'ஒடுவும் ஆனும் இரண்டு வேற்றுமை ஆகற்பால எனின்; அற்றன்று வேற்றுமை மயக்கமாவது ஒரு வேற்றுமையது ஒரு பொருட்கண்ணாக, சில பொருட் கண்ணாக ஏனை வேற்றுமையும் சேறல் அன்றே! அவ்வாறு அன்றிச் சிறிது ஒழித்து எல்லாப் பொருட்கண்ணும் இரண்டு உருபும் சேறலானும் வடநூலுள் பொருள் வேற்றுமையான் அல்லது விளிக்கு உருபு வேற்றுமையான் ஓதப்படாமையானும் ஈண்டும் எல்லா ஆசிரியரும் ஒரு வேற்றுமையாகவே ஓதினார் என்க'

என்பது சேனாவரையர் வாசகம். (வேற்றுமை. 13) அதாவது உடனிகழ்ச்சிப் பொருளுக்கு உரியதாகக் கருதப்படும் - ஒடு

கருவிப் பொருளிலிலும் கருவிப் பொருளுக்கு உரியதாகக் கருதப்படும் -ஆல்/ஆன் உடனிகழ்ச்சிப் பொருளிலிலும் பெரும்பான்மையும் வந்து சிறுபான்மையே மாறுபடுகின்றன. என்பது அவர் வாதம். சங்கத் தமிழைப் பொறுத்தவரையில் அது உண்மையே. அவர் கருத்துப்படி வடமொழியில் உடனிகழ்ச்சியும் கருவியும் ஒரே விகுதியால் உணர்த்தப்படுவதும் ஒரு காரணம் ஆகும்.

**-ஒடு**

உடனிகழ்ச்சி:

| | |
|---|---|
| மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல் | - தொல். 15 |
| புலியொடு பொருத ...... யானை | - நற். 65:5 |
| ஆயமொடு ஓரை ஆடாது | - நற். 68:1 |
| நின்னொடு வாரார் | - பதிற்.79:9 |

கருவி:

| | |
|---|---|
| நாவாய் காலொடு (காற்றால்) கரை சேர | - பத்து. 6:83 |
| கருவிளை மலர் வாடையொடு (வாடைக் காற்றால்) துயல்வர | - நற். 262:2 |

அப்படியே -ஆல்/ஆன் கருவி, உடனிகழ்ச்சி ஆகிய இரண்டு பொருளிலிலும் வந்துள்ளது.

கருவி:

| | |
|---|---|
| மருப்பினான் குத்தி | - கலி 106:20 |
| கையால் அளத்தல் | - பரி. 12:43 |
| வில்லினால் எய்தலோ இலரே | - கலி. 137:11 |

உடனிகழ்ச்சி:

| | |
|---|---|
| களிறு தூங்குகையான் ஓங்கு நடைய | - புறம். 22:1 |
| உளனே தோழி.... என் புலம்பினானே | - குறு. 133:5 |

கால்டுவெல் (1856: 278) உடன்பாடு, கருவி ஆகிய இரண்டு பொருளையும் ஒரு வேற்றுமையில் சேர்த்தது பொருந்தாது என்றும் அவை தனித்தனி வேற்றுமையாகக் கருதப்பட வேண்டும் என்றும் வடமொழிச் செல்வாக்கினால் ஒன்றாகக் கருதப்பட்டு விட்டது என்றும் கூறியுள்ளார். சுப்பிரமணிய சாஸ்திரி (1945: 76, 83) அந்த இரண்டு பொருளும் ஒரே உருபால் உணர்த்தப்

படுவதால் ஒரு வேற்றுமையாகக் கொண்டது சரியே என்று குறிப்பிட்டுள்ளார். ஆனாலும் தொடரியல் நோக்கில் இரண்டு பொருளும் வேறுவேறு மாற்றங்கள் (Transformations) பெறுவதால் தனித் தனி வேற்றுமையாகக் கருதவேண்டும் என்று இன்று வற்புறுத்தப்படுகிறது.

கருவி வேற்றுமையாக வருவது செயப்பாட்டுவினை வாக்கியமாக வரலாம். முருகன் கண்ணனால் கொல்லப்பட்டான் என்பதைத் தொல்காப்பியர் வினை முதல் (கருத்தா) என்று கருதுவதற்குக் காரணம் அதன் புதைநிலை வாக்கியத்தில் கண்ணனால் என்று மூன்றாம் வேற்றுமை ஏற்ற பெயர் கண்ணன் முருகனைக் கொன்றான் என்று கருத்தாவாக அமைவதுதான். செயப்படுபொருள் குன்றிய வினையாக இருந்தால் அதையும் எழுவாயாக மாற்றமுடியும். காலால் நடந்தான் = கால் நடந்தது. ஆனால் கண்ணன் முருகனொடு வந்தான் என்பதை முருகன் வந்தான் என்று சொல்ல முடியுமானாலும் பொருள் குன்றக் கூறலாகக் கருதப்படும். கண்ணனும் முருகனும் வந்தார்கள் என்னும்போது ஓரளவு பொருள் மாறுபடவில்லை என்றாலும் இரண்டு வாக்கியத்துக்கும் சிறிது பொருள் வேறுபாடு உண்டு. முன்னதில் கண்ணனும் முருகனும் அதே தொழிலைச் செய்தாலும் முருகனே சிறப்புக்கு உரியவனாகக் கருதப்படுவான். இதைத்தான் தொல்காப்பியர் 'ஒரு வினை ஒடுச் சொல் உயர்பின் வழித்தே' (575) என்று சுட்டிக் காட்டியுள்ளார். ஒரே உருபு இரண்டு பொருளையும் உணர்த்தினாலும் அவைகளின் தொடரியல் மாற்றங்கள் அவைகளைத் தனித்தனி வேற்றுமையாகக் கொள்வது சிறப்பானது என்பதைப் புலப்படுத்துகின்றன.

இடைக்காலத்தில் ஐந்தாம் வேற்றுமை நீங்கல் பொருளை உணர்த்துவதே முக்கியமானதாகக் கொள்ளப்பட்டது. அதன் அடிப்படையில் ஐந்தாம் வேற்றுமையைத் தனி வேற்றுமையாகக் கருதாமல் ஏழாம் வேற்றுமையின் பகுதியாகக் கருதலாம் என்பது கால்டுவெல் கருத்து. சங்க காலத்தில் அது ஒப்புப் பொருளில் பெரும்பான்மையும் வருவதால் அதைத் தனி வேற்றுமையாகவே கருத வேண்டும்.

### 4.6. வேற்றுமையின் பெயர்கள்

தொல்காப்பியத்தில் வேற்றுமை மூன்று வகையில் பெயரிடும் முறை காணப்படுகிறது. 1. உருபு அடிப்படை. அது ஒரு மொழிக்கே உரியது. இரண்டாவது எண்ணால் வரிசைப்

படுத்திக் கூறுவது. இது ஓரளவுக்குப் பொதுமுறை. மூன்றாவது பொருள் அடிப்படை. அது உலகப் பொதுமையானது.

தொல்காப்பியர் உருபு அடிப்படையையே அதிகம் பின்பற்றியுள்ளார். வேற்றுமையியலில் உருபு அடிப்படையில் பட்டியல் காட்டியுள்ளார்.

> அவைதாம்
> பெயர் ஐ ஒடு கு
> இன் அது கண் விளி என்னும் ஈற்ற (548)

என்று கூறியதோடு ஒவ்வொரு வேற்றுமையையும் 'ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி' (555), 'ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி' (557:2) என்று ஏழாம் வேற்றுமை வரைக்கும் குறிப்பிட்டுள்ளார். அப்படியே உருபு உடைய ஆறு வேற்றுமைகளுக்கும் நேரடியாக எண் கொடுத்துள்ளார்'.

> இரண்டாகுவதே
> ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி

என்பது போல அடுத்து ஆறு வேற்றுமையையும் (மூன்று முதல் ஏழு) எண்ணால் சுட்டிக்காட்டியுள்ளார். அந்த முறையே தொல்காப்பியர் வேற்றுமை மயங்கியலில் பயன்படுத்தியுள்ளார்.

> மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய (576)
>
> இரண்டன் மருங்கின் நோக்கல் நோக்கம் (577)
>
> ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமை (582)
>
> அச்சக் கிளவிக்கு ஐந்தும் இரண்டும் (584)

தொல்காப்பியர் உருபு, எண் என்ற இரண்டு முறையையும் கையாண்டுள்ளார்.

> குத்தொக வரூஉம் கொடைஎதிர் கிளவி
> அப்பொருள் ஆறற்கு உரித்து மாகும். (583)

வேறு பல இடங்களில் உருபு அடிப்படையிலேயே வேற்றுமை மயங்கியலில் குறிப்பிட்டுள்ளார். அதற்கு முக்கியக் காரணம் அவருடைய யாப்பு முறைதான் என்று எண்ண வேண்டி யிருக்கிறது. இருந்தாலும் எண் அடிப்படைக்கு ஒரு காரணம் இலக்கண வருணனை உத்தி. கருவி மொழியாகப் பயன்படுத்து வதற்காக இருக்கலாம் என்று எண்ண வேண்டியிருக்கிறது.

எண் அடிப்படைக்கு ஒரு காரணம் இருப்பதாகவே தெய்வச்சிலையார் கருதுகிறார்.

> ‘பெயரை முதல் வேற்றுமை என்னாது எட்டு வேற்றுமையுள்ளும் யாதானும் ஒன்றை முதல் வேற்றுமை எனினும் அமையும் எனின்’

என்று கேள்வியை எழுப்பிக்கொண்டு பொதுவாகவும் உதாரணத்தோடும் விளக்கியுள்ளார்.

> ‘ஒருவன் ஒன்றை ஒன்றானே இயற்றி ஒருவற்குக் கொடுப்ப அவன் அதனை அவனினின்றும் தனது ஆக்கி ஓரிடத்து வைத்தான் கொற்றா என்ற வழி முதல் வேற்றுமையாகி இம்முறையே கிடத்தலின் அமையாது என்க’

என்ற தெய்வச்சிலையார் வாசகத்தில் ஒரு வகையான வினையை மனதில் கொண்டு விளக்கப்பட்டுள்ளது. ஆனாலும், இங்கு வாக்கிய அமைப்பில் செயப்படுபொருளுக்கும், கருவிக்கும் கருத்தாவே முதலில் இருப்பதால் ‘முருகன் மரத்தைக் கத்தியால் வெட்டினான்’ முதல் வேற்றுமை என்பது அவர் கருத்து. அதே சமயத்தில் வழக்கில் முதல் வேற்றுமை வாக்கியத்தின் இறுதியிலும் வரும் என்பதை உணர்ந்த தெய்வச்சிலையார் அப்படிப்பட்ட வாக்கியம் ஒன்றை எடுத்துக்காட்டி விளக்கம் கொடுத்துள்ளார்.

> ‘யாற்றினது கரைக்கண் நின்ற மரத்தை அறச்சாலை இயற்றுதற்கு ஊரினின்றும் வந்து மழுவினானே வெட்டினான் சாத்தன் என்ற வழி எழுவாயாகிய பெயர் ஏழாவதுமாய் நின்றதால் எனின் சொல்லுவான் குறிப்பினான் முதல் வேற்றுமை ஆயிற்று என்க’

என்ற அவரது விளக்கம் வாக்கியத்தில் முதல் வேற்றுமை வாக்கியத்தில் முதலில் வரவேண்டும் என்றும் இங்குக் கடைசியில் வந்தாலும் சொல்லுவான் குறிப்பினால் முதலில் வந்ததாகக் கொள்ளவேண்டும் என்றும் அவர் கருதுவது தெளிவாகிறது. இங்கும் உண்மையில் சாத்தனே வினைமுதல் என்ற முறையில் வாக்கியத்தில் எங்கு வந்தாலும் அதுதான் வேற்றுமை என்று வாதிடுவதே சிறப்பானது. அடுத்து பொதுநிலையில் பின் வருமாறு வாதிட்டுள்ளார்.

'யாதானும் ஒரு தொழிலும் செய்வான் உள்வழி அல்லது நிகழாமையின் அது செய்து முடிக்கும் கருத்தா முன்வைக்கப்பட்டான் அவன் ஒரு பொருளைச் செய்து முடிக்குங்கால் செய்யத்தகுவது இதுவெனக் குறிக்கவேண்டுதலின். செயப்படு பொருள் இரண்டாவது ஆயிற்று. அவ்வாறு அப் பொருளைச் செய்து முடிக்குங்கால் அதற்காங் கருவி தேடுமாதலின் அக்கருவி மூன்றாவது ஆயிற்று. அவ்வாறு செய்து முடித்த பொருளைத் தான் பயன்கோடலே அன்றிப் பிறர்க்கும் கொடுக்கும் ஆதலின் அதனை ஏற்று நிற்பது நான்காவது ஆயிற்று. அவ்வாறு கொடுப்புழி அவன் கையினின்றும் அப்பொருள் நீங்கி நிற்பது ஐந்தாவது ஆயிற்று. அவ்வாறு நீங்கின பொருளைத் தனது என்று கிழமை செய்தலின் அக்கிழமை ஆறாவது ஆயிற்று. ஈண்டுக் கூறப்பட்ட எல்லாவற்றிற்கும் இடமும் காலமும் பொதுவாகி நிற்றலின் அவை ஏழாவது ஆயின. இவையிற்றோடு ஒத்த இயல்பிற்று அன்றி எதிர் முகம் ஆக்குதற் பொருட்டு ஆகலின் விளி என்பது எல்லாவற்றிலும் பிற் கூறப்பட்டது. அஃதேல் ஆறாவதாகிய கிழமை கொண்டான் கண்ணாதலே அன்றிச் செய்தான்கண் இயையாதோ எனின் தோற்றுவித்தாற்குக் கிழமை சொல்லாமலும் பெறும், அதனைக் கொண்டாற்கே கிழமை கூற வேண்டுவது என்க.'

என்பது அவரது வாசகம் (இது). செயல் நிகழ்வின் தருக்க ரீதியான வரிசை அடிப்படையில் அமைந்த விளக்கம். இங்கு ஐந்தாம் வேற்றுமை நீங்கல் என்று மட்டும் பொருள் கொண்டிருப்பது இடைக்காலத் தமிழ் வழக்கை ஒட்டியது. தொல்காப்பியருக்கு ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருள் உடையது. ஆறாவது வேற்றுமையையும் வினை அடிப்படையில் விளக்கியதால் கொண்டவன், செய்தவன் என்று இரண்டு வகையில் கொடுக்கவேண்டியதாயிற்று. ஏழாம் வேற்றுமையைப் பொறுத்த வரையில் அவருடைய விளக்கம் இன்னொரு உண்மையும் புலப்படுத்துகிறது. அதாவது எல்லா வினைகளுக்கும் பொது என்று கூறலின் பிற வேற்றுமைகள் எல்லா வினைகளுக்கும் உரியவை அல்ல. உதாரணமாக, செயப்படுபொருள் குன்றா

வினைகளே இரண்டாம் வேற்றுமை ஏற்கும். வெட்டு, திற, அறு, எழுது போன்ற வினைகளே செயப்படுபொருள் குன்றா வினைகளாலும், கருவி வேற்றுமை ஏற்கும். ஆனால் படி, பார் போன்ற செயப்படுபொருள் குன்றா வினைகளானாலும் கருவி வேற்றுமை ஏற்கா. கொடு, வில், வாங்கு போன்ற வினைகள் செயப்படுபொருள் குன்றா வினைகள் நாலாம் வேற்றுமை ஏற்கும். செல், வா போன்ற வினைகள் செயப்படுபொருள் குன்றிய வினைகள் நாலாம் வேற்றுமை ஏற்கும். எனவே வேற்றுமை ஆய்வில் வினைகளின் பாகுபாடு முக்கியமானதாகக் கருதப்படுகிறது.

தொல்காப்பியர் விளி வேற்றுமையை மட்டும் பொருளால் குறிப்பிட்டுள்ளார். ஆனால் பிற வேற்றுமைகளைப் பொருள் அடிப்படையிலேயே வேற்றுமை மயங்கியலில் தொழில் முதனிலைகளை விவரிக்கும்போது குறிப்பிட்டுள்ளார். அந்த முறையை வேறு சில இடங்களிலும் கையாண்டுள்ளார்.

செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழில்படக் கிளத்தலும் வழக்கிலும் மரபே (731)

அதன் அடிப்படை தமிழிலும் காணப்பட்டாலும் எழுவாய், விளி என்று முதல், எட்டு ஆகிய இரண்டு வேற்றுமைகளைப் பொருள் அடிப்படையில் குறிப்பிடுவது போல ஏனைய வேற்றுமைகளைப் பொருள் அடிப்படையில் அழைக்கும் மரபு தமிழில் வேர் கொள்ளவில்லை. செயப்படுபொருள், கருவி, கொடை, ஒப்பு, உடைமை, இடம், என்று அழைப்பதே அந்த மரபு. தொல்காப்பியர் சில வேற்றுமைகளைப் பொருள் அடிப்படையில் சில இடங்களில் குறிப்பிட்டுள்ளார்.

### 4.7. வேற்றுமை வருணனை

தொல்காப்பியர் ஒவ்வொரு வேற்றுமைக்கும் உரிய உருபுகளைச் சுட்டிக்காட்டி அவைகளின் தொடரியல் பண்புகளைப் பல முறையில் வருணித்துள்ளார். 1. அவை ஏற்கும் வினைகளைத் தொகுத்துக் கூறுவது. இரண்டு, ஐந்து, ஆறு வேற்றுமைகளில் பெரும்பான்மையும் அவை ஏற்று வரும் வினைகளைப் பட்டியல் இட்டும் தொகுத்தும் கூறியுள்ளது.

2. அ) தனி வினைகளாகவும்

காப்பு, ஒப்பு 2ஆம் வேற்றுமை உருபு
நன்மை, தீமை 5ஆம் வேற்றுமை உருபு

ஆ) தொகுத்தும்
பொருட்புலன்

வண்ணம், வடிவு அளவு - 5ஆம் வேற்றுமை உருபு
முறைமை, கருவி - 6ஆம் வேற்றுமை உருபு

3. தொடராகவும் வாக்கியமாகவும் தனிச் சொல்லைத் தொடரில் அமைத்தும்

அதனொடு மயங்கல் - 3ஆம் வேற்றுமை உருபு
அதற்கு உடம்படல் - 4ஆம் வேற்றுமை உருபு

4. பொதுமைப்படுத்தியும்

அதனொடு இயைந்த
ஒரு வினைக் கிளவி - 3ஆம் வேற்றுமை உருபு
அதற்கு யாப்புடைமையின்- 4ஆம் வேற்றுமை உருபு
இதனின் இற்று இது - 5ஆம் வேற்றுமை உருபு

விளக்கியுள்ளார். முதல் வேற்றுமை முன் இயலில் விளக்கப்பட்டுள்ளது.

4.8. இரண்டாம் வேற்றுமை

> இரண்டாகுவதே
> ஐ எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
> எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்பு
> அவ்விரு முதலின் தோன்று மதுவே (555)

இரண்டாவது வேற்றுமைக்கு உரிய உருபு -ஐ என்று அடையாளப்படுத்தி அது (தெரிநிலை) வினை, குறிப்பு வினை ஆகியவைகளின் முதலாகத் தோன்றும் என்று கூறி அப்படிப் பட்ட வினைகளை அடுத்த சூத்திரத்தில் பட்டியலிட்டுள்ளார்.

இந்தச் சூத்திரம் பிற வேற்றுமை பற்றிய சூத்திரத்திலிருந்து மாறுபட்டது என்பதைக் கவனித்து அதைக் கேள்வியாக்கிக் கல்லாடர் பதில் சொல்லியுள்ளார்.

> 'மற்றைய வேற்றுமை போல் 1. இதுபடும் பொருண்மை உணர்த்தாது முடிபு உணர்த்தியது என்னை? 2. இம்முடிபு ஏனை வேற்றுமைக்கும் உளவால் எனின், 3. ஈண்டு முடிபு அன்று உணர்த்தியது. வினை, வினைக்குறிப்பின் மேலிட்டு அதுபடும் செயப்படுபொருளை உணர்த்திற்றாக உரைக்கப்படும்'.

என்பது அவர் வாசகம். இங்கு 1. இரண்டாம் வேற்றுமைக்கு உரிய பொதுப் பொருண்மை உணர்த்தாமல் அது கொண்டு முடியும் சொற்கள் உணர்த்தப்பட்டிருப்பது. 2. அது (வினை கொண்டு முடிவது) எல்லா வேற்றுமைக்கும் பொதுவானது. எனவே கல்லாடர் தொல்காப்பியர் வருணனையில் இருந்த மாறுபாட்டைப் புலப்படுத்தி உரையாசிரியர் என்ற முறையில் நாம் எப்படிப் பொருள் கொள்ளவேண்டும் என்று விளக்கி விட்டார்.

இங்குத் தெய்வச்சிலையார் ஒழிந்த எல்லா உரையாசிரியர்களும் 'வினையே வினைக்குறிப்பு' என்ற தொடரை முறையே தெரிநிலை வினைகளையும் குறிப்பு வினைகளையும் குறிப்பதாகவே கொண்டுள்ளார்கள். அவர்களில் சேனாவரையர் தான் குறிப்புவினை எப்படிச் செயப்படுபொருள் குன்றா வினையாகும் என்ற கேள்வி எழுவதை உணர்ந்து சமாதானம் சொல்லியுள்ளார் அது பொருத்தமாக இல்லை.

பொதுவாக ஆறாம் வேற்றுமையும் சில நிலைகளில் நாலாம் வேற்றுமையும் பெயர் ஏற்றுவரும்; ஏனைய வினை ஏற்று வரும். எனவே சேனாவரையர்

> 'வினையே வினைக்குறிப்பு' என்றாராயினும் அவற்றுள் செயப்படுபொருளே கொள்ளப்படும்'

என்ற கருத்து மூலம் செயப்படுபொருள் ஏற்கிற வினைகள்/ செயப்படுபொருள் குன்றா வினைகள் மட்டுமே கொள்ளப்படும். என்று வலியுறுத்தியுள்ளார். அப்படியானால் வினைக்குறிப்பு எப்படிச் செயப்படுபொருள் குன்றா வினைகளில் அடங்கும் என்ற கேள்வி எழுகிறது. அந்தக் கேள்வியையும் வேறுவிதமாகக் கேட்டுப் பதில் சொல்லியுள்ளார்.

> 'செயப்படுபொருளாவது வினைமுதல் தொழில் பயன் உறுவது ஆதலால் குழை முதலாயவற்றிற்கு அவ் விலக்கணம் ஏலாமையில் செயப்படுபொருண்மையால் வினைக்குறிப்பு எனல் வேண்டா எனின், அற்றன்று: 'அம்முக்காலமும் குறிப்பொடும் கொள்ளும் மெய்ந்நிலை உடைய' (685) என்றார். ஆகலின் குறிப்புச் சொல் காலமொடு தோன்றித் தொழில் சொல்லாதலும் குழை முதலாயின தொழில் பயனுறுதலும் ஆசிரியர் துணிபு ஆகலின் அவையும் செயப்படுபொருளாம் என்பது'

இங்கு அவர் கருதுவது போல நேற்றுக் குழையை உடையன் என்று இறந்த காலத்தில் அமைத்துக் கூறினாலும் உடைமைச் செயலால் குழை பெறுகிறது என்ற முறையில் தொழிலின் பயன் என்பது அவருடைய விளக்கம்.

நச்சினார்க்கினியர் குழையை உடையன் என்பதைப் பின்வருமாறு விளக்கியுள்ளார்.

> 'குழையை உடையன் என்புழி உடையன் எனக் கருதுதல் வினை; அக்கருத்தை நிகழ்த்துகின்றான் வினைமுதல்; அக்குழை அவன் கருத்து நிகழ்த்தப் படும் பொருளாய்க் கிடக்கின்ற தன்மை செயப்படு பொருள்; இவ்வாறே ஒழிந்தனவும் குறிப்பாற் காண்க'

என்பது அவரது விளக்கம் உண்மையில் குழை என்பது செயப்படுபொருள் இல்லை என்பது அதைச் செயப்பாட்டு வாக்கியத்தின் எழுவாயாக மாற்ற முடியாது. மேலும் தொல்காப்பியர் உடைமை வினையை இரண்டாம் வேற்றுமை ஏற்கும் பட்டியல் கூறும் அடுத்த சூத்திரத்தில் குறிப்பிடவில்லை.

> 'அவ்விரு முதலில் தோன்றும்' என்றமையான் முதலாதற்கும் வேற்றுமைப் பொருளாதற்கும், எற்பன அவையே ஆகலின் என்னை? அவை முதலாதற்கு ஏற்றவாறு எனின்; செயப்படுபொருள் முதலாயின தொழிற்குக் காரணம் ஆதலானும் 'ஆயெட்டென்ப தொழில் முதனிலையே' என அவற்றை முதனிலை என்று கூறுப ஆகலானும் என்பது'

என்பது அவரது வாசகம்.

அவர்கள் விளக்கம் பொருத்தமாக இல்லை என்று கொண்டே தெய்வச்சிலையார் புதிய விளக்கம் கொடுத்திருக்க வேண்டும். பிறர் எல்லாம் வினை, வினைக்குறிப்பு என்பவைகளைக் கலைச்சொற்களாக முறையே தெரிநிலை வினை, குறிப்பு வினை என்று எடுத்துக்கொள்ள அவர் பொதுச் சொற்களாகக் கொண்டுள்ளார்.

'வினை என்பது செயல். வினைக் குறிப்பு என்பது அவ் வினையினாற் குறிக்கப்பட்ட பொருள். அஃதாவது செயப்படு பொருள்' என்பது தெய்வச்சிலையாரின் வாசகம். இதன் படி

வினையும் செயப்படுபொருளும் சேர்ந்து வருவதைக் குறிப்பதாக அவர் கருதுகிறார் என்று பொருள். அடுத்த சூத்திரத்தில் உள்ள முதல் வினையான காப்பு என்பதை விளக்கும்போது

> 'காப்பு என்பது காவல் தொழிலையும் காக்கப்படும் பொருளையும் உணர்த்தும். ஏனையவும், தொழிலும், பொருளும் உணர்த்துமாறு அறிந்து கொள்க'

என்று அவர் கூறுவது. இரண்டாம் வேற்றுமை ஏற்ற பெயரும் அதற்கு உரிய வினைச் சொல்லும் அடங்கும் என்பது தெளிவாகி விடுகிறது.

> '....அவற்றுள் (தொழில் முதனிலைகளுள்) இது செயப்படுபொருள் மேலும் செயல் மேல் வரும். குடத்தை வனைந்தான் என்பது செயப்படுபொருள் மேல் வந்தது. வனைதலைச் செய்தான் என்பது செயல் மேல் வந்தது'

என்று 69ஆம் சூத்திரத்தில் குறிப்பிட்டுள்ளார் (555). அடுத்த சூத்திரத்தில்

> 'ஊரைக் காக்கும் என்பது காக்கப்படும் பொருள் மேல் வந்தது. காவலைக் காக்கும் என்பது காவல் தொழில் மேல் வந்தது'

என்ற அவருடைய கூடுதல் விளக்கத்தில் தொழில் முதனிலைகளில் ஒன்றான 'செயல்' என்பதால் வினை ஏற்கும்போது இரண்டாம் வேற்றுமை உருபு ஏற்று வரும் பெயரும் வரும் என்று தெளிவுபடுத்தியுள்ளார்.

பிற உரையாசிரியர்கள் குறிப்பிட்ட குறிப்பு வினை பற்றிய தெய்வச்சிலையாரின் விளக்கம் மாற்றிலக்கண உண்மையை/ அடிப்படையை உணர்த்திருந்ததைப் புலப்படுத்துகிறது.

> 'குழையை உடையன், வலியை உடையன், கல்வியை உடையன், காவலை உடையன் எனவும் ஆறாம் வேற்றுமைப் பொருள் மொழி மாற்றாகி வருவனவும் கொள்க'

என்ற அவருடைய விளக்கம். இரண்டாம் வேற்றுமை புறநிலையில் வந்ததே தவிரப் புதைநிலையில் வந்தது அல்ல என்பதைத் தெளிவுபடுத்தும். மொழி மாற்றாகி வருதல் என்பது இன்றைய மொழியியலார் கூறும் மொழி மாற்றம்

(Transformation) தான். உண்மையில் வேற்றுமையியல் புதைநிலைக்கே தொல்காப்பியர் முக்கியத்துவம் கொடுத்துள்ளார். மூன்றாம் வேற்றுமை செயப்பாட்டு வினை வாக்கியத்தில் வந்ததை 'வினைமுதல்' என்று கூறியதும் அந்த உண்மையை வலியுறுத்தும் பிற வேற்றுமைகளும் புறநிலையில் இரண்டாம் வேற்றுமை பெற்று வருவதையும் தெய்வச்சிலையார் இங்குச் சுட்டிக் காட்டியுள்ளார்.

> 'செயப்படுபொருளே அன்றி அதற்குக் காரணமாகிய பொருள் மேலும் பொருளினது உறுப்பின் மேலும் வருவனவும் கொள்க. மண்ணை வனைந்தான், நூலை நெய்தான், இவை காரணம்; விளிம்பை நெய்தான் - உறுப்பு; சுவரில் எழுதினான் - இடம் பிறவும் அன்ன'

என்பது அவருடைய வாசகம்.அந்த உண்மையைத் தெளிவுபடுத்தும். இங்கு மண்ணால் குடத்தைத் திகிரியால் வனைந்தான் என்ற வாக்கியமும் உண்டு. எனவே சிவஞான முனிவர் மண் என்பது முதல் காரணம் என்றும் திகிரி என்பது துணைக் காரணம் என்றும் வேறுபடுத்துவார் (நன்னூல் 297). எனவே, வனை என்பது நாலு தொழில் முதனிலை உடைய வினை (Four Place predicate) என்று பொருள்.

அப்படியே ஒருவன் நூலால் வேட்டியைத் தறியில் நெய்தான் என்பதே புதைநிலை அல்லது முழு வாக்கியம். அதாவது நெய் என்பதும் நாலு தொழில் முதனிலை உடைய வினை என்று பொருள்.

அந்த வாக்கியங்களை மண்ணைக் குடமாக/பொம்மையாக வனைந்தான், நூலை வேட்டியாக/புடவையாக நெய்தான் என்றும் சொல்லலாம். எனவே 'செயப்படுபொருளே அன்றி அதற்குக் காரணமான பொருள் மேலும்.. வருவன' என்ற தெய்வச்சிலையார் வாசகம் புதைநிலை செயப்படுபொருள் புறநிலையில் இல்லாதபோது மூன்றாம் வேற்றுமை இரண்டாம் வேற்றுமையாக வரும் என்ற உண்மையைப் புலப்படுத்துகிறது. அது செயப்படுபொருள், கருவி, கருத்தா, இடம் ஆகிய நாலு தொழில் முதனிலை உடைய வினைகளுக்கே பொருந்தும்.

அது உலகப் பெதுமையானது. ஆங்கிலத்தில் இப்படி வரும்.

**John opened the door with the key.** (ஜான் சாவியால் கதவைத் திறந்தான்) இங்கு John என்பது எழுவாய், the door

செயப்படுபொருள், with the key என்பது கருவி அந்த வாக்கியத்தை John used the key to open the door என்னும்போது the key என்பது செயப்படுபொருளாகவும் The key opened the door என்னும்போது the key என்பது எழுவாயாகவும் அமைவதை ஃபில்மோர் (Fillmore 1970: 25) சுட்டிக்காட்டியுள்ளார்.

தெய்வச்சிலையார் காட்டிய இரண்டு உதாரணங்களும் (மண்ணை வனைந்தான், நூலை நெய்தான், இவை காரணம்; முதல் காரணத்துள் அடங்கும் அவைகளில் செயப்படுபொருள் இல்லாத போது முதல் காரணம் இரண்டாம் வேற்றுமை பெற்று வரும் என்று பொதுமைப்படுத்தலாம். வனை, நெய் வெறும் செயப்படுபொருள் ஆகிய குறைந்தபட்ச மூன்று தொழில் முதனிலைகள் உடையவை என்பதையும் அவை எந்த நிலையில் ஒன்று மற்றொன்றாக மாறிவரும் என்பதையும் தெய்வச்சிலையார் விளக்கம் புலப்படுத்துகிறது.

'விளிம்பை நெய்தான் - உறுப்பு' என்பது தெய்வச்சிலையார் விளக்கம். இங்கு விளிம்பு என்பது ஆடையது விளிம்பு. நெய்தான் என்று கூறுவதற்குப் பதிலாக விளிம்பை நெய்தான் என்று வந்துள்ளது. 'நெய்' என்பது செயப்படுபொருள் குன்றா வினை. இங்கு ஆடையது விளிம்பு என்பது தற்கிழமை. அதனால் விளிம்பு என்பது தனியாக வரமுடியாது என்று கருதியிருக்க வேண்டும்.

'சுவரை எழுதினான் - இடம்' என்பது தெய்வச்சிலையார் விளக்கம். இங்குச் சுவரில் படம் (படத்தை) எழுதினான் என்பதே பொருள். எழுது என்பது செயப்படுபொருள் குன்றா வினை. அது செயப்படுபொருளும் (இரண்டாம் வேற்றுமையும்) இடமும் (ஏழாம் வேற்றுமையும்) ஏற்கும் மூன்று தொழில் முதனிலை 'வினை' ஆகும்: அதனால் சுவர் என்பது புதை நிலையில் இடப் பொருள். புறநிலையில் இடப்பொருள் இல்லாதபோது செயப்படுபொருளாகவும் வரும் என்று பொருள். இந்த வழக்கு பேச்சு மொழியிலும் காணப்படுகிறது. சுவரில் படம் வரைபவனிடம் இன்று அந்தச் சுவரை எழுது, நாளைக்கு இந்தச் சுவரை எழுதலாம் என்று கூறுவது உண்டு.

தெய்வச்சிலையார் விளக்கம் பொதுவாக வெறும் செயப்படுபொருள் குன்றாவினைகளாக மட்டும் கருதப்படும் பல வினைகள், மூன்று அல்லது நாலு தொழில் முதனிலைகளை உடையதாகக் கருதப்பட வேண்டும் என்ற உண்மையையும் அவை புதைநிலையில் உள்ள ஒரு தொழில் முதனிலை புற

நிலையில் மற்றொரு தொழில் முதனிலையாக மாறிவரலாம் என்பதையும் புலப்படுத்துகிறது.

எழுவாயே செயப்படுபொருளாகவும் வரும் தற்சுட்டுச் செயல் (Reflexive action) பற்றிச் 'செய்வானும் செயப்படு பொருளும் தானேயாய் நிற்பனவும் கொள்க.... சாத்தன் தன்னைக் குத்தினான்' என்று நச்சினார்க்கினியர் விளக்குவார். உண்மையில் இங்குச் சாத்தன் தன்னைக் குத்திக்கொண்டான் என்று வினைமுற்றில் கொள் என்ற துணைவினை வரும். இது இரண்டு உண்மைகளைப் புலப்படுத்துகிறது: 1. அதற்குத் தற்சுட்டுச்செயல் (Reflexive action) என்பதால் அங்குள்ள செயப்படுபொருள் தற்சுட்டுச் செயப்படுபொருள் என்றும் வினையிலுள்ள கொள் என்பது தற்சுட்டு துணைவினை என்றும் அழைக்கப்படும். 2. நச்சினார்க்கினியர் வினைச் சொல்லில் வேறுபாடு செய்யவில்லை. இப்போது வேறுபாடு செய்யப்படுகிறது என்பது சுட்டிக்காட்டத் தகுந்தது. அதாவது வினைச்சொல், கொள் என்ற துணை வினையை ஏற்று வரும். சாத்தன் தன்னைக் குத்திக்கொண்டான். கருத்தாவும் செயப்படுபொருளும் ஒன்றாக இருக்கும்போது படர்க்கையில் தான் (தன்) முன்னிலையில் நீ (உன்) தன்மையில் நான் (என்) என்பது செயப்படுபொருளாக அமையும். உதாரணம்: நான் என்னைக் குத்திக்கொண்டேன், நீ உன்னைக் குத்திக் கொண்டாய், அவன் தன்னைக் குத்திக்கொண்டான்.

### 4.9. மூன்றாம் வேற்றுமை

> மூன்றாகுவதே
> ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
> வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே (557)

தொல்காப்பியர் இங்கு ஒடு என்ற ஓர் உருபை மட்டும் கூறினாலும் அடுத்த சூத்திரத்தில் - இன், ஆன் என்று இரண்டு உருபுகளையும் ஏது என்ற சொல்லையும் குறிப்பிட்டுள்ளார். அவைகளில் - இன், ஆன் ஆகிய இரண்டும் கூடுதல் உருபுகளாகக் கருதத்தகுந்தவை. ஏது மூன்றாம் வேற்றுமையின் பொருளாகக் கருதத்தகுந்தது.

பொருளைப் பொறுத்தவரையில் தொல்காப்பியர் வினைமுதல் (கருத்தா), கருவி ஆகிய இரண்டு பொருள்களை மட்டும் குறிப்பிட்டாலும் மூன்றாம் வேற்றுமையின் தொடர் நிலை அமைப்பை விவரிக்கும்போது உடன்நிகழ்ச்சி, காரணம் (ஏது) என்ற பொருள்களையும் குறிப்பிட்டுள்ளார். எனவே கருவி,

கருத்தா, உடன்நிகழ்வு, காரணம் ஆகிய நாலு பொருள்கள் தொல்காப்பியத்தில் சுட்டப்பட்டனவாகக் கருதலாம். இலக்கணக்கொத்து தவிரப் பிற பிற்கால இலக்கண நூல்கள் (நன்னூல் சூ. 297 முதலியன முழு விவரம் சுப்பிரமணியன் 1971: 94-5) கருவி, கருத்தா உடன்நிகழ்வு என்ற மூன்று பொருளை மட்டுமே குறிப்பிட்டுள்ளன.

இங்கு இரண்டு செய்திகள் சுட்டிக்காட்டத் தகுந்தவை: 1. தொல்காப்பியக் கருத்தை எப்படி உரையாசிரியர்கள் வருணிக்கிறார்கள் என்பது. 2. உடனிகழ்ச்சியைப் பொருளாகச் சேர்க்காதது ஏன் என்பது. எனவே முதலில் வினைமுதல் கருவி என்ற தலைப்புகளில் உரையாசிரியர் கருத்தைப் பார்ப்போம்.

### 4.9.1. வினைமுதல்

இளம்பூரணர் செயப்பாட்டுவினை வாக்கியத்தில் வரும் -ஆல் வேற்றுமை ஏற்ற பெயரையும், தெய்வச்சிலையார் மட்டும் செயவினை வாக்கியத்தில் வரும் - ஆல் வேற்றுமை ஏற்ற பெயரையும் பிற உரையாசிரியர்கள் (சேனாவரையர், நச்சினார்க்கினியர், கல்லாடர்) செய்வினை, செயப்பாட்டு வினை வாக்கியங்களில் வரும் -ஆல் வேற்றுமை ஏற்ற பெயர்களையும் வினைமுதலாகக் கொண்டுள்ளார்கள்.

இளம்: 1. நாயாற் கோட்பட்டான் (வினைமுதல்)

சேனா: 2. கொடியொடு துவக்குண்டான் (வினைமுதல்)
3. அகத்தியனால் தமிழ் உரைக்கப்பட்டது (வினைமுதல்)

தெய்: 2. கொடியொடு துவக்குண்டான் (வினைமுதல்)

நச்சி: 2. கொடியொடு துவக்குண்டான் சாத்தன் (இயற்றும் வினைமுதல்)
4. அரசனால் இயற்றப்பட்ட தேவகுலம் (ஏவும் வினைமுதல்)

கல்: 1. நாயாற் கோட்பட்டான் (வினைமுதல்)
2. கொடியொடு துவக்குண்டான் (வினைமுதல்)

(அதே உதாரணம் என்பதற்கு ஒரே எண் கொடுக்கப்பட்டுள்ளது).

நாயாற் கோட்பட்டான், அகத்தியனால் தமிழ் உரைக்கப் பட்டது, அரசனால் இயற்றப்பட்டது தேவகுலம் (கோயில்) ஆகிய மூன்று வாக்கியங்களும் செயப்பாட்டு வினை வாக்கியங்கள்.

மூன்றாம் வேற்றுமை ஏற்ற பெயர்களுக்கு இணையான செய்வினை வாக்கியங்களின் எழுவாயாகவும் கருத்தாவாகவும் அமைந்தவை. நாய் கொண்டது, அகத்தியன் தமிழ் உரைத்தான், அரசன் தேவ குலம் இயற்றினான் என்பனவையே அவை. உண்மையில் அரசனால் இயற்றப்பட்ட தேவகுலம் (ஏவும் வினைமுதல் வாக்கியம் சற்று மாறுபட்டது என்பது பின்னால் விளக்கப்படும். கொடியொடு துவக்குண்டான் என்பதும் மொழியியல் நோக்கில் பிரச்சினையான வாக்கியமே. அகத்தியனால் தமிழ் உரைக்கப்பட்டது. (வினைமுதல்) என்பதில் வினைமுதல் என்பது. புதைநிலை வாக்கியத்தின் வினைமுதலாக வருகிற செயல்பாட்டை ஒட்டியது. இங்குப் புறநிலையில் மூன்றாம் வேற்றுமை ஏற்ற பெயர் புதைநிலையில் முதல் வேற்றுமையாக வந்துள்ளது.

'வினை முதலாவது கருவி முதலாயின காரணங்களைத் தொழிற்படுத்துவது' என்பார் சேனாவரையர். 'காரணங்கள் ஏழனையும் காரியத்தின் நிகழ்த்துதலின் வினைமுதல்; இஃது இயற்றும் வினைமுதலும், ஏவும் வினைமுதலும் என இருவகைப்படும்' என்பார் நச்சினார்க்கினியர்.

### 4.9.2. இயற்றுதல் வினைமுதல் & ஏவுதல் வினைமுதல்

'அரசனால் இயற்றப்பட்ட தேவகுலம் (அரசனால் கட்டப்பட்ட கோயில் என்பதே பொருள்) என்ற வாக்கியம் ஏவும் வினைமுதல் என்பதும், செயப்பாட்டுவினை வாக்கியமாக இருந்தாலும் ஒரு வகையில் பொருள்மயக்க வாக்கியம் என்பதும் குறிப்பிடத்தகுந்தது. அரசன் இயற்றிய தேவகுலம் என்ற அதன் செய்வினை வாக்கியமும் பொருள் மயக்கம் உடையது. அதற்குக் காரணம் இயற்றுதல், கட்டுதல் போன்ற வினைகள்தான் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. ஏனென்றால் இரண்டு வாக்கியத்திலும் கட்டப்பட்ட/ கட்டிய என்ற வினைகளின் இயற்றுதல் கருத்தா- உண்மையில் கட்டும் தொழிலைச் செய்தது அரசன் அல்ல வேறு ஒருவர்தான் - தச்சன். அதாவது கட்டு, இயற்று என்ற வினைகள் இயற்றுதல் கருத்தா, ஏவுதல் கருத்தாவுக்கும் பொது. அதாவது அரசனால் கட்டப்பட்ட கோயில்/ அரசன் கட்டிய கோயில் என்பது அரசன் ஆணையிட்டதால் தச்சனால் கட்டப்பட்ட கோயில்/ அரசன் ஆணையிட்டதால் தச்சன் கட்டிய கோயில் என்று பொருள்பட்டு அது ஏவுதல் கருத்தா. பிறர் விருப்பத்தால் (Non-Volitional act) செய்யப்பட்டது என்று பொருள்.

தச்சன் கட்டிய கோயில், தச்சனால் கட்டப்பட்ட கோயில் என்பது இயற்றுதல் கருத்தாவாகவும் இருக்கலாம். அதாவது தச்சன் தன் விருப்பத்தால் - முயற்சியில் (Volitional act) கட்டியது என்றால் இயற்றுதல் கருத்தா. அது தச்சன் தானே கட்டிய கோயில் என்றும் வரும். ஆங்கிலத்தில் கட்டு என்ற பொருளுடைய பில்டு (Build) என்ற வினை இயற்றும் வினையாகவும் ஏவும் வினையாகவும் செயல்படுவதை அகராதிகள் (உம். Webster's New World College Dictionary) குறிப்பிட்டுள்ளன.

Build = To make by putting together materials, parts etc. - இயற்றுதல் கருத்தா

= To order, plan or direct the constructions of - ஏவுதல் கருத்தா

உண்மையில் இரண்டுக்கும் புதைநிலை வடிவம் வேறாக இருக்க வேண்டும் என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

அரசன் ஆணையிட்டதால் தச்சன் கோயிலைக் கட்டினான் (தன்வினை)

அரசன் ஆணையால் தச்சன் கோயிலைக் கட்டினான் (தன்வினை)

அரசனால் தச்சன் கோயிலைக் கட்டினான்

அரசன் கோயிலைக் கட்டினான் (அரசன் ஏவுதல் கருத்தா, பிறவினை)

தச்சன் கல்லால் கோயிலைக் கட்டினான் (தச்சன் இயற்றுதல் கருத்தா, தன்வினை)

இங்கு முதல் வாக்கியம் தவிர ஏனையவை புறநிலையில் எளிய வாக்கியமாக இருந்தாலும் புதைநிலையில் கலவை வாக்கியமாகக் கருதப்படவேண்டும் என்பது குறிப்பிடத்தகுந்தது. அதாவது

எழு. (தச்சன் + கருவி (வாக்கியம் அரசன் ஆணையிட்டான்)+ செயப்படுபொருள் (கோயில்) கட்டினான்).



தச்சன் அரசன் ஆணையிட்டதால் கோயிலைக் கட்டினான்.

தச்சன் அரசன் ஆணையால் கோயிலைக் கட்டினான் (அரசனால் = ஏவுதல் கருத்தா, தச்சன் அரசனால் கோயிலைக் கட்டினான்) தச்சன் = எழுவாய் & இயற்றுதல் கருத்தா, வினை = தன் வினை) அரசனால் = மூன்றாம் வேற்றுமை ஏவுதல் கருத்தா.

அரசன் தச்சனால் கோயிலைக் கட்டினான் (அரசன் = எழுவாய் & ஏவுதல் கருத்தா, தச்சனால் = இயற்றுதல் கருத்தா அதாவது வினைமுதல், வினை, பிறவினை).

தச்சன் கோயிலைக் கட்டினான் (எழுவாய் இயற்றுதல் கருத்தா, வினை-தன்வினை) (அரசன் ஆணையிட்டதால் -> அரசன் ஆணையால் -> அரசனால்) அப்படியானால் அரசனால் தச்சன் கோயில் கட்டினான் என்ற வாக்கியத்தில் அரசனால் என்பது புறநிலையில்தான் கட்டு என்ற வினையின் ஆதிக்கத்தில் இருந்தாலும் புதைநிலையில் அந்த வினையின் ஆதிக்கத்தில் அமையவில்லை (Dominated by the sentence).

புதைநிலையில் துணை வாக்கியத்தில் எழுவாய் காரண விகுதி உடையது (பார்க்க Jacob and Rosenbaum, 1968: 42).

இவை எல்லாம் ஏவுதல் கருத்தா. இங்கு அரசன் கோயிலைக் கட்டினான், அரசனால் கோயில் கட்டப்பட்டது என்ற வாக்கியமும் இயற்றுதல் கருத்தாவாக இருக்க முடியும் என்றாலும் உலக அறிவால் ஏவுதல் கருத்தாவாகக் கொள்கிறோம். அந்த நிலையில் கட்டு என்பது செய் வினையாக அமையாமல் செய்வி வினையாகக் கொள்ளமுடிகிறது. அரசன் கோயிலைக் கட்டுவித்தான், அரசனால் கோயில் கட்டுவிக்கப் பட்டது என்பது பொருள்.

தச்சன் கோயிலைக் கட்டினான்
தச்சனால் கோயில் கட்டப்பட்டது

என்ற இரண்டு வாக்கியங்களும் பொருள் மயக்கம் உடையதாகக் கருதலாம். அரசன் ஆணையால் தச்சன் கோயிலைக் கட்டினான் என்று பொருள்கொண்டால் கட்டு என்பது பிறர் விருப்பத்தால்

இயற்றப்பட்ட வினை-பிறர் விருப்ப வினை (Non-Volitional act) என்று அமையும்.

எல்லா வினையும் பிறர் விருப்ப வினையாகவும் தன் விருப்ப வினையாகவும் அமையலாம் என்றாலும் தன் விருப்ப வினையாக இருந்தால் தற்சுட்டுப் பதிலீட்டுப் பெயரை ஏற்று வரும். பிறர் விருப்ப வினையாக இருந்தால் செய்வி என் வினையாக அமையலாம்.

அரசன் ஆணையால் கண்ணன் கோயிலில் கம்பராமாயணம் படித்தான்

அரசனால் கண்ணன் கோயிலில் கம்பராமாயணம் படித்தான் (-ஆல் ஏவுதல் கருத்தா)

அரசன் கோயிலில் கம்பராமாயணம் படித்தான் என்ற வாக்கியத்தில் அரசன் இயற்றுதல் கருத்தா என்ற முறையிலேயே சரியான வாக்கியம். ஏவுதல் கருத்தா என்றால் வழுவான வாக்கியம். அரசன் கோயிலில் கம்பராமாயணம் படிப்பித்தான் என்பதே சரியான ஏவுதல் கருத்தா வாக்கியம். அரசன் கோயிலில் கண்ணனால் (கண்ணனைக் கொண்டு) இராமாயணம் படிப்பித்தான்.

அரசன் தானே கோயிலில் இராமாயணம் படித்தான்
கண்ணன் தானே கோயிலில் இராமாயணம் படித்தான்

பொதுவாகச் செயப்பாட்டு வாக்கியம் செயப்படுபொருள் குன்றாவினையில் மட்டுமே வரும். ஆனால் ஏவுதல் கருத்தா செயப்படுபொருள் குன்றாவினை, செயப்படுபொருள் குன்றிய வினை ஆகிய இரண்டிலும் வரும். ஏவுதல் கருத்தா வந்தால் செயப்படுபொருள் குன்றியவினையும் தலைமை வாக்கியத்தில் வரலாம்.

தசரதன் ஆணையிட்டதால் இராமன் காட்டுக்குப் போனான்
தசரதனால் இராமன் காட்டுக்குப் போனான் (-ஆல் ஏவுதல் கருத்தா)
தசரதன் இராமனைக் காட்டுக்குப் போகவைத்தான்

அரசன் ஆணையால் முருகன் ஒரு காப்பியம் எழுதினான்
அரசனால் முருகன் ஒரு காப்பியம் எழுதினான்
அரசன் முருகனை ஒரு காப்பியம் எழுதுவித்தான்

தொல்காப்பியரும் அதனின் இயறல் என்பதை மூன்றாம் வேற்றுமைக்கு உரிய ஒரு வாய்பாடாக அடுத்த சூத்திரத்தில் கூறியிருப்பது இயல் என்ற வினை இரண்டு நிலையிலும் வரும் என்பதைப் புலப்படுத்தும்.

'வினைமுதலாவது கருவி முதலாயின காரணங்களைத் தொழிற்படுத்துவது' என்பார் சேனாவரையர். அவர் கொடுத்த மூன்று வாக்கியங்களும் எழுவாய் உயிரி என்பதால் அவை வினைமுதலாகச் செயல்பட்டன என்பது சரியே.

சேனாவரையர் தெய்வச்சிலையார் நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் கொடுத்த கொடியொடு துவக்குண்டான் என்பது எப்படி வினை முதல் ஆகும் என்ற கேள்வி எழுகிறது. துவக்குண்டான் என்பதற்குப் பதிப்பாசிரியர்கள் கட்டப்பட்டான் என்று பொருள் எழுதியுள்ளார்கள். அப்படியானால் அது செயப்பாட்டு வினை வாக்கியம் ஆகும். அது பொருந்தாது கட்டுண்டான் என்பது சரியான பொருள். கொலையுண்டான், அடியுண்டான் போன்ற வினைகளில் வரும் உண் என்பது சொல்லானும் அது வினையாக்க விகுதியாகவே செயல்படுகிறது. அடி (அச்சடி அரட்டையடி), அடை (அதிர்ச்சியடை, துன்பமடை) போன்று உண் என்பது ஒரு வினையாக்க விகுதியே (அகத்தியலிங்கம் (1982:32) எனவே துவக்குண் என்பது செயப்படுபொருள் குன்றிய வினையாகவும் கொடியொடு என்பது கருவியாகவும் கருதப்பட வேண்டும் (ஒப்புநோக்குக, அகத்தியலிங்கம், 1972:3).

ஒடு பொதுவாக உடனிகழ்ச்சி பொருளில் வரும். ஆனால் இது ஒரு வகையில் கருவிப் பொருளில் வந்துள்ளது. எனவே நச்சினார்க்கினியர் இங்கு உடனிகழ்ச்சிப் பொருளும் அடங்கியுள்ளதாக விளக்கியுள்ளது. சிறப்பானது அதே சமயத்தில் இங்கு இயற்றும் வினைமுதல் இருக்கிறது என்ற அவர் கருத்து பொருந்தாது என்ற மேலே கூறிய வாதம் இங்கும் பொருந்தும்.

> 'கொடியொடு துவக்குண்டான் என்பது இயற்றும் வினைமுதல். அது, 'கொடி தன்னொடு துவக்குதலைச் செய்யப்பட்டான் சாத்தன்' என்னும் பொருட்டு. கொடியினது நிகழ்ச்சி ஈண்டுக் கருவி. கொடி சாத்தனைத் தொழில் உறுவிக்குங்கால் தான் அவனை நீங்கா உடனிகழ்ச்சியை விளக்கிற்று ஒடு என் உருபு'.

என்ற நச்சினார்க்கினியர் விளக்கத்தில் கருவியும் உடனிகழ்ச்சியும் இணைந்திருப்பதை அவர் சுட்டிக் காட்டியிருப்பது மிகவும்

சிறப்பானது. கொடியால் துவக்கப்பட்டான். ஒடு என்பது பொதுவாக உடனிகழ்ச்சிக்கு உரிய உருபாகக் கருதப்படும். இங்குக் கொடி கருவியாகவும் உடனிகழ்வாகவும் அமைந்துள்ளது. மாறாகக் கத்தி போன்றவை (கத்தியால் சாத்தன் வெட்டுண்டான்) கருவியாகச் செயல் முடிந்த பின் உடனிருக்காது கட்டு, பிணை, இணை போன்ற வினைகள் உடனிகழ்ச்சியாகவும் கருவியாகவும் வரும்.

கொடியொடு தொடக்குண்டான் என்ற உதாரணத்தைத் தெய்வச்சிலையார் கொடுத்து வினைமுதல் என்று குறிப்பிட்டுள்ளார். தொடக்கு என்ற சொல்லும் கட்டு என்ற பொருளை உடையதுதான். எனவே கொடியொடு துவக்குண்டான் என்பதற்குக் கூறிய விமர்சனம் இதற்கும் பொருந்தும்.

*4.9.3. கருவி*

கருவி, செயப்படுபொருள் குன்றிய வினையோடும், செயப்படுபொருள் குன்றா வினையோடும் வரும். 'கருவியாவது வினைமுதல் தொழில் பயனைச் செயப்படுபொருட்கண் உய்ப்பது' என்பார் சேனாவரையர். அப்படியானால் அது செயப்படு பொருள் குன்றா வினையை ஏற்கும்போதே ஒத்துவரும்.

இளம்பூரணர் : வேலான் எறிந்தான்

சேனாவரையர் : வேலான் எறிந்தான்
ஊசியொடு குயின்ற (தைக்கப்பட்ட) தூசும் பட்டும்

தெய்வச்சிலையார் :
ஊசியொடு குயின்ற (தைக்கப்பட்ட) தூசும் பட்டும்

கல்லாடனார் : வேலான் எறிந்தான்
ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்

நச்சினார்க்கினியர் கருவி பற்றி ஓரளவு விரிவாக விவாதித்துள்ளார்.

> 'கருவி, காரணம், ஏது, நிமித்தம் என்பன தம்முள் வேறுபாடு உடையவேனும், ஒத்த பொருளன. அக்காரணம் முதற் காரணமும் துணைக் காரணமும் என இருவகைப்படும். முதற் காரணமாவது காரியத்தோடு ஒற்றுமை உடையது, துணைக் காரணமாவது அம்முதற் காரணத்திற்குத் துணை

யாகிய வினைமுதலிய எட்டும் அக்கருவியாவது, வினைமுதல் தொழில் பயனைச் செயப்படுபொருட் கண் உய்ப்பது. அதுவும் இயற்றுதல் கருவியாகிய காரகக் கருவியும் அறிதற் கருவியாகிய ஞாபகக் கருவியும் என இருவகைப்படும். ஊசியொடு குயின்ற தூசும் பட்டும் என்பது காரகக் கருவி. அஃது ஊசி கொண்டு சாத்தன் குயிலுதலைச் செய்யப்பட்ட தூசும் பட்டும் என்னும் பொருட்டு. சாத்தன் தொழிற் பயனை ஊசி தூசிலும் பட்டிலும் நிகழ்த்திற்று. இது துணைக் காரணம். மண்ணான் இயன்ற குடம் - முதற் காரணம். இதுவும் காரகக் கருவி. உணர்வினால் உணர்ந்தான், புகையினான் எரி உள்ளது உணர்ந்தான். இவை ஞாபகக் கருவி. இவற்றிற்கு உணர்வு முதற்காரணம். காரகமாவது தொழிலை இயற்றுவிப்பது. ஞாபகமாவது அறிவிப்பது'

என்பது அவரது வாசகம். இங்கு நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது நச்சினார்க்கினியர் தவிரப் பிற உரையாசிரியர்கள் துணைக் கருவிக்கு மட்டுமே உதாரணம் கொடுத்துள்ளதே. அதை மொழியியலார் ஆயுத வேற்றுமை (Tool case) என்றும் அது எழுவாயாகவும் வரும் என்றும் குறிப்பிட்டுள்ளார்கள் (அகத்தியலிங்கம் 1984: 225).

காலால் நடந்தான் - செயப்படுபொருள் குன்றியவினை

கத்தியால் வெட்டினான் - செயப்படுபொருள் குன்றாவினை

இதைக் கண்ணன் முருகனைக் கத்தியால் வெட்டினான் என்பதே புதைநிலை வாக்கியம். இதே வாக்கியத்தை முருகன் கத்தியால் வெட்டப்பட்டான். முருகனைக் கத்தி வெட்டியது என்றும் கூறமுடியும்.

நச்சினார்க்கினியர் குறிப்பிட்ட காரணம் மொழியியலில் பொருள் வேற்றுமை (Material Case) ஆகும். அதைத் தொகையாக மாற்றமுடியும். மண்ணால் செய்த பொம்மை -> மண் பொம்மை. இது பெரும்பான்மையும் ஆக்க வினைகளைக் கொண்டு (செய், பண், செதுக்கு, கட்டு, வனை போன்ற வினைகளோடு வரும். துணைக் காரணம் வெட்டு, திற, தை போன்ற வினைகளோடு வரும். மண்ணான் இயன்ற குடம் -> மண் குடம் உண்மையில் மண்ணால் திகிரியால் குடம் செய்தான் என்று கூறலாம்

என்றாலும் வழக்கில் இல்லை. காரணம் ஒரு வேற்றுமை இரண்டு தடவை வராது. ஆனாலும் மண்ணைக்கொண்டு திகிரியால் குடம் செய்தான் என்று சொல்லலாம். இங்கு இரண்டு வேற்றுமையும் உடன் வந்துள்ளதாலும் அவைகளின் மாற்றிலக்கணப் பண்பு மாறுபடுவதாலும்தான் மொழியியலார் ஆயுத வேற்றுமை, கருவி வேற்றுமை என்று தனித்தனி வேற்றுமையாகக் கொண்டுள்ளார்கள்.

புகையினான் எரி உள்ளது உணர்ந்தான்
(காரணக்கருவி)
குளம் நிறைந்ததால் மழைபெய்தது உணர்ந்தான்

என்ற வாக்கியங்களில் முறையே எரி (நெருப்பு) மழை ஆகியவை காரணம்; புகை, குளம் நிறைதல் காரியம்.

நெருப்பு எரிந்ததால் புகை உண்டாயிற்று ->
நெருப்பால் புகை உண்டாயிற்று

மழை பெய்ததால் குளம் நிறைந்தது ->
மழையால் குளம் நிறைந்தது

எனவே அவைகளைக் கலவை வாக்கியத்திலிருந்து உண்டானது என்று விளக்கவேண்டும்.

### 4.9.4. அதன் வினைப்படுதல்

இதைத் தெய்வச்சிலையார் 'ஒன்றன் தொழில் மேல் வருதல்' என்றும், நச்சினார்க்கினியர் 'ஒன்றான் ஒன்று தொழில் உறுதல்' என்றும் விளக்குவார்கள். பிற உரையாசிரியர்கள் உதாரணம் மட்டுமே கொடுத்துள்ளார்கள்.

இளம்பூரணர் : நாயால் கோட்பட்டான்

சேனாவரையர் : சாத்தனால் முடியும் இக் காரியம்

தெய்வச்சிலை : புலி பாய்தலால் பட்டான்,
ஓட்டாற் கடிது குதிரை

நச்சினார்க்கினியர்: நாயால் கோட்பட்டான்,
சாத்தனால் முடியும் இக்காரியம்-
இவை வினைமுதல்

நாயால் கோட்பட்டான் என்பது ஒரு செயப்பாட்டு வாக்கியம். எனவே நாய் சாத்தனைக் கொன்றது என்ற செய்வினை வாக்கியத்திலிருந்து வந்தது என்று கொள்ளலாம். அந்தக் கருத்தில்

நாயால் என்பது வினைமுதல் என்று கொள்ளப்பட்டிருக்க வேண்டும். அப்படியானால் 'வினைமுதல்' பொருளில் அடங்கும். இங்கு, செயப்பாட்டு வினை வாக்கியத்தில் கருத்தா மூன்றாம் வேற்றுமையாக வரும் என்பதைக் குறிப்பதற்காகத் தொல்காப்பியர் கூறினாரோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

சாத்தனால் முடியும் இக் காரியம் என்பது ஒரு பிளவை (Cleft) வாக்கியம். அதில் முடியும் என்பது வெற்றி பெறும் என்று பொருள் (முடிக்கமுடியும்). அப்படியானால் அது முதல் வினை. இயலும் என்ற பொருள் கொண்டதால் அது ஒரு துணைவினை. அங்குச் செய்யமுடியும் போன்று ஒரு முதல் வினை இருக்க வேண்டும் சாத்தன் இக்காரியத்தைச் செய்யமுடியும். என்பதைச் சாத்தனால் இக்காரியத்தைச் செய்ய முடியும்/ சாத்தனால் செய்ய முடியும். இக்காரியத்தை என்று கூற முடியுமே தவிர *சாத்தனால் முடியும் இக்காரியத்தை என்றோ, *சாத்தன் முடியும் இக்காரியத்தை என்றோ கூறுமுடியாது. ஏனென்றால் முன்னது ஒரு வாக்கியமாக இல்லாமல் தொடராக மாறிவிடுகிறது (சாத்தனே செய்ய வேண்டும் / முருகனும் செய்வான்) என்று தலைமை வாக்கியம் வரும்). மேலும் வெற்றி பெறு என்ற பொருள் உடையதாக அமைகிறது. முதல்வினை இல்லாதபோது காரியம் என்பது எழுவாயாகச் செயல்படுகிறது. அதனால்தான் செயப்படு பொருளாக இருக்கும்போது தவறான வாக்கியமாக ஆகி விடுகிறது. வெற்றி பெறு என்ற பொருள் என்றால் முடிக்கும் என்ற வினை வரவேண்டும் (சாத்தனால் முடியும் இக்காரியம், சாத்தன் முடிக்கும் இக்காரியத்தை) இங்கு வினைமுதல் மூன்றாம் வேற்றுமையாகவும் செயப்படுபொருள் முதல் வேற்றுமை யாகவும் மாற்றம் பெற்றிருக்கிறது. இது செயப்பாட்டு வினை வாக்கியம் அல்ல.

தெய்வச்சிலையார் காட்டிய வாக்கியம் புலி பாய்தலால் பட்டான் என்பது ஒரு கலவை வாக்கியம். புலி பாய்ந்தது, அதனால் அவன் பட்டான்/ செத்தான் என்று பொருள்படும். உண்மையில் இது கருவிப் பொருளில் வந்துள்ளது. நோயால் இறந்தான் என்ற வாக்கியமும் இந்த வகையைச் சார்ந்தது. இது காரணப் பொருளில் அடங்கும். அப்படியானால் தொல்காப்பியர் வினைப்படுதல் என்று தனியே கூறிய காரணம் புலனாகவில்லை.

### 4.9.5. அதனின் இயறல்

இளம்பூரணர் 'தச்சன் செய்த சிறுமாவையம்' என்ற உதாரணத்தைக் கொடுத்து இது தச்சனால் செய்யப்பட்டது

என்று விளக்கியுள்ளார். கல்லாடரும் இதே கருத்தினரே. இயறல் என்பதை இயற்றுதல் அல்லது செய்தல் என்று இளம்பூரணர் பிறவினையாகக் கொண்டுவிட்டார். அதனால் அது வினைமுதல் பொருள் உடையது என்பது புலனாகிறது. உண்மையில் இயறல் என்பதை இயலுதல் என்று கொண்டால் அது தன்வினையே. அப்போது கருவிப் பொருளில் வரும் அந்தத் தொடரைத் தொகைச் சொல்லாகவும் ஆக்கமுடியும்.

சேனா. & நச். & தெய். : மண்ணான் இயன்ற குடம்

மண் முதற் காரணம் என்றும் முதற் காரணமாவது காரியத்தோடு ஒற்றுமை உடையது என்றும் சேனாவரையர் விளக்குவார். 'இயலப்படுவதற்குக் காரணமாகிய பொருள் மேல் வந்தது' என்பது தெய்வச்சிலையார் விளக்கம். ஒன்றால் ஒன்று பண்ணப்படுவது என்பது நச்சினார்க்கினியர் விளக்கம். இந்தத் தொடரை மண்குடம் என்று தொகையாக மாற்றமுடியும்.

சேனாவரையர் இதை முதற் காரணம் என்று விளக்கிக் 'காரியத்தோடு ஒற்றுமை உடையது' என்று பொதுமைப் படுத்துவார். உண்மையில் குடம் மண்ணான் இயன்றது என்பதே அதன் உடனடிப் புதைநிலை வாக்கியமாக இருந்தாலும் குடம் என்பதைக் கருத்தாவாகக் கருதமுடியாது. சாத்தன் மண்ணால் குடத்தை இயற்றினான் என்பதே சரியான புதைநிலை வாக்கியம். கருத்தா மறைந்தால் செயப்படுபொருள் எழுவாயாக மாறி அதற்கு ஏற்க வினைமுடிபு (குடம் மண்ணான் இயன்றது) பெறும். அப்படியானால் இங்கு இயல் என்ற வினை தன்வினையாக அமைந்து செயப்படுபொருள் எழுவாயாக வரும் என்று மாற்றத்தை உணர்த்துவதற்குத் தொல்காப்பியர் கூறினாரோ என்று நினைக்கத்தோன்றுகிறது.

### 4.9.6. அதற்றகு கிளவி

இளம்பூரணர், சேனாவரையர் நச்சினார்க்கினியர், கல்லாடர் ஆகியோர் 'வாயால் தக்கது வாய்ச்சி' (வாய்க் கூர்மையால் சிறந்தது/தகுந்தது கோடாரி) என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார்கள். இதுவும் ஒரு வகையில் அகக்காரணம் (ஏது= வாளின் வாய்க்கூர்மை) எனலாம்.

அறிவான் அமைந்த சான்றோர் என்ற கூடுதலான உதாரணத்தைச் சேனாவரையர் கொடுத்துப் பொதுவாக இவை கருவியாற்படும் என்று விளக்கியுள்ளார் தெய்வச்சிலையார்.

அதனால் தகுதியை உடைத்தாயிற்று என்னும் பொருண்மை தோன்ற வருவது என்று விளக்கி, 'கண்ணால் நல்லன், குணத்தால் நல்லன்' என்ற உதாரணங்களைக் கொடுத்துள்ளார். இது அவன் கண் நல்லன்/அவன் கண் நல்லது, அவன் குணம் நல்லன்/நல்லது என்ற புதைநிலை வாக்கியத்திலிருந்தே உண்டாகியிருக்கவேண்டும். அவன் கண் நன்று -> அவன் கண்ணால் நல்லன். அப்படியானால் கிழமைப் பொருள் மூன்றாம் வேற்றுமையாக மாறுவதால் உடையோன் / உடைமைப் பொருள் எழுவாயாக மாறுகிறது. வாயால் தக்கது வாய்ச்சி என்பதை வாய்ச்சி வாய் நன்று என்ற வாக்கியத்தி லிருந்து உண்டானதாகக் கொள்ளவேண்டும். இங்கும் ஆறாம் வேற்றுமைத் தொகையில் தலைச் சொல்லான கண்/வாய்ச்சி மூன்றாம் வேற்றுமை ஏற்றதால் அடைச்சொல் எழுவாயாக மாறியுள்ளது.

### 4.9.7. அதனின் ஆதல் / ஏது

'ஆக்கத்திற்கு ஏதுவாகி வருவது' என்று தெய்வச்சிலையார் மட்டுமே விளக்கியுள்ளார். எல்லா உரையாசிரியர்களும் 'வாணிகத்தின் ஆயினான்' என்ற உதாரணத்தையே கொடுத்துள்ளார்கள்.

வாணிகம் செய்ததால் (செல்வன்) ஆயினான் / வாணிகம் காரணமாகச் (செல்வன்) ஆயினான். இது 'கத்தியால் வெட்டினான்' என்ற கருவி வாக்கியத்திலிருந்து மொழி அமைப்பில் மாறுபட்டது. உரையாசிரியர்கள் கருவி, காரணம் ஆகிய இரண்டையும் ஒரு பொருள் பல சொல்லாகக் கொண்டாலும், மொழியமைப்பில் இரண்டும் வேறு வேறு அமைப்பு உடையவை. இரண்டும் எளிய வாக்கியங்களாக இருந்தாலும் முன்னது புதைநிலையில் கலவை வாக்கியமாகக் கொள்ளவேண்டியது.



### 4.9.8. அதனிற் கோடல்

இதை 'ஒன்றனாற் ஒன்றைக் கோடல்' என்று தெய்வச் சிலையாரும் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் விளக்கியுள்ளார்கள். எல்லா உரையாசிரியர்களும் காணத்தாற் கொண்ட அரிசி என்ற உதாரணத்தையே கொடுத்துள்ளார்கள்.

ஒன்றனாற் ஒன்றைக் கோடல் என்பதற்கு ஒன்றைக் கொடுத்து ஒன்றைக் கோடல் என்று கொள்ளலாம். காணம் (பொன்) கொடுத்து / காணத்தைக் கொடுத்ததால் / கொடுத்த காணத்தால் அரிசி கொண்டான் என்று விளக்கலாம். இங்குக் காரணமான வினைப்பெயர் (கொடுத்தது) கெட்டதோடு அதற்குரிய வேற்றுமையும் (இரண்டாம் வேற்றுமை) கெட்டு வினைப்பெயரில் வந்துள்ள வேற்றுமை ஏற்றுள்ளது. மேலே காட்டியபடி மழை பெய்ததால் குளம் நிரம்பியது என்ற வாக்கியம் மழையால் குளம் நிரம்பியது என்று மாறுவதுபோல இங்கும் மாறியுள்ளது. வில்/வாங்கு, பேசு/கேள்) போல கொடு/ கொள் என்பது சார் உறவு வினை ஆகும். அதாவது ஒரு செயல் நடந்தால் இன்னொரு செயல் நடக்கும். கொடு/கொள் என்ற இரண்டு வினைகளுக்கு உரிய பொதுவான வினையாகக் கோடல் என்பது கையாளப்பட்டுள்ளது.

### 4.9.9. உடன் நிகழ்ச்சி

தொல்காப்பியர் உடனிகழ்ச்சிப் பொருளைப் பொது நிலையில் கூறிவில்லை என்றாலும், அவர் கொடுத்த வாக்கிய அமைப்பில் உடனிகழ்ச்சிப் பொருள் அமைந்துள்ளதோடு அதில் நாலு வகையை வேறுபடுத்துவது சிறப்பானது. அவையாவன: 1. அதனொடு மயங்கல், 2. அதனொடு இயைந்த ஒரு வினைக்கிளவி, 3. அதனொடு இயைந்த வேறுவினைக்கிளவி, 4. அதனொடு இயைந்த ஒப்பல் ஒப்புரை அவைகளை ஒவ்வொன்றாகப் பார்ப்போம்.

#### 4.9.9.1. அதனொடு மயங்கல்

| | |
|---|---|
| இளம்பூரணர்: | எள்ளொடு மயங்கிய அரிசி |
| தெய்: | பாலொடு மயங்கிய நீர் |
| சேனா & நச்.: | எண்ணொடு விராய அரிசி |

இங்கு எள்/பால்/எண் முதன்மைப் பொருள் அரிசி/நீர் துணைப் பொருள் மயங்கு (கலத்தல்) கல, சேர், இணை போன்ற வினைகள்

ஒரு பொருட்களனைச் சார்ந்த வினைகள் இரண்டு பெயர்களை ஏற்று வரும் அவை எல்லாம் அஃறிணைப் பெயர்கள்.

அவன் கூட்டத்தோடு கலந்தான்
சாமியார் கூட்டத்தோடு சேர்ந்துவிட்டான்
நண்பர்குடும்பத்தோடு உறவாடினான்

இங்கு உயர்திணைப் பெயர்களே - ஒடு உருபு ஏற்று வந்திருக்கின்றன. வினைகள் அதே பொருட்களைச் சார்ந்தவையே.

இவை ஒரு வகையில் உம்மை வாக்கியமாக அமைந்தாலும் உம்மை வாக்கியத்துக்கும் உடன்நிகழ்ச்சி வாக்கியத்துக்கும் பொருளில் நுண்ணிய வேறுபாடு இருப்பது தொல்காப்பிய ராலேயே சுட்டிக்காட்டப்பட்டிருக்கிறது. இவை உண்மையில் அகராதியின் நிலையில் உம்மைத் தொடராகக் (Lexical level conjunction) கருதத் தகுந்தவை மாறாக அதனொடு இயைந்த ஒருவினைக் கிளவி தொடர்நிலை உம்மை (Phrasal Conjunctions) ஆகும்.

எள்ளும் அரிசியும் மயங்கின
எள்ளும் அரிசியும் விரவின
பாலும் நீரும் மயங்கின

இவை அகராதியின் உம்மை வாக்கியங்கள். இவைகளில் இரண்டு பொருளும் ஒத்த மதிப்பு உடையவை. ஆனால் உடனிகழ்ச்சி வாக்கியமாக அமையும்போது ஒடு ஏற்று வருகிற பெயரே சிறப்பு உடையதாகக் கருதப்படுகிறது. 'ஒரு வினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே' என்பார் தொல்காப்பியர் (575). அதாவது ஒடு சேர்ந்த பெயரே முக்கியமானது என்று பொருள்.

தேனொடு பால் கலந்தது
பாலொடு தேன் கலந்தது
தேனும் பாலும் கலந்தன

உம்மை வாக்கியத்தில் இரண்டும் ஒத்த நிலையில் கலந்தன என்று பொருள். எனவே பன்மை வினைகொண்டு முடிந்துள்ளது. தேனொடு பால் கலந்தது என்ற வாக்கியத்தில் தேனே முக்கியப் பொருள். பாலொடு தேன் கலந்தது என்ற வாக்கியத்தில் பால் முக்கியப் பொருள். இரண்டு பெயர்களில் ஒன்றே எழுவாயாக இருப்பதால் ஒருமை வினைமுற்றைக் கொண்டு முடிந்துள்ளது.

### 4.9.9.2. அதனொடு இயைந்த ஒரு வினைக்கிளவி

இளம். : சாத்தனொடு வந்தான் கொற்றன்
சேனா. & நச். : ஆசிரியனொடு வந்த மாணாக்கன்

இங்கு வருதல் தொழில் இருவருக்கும் ஒத்தது. இருந்தாலும் இங்கும் ஒடு பெற்ற பெயர்களே சிறப்பு உடையவை. அதனால்தான் தெய்வச்சிலையார் 'ஒரு வினையான் இரு பொருள் முடிவது' என்று விளக்கி, படையொடு வந்தான் அரசன் என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார். இங்குப் படை வந்தது, அரசன் வந்தான் என்று இரண்டு வாக்கியம் கொள்ளலாம். ஆயினும் படையொடும் அரசன் வந்தான் என்னும் போது அரசனைவிடப் படை முக்கியத்துவம் பெறுகிறது. அதுதான் ஒடு உருபின் சிறப்பு. இதைப் புதைநிலையில் இரண்டு வாக்கியமாகக் கருதலாம் என்றாலும் உயர்வு என்ற பொருள் கூறு கூடுதலாக அமைக்க வேண்டும் என்பது சுட்டிக்காட்டத் தகுந்தது.

### 4.9.9.3. அதனொடு இயைந்த வேறுவினைக்கிளவி

இங்கு வேறு வினை என்பதை இளம்பூரணர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் ஒரு விதமாகவும் தெய்வச்சிலையார் இன்னொரு விதமாகவும் பொருள் கொள்ளக் கல்லாடர் இரண்டு கருத்தையும் இணைத்துள்ளார்.

இளம்பூரணர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் மலையொடு பொருத மால் யானை என்ற உதாரணத்தைக் கொடுத்துப் பொருதல் யானைக்கு அல்லது இன்மையின் வேறு வினை' என்று சேனாவரையரும், 'மலைக்கு வினை இன்மையின் இது வேறு வினை ஆயிற்று' என்று நச்சினார்க்கினியரும் விளக்கியுள்ளார்கள். இதில் மலை உயிர் இல்லாத அசையாப் பொருள். எனவே மலைக்கு வினை இல்லை-யானை மட்டுமே மோதுகிறது என்பது சரியே. இங்கு இயைந்த வேறு வினை என்பது முக்கியமானது. இன்றும் அவன் என்னோடு பேசினான் (ஆனால் அவனோடு பேசவில்லை) அவன் குழந்தையோடு விளையாடினான் என்னும்போது ஒருவருக்கு மட்டுமே வினை உரியது ஆகிறது.

பொரு, மோது, காதலி போன்றவை பரஸ்பர வினைகள் எனப்படும். அதனால் இருவரும் பொருதார்கள். மோதினார்கள் காதலித்தார்கள் என்று பொருள்படும். ஆனால் அந்த வினைகளும் ஒருவர் மட்டும் செய்ய மற்றவர் வாளா இருக்க

முடியும். ஒருவன் மோத மற்றவன் வாளா இருந்தான். இங்கு இன்னொரு பொருள் அஃறிணையாக இருந்தால் உறுதியாக அது செயல் அல்லாமல் வாளா இருக்கும். மரத்தோடு கார் மோதியது. காரோடு கார் மோதியது என்ற இரண்டு வாக்கியங்களில் முன்னது கார் மட்டும்தான் கருத்தா. பின்னதில் இரண்டு காருமே கருத்தா. முன்னதில் செயல் ஊக்கம் (Initiative) ஒருவருடையது என்ற பொருள். மலையொடு பொருத யானை என்பதில் யானை வினைசெய்தது. மலைக்கு வினை இல்லை வினை ஏற்பானாக (Patient) அமையும்.

'வேறு வினையுடையன இரண்டு சொல் ஒரு வினையொடு தொடர்வது' என்று தெய்வச்சிலையார் விளக்கிக் காவோடு அறக் குளம் தொட்டான் என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார். இங்குள்ள இரண்டு பெயரும் இரண்டு வேறு வினைகளைப் பெறும். கா அமைத்தான், குளம் தொட்டான் என்ற இரண்டு வாக்கியங்களே புதைநிலையில் அமையும். இரண்டு பெயர்களும் பொருண்மை நிலையில் உறவு உடையவை. இரண்டும் பொது மக்களுக்குப் பயணத்துக்கு உதவியாகச் செய்யப்படும் அறமாகக் கருதப்பட்டவை. பாரதியாரும் இன்னறுங்கனிச் சோலைகள் அமைத்தல், இனிய நீர்த்தண் சுனைகள் இயற்றல் (சரஸ்வதி தேவியின் புகழ் 9-12) என்று இரண்டு தனித்தனி வாக்கியங்களாகக் குறிப்பிட்டுள்ளார். அவை செயப்படுபொருள் உறவில் அமைந்தவை. இரண்டு வேறு வினையை உடைய இரண்டு பெயர்களின் ஒரு பெயரின் வினையும் கெட்டு அதற்குரிய வேற்றுமை உருபும் கெட்டு ஒடு உருபு பெறும் (நடராசன்: 1994: 46). பொருண்மை அடிப்படையில் தொடர்புடைய வினைகள் அமைந்துள்ளதாகக் கொண்டு ஒரு வினை கெட்டது என்று நடராசன் விளக்கி யுள்ளார். பெயர்ச் சொற்களும் பொருள் தொடர்பு உடையவாக இருக்கவேண்டும் என்று குறிப்பிட்டு நடராசன் இலக்கிய உதாரணங்களையும் தந்துள்ளார்.

> . . . . . . . . . . . . . . . . . . . . . முன்கை
> வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து
> (நெடுநல். 141-2)

இங்கு வளையொடு கடிகைநூல் யாத்து என்பதில் யாத்து என்ற வினை கடிகை நூல் என்ற பெயருக்கு மட்டும் பொருந்தும். எனவே முதல் பெயருக்கு உரிய வினை (இடுதல்) கெடுக்கப்பட்டுள்ளது. இங்கு அரசி அணிந்த அணிகலன் என்ற

பொருள் ஒற்றுமை உடையதால் ஒரு பெயருக்கு உள்ள வினை கெடுக்கப்பட்டுள்ளது.

> கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
> தொல்கவின் வாடிய தோள்

என்ற குறளில் (1235) வாடிய என்ற வினை கவினுக்கு (அழகு) மட்டுமே உரியது. தொடிக்குக் களைந்தது/விழுந்தது என்ற வினையே உரியது. இங்கும் தொடி (வளை) தொல்கவின் (முன்னைய அழகு) என்பவை மகளிரின் அழகு நலன் என்ற முறையில் பொருள் ஒற்றுமை உடையவை. மேலும் இந்த மூன்று உதாரணங்களிலும் இரண்டாவதுக்கு உரிய பெயருக்கு உரிய வினையே புறநிலையில் வந்துள்ளதும் கவனிக்கத்தகுந்தது.

'தொடுவிப்பாய் துகிலொடு பொன் தோலுடுத்து உழல்வோனே' (சுந்தரர் தேவா இடைக்காலம்) என்ற உதாரணத்தையும் நடராசன் காட்டியுள்ளார். இங்கு உடுத்து என்ற வினை துகில், தோல் ஆகிய இரண்டுக்கும் அணி என்பது பொன்னுக்கும் உரியவை. பாடலில் கடைசிப் பெயருக்கு உரிய வினையே புறநிலையில் உள்ளது. இங்குத் துகில் பொன், தோல் ஆகிய மூன்றும் உடுப்பவை என்ற பொருள் உறவு உடையவை என்ற முறையில் உடு என்ற வினையை மட்டும் கையாண்டிருக்கலாம்.

ஆடலொடு பாடலைக் கேட்டு ரசிப்பதிலே தான் சுகம் என்ற சினிமாப் பாடல் அடியை எடுத்துக்காட்டி நடராசன் மேலே கூறிய பொதுமையை வலியுறுத்தியுள்ளார். ஆடலைப் பார்த்தும் பாடலைக் கேட்டும் ரசிப்பது என்று பொருள். இங்கு ஆடல் பாடல் கலைகள் என்ற முறையில் இரண்டு பெயர்ச் சொற்களும் எனவே இரண்டாம் பெயருக்கு உரிய வினை மட்டுமே புறநிலையில் அமைந்துள்ளது.

'வேறுவினை' என்பது ஒன்றன் கண்ணே வினையாதல் என்று விளக்கிக் கல்லாடர் மலையொடு பொருத மால் யானை, காவொடு அறக்குளம் தொட்டான் என்ற இரண்டு உதாரணங்களையும் முன்னுள்ள இரண்டு கருத்தையும் இணைத்துள்ளார். புறநிலையில் ஒரு வினை அமைந்தாலும் அது வருதற்கான அடிப்படை வேறுவேறு என்பதால் இரண்டையும் இணைத்தது சிறப்பானதாகக் கொள்ளமுடியாது.

### 4.9.9.4. அதனொடு இயைந்த ஒப்பல் ஒப்புரை

'ஒவ்வாததனை ஒப்பித்தல் ஒப்பல் ஒப்புரை' என்று விளக்கி இளம்பூரணர் 'முத்தோடு முழாக் கோத்து' என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார். இங்கு முத்து ஓர் அணிப் பொருள். முழா ஓர் இசைக் கருவி. எனவே இரண்டையும் இணைத்தது என்பது பொருத்தமாக இல்லை. கல்லாடர் தவிரப் பிற உரையாசிரியர்கள் வேறு உதாரணங்களைக் கொடுத்துள்ளார்கள். கல்லாடர் இளம்பூரணர் உதாரணத்தில் போலும் என்ற சொல்லைச் சேர்த்ததன்மூலம் 'முத்தொடு முழா கோத்ததுபோலும்' ஒப்பு இல்லாதன இணைக்கப்பட்டன என்று விளக்கம் பெற்று விடுகிறது.

'ஒப்பு அல்லதனை ஒப்பாகக் கூறல்' என்று சேனாவரையர் விளக்கி, பொன்னொடு இரும்பனையர் நின்னொடு யாரே' என்ற உதாரணத்தைக் கொடுத்து 'ஒப்பு அல்லதனை ஒப்பாகக் கூறலின் ஒப்பல் ஒப்புரை ஆயிற்று' என்பார். 'பொன்னொடு இரும்பை உவமித்தலை ஒப்பார் நின்னோடு பிறரை உவமிக்கும் இடத்து' என்பது நச்சினார்க்கினியர் விளக்கம். சிவலிங்கனார் (வேற்றுமையியல் உரைவளம். ப. 132) கூறியபடி இங்குப் பொன்னுக்கும் இரும்புக்கும் உவமை கூறப்படவில்லை. நீ/பிறர் என்ற மாறுபாடு நிரனிறையாகப் பொன்/இரும்பு என்று உவமிக்கப்பட்டிருக்கிறது என்பதே சரி. இன்னொரு நிலையில் உறழ்ச்சி உவமையாக்கப்பட்டிருப்பதாகக் கொள்ளலாம். உனக்கும் பிறருக்கும் உள்ள மாறுபாடு பொன்னுக்கும் இரும்புக்கும் உள்ள மாறுபாட்டோடு உவமிக்கப்பட்டுள்ளதாகக் கொள்ளலாம் எப்படியானாலும் சிவலிங்கனார் குறிப்பிட்டபடி அந்த உதாரணம் ஒப்பல் ஒப்புரை என்பது பொருந்தாது.

உவமையின்றி இதுவும் அதுவும் ஒக்கும் என அளவினானும், நிறையினானும், எண்ணினானும் வருவன இதனொடு ஒக்கும் இது, இக் கூற்றோடு ஒக்கும் இக்கூறு என்று தெய்வச்சிலையார் விளக்கி இதனொடு ஒக்கும் இது, இக்கூற்றொடு ஒக்கும் இக்கூறு என்ற உதாரணங்களைக் கொடுத்துள்ளார்.

### 4.9.10. இன்னான் (ஏது)

இளம்பூரணர் இன்னான், ஏது என்று இரண்டாகக் கொள்ளச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் இன்னான் ஏது

என்று ஒன்றாகவும் தெய்வச்சிலையார் இன், ஆன், ஏது என்று மூன்றாகவும் கொண்டுள்ளார்கள்.

இன்னான் என்பதற்கு இத்தகையன் என்ற பொருள் கொண்டு இளம்பூரணர் கண்ணாற் கொத்தை என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார். கண்ணால் குருடன் என்று பொருள் ஏது என்பதைத் தனிச் சொல்லாகக் கொண்டு அது ஏதுப்பொருள் கொண்டுள்ளார். முயற்சியாற் பிறத்தலான் சொல் நிலையாது என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார்.

சேனாவரையர் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் 'இன்னான் ஏது' என்று கொண்டு அவை ஏதுப் பொருளில் வரும் என்று விளக்கி முயற்சியாற் பிறத்தலான் ஒலி நிலையாது என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார்கள். இங்குக் காரணமும் காரியமும் உடன்கூறப்பட்டிருக்கின்றன.

> 'இன் என்பது இன் என்னும் சொல். ஆன் என்பது ஆன் என்னும் சொல். ஏது என்பது ஏது என்னும் சொல் . . . இவையும் மூன்றாம் வேற்றுமைப் பொருள் உணர்த்தும் உருபுகளும் பொருள் உணர்த்தும் சொற்களுமாம்'.

என்பது தெய்வச்சிலையார் விளக்கம்.

> புகை உண்மையின் நெருப்பு உண்மை அறிக
> புகை உண்மையான் நெருப்பு உண்மை அறிக
> புகை உண்மை ஏதுவாக நெருப்பு உண்மை அறிக

என்பவை அவருடைய உதாரணங்கள். பொருள் நிலையில் சேனாவரையர் கருத்தோடு ஒத்துபோகிறது. உருபு நிலையில் இன், ஆன் என்று இரண்டு அமைகிறது. ஏது என்பது ஆக என்ற வினையடைச் சொல்லை ஏற்று வந்திருப்பதாலும் அதன் அகராதிப் பொருள் உடையதாலும் அதைத் தனி உருபாகக் கொள்வது பொருந்தாது.

> *அன்ன பிற' என்பதனால் (558.8) காரணம், நிமித்தம், துணை, மாறு என்பன. இவையும் மூன்றாம் வேற்றுமைப் பொருள் உணர்த்தும் உருபுகளும் பொருள் உணர்த்தும் சொற்களுமாம்'*

என்று தெய்வச்சிலையார் கூறுவதில் 'பொருள் உணர்த்தும் சொற்கள்' என்பதே சரி; உருபுகள் என்பது பொருந்தாது.

### 4.10. நாலாம் வேற்றுமை

நாலாம் வேற்றுமை உருபாக -கு என்பதே கொள்ளப்பட்டிருக்கிறது. அதன் புதைநிலை வடிவம் -க்கு என்பதே. ஏனென்றால் தொல்காப்பியரே

வல்லெழுத்து முதலிய வேற்றுமை உருபிற்கு
ஒல்வழி ஒற்றுஇடை மிகுதல் வேண்டும்

என்று (114) கூறியுள்ளதால் உயிரீற்றுச் சொல் முன் -கு என்பது -க்கு ஆக (நம்பிக்கு, நங்கைக்கு) மாறும். கண் + கு, எள் + கு என்று வரும்போது கட்கு, எட்கு என்று மாறுதற்குக் காரணம் இங்கும் -க்கு என்று வடிவம் இருப்பதுதான். ஒற்றைக் ககரமாக இருந்தால் *கண்கு (எண்கு போல) *எள்கு (வெள்கு போல) இயல்பாக அமையலாம். ண்/ள் இன வல்லினமாக மாறுவதற்குக் காரணம் -க்கு என்ற வடிவம் புதைநிலையில் இருப்பதுதான். -கு என்று கொண்டதற்குக் காரணம் தொல்காப்பியரின் அடிநிலைக் கிளவி பற்றிய கோட்பாடே (சண்முகம் 1980).

தொல்காப்பியர் 'எப்பொருளாயினும் கொள்ளும் அதுவே' (559:3) என்று அதன் பொருளைக் குறிப்பிட்டுள்ளார். அதைக் கோடல் பொருள் என்று உரையாசிரியர்கள் கொள்வார்கள். அது வேறு பொருளிலும் வருவதைத் தொல்காப்பியர் வேற்றுமை மயங்கியலில் (27) குறிப்பிட்டுள்ளார். இது இன்றைய மொழிக்கும் பொருந்தும். அதனால் 'எந்தப் பொருளாயினும் அந்தப் பொருளைத் தன்னகத்தே கொண்டது என்று கூடப் பொருள் கொள்ளலாம் எனத் தோன்றுகிறது' என்பார் அகத்தியலிங்கம் (2002: 136). இதன் சரியான பொருளை முதலில் உரையாசிரியர் வழிப் பார்ப்போம்.

'ஈவதோர் பொருளை ஏற்க நிற்கும் அது' என்பார் இளம்பூரணர். இங்கு 'ஈவதோர் பொருள்' என்பது செயப்படு பொருள்; 'ஏற்க நிற்பது' என்பது கொள்ளுவோன் அல்லது கொள்ளுவது. அதைத் தொல்காப்பியர் 'இன்னதற்கு' என்ற தொழில் முதனிலை (வேற்றுமைமயங்கு 29) என்றும் குறிப்பிட்டுள்ளார். மேலும் அங்கு வினை என்பது ஈதல் என்ற பொருட்களைச் சார்ந்ததாக இருக்கவேண்டும் என்பது புலனாகிறது. ஆனாலும் இளம்பூரணர் 'சாத்தற்குச் சோறு' என்று வினை இல்லாமலே உதாரணம் கொடுத்துள்ளார். அது சாத்தற்குச் சோறு கொடுத்தான், சாத்தற்குச் சோறு சமைத்தான்

என்று இரண்டு வகையில் பொருள்படும். அப்படியானால் சமை போன்ற பிற வினைகளும் வரலாம். அது இன்னதற்கு என்ற தொழில் முதனிலை உடையதே. கண்ணனுக்குப் பெண் கேட்டான், தம்பிக்குச் சட்டை வாங்கினான் போன்ற தொடர்களில் வந்துள்ள கேள், வாங்கு போன்ற வினைகளும் நாலாம் வேற்றுமை ஏற்றுவரும்போது இன்னதற்கு (இன்னாருக்கு) என்ற தொழில் முதனிலை பெற்று வந்துள்ளதாகக் கருதலாம்.

'யாதாயினும் ஒரு பொருளாயினும் அதனை ஏற்று நிற்கும்' என்று விளக்கிச் சேனாவரையர் அந்தணர்க்கு ஆவைக் கொடுத்தான் என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார். மேலும், மாணாக்கற்கு நூற்பொருள் உரைத்தான் என்ற உதாரணத்தைக் காட்டிக்

> 'கொடைப் பொருளவாகிய சொல்லான் அன்றிப் பிற வாய்பாட்டாற் கூறப்படுவனவும். . . கொடுப்பான் பொருளாய்க் கொள்வான்கட் செல்லாது ஆண்டுத் தோன்றும் பொருளும் (உள்ளபடியே சுந்தரமூர்த்தி பதிப்பு) எல்லாம் அடங்குதற்கு 'எப்பொருளாயினும்'

என்று விளக்கியுள்ளார். அதனால் கொடு என்ற பொருட்களைச் சாராத வினைச் சொற்களும் நாலாம் வேற்றுமை கொண்டு முடியும் என்பதும், கொடைப்பொருள் பருப்பொருளாக இருக்க வேண்டியதில்லை என்பதும், ஆகிய இரண்டு உண்மைகள் புலப்படுத்தப்பட்டுள்ளன. இங்கு நாலாம் வேற்றுமை ஏற்ற பெயர் கொள்வோனாக இருக்கவேண்டும் என்பது தெளிவு.

தொல்காப்பியர் அடுத்த சூத்திரத்தில் நாலாம் வேற்றுமை கொண்டுமுடியும் 10 பொருளைப் பட்டியல் இட்டுள்ளார். அதில் கொடை என்ற சொல் இல்லை என்பது வியப்பாக இருந்தாலும், அது அவருக்கு நாலாம் வேற்றுமை கொடைப் பொருளை அடிப்படையாகக் கொண்டதில்லை என்ற கருத்தைப் புலப் படுத்துவதாகத் தோன்றுகிறது. உண்மையில் உரையாசிரியர்கள் வடமொழியில் நாலாம் வேற்றுமை சம்பிரதானம் என்று அழைக்கப்படுவதால் கொடைப் பொருளுக்கு முக்கியத்துவம் கொடுத்துவிட்டார்கள்.

கொள்ளுதல் என்பதைத் தன்வினையாகவும் கொடு என்பதைப் பிறவினையாகவும் கொள்ளலாம். மேலும் கொள்ளுதல் செயப்படுபொருள் குன்றாவினை எனவே தன்வினையாக அமையும்போது கொண்டவன் எழுவாயாகவும்

கொண்ட பொருள் செயப்படுபொருளாகவும் அமையும். கொடு என்பது பிறவினை என்ற முறையில் கொடுக்கப்பட்ட பொருள் செயப்படுபொருளாகவும், பிறவினைக்கு உரிய கருத்தா அதாவது கொடுத்த தொழிலைச் செய்த கருத்தா எழுவாயாகவும் கொண்டது. நாலாம் வேற்றுமையாகவும் அமையும். கண்ணன் பணம் கொடுக்க முருகன் (பணம்) கொண்டால் கண்ணன் முருகனுக்குப் பணம் கொடுத்தான் என்றால் முருகன் அந்தப் பணத்தைக் கொண்டான் என்று பொருள். இது எதிர்மறையில் வெளிப்படுகிறது. கண்ணன் முருகனுக்குப் பணம் கொடுத்தும்/ கொடுக்க முருகன் இந்தப் பணத்தைக் கொள்ளவில்லை.

பொருள் செயப்படுபொருளாக இருக்கவேண்டும் என்ற கட்டுப்பாடு இல்லை. ஏனெனில்

ஒருவன் மகனுக்குப் புத்தகம் வாங்கினான்
ஒருவனுக்குப் பார்சல் வந்தது

போன்ற வாக்கியங்களில் ஏற்போன் என்ற முறையில் நாலாம் வேற்றுமை கையாளப்பட்டுள்ளது. இங்கு இரண்டாவது வாக்கியத்தில் பயனிலை வினையான வா என்ற தொழிலின் பயன் கருத்தா, நாலாம் வேற்றுமை ஏற்றுவந்துள்ளது. எனவே கொள் என்ற சொல் செயப்படுபொருள்குன்றா வினையாகப் 'பெறு' என்ற பொருளிலும், செயப்படுபொருள் குன்றிய வினையாக பொருந்து என்ற பொருளிலும் வரும் என்று தமிழ்ப் பேரகராதி குறிப்பிட்டுள்ளது,

### 4.10.1. அதற்கு உடம்படுதல்

உடம்படு என்ற வினையின் ஏற்பலகாக நாலாம் வேற்றுமை வருவதைக் குறிப்பிடுகிறது. எனவே சான்றோர் கொலைக்கு உடம்பட்டார் என்ற உதாரணத்தை உரையாசிரியர்கள் (சேனாவரையர் & நச்சினார்க்கினியர் & தெய்வச்சிலையார்) கொடுத்துள்ளார்கள். ஆனால் அவர்களே சாத்தற்கு மகள் உடம்பட்டார் சான்றோர் (இளம், சேனா, நச்சர், கல்லா) என்ற வாக்கியத்தையும் கொடுத்துள்ளார்கள். இங்குச் சாத்தற்கு என்ற நாலாம் வேற்றுமை புறநிலையில் வந்தாலும் உடம்பட்டார் என்பதை ஏற்பு அலகு என்பது பொருந்துமா என்பது கேள்விக்குரியது. சான்றோர் சாத்தற்கு உடம்பட்டார் என்பது (நான் அவனுக்கு ஒத்துக் கொண்டேன்) என்னும்போது என்ன/ எதற்கு ஒத்துக்கொண்டேன் என்ற கேள்வி எழும். எனவே

சான்றோர் சாத்தற்கு மகள் தா/தருவதற்கு உடம்பட்டார் என்பதே புதைநிலை வாக்கியமாக இருக்க வேண்டும். நான் அவனுக்கு ஒத்துக் கொண்டேன் என்பது நான் அவனுக்குப் பணம் தருவதற்கு ஒத்துக்கொண்டேன் என்று விளக்க வேண்டும். அப்படியானால் அது கலப்பு வாக்கியம். துணை வாக்கியத்தின் வினையான தா என்பதற்கு உரிய நாலாம் வேற்றுமையே சாத்தற்கு என்பது. அது உடம்படு என்ற வினையின் நாலாம் வேற்றுமை அல்ல.

திருமணத்துக்கு உடம்பட்டார் = திருமணம் செய்து கொள்வதற்கு உடம்பட்டார் வாடகைக்கு உடம்பட்டார்= வாடகை தருவதற்கு உடம்பட்டார் என்னும்போது ஒரு வினை செயற்கு அல்லது செய என்ற வினையெச்சத்தைப் புதைநிலையில் பெற்று அது மறைவதால் புறநிலையில் நாலாம் வேற்றுமை தோன்றுகிறது.

### 4.10.2. அதற்கு வினை உடைமை

கரும்பிற்கு வேலி என்ற உதாரணத்தை மட்டும் இளம்பூரணர் கொடுத்துள்ளார். வினை உடைமை என்பதை உபகாரம் உடைமை என்று விளக்கிச் சேனாவரையர் அதே உதாரணத்தைக் கொடுத்துள்ளதால் அதைக் கரும்புக்கு வேலி உபகாரமாய் உள்ளது/உபகாரமாகும் என்று விரிக்கலாம். இது ஒரு வகையில் வினையின் பயனை அனுபவிப்பது அல்லது அனுபவிப்பது (Experiencer) என்று கொள்ளலாம்.

> 'உருபேற்கும் பொருட்கும் வினையாதல் உடைமை
> கூறும் வழியும் நான்காம் வேற்றுமைப்பாலன'

என்று தெய்வச்சிலையார் விளக்கி

> அவர்க்குப் போக்கு உண்டு, அவர்க்கு வரவு உண்டு
> என்பது வினை. கரும்பிற்கு உழுதான் என்பதும் அது

என்பார். இங்குள்ள வினையின் பயனை உறுவது நாலாம் வேற்றுமைப் பெயர் என்று கொள்ளத் தோன்றுகிறது. அவர்க்குப் போக்கு உண்டு என்பதன் பொருள் என்ன? வினை என்பதால் அவர் போவார் என்று கொள்ளலாமா? அப்படியானால் போதல் செய்பவர் என்ற முறையில் கருத்தாவாக அமையும். அவர்க்குப் போக்கு உண்டு என்ற வாக்கியத்தில் போக்கு எழுவாய். எனவே போக்கின் பயனை உறுகிறவர் என்ற முறையில் 'அவர்' நாலாம் வேற்றுமை ஏற்றுள்ளது.

### 4.10.3. அதற்குப் படுபொருள்

படுபொருள் என்பது என்ன? என்ற விளக்கத்தில் உரையாசிரியர்கள் கருத்து மாறுபடுகிறார்கள்.

'சாத்தற்குப் படுபொருள் கொற்றன்' என்று இளம்பூரணர் உதாரணத்தை மட்டும் கொடுத்துள்ளார். கொற்றன் சாத்தனுக்கு உரியவன் என்றால் சாத்தன் பங்குக்கு/அணிக்கு உரியவன் என்று விரிக்கலாம்.

> 'பொதுவாகிய பொருளைப் பகுக்குங்கால் ஒரு பங்கிற்
> படும்பொருள் அது சாத்தற்குக் கூறு கொற்றன்'

என்பது சேனாவரையர் வாசகம். இங்குச் சூத்திரப் பொருளும் உதாரணமும் பொருந்தும் விதம் புரியவில்லை. நச்சினார்க்கினியர், கல்லாடர் ஆகிய இருவரும் கிட்டத்தட்ட அதே பொருளையும் அதே உதாரணத்தையும் கொடுத்துள்ளார்கள். 'ஒன்றற்கு உரிமை உடையவாகப் பொதுவாகிய பொருளைக் கூறு இடப்படுதல்' என்று நச்சினார்க்கினியர் விளக்கி, அதே உதாரணத்தைக் கொடுத்துள்ளார். 'ஒன்றற்கு ஒரு பொருள் உரிமையுள் வழிக் கூறிடப்படுதல் என்னும் பொருண்மை; சாத்தற்குப் படுப்பொருள் கொற்றன்' என்பது கல்லாடர் வாசகம்.

> மாறாகத் தெய்வச்சிலையார்
>
> 'உருபு ஏற்கும் பொருட்கு இயல்பு கூறுதல்' என்று விளக்கி, '1. இதற்கு நிறம் கருமை, 2. இதற்கு வடிவம் வட்டம், 3. இதற்கு அளவு நெடுமை, 4. இதற்குச் சுவை கார்ப்பு, 5. இச்சொற்குப் பொருள் இது, இவ்வாடைக்கு விலை இது எனவும் இவ்வாறு வருவனவும் கொள்க 6. இன்னும் . . . உடைப் பொருளும், அவ்விடத்திற்கு ஆம் பொருளும், காலத்திற்கு ஆம் பொருளும் ஆகி வருவனவும் கொள்க. 7. அவற்குச் சோறு உண்டு, 8. ஈழத்திற்கு ஏற்றின பண்டம், 9. காலத்திற்கு வைத்த விதை எனவரும்'

என்று பல வகையான உதாரணங்கள் கொடுத்துள்ளார்.

தொல்காப்பியர் 'இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்' என்று (502) கூறுவதால் இதற்கு நிறம் கருமை, என்பதை இதன் நிறம் கரிது, போன்ற வாக்கியத்திலிருந்துதான்

பெறவேண்டும். இதற்குக் கருமை நிறம் இயல்பானது. இதற்கு இயல்பான நிறம் கருமை. இதற்கு நிறம் கருமை, இதற்கு உரிய நிறம் கருமை.

இவை எல்லாம் எப்படிப் படுபொருளில் அடங்கும் என்று புரியவில்லை.

### 4.10.4. அதுவாகு கிளவி

கடி சூத்திரத்திற்குப் பொன் என்ற உதாரணத்தை மட்டும் இளம்பூரணர் கொடுத்துள்ளார். 'பொன் கடி சூத்திரமாய்த் திரியுமாகலின் அதுவாகு கிளவி, கிளவி = பொருள்' என்பது சேனாவரையர் விளக்கம். 'ஒன்று ஒன்றாகத் திரிந்து வரும் பொருட்கு வருவது' என்பது தெய்வச்சிலையார் விளக்கம். 'உருபு ஏற்கும் பொருள் தானேயாய்த் திரிவதோர் பொருண்மை' என்ற சேனாவரையர் விளக்கத்தைப் பொதுமைப்படுத்தி அதே உதாரணத்தையும் விளக்கத்தையும் தெய்வச்சிலையார் கொடுத்துள்ளார். அது தொடர். எனவே அதன் புதைநிலை வாக்கியம் என்ன? பொன் கடி சூத்திரம் செய்வதற்கு ஆகும். --> பொன் கடி சூத்திரத்திற்கு ஆகும் --> பொன் கடிசூத்திரம் ஆகும் என்று கொண்டால் தொல்காப்பியர் உடம்படு என்ற வினை போல இங்கு 'ஆகு' என்ற செயல் (Active) வினை குறிக்கப்பட்டிருப்பதாகக் கொள்ளலாம்.

மண் பொம்மை செய்வதற்கு ஆகும் --> மண் பொம்மைக்கு ஆகும் அதுவே, தொடராகப் பொம்மைக்கு மண் என்று மாறலாம்.

படிப்பதற்குப் புத்தகம் வாங்கினான் = பொருட்டு
வீட்டுக்குப் பணம் வாங்கினான் = பொருட்டு
கடிசூத்திரத்திற்குப் பொன் வாங்கினான் = பொருட்டு

கடிசூத்திரம் செய்வதற்கு/செய்வதன் பொருட்டுப் பொன் வாங்கினான் என்றும் விளக்கலாம். அப்போது வாங்கு என்ற வினையும் கடிசூத்திரத்துக்கு என்ற நாலாம் வேற்றுமை 'பொருட்டு' (தொல்காப்பியர் வார்த்தையில் (வேற்றுமை மயங்கியல் 29) இது பயன்' என்பது) பொன் என்பது செயப்படு பொருள். இரண்டாம் வேற்றுமைக்கும் நாலாம் வேற்றுமைக்கும் உள்ள உறவே அதுவாகு கிளவி. கடிசூத்திரம் செய்யப் பொன் வாங்கினான் என்று விளக்கவேண்டும். அப்போது அதுவாகு கிளவி கருவி வேற்றுமையாக அமைகிறது. பணத்தால் வீடு வாங்கலாம் என்பது சரியான தொடர் என்றாலும் வீட்டுக்குப்

பணம் வாங்கினான் என்பது வேறு பல பொருளிலும் வரும். வீட்டில் குடியிருப்பதற்குப் பணம் வாங்கினான் என்றும் பொருள் கொள்ளலாம். எனவே ஒரு சில நிலையில் மட்டுமே எழுவாயும் பொருட்டு' வேற்றுமைத் தொடரும் அதுவாகுகிளவியாக அமையும்.

### 4.10.5. அதற்கு யாப்பு உடைமை

'கைக்கு யாப்பு உடையது கடகம்' என்ற உதாரணத்தை மட்டும் இளம்பூரணரும் சேனாவரையரும் கொடுத்து விளக்கம் எதுவும் தரவில்லை. 'கடகம் கைக்குச் சிறப்பு உடையது.' உருபு ஏற்கும் பொருட்கு வலியாதல் உடைமை' என்று விளக்கித் தெய்வச்சிலையார் 'யாக்கையை யாப்புடைத்தாய்ப் பெற்றவர் தாம் பெற்ற யாக்கை' என்ற இலக்கிய உதாரணத்தையும் (நாலடியார் 28) போர்க்கு வலி குதிரை, நினக்கு வலி வாள்' என்ற வழக்கு உதாரணங்களையும் கொடுத்துள்ளார். 'ஒன்றற்கு ஒன்று பொருத்தம் உடைத்தாதல்' என்று நச்சினார்க்கினியர் விளக்கி 'கைக்கு யாப்பு உடையது கடகம்' என்ற வழக்கு உதாரணத்தையும் 'உண்டி வெய்யோர்க்கு உறுபிணி எளிது' என்ற செய்யுள் உதாரணத்தையும் (முதுமொழி, 77) கொடுத்துள்ளார்.

இது மூன்றாம் வேற்றுமைக்கு உரிய 'அதற்றகு கிளவி'யோடு தொடர்பு உடையதுபோலக் காணப்படுகிறது. அப்போது, கடகத்தால் யாப்பு உடையது கை என்று கொள்ளலாம். அப்படியானால் முன்னதில் கடகம் எழுவாயாக அமையப் பின்னதில் கை எழுவாயாக அமைகிறது. அதாவது தலைப்பு (Topic) மாறுபடு வதற்கு ஏற்ப இலக்கண உறவு மாறுபடும் என்பது தெளிவாகிறது.

### 4.10.6. அதன் பொருட்டாதல்

கூழிற்குக் குற்றேவல் செய்யும் என்ற உதாரணத்தை மட்டும் இளம்பூரணரும் சேனாவரையரும் கொடுத்து விளக்கம் எதுவும் தரவில்லை. 'ஒரு பொருட்டாக வருதல்' என்று விளக்கித் தெய்வச்சிலையார் கூடுதலாகக் கூலிக்கு ஒலிக்கும் என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார். 'ஒரு பொருளினை மேற்பெறுதல் காரணமாக ஒரு தொழில் நிகழ்தல்' என்று நச்சினார்க்கினியர் விளக்கி இளம்பூரணர் கொடுத்த உதாரணத்தையே கொடுத்துள்ளார்.

அதை மொழியியலார் (அகத்தியலிங்கம் 1984: 239) நோக்க வேற்றுமை என்று குறிப்பிட்டு நாலாம் வேற்றுமை ஏற்ற பெயரிலுள்ள நாலாம் வேற்றுமை புதைநிலை வாக்கியத்தில் செயற்கு என்ற வினையெச்சத்தின் பகுதியாக வரும் என்றும் விளக்குவார். கூழ் பெறுவதற்குக் குற்றேவல் செய்யும் என்ற புதைநிலை வாக்கியமே புறநிலையில் கூழிற்குக் குற்றேவல் செய்யும் என்று மாற்றம் பெற்று வந்துள்ளதாக விளக்குவார்கள். ஏனைய நாலாம் வேற்றுமையைக் குறி (Goal) வேற்றுமை என்று மொழியியலார் விளக்குவார். அது புதைநிலையில் அப்படியே வரும். மேலும் ஒரு வாக்கியத்தில் இரண்டு நாலாம் வேற்றுமை ஏற்ற பெயர் வரலாம். அவைகளில் ஒன்று குறிப்பொருளிலும் மற்றொன்று நோக்கப் பொருளிலும் வரும். கண்ணனுக்கு வீட்டுக்குப் பணம் கொடுத்தான் என்று வரும்போது கண்ணனுக்கு வீட்டில் குடியிருப்பதற்குப் பணம் கொடுத்தான் என்று பொருள்படும். அதாவது முன்னது புறநிலையில் எளிய வாக்கியமாக இருந்தாலும் புதைநிலையில் அது ஒரு கலவை வாக்கியமாகவே கருதப்படும். அதனால் பொருட்டு வேற்றுமை மாற்றத்தால் (Transformation) வந்ததாகக் கருதப்படுகிறது. மேலும் கண்ணனிடம் வீட்டுக்குப் பணம் கொடுத்தேன் என்றும் கூறமுடியும். அப்போது வீடு என்பது குறிப்பொருள் ஆகும்.

### 4.10.7. நட்பு, பகை, காதல், சிறப்பு

தொல்காப்பியர் நட்பு, பகை, காதல், சிறப்பு ஆகியவை களும் நாலாம் வேற்றுமைப் பொருளாகக் குறிப்பிட்டிருக்கிறார். அவைகளுக்கு உரிய உதாரணங்களை மட்டுமே உரையாசிரியர்கள் கொடுத்துள்ளார்கள். அவைகளில் சில வினைகளாகவும் சில பெயர்களாகவும் உள்ளன.

இளம்பூரணர்

நாய்க்கு நட்பு உடையன்
மக்கட்குப் பகை பாம்பு
தாய்க்குக் காதலன்
வடுக அரசர்க்குச் சிறந்தார் சோழிய அரசர்

சேனாவரையர்

அவற்கு நட்டான், அவற்குத் தமன்
அவற்குப் பகை/மாற்றான்
நட்டார்க்குக் காதலன், புதல்வற்கு அன்புறும்
வடுக அரசர்க்குச் சிறந்தார் சோழிய அரசர்,
கற்பார்க்குச் சிறந்தது செவி

தெய்வச்சிலையார்

> அவற்கு நட்டான், அவற்குத் தமன்
> அவற்குப் பகை, கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை
> நட்டார்க்குக் காதலன், புதல்வற்கு அன்புறும்
> வடுக அரசர்க்குச் சிறந்தார் சோழிய அரசர்
> கற்பார்க்குச் சிறந்தது செவி

இங்கு இரண்டு செய்திகள் சுட்டிக் காட்டத் தகுந்தவை: 1. அவை கொண்டு முடியும் சொற்களின் பொருள் அடிப்படையில் அமைந்துள்ளமை, 2. அவை பெயராகவும் வினையாகவும் அமைந்துள்ளமை. நட்பு, பகை, காதல் ஆகிய மூன்றையும் மொழியியலார் (அகத்தியலிங்கம், 2002: 133) உறவுப்பொருள் என்று பொதுமைப்படுத்துவார்கள். சிறப்பு என்பதை வடுக அரசர்க்குச் சிறந்தார் சோழிய அரசர், என்பது உறவுப் பொருள். யாம் உமக்குச் சிறந்தனம் என்பது எல்லாரையும் விட/ எல்லாவற்றையும் விட என்பதை மீஉயர்நிலை (Superlative) கூறலாம். அந்த நிலையில் கற்பார்க்குச் சிறந்தது செவி என்ற உதாரணத்தையும் இதில் அடக்கலாம்.

### 4.11. ஐந்தாம் வேற்றுமை

ஐந்தாம் வேற்றுமை உருபு -இன் என்றும் அதன் வாக்கிய அமைப்பு 'இதனின் இற்று இது' என்றும் தொல்காப்பியர் (561) குறிப்பிட்டுள்ளார். அதனுடைய பொருளை ஏன் குறிப்பிட்டுச் சொல்லவில்லை என்று தெரியவில்லை. அதாவது மூன்றாம் வேற்றுமைக்கு 'வினைமுதல், கருவி' என்று கூறியவர் இங்கு அதன் பொருளைப் பொதுமைப்படுத்திக் கூறவில்லை. எனவே தெய்வச்சிலையார் நீங்கிய எல்லா உரையாசிரியர்களும் ஐந்தாம் வேற்றுமை பொரூஉ, நீக்கம், எல்லை, ஏது என்ற பொருளில் வரும் என்றும் தெய்வச்சிலையார் எல்லைப் பொருளை ஒழிந்த ஏனைய மூன்று பொருளில் வரும் என்றும் பொதுமைப்படுத்திக் குறிப்பிட்டுள்ளார்கள்.

இங்குப் பொருளுக்கும் வாக்கிய அமைப்புக்கும் உள்ள உறவிலும் சிக்கல் உள்ளன.

> ஐந்தாம் வேற்றுமை நான்கு பொருள் உடைத்து;
> பொரூஉப் பொருளும், நீக்கமும், எல்லையும்
> ஏதுவும் என.

எனவே பொரூஉப் பொருண்மை சிறந்தமையின் சிறப்பாக எடுத்துச் சொல்லப்பட்டுள்ளது என்பது இளம்பூரணர் விளக்கம். அவர் பொழிப்புரையில் 'இப்பொருளின் இத்தன்மைத்து இப்பொருள்' என்று கூறுவதால் ஒப்புப் பொருவு மட்டுமே கருதினாரோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

சேனாவரையர் முதலில் 'பொருவு இரு வகைப்படும். உறழ் பொருவும் உவமப் பொருவும் என' என்று விளக்கிவிட்டு,

> 'அச்சம் முதலிய நான்கும் ஒழித்து ஒழிந்த இருபத்து நான்கும் ஒத்த பண்பு வேறுபாடு பற்றிப் பொரூஉப் பொருள் விரித்தவாறு. . . பல வாய்பாட்டோடு வழக்கின் கண் பயின்று வருதலும் உடைமையால் பொரூஉப் பொருள். இதற்குச் சிறப்புடைத்தாகலின் பெரும் பான்மையும் அதனையே விரித்தார்'

என்று விளக்கியுள்ளார். இங்கு 'ஒத்த பண்பு வேறுபாடு பற்றிப் பொரூஉப் பொருள் விரித்தவாறு' என்ற தொடர் இவரும் ஒப்பு மட்டுமே கருதினரோ என்றே நினைக்கத் தோன்றுகிறது.

மிகுதலும் குறைதலும் ஒத்தலும் என மூன்று வகைப்படும் என்பார் தெய்வச்சிலையார். உண்மையில் உறழ் பொருவு என்பதில் மிகுதலும் குறைதலும் அடங்கும். மேலும்,

> 'இவற்றுட் பெரிது' என்பது மிகுதி குறித்து நின்றது . . . ஏனையவும் இவ்வாறு நோக்கிக் கொள்க. இவையெல்லாம் ஒப்புக் குறித்துழி உவமையாம்'

என்ற தெய்வச்சிலையார் விளக்கத்தில் இந்தச் சூத்திரத்தில் மிகுதலும் ஒத்தலும் கூறப்பட்டிருக்கிறது என்பது தெளிவு படுத்தப்பட்டுள்ளது. அதே முறையில் சிறுமை என்பதற்குத் தந்த 'இதனிற் சிறிது' என்ற உதாரணம் குறைதலும் கூறப்பட்டிருக்கிறது என்று கொள்ள இடம் கொடுக்கும் அப்படியானால் அவர் கூறிய மிகுதல், குறைதல் ஒப்பு ஆகிய மூன்றும் கூறப் பட்டுள்ளது என்று ஆகும். நச்சினார்க்கினியரும் கல்லாடரும் இதே கருத்தினரே.

> 'அன்ன பிறவும்' என்றதனால் எல்லைப் பொருளும் ஏதுவும் கொள்க. எல்லை: கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்கு என்பன. ஏது: முயற்சியின் பிறத்தலின் ஒலி நிலையாது

என்பது இளம்பூரணர் வாசகம்,

'எல்லைப் பொருள்: கருவூரின் கிழக்கு, இதனின் ஊங்கு' என வரும். கிழக்கு, ஊங்கு என்பன வினைக் குறிப்பு அல்லவேனும் இற்று என்னும் பொருள்பட நிற்றலின் இற்று என்றலேயாம்'

என்ற சேனாவரையர் விளக்கம் புறநிலையில் பெயர் கொண்டு முடிந்ததுபோல இருந்தாலும் புதைநிலையில் குறிப்பு வினைமுற்று இருப்பதாக் கொள்ளவேண்டும் என்பதைப் புலப்படுத்துகிறது. கருவூரின் கிழக்கு எல்லைத்து மருவூர் என்றும், அல்லது கருவூரின் கிழக்கிற்று மருவூர் என்றும் புதைநிலை வாக்கியம் அமைக்கலாம். ஊங்கு வரும்போதும் அதனின் ஊங்கு ஆக்கம் பெரிது உண்டு/இல்லை என்றும் கொண்டால் முன்னதில் எல்லை அடியாகத் தோன்றிய குறிப்பு வினைமுற்று அல்லது திசைப்பெயர் அடியாகப் பிறந்த குறிப்புவினை முற்று என்றும், பின்னதில் இற்று வாய்பாடு நேரடியாகவும் வந்ததாக அமையும். 'அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை' என்ற திருக்குறள் (32) தொடரில் ஆக்கம் பெரிது இல்லை என்று கொண்டால் பொருத்தமாக இருக்கும்.

உண்மையில் உரையாசிரியர்கள் காட்டிய நீக்கம், ஏது ஆகிய இரண்டின் வாக்கிய அமைப்பும் மாறுபட்டதுதான். ஊரின் நீங்கினான்/நீங்கும்/பற்றுவிட்டான்/பற்றுவிடும் என்ற நீக்கல் பொருள் வாக்கியங்களில் வினை இரண்டு வாக்கியங்களும் தெரிநிலை வினைகளைக் கொண்டவையே. அப்படியே பன்மை, சின்மை என்ற இரண்டு வாய்பாடும், பொரூஉப் பொருளில் வந்தாலும் இங்குப் பலர்/பல, சிலர்/சில என்ற பெயர்ச் சொற்களே முடிக்கும் சொற்களாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

| | |
|---|---|
| இளம்பூரணர்: | இவரில் பலர் இவர்<br>இவரில் சிலர் இவர் |
| சேனாவரையர்: | இதனிற் பல இவை<br>இதனிற் சில இவை |
| தெய்வச்சிலையார்: | இவரில் பலர் இவர்<br>இவற்றிற் சில ஏறும் |

இங்கும் பலர்/பல, சிலர்/சில என்பவையே வினைமுற்றாகக் கொள்ளமுடியுமா? பலராக/பலவாக உள்ளார்கள்/உள்ளன என்று கொண்டால் அதை நிரப்புவானாக (Complement)க் கருத வேண்டும். இது 'இடையே' (among) என்ற பொருள் உடையதாகக் கருதப்படும். இது எப்போதும் பன்மைப் பெயர்களுடனேயே வரும்.

வடிவு என்பதற்கு 'இதனின் வட்டம் இது' என்ற உதாரணத்தை எல்லோரும் கொடுத்துள்ளார்கள். இங்கும் வட்டம் என்ற பெயரிலிருந்து குறிப்பு வினை உண்டாக்கிப் பயன்படுத்தினால் வட்டத்து/வட்டத்திற்று இது பொருத்தமாக இருக்கும்.

'சிறத்தல், இழிதல்' என்ற இரண்டு பொருளுக்கு உரிய வினை வடிவங்களும் விவாதத்துக்கு உரியவை. அவைகளுக்கு 'இவனின் சிறந்தான் இவன், இவனின் இழிந்தான் இவன்; இவனின் சிறந்தது இது, இவனின் இழிந்தது இது' போன்ற உதாரணங்களையே உரையாசிரியர்கள் கொடுத்துள்ளார்கள். அவை தெரிநிலை வினைபோலப் பால் விகுதி ஏற்றுவந்துள்ளன. உண்மையில் இவை தெரிநிலை வினைகள் ஆனாலும் நிலை வினைகள் (Stative verbs) என்று கருதப்படும்; அவை தொழில் வினைகள் (Active verbs) அல்ல. மேலும் அவை அடிச்சொல் நிலையில் ஒப்புப் பொருள் உடையவை.

> ''பல்பொருட்கு ஏற்பின் நல்லது கோடல்'
> என்பதானும் இச்சூத்திரம் நீங்க நிற்பது குறித்தது
> என்பது கொள்ளப்படும்'

என்ற தெய்வச்சிலையாரின் வாசகம் இடைக்காலத்தில் ஐந்தாம் வேற்றுமை என்றாலே நீங்கல் பொருள்தான் பிரதானமானது என்ற கருத்தின் பிரதிபலிப்பு. அந்தக் கருத்து நீடித்து வந்துள்ளதற்குக் கால்டுவெல் (1856:283), அகத்தியலிங்கம் (1984:240) சான்று.

தெய்வச்சிலையார் பொரூஉப் பொருளை உணர்த்தும் வினைகளும் ஏதுப் பொருளில் வரும் என்றும் அவை ஆக்க வினை (*ஆயிற்று) பெற்று வரும் என்றும் குறிப்பிட்டுள்ளார். அது தொல்காப்பியக் கருத்தையும் மொழி அமைப்பையும் பின்பற்றியது. 'ஏது'வாக வருவதால் அது இயல்பாக - இயற்கையாக அந்தப் பண்பை உடையது இல்லை என்று ஆகும்.

> 'இவையெல்லாம் ஒப்புக் குறித்துழி உவமையாம்
> ஏதுக் குறித்துழிக் கரிதாயிற்று, வட்டமாயிற்று என
> உதாரணங் காட்ட உருபேற்ற பொருள் எல்லாம்
> ஏதுவாம்'

என்பது அவருடைய வாசகம். இவனின் அவன் வெயிலில் நின்றமையால் கரியனாயினான்' என்ற உதாரணத்தில் பொருவும் ஏதுவும் உள்ளன. அதைத் தொல்காப்பியர் செயற்கைப் பொருள்

என்பார். இவனின் அவன் கரியன் என்பது இயற்கைப் பொருள் எனப்படும். அதாவது பின்னதில் அவன் இயற்கையாகவே கரியன் என்றும், முன்னதில் இயல்பாகக் கரியன் அல்ல; அவன் கரியன் ஆனதற்குக் காரணம் கூறப்பட்டுள்ளது.

இங்கு நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது -இன் வேற்றுமை ஒப்பு, ஏது, நீக்கல் என்ற பொருளில் வருவதுதான். உண்மையில் ஏதுவை மூன்றாம் வேற்றுமைக் கண்ணும், நீக்கலை ஏழாம் வேற்றுமைக் கண்ணும் அடக்கவேண்டும். ஏழாம் வேற்றுமையான இட வேற்றுமையும் நீக்கல் வேற்றுமையும் வேற்றுமைத் தொடர் ஏற்கும் வினையால் மட்டுமே மாறுபடுகின்றன என்பார் கால்டுவெல் (1856: 284), நீங்கு, இழி, இறங்கு, புறப்படு போன்ற வினைகள் இடப்பொருளைத் தரும் என்பது கால்டுவெல்லின் வாதம். '(நீங்கல் வேற்றுமை) தொழில் நடக்கும் முன் எங்கே இருந்தான் என்பதைக் காட்டும். இந்நிலையில் இதனை இட வேற்றுமையில் அடக்கிவிடலாம் என்பதால் இதனைத் தனியொரு வேற்றுமையாகக் கருதவில்லை' என்பார் அகத்தியலிங்கம் (1984: 240). ஏது மூன்றாம் வேற்றுமையோடு தொடர்புடையது என்பதை உரையாசிரியர்கள் சுட்டிக்காட்டியுள்ளார்கள். அவர்கள் கருத்துப்படி இங்குக் கூறப்பட்டது. காரக ஏது இன்னொரு ஏதுவான ஞாபக ஏது மூன்றாம் வேற்றுமையில் அடங்கும் என்று கூறியதால் காரக ஏதுவையும் அடக்கலாம் என்பது பெறப்படும். உண்மையில் ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருள்தான் அடிப்படை, அதுதான் சங்கத் தமிழை இடைக்காலத் தமிழிலிருந்து வேறுபடுத்துகிறது. மற்ற இரண்டு பொருள்களும் (ஏது, நீங்கல்) விகுதியின் வடிவ ஒற்றுமையால் இங்குச் சேர்க்கப்பட்டிருப்பதாகக் கருதவேண்டும்.

அடுத்து, முக்கியமாகக் கவனிக்க வேண்டியது வினைச் சொற்களை வேற்றுமை உருபு ஏற்கும் அடிப்படையில் பாகுபடுத்தும்போது பெரும்பான்மையான குறிப்பு வினைகள் ஐந்தாம் வேற்றுமைக்கு உரியதாகக் கொள்ளலாம். உண்மையில் அது வினையடையாகவே பயன்படுகிறது. முருகன் கண்ணனின் கரியன் என்னும் போது கருமையின் தன்மை அதிகமாக உள்ளது என்ற முறையில் பொருள் நிலையில் ஐந்தாம் வேற்றுமை வினையடையாகக் கருதலாம். அந்த நிலையில் ஏனைய வேற்றுமைகள் தொடரியல் நிலையில் வினையடையாக அமைந்துள்ளது என்று கருத வேண்டும். எனவே எல்லா வினைச் சொற்களும் ஐந்தாம் வேற்றுமை ஏற்று வரும்போது ஒரு பண்பு

வினையடையைப் புதைநிலையில் பெற்று வரும். முருகன் கண்ணனின் வேகமாக ஓடினான்/படித்தான் என்பதும் ஒரு வகையில் உறழ்ச்சி (மிகுதல்) பொருள் உடையதே. அதனால் உறழ்ச்சி, ஒப்பு ஆகியவை குறிப்பு வினைகொண்டு முடியவேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

ஒரு வடிவம் தருகிற எல்லாப் பொருளையும் தொகுப்பது ஒன்று, பொருள் அடிப்படையில் வருகிற வடிவங்களைத் தொகுப்பது மற்றொன்று. தமிழில் இரண்டு முறையும் காணப்பட்டாலும் ஒவ்வொரு வேற்றுமைக்கும் உரிய ஒரு பொருளை வரையறுத்து அதற்கு உரிய வடிவங்களை வரையறுக்க வேண்டும். மொழி அமைப்பு சிக்கலானதால் அப்படி வரையறுக்க முடிவதில்லை.

### 4.12. ஆறாம் வேற்றுமை

ஆறாம் வேற்றுமைக்கு உரிய உருபு 'அது'; 'இதனது இது' என்னும் வாய்பாட்டில் வந்து தன்கிழமை, பிறிதின் கிழமை என்னும் இரண்டு பொருளில் வரும். எல்லா உரையாசிரியர்களும் கொண்டு முடியும் சொற்கள் பன்மையாக இருந்தால் அகர வடிவம் என்று குறிப்பிட்டுள்ளார்கள். இது இலக்கண ஆசிரியர்களின் தருக்க ரீதியான சிந்தனையில் பிறந்தது. அது என்பதை ஒருமை என்று தவறாக எண்ணியதன் விளைவு. 'அது என்பது ஒருமை உணர்த்தும் சொல்' என்று வெளிப்படையாகவே தெய்வச்சிலையார் அந்தக் கருத்தைக் குறிப்பிட்டுள்ளார். அவன, அவள என்னும் ஈற்றகரம் என்று மட்டுமே இளம்பூரணர் கூற, சேனாவரையர், அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் இதன இவை என்னும் பன்மை உருபுத் தொடர் என்றும், தெய்வச்சிலையார் பன்மை உணர்த்தும் அகர உருபு என்றும் குறிப்பிட்டுள்ளார்கள்.

தொல்காப்பியர் (299) நகர ஈற்றுச் சொல்லுக்குப்பின் அகரம் சாரியையாக வரும் என்பார். பொருநக் கடுமை: சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரையில் அகரம் பன்மையோடு வரவில்லை. பரிபாடலில் (21:5) வெரிநத் தோல் என்ற வடிவம் வந்துள்ளது. இங்கு அகரம் ஆறாம் வேற்றுமை உருபாகவே கருதவேண்டும்.

நின்ன கண்ணி (உன்னுடைய மாலை) - புறம். 45:3

மரத்த கோடு - மரத்தின் கொம்பு - குறுந். 99:4

கன்னடம் போன்ற பிற திராவிட மொழிகளில் அ/ஆ ஆறாம் வேற்றுமை உருபாகப் பயன்படுகிறது. ஒன்று இரண்டு இடங்களில் அகரம் பன்மைப் பெயருக்கு முன் வந்தாலும், அந்த மரபு வேர் கொள்ளவில்லை. காரணம் தமிழில் வேற்றுமை உருபின் வடிவம் கொண்டுமுடியும். பெயரின் பண்புக்கு ஏற்பப் பிற வேற்றுமைகளின் வடிவம் மாறுவதில்லை.

தற்கிழமை, பிறிதின் கிழமை என்பதற்குப் பிற உரையாசிரியர் தரும் விளக்கத்திலிருந்து தெய்வச்சிலையார் மாறுபடுகிறார்.

'தன்னொடு தொடர்ந்ததோர் பொருள் தற்கிழமை; தன்னின் வேறாயதோர் பிறிதின் கிழமை' என்ற இளம்பூரணர் விளக்கத்தை ஒட்டியே தெய்வச்சிலையார் ஒழிந்த உரையாசிரியர்கள் விளக்கம் கொடுத்துள்ளார்கள்.

தன் கருத்து தன்னோடு ஒற்றுமை உடைய பொருளை, பிறிது என்றது தன்னின் வேறாய பொருளை என்று சேனாவரையரும் பிறரும் விளக்கியுள்ளார்கள். முருகனது கை, முருகனது வீடு என்ற தொடர்களில் கை, வீடு ஆகிய முருகனுடைய உடைமைப் பொருள் என்றாலும் உடைமையில் வேறுபாடு இருக்கிறது. அந்த வேறுபாடு உடையானுக்கும், உடைமைப் பொருளுக்கும் உள்ள உறவின் வேறுபாடு. முன்னதை (கை) உடையானிடமிருந்து பிரிக்க முடியாது; எனவே தற்கிழமை, பின்னதை (வீடு) உடையானிலிருந்து பிரிக்கமுடியும்; எனவே பிறிதின் கிழமை. இந்த விளக்கந்தான் இன்று வரை ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

ஆனால் தெய்வச்சிலையார் விளக்கம் முற்றிலும் மாறுபட்டுள்ளது.

> 'தன் என்றது உடையானை; பிறிது என்றது உடைப் பொருளை; ஈண்டுக் கிளவி என்பது பொருள். கிளக்கப்படுவது கிளவி ஆயிற்று. தன்னோடும், பொருளோடும் உள்ள உரிமை உணர வரும் ஆறாவது .... (உதாரணம்) சாத்தனது குழை. சாத்தன குழைகள். உலகத்துக் குழை உடையாரும் பலர், குழையும் பல; ஆயினும் இக்குழை இவனது என்னும் உரிமை தோன்ற வந்தவாறு கண்டுகொள்க'

என்பது அவருடைய விளக்கம். மேலும் அடுத்த சூத்திரத்தில் அதையே 'உடையானும் உடைப்பொருளும் ஆகிய கிழமை'

என்று சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளார். இதன் உள்கிடை விளங்கவில்லை.

ஆறாம் வேற்றுமை எல்லாத் தொடர்களையும் வாக்கியத்தி லிருந்து வருவிக்க முடியும் என்று மாற்றிலக்கண மொழியியலார் கருதுகிறார்கள். (உ.ம். அகத்தியலிங்கம், 1984: 246).

தொல்காப்பியர் விளக்கிய ஆறாம் வேற்றுமைப் பொருள்களை உரையாசிரியர்கள் தற்கிழமைக்கு உரியவை, பிறிதின் கிழமைக்கு உரியவை என்று பாகுபடுத்த முயன்றுள்ளார்கள்.

ஒன்று பல குழீஇயது, வேறுபல குழீஇயது, ஒன்றியற் கிழமை, உறுப்பின் கிழமை, மெய்ப்பிறிதாகிய கிழமை என்று இளம்பூரணர் தற் கிழமையை ஐந்து வகையாக்கியவர் 'பிறிதின் கிழமை இதுபோலப் பகுதிபடாது' என்று கூறியுள்ளார். இந்தக் கருத்தை அப்படியே கல்லாடர் ஏற்றுக்கொண்டுள்ளார். சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் தற்கிழமையின் ஐந்து வகைப் பாகுபாட்டை ஒத்துக் கொண்டு பிறிதின் கிழமையையும் பொருளின் கிழமை, நிலத்தின் கிழமை, காலத்தின் கிழமை என்று மூன்று வகையாகப் பிரிக்கலாம் என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

இந்தப் பாகுபாடுகள் உரையாசிரியர்களே செய்தவை. இது வேறு ஒரு சிந்தனைப் பள்ளியின் (School of thought) கருத்து களாகக் கொள்ளத் தகுந்தது. அவர்கள் தொல்காப்பியர் கருத்து அடிப்படையில் ஏன் பிரித்துப் பார்க்கவில்லை என்று தெரியவில்லை. இருந்தாலும் அவை எப்படித் தொல்காப்பியரால் கொள்ளப்பட்டிருக்கின்றன என்று பொருத்திப் பார்க்கவேண்டும். சேனாவரையர் அந்த முயற்சியில் இறங்கியுள்ளார். உண்மையில் ஒன்று பல குழீஇயது, வேறுபல குழீஇயது என்ற இரண்டும் 'குழூஉ' என்பதிலும், உறுப்பின் கிழமை ஒரு வழி உறுப்பு என்பதிலும், மெய் திரிந்ததாய கிழமை என்பது திரிந்து வேறுபட்டது என்பதிலும் அடங்கும். ஒன்றியற் கிழமையான நிலத்தது அகலம் என்பதைச் சேனாவரையர் சாத்தனது இயற்கை, நிலத்தது அகலம் என்பன இயற்கைக் கிழமை கூறுவதால் இயற்கையில் அடக்கியுள்ளார் என்பது தெளிவு. வினை என்பதற்கு சாத்தனது தொழில், சாத்தனது செலவு என்ற உதாரணங்களைக் கொடுத்து 'இவை மெய் திரிந்ததாய தற் கிழமை என்று விளக்குவதால் வினையும் தற்கிழமையில்

அடங்கும். செயற்கை (சாத்தனது கற்றறிவு), முதுமை (அரசனது முதுமை/ முதிர்வு) ஆகியவையும் தற்கிழமையில் அடங்கும்.

காட்டது யானை, கபிலரது பாட்டு, பாரியது பாட்டு - பொருட் பிறிதின் கிழமை; முருகனது குறிஞ்சிநிலம், யானையது காடு = நிலப்பிறிதின் கிழமை; வெள்ளியது ஆட்சி = காலப் பிறிதின் கிழமை என்பவை பிறிதின் கிழமைக்குச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் காட்டும் உதாரணங்கள். இவை தொல்காப்பியர் கூறிய வாழ்ச்சி, தெரிந்து மொழிச் செய்தி ஆகிய இரண்டில் அடங்கும்.

தொல்காப்பியர் கூறிய எல்லா வகைகளையும் உரையாசிரியர்கள் இரண்டு கிழமைகளிலும் அடக்கவில்லை விடுபட்ட முறைமை, கருவி, துணை, கலம் ஆகியவை பிறிதின் கிழமையில் அடக்கலாம்.

தெரிந்து மொழிச்செய்தி இலக்கியத் திறனாய்வில் கோட்பாட்டு நிலையில் முக்கியத்துவம் வாய்ந்தது. உண்மையில் இது நூலுக்கும் ஆசிரியனுக்கும் உள்ள உறவு பற்றியது. அதே சமயத்தில் அது வாசிப்புக் கோட்பாட்டுக்கும் வழி வகுத்துள்ளது என்பது சுட்டிக்காட்டத்தகுந்தது. தொல்காப்பியர் ஆறாம் வேற்றுமைப் பொருள்களைத் தற்கிழமைக்கும், பிறிதின் கிழமைக்கும் உரியவை என்னென்ன? என்று பிரித்துக் கூறாதலால் தெரிந்துமொழி செய்தி எதைக் குறிக்கிறது? எந்தக் கிழமைக்கு உரியது? என்பதில் கருத்து வேறுபாடு காணப்படுகிறது. அவ் வேறுபாடுகள் இலக்கியக் கோட்பாட்டு வேறுபாட்டின் பிரதிபலிப்பாகவும் அமைந்துள்ளமை சிறப்பானது.

தெரிந்து மொழிச் செய்தி எதைக் குறிக்கிறது? என்பது முதல் பிரச்சினை. 1. இலக்கியத்தைக் குறிக்கிறது என்ற முறையிலும் கருத்து வேறுபாடு காணப்படுகிறது. அ. ஓர் ஆசிரியர் பாடல்கள் (கபிலரது பாடல் = சேனாவரையர், நச்சினார்க்கினியர், கல்லாடர்), ஆ. ஒருவரைப் பற்றிய பாடல்கள் (பாரியது பாட்டு = நச்சினார்க்கினியர், கல்லாடர்), இ. பாட்டின் பொருள் (பாட்டது கருத்து/பொருள் = தெய்வச்சிலையார்), ஈ. இலக்கணம் (பரணரது பாட்டியல் = சேனாவரையர், நச்சினார்க்கினியர்) என்று நாலு வகையும் உரையில் அடங்கியுள்ளன. அதற்கு ஏற்பவே தற்கிழமை, பிறிதின் கிழமை என்ற இரண்டு வகையிலும் அடங்குவதாகவும் கொள்ளப் பட்டுள்ளன.

தெரிந்து மொழிச் செய்தி என்பதற்கு இளம்பூரணர் பொழிப்புரை எழுதாமல் கபிலரது பாட்டு என்ற உதாரணத்தை மட்டும் கொடுத்துள்ளார். அது இலக்கியத்தை மட்டும் குறிக்கிறது என்பது தெளிவு.

> 'கபிலரது பாட்டு பரணரது பாட்டியல் என்பன
> செய்யுட் கிழமை தெரிந்து மொழியால் செய்யப்படுதல்.
> இவை பொருட் பிறிதின் கிழமை'

என்பது சேனாவரையர் உரை விளக்கம். அதாவது தேர்ந்தெடுத்த மொழியால் செய்யப்பட்ட ஆக்கம் என்பது இலக்கியத்தையும் இலக்கணத்தையும் குறிப்பதாகவும் அமையும். அந்த ஆக்கங்கள் 'பொருட் பிறிதின் கிழமை' என்பதால் அந்த ஆக்கம் ஆசிரியரிலிருந்து வேறுபட்டது என்ற கருத்தையும் சேனாவரையர் கருதுகிறார் என்பது புலனாகும். இலக்கண நூலைப் பொறுத்த வரையில் பிறிதின் கிழமை என்பதில் பொருத்தமானதே. இலக்கியம் பிறிதின் கிழமை என்பது நூல் வேறு, நூலாசிரியர் வேறு; நூலாசிரியனின் வாழ்க்கை பற்றிக் கவலைப்படாமல் நூலிலுள்ள கருத்துகள் மட்டுமே வாசகன் பார்க்க வேண்டும் என்று பொருள். வாசகனும், ஆசிரியன் என்ன நினைத்து எழுதினான், ஆசிரியன் கருதிய பொருள் என்ன? என்று ஆராய வேண்டும் என்று கருதாமல் வாசகன் தன்னுடைய கருத்துநிலைக்கு ஏற்பவும் விளக்கலாம் என்ற சுதந்திரம் உடையவன் என்று பொருள்.'

> 'கபிலரது பாட்டு. இது பாரியது பாட்டு எனவும்
> நிற்றலின் இதுபொருட்கும் உரித்தாம் பரணரது
> பாட்டியல். இதுவும் அது இவை பொருட்பிறிதின்
> கிழமை'

என்பது நச்சினார்க்கினியர் விளக்கம். பாரியது பாட்டு என்பது கபிலரது பாட்டின் தலைவன் என்ற முறையில் உள்ளடக்கத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அவர் 'செய்தி' என்பதைச் செய்தவன்/உள்ளடக்கம்' என்ற இரண்டையும் குறிப்பதாகக் கொண்டதால்தான் 'இரு பொருட்கு உரியதாம்' என்ற விளக்கத்தைச் சேர்த்துள்ளார். உள்ளடக்கம் என்பதால் பிறிதின் கிழமை என்பது ஐயம் இல்லை. அவரும் பொருட்பிறிதின் கிழமை என்று கூறுவதால் ஆசிரியரும் அவரது படைப்பும் வேறுபட்டன என்ற கருத்து உடையவர் என்பது தெளிவு.

கல்லாடர் உரை நச்சினார்க்கினியரைப் பின்பற்றினாலும் கிழமை உறவு பற்றி அவர் வேறுபட்ட விளக்கம் கொடுத்துள்ளார்.

> 'கபிலரது பாட்டு இதுவும் பாரியது பாட்டு எனவும் நிற்றலின் இரு பொருட்கு உரிமையாம். கபிலரது என்புழி மெய் திரிந்தாகிய தன்பாற்படும். பாரியது என நிற்புழிப் பிறிதின் கிழமையாம்'

என்பது அவர் வாசகம். இவர் கருத்துப்படி தெரிந்து மொழி என்பது இலக்கியம் மட்டும்தான். கபிலரது பாட்டு என்பது மெய் திரிந்ததாகியது என்பது தற்கிழமையில் அடங்கும். ஏனென்றால் மெய் திரிந்தது என்பது எல்லா உரையாசிரியரும் தற்கிழமைக்குள் அடங்கும் என்றுகொண்டு எட் சாந்து (எள்ளால் ஆன சாந்து) என்பதை உதாரணமாகக் கொண்டுள்ளார்கள். அப்படியானால் கபிலரது பாட்டு மெய் திரிந்ததாகிய தற்கிழமை என்பதன் உள்கிடை என்ன? ஆசிரியரே நூல்; நூலே ஆசிரியர்; நூல் ஆசிரியரிலிருந்து வேறுபட்டது அல்ல. அதனால்தான் அவர் இலக்கண நூலை இங்குச் சேர்க்கவில்லை. திரிந்து வேறுபடும் என்ற பொதுக் கருத்தின் கீழ்ப் பரணரது பாட்டியல் என்ற உதாரணத்தைச் சேர்த்துள்ளார். எனவே இலக்கண நூலில் ஆசிரியன் வேறு, அவனுடைய நூல் வேறு என்ற கருத்தமைவு பெறப்படுகிறது.

தெய்வச்சிலையார் இவர்களிலிருந்து முற்றிலும் மாறுபடுகிறார். 'தெரிந்த மொழியினது செயல்கூறல்' என்று பொழிப்புரைத்து, பாட்டது கருத்து, பாட்டது பொருள் என்ற உதாரணங்களைக் கொடுத்துள்ளார்.

இங்கு ஒரு முக்கியக் கேள்வி எழுகிறது. அதாவது கிழமை பற்றித் தொல்காப்பியர் கருத்து என்ன? ஆறாம் வேற்றுமை தற்கிழமை, பிறிதின் கிழமை என்ற இரண்டு பொருள் உடையது என்னும்போது 'தெரிந்து மொழிச் செய்தி' அந்த இரண்டுக்குள் அடங்கும் என்ற கருத்துத் தொல்காப்பியர்க்கு உடன்பாடு உண்டு. அவர் ஆறாம் வேற்றுமைத் தொடர்களைக் கிழமை அடிப்படையில் பிரிக்காததால் இதையும் குறிப்பிட்ட கிழமை என்று சுட்டிக் கூறவில்லை என்று சமாதானம் கொள்ளலாம்.

### 4.13. ஏழாம் வேற்றுமை

ஏழாம் வேற்றுமை உருபான கண், வினைசெய் இடம், நிலம், காலம் என்று மூன்று பொருளில் வரும். மேலும் அடுத்த

சூத்திரத்தில் கண், கால், புறம், அகம், உள் உழை முதலிய 19 உருபுகளைத் தொகுத்து 'அன்ன பிறவும் அதன் பால' என்று குறிப்பிட்டுள்ளார்.

இங்கு நாலு பிரச்சினைகள் உள்ளன: அ) ஏழாம் வேற்றுமைக்கு உரிய எல்லா உருபுகளும் சொல்லாகத் தனிப் பொருள் உடையவை. எனவே அவை எப்படி உருபாகச் செயல் படுகின்றன. அதாவது சொல்லுக்கும் உருபுக்கும் என்ன மாறுபாடு? ஆ) அவைகளை உருபு என்று குறிப்பிடலாமா? இ) ஏழாம் வேற்றுமை உருபுகளாகச் செயல்படுவனவற்றில் பொருள் வேறுபாடு, ஈ) வினைசெய் இடம் என்பது நிலத்திலிருந்து எப்படி மாறுபட்டது.

கண் என்பது ஒரு சொல் உருபு எனவே சேனாவரையர், தெய்வச்சிலையார், கல்லாடர் ஆகிய மூவரும் சொல்லுக்கும் சொல் உருபுக்கும் உள்ள வேறுபாடு காட்டியுள்ளார்கள்.

> 'குறிப்பில் தோன்றும்' என்றது அவற்றை இடமாகக் குறித்தவழி அவ்வேற்றுமை தோன்றும் என்றவாறு. எனவே இடமாகக் குறிக்கப்படாத வழி அப்பெயர்க்கண் வேற்றுமை தோன்றா என்பதாம்'

என்பது சேனாவரையர் விளக்கம்.

> அவள் கண் நன்று
> அவள்கண் சென்றான்

என்ற இரண்டு வாக்கியத்தில் முதல் உதாரணத்தில் கண் சொல்லாகவும் இரண்டாவது உதாரணத்தில் சொல் உருபாகவும் உள்ளது. சேனாவரையர் கருத்துப்படி முன்னது இடமாகக் குறிக்கப்படாதது. பின்னது இடம் குறித்தது. இது பொருள் அடிப்படையிலான விளக்கமே தவிர அமைப்பு அடிப்படை யிலான விளக்கம் இல்லை.

> 'இவையெல்லாம் பெயரைச் சார்ந்து தனித்தனி வரின் பெயராகி உருபு ஏற்கும். பெயரைச் சாராது இடமும் காலமும் ஆகிய பொதுமை உணரவரின் உருபு மாத்திரமாகி நிற்கும்'

என்ற தெய்வச்சிலையார் விளக்கமும் பொது நிலையிலேயே உள்ளது. அவள் கண் வீங்கியது என்ற உதாரணத்தில் தொழில் நிகழ்ந்தாலும் சொல்லாக உள்ளது. சொல்லாக இருக்கும்போது

அதுவே தலைச்சொல்; முன்னுள்ள பெயர் அடையாக அமையும். உருபாக அமையும்போது தலைச்சொல் முன்னுள்ள சொல்லே. முன்னுள்ள சொல்லின் பொருளை வேறுபடுத்துவதாகவே (அவள்/அவளை/அவள்கண் என்ற முறையில்) அமையும். முன்னது எழுவாய்த் தொடர், பின்னது ஏழாம் வேற்றுமைத் தொடர். மேலும் முன்னது இன்னொரு வேற்றுமை உருபு ஏற்றே ஏனைய வேற்றுமைத் தொடராக அமையும் (அவள் கண்ணைப் பார்த்தாள், அவள் கண்ணால் பேசினாள்).

> 'இம்மூன்றன் கண்ணும் (வினைசெய் இடம், நிலம், காலம்) வருமிடத்து இடமும் இடத்து நிகழ் பொருளும் அ) வேறுபட வருவனவும் ஆ) வேறு படாமல் வருவனவும் என இருவகைய'

என்பது கல்லாடர் விளக்கம். முன்னது (அ) சொல்; பின்னது உருபு. அது பொருள் நிலைப்பட்ட விளக்கம். ஆனாலும் முன்னது இரண்டு சொல் என்ற பொருளும்; பின்னது ஒரு சொல் என்ற குறிப்பும் புதைந்துள்ளன.

இங்குச் சூத்திர நோக்கிலும், பொருள் நோக்கிலும் இரண்டு பிரச்சினைகள் உள்ளன: 1. கண் உருபு என்று முதலில் சொல்லிவிட்டு அடுத்த சூத்திரத்திலும் அதைக் கூறியிருப்பது. இது சூத்திர நோக்கு. 2. ஏழாம் வேற்றுமை உருபின் பொருள் பற்றியது. அது பொருள் நோக்கு.

இளம்பூரணர் 'கண் என்னும் பெயருடைய வேற்றுமைச் சொல்' என்று பொழிப்புரைத்து விளக்கவுரையில் இவ்வேற்றுமை உருபு பல ஆதலின் அவற்றை விரிக்கின்றார்' என்று குறிப்பிட்டுள்ளார். சேனாவரையர் கண் என்பதை உருபாக இளம்பூரணர் கொண்டார் என்றுகொண்டு அது பொருந்தாது என்று வாதாடியுள்ளார். அடுத்த சூத்திரத்திலும் 'கண்' கூறப் பட்டிருப்பதால் நூலுக்குக் கூறியது கூறல் என்ற குற்றம் ஏற்பட்டு விடும் என்பது அவரது வாதம். உண்மையில் இது சூத்திர உருவாக்கம் பற்றிய பிரச்சினை. பிற வேற்றுமைகளில் 'ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி', 'ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி' என்ற இடங்களில் எல்லாம் அந்தந்த வேற்றுமையின் உருபுகளாகக் கொண்டதுபோலவே கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி என்ற தொடரையும் கண் என்ற வேற்றுமை உருபைக் குறிப்பதாகக் கொள்வது தவறு இல்லை. கூறியது கூறல்

என்ற குற்றம் ஏற்படும் என்பதற்குத் தொல்காப்பியரே எழுத்ததி காரத்தில் வேற்றுமை பற்றிப் பேசிவிட்டு இங்கும் விளக்கி யுள்ளது கிளவியாக்கத்திலும் வினையியலிலும் திணைபால் விகுதிகளை வருணித்துள்ளது கூடுதல் சான்று. இரண்டு இடத்திலும் உள்ள வருணனையில் வேறுபாடு உள்ளது என்று வாதிடலாம். சூத்திர ஆக்க முறையில் இதுவும் ஒரு முறை என்று கொண்டால் தவறு ஒன்றும் இல்லை. இரண்டாவது சில உருபுகள் அத்துச் சாரியை ஏற்று வருவதால் (அகம்., புறம். போன்றவை- ஊரகத்து, ஊர்ப்புறத்து) உருபு என்று கொள்ளக் கூடாது. அகம் போன்றவை அத்துச் சாரியை ஏற்று வருவதற்குக் காரணம் வேறு. அவை பொருளுடைய சொற்கள். தம்முடைய பொருளை இழந்து உருபாகப் பயன்பட்டுள்ளன. அதே சமயத்தில் முழுச் சொல் என்ற பழைய உணர்வு காரணமாகச் சாரியை ஏற்று வந்துள்ளன. உண்மையில் ஊரகம்/ஊரகத்து என்ற இரண்டும் பொருள் ஒன்று தான். இதனால் தான் மொழி அமைப்பு முழுவதும் தருக்கரீதியாக அமைந்தது இல்லை என்பார் மொழியியலார்.

இளம்பூரணர் சார்பில் இன்னொருவர் முன், உழை ஆகிய வேற்றுமை உருபுபோல் வேற்றுமை ஏற்கும் பெயர் வடிவத்தோடு வருவதை எடுத்துக்காட்டியதற்குச் சேனாவரையர் சமாதானம் கூறியுள்ளார்.

> 'அ) உருபு அல்லவேல் என்னுழை என்முன் என நிலைமொழி உருபிற்கு ஓதிய செய்கை பெற்றவாறு என்னை எனின்:- அதற்பொருட்டாகலின் (தொல்காப்பியர் 560:3). தம்முடைய தண்ணளியும் தாமும், எனவும் உருபின் பொருட்பட வரும் பிறமொழி வந்துழியும், நிலைமொழி அச்செய்கை பெற்று நிற்றலின் அச் செய்கை உருபு புணர்ச்சிக்கே என்னும் யாப்புறவு இன்று என்க'

என்ற விளக்கத்தில் கேள்வியும் (அ) பதிலும், (ஆ) அடங்கி யுள்ளன. உருபியலில் கூறிய புணர்ச்சி - உருபு புணர்ச்சிக்கு (சொல்லும் வேற்றுமை உருபும் சேர்வது) மட்டும் வரவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. அது பொருட்புணர்ச்சி - சொல்லும் சொல்லும் வரும்போது வரலாம் என்பது அவருடைய சமாதானம். அதாவது புணர்ச்சி விதிகளுக்கு நெகிழ்ச்சி கொடுத்துள்ளார். அவரே சொல் இல்வழி உய்த்துணர்க என்பது

போல அவரே வேறு இடங்களில் சமாதானம் செய்துள்ளதால் கண் என்று கூறுவதில் தவறு இல்லை. உண்மையில் அது ஒரு சொல் உருபுதான் என்று விளக்குவதுதான் முக்கியம்.

பிற வேற்றுமை உருபுகளின் பொருளில் வேறுபாடு இல்லை. ஏழாம் வேற்றுமையில் இடப்பொருளை உணர்த்தும் போது மட்டும் சில உருபின் மாற்று வடிவங்கள் பொதுப் பொருள், சிறப்புப் பொருள் வேறுபாடு உண்டு. இதை உரையாசிரியர்கள் தெளிவுப்படுத்தியுள்ளார்கள்.

> 'கண்கால் புறம் அகம் உள் என்பன முதலாயவற்றது பொருள் வேற்றுமை வழக்கு நோக்கி உணர்ந்து கொள்க'

என்ற சேனாவரையர் வாசகத்தில் ஏழாம் வேற்றுமை உருபுகளுக்குள் பொருள் வேறுபாடு இருப்பது குறிப்பிடப் பட்டிருக்கிறது. மேலும் சேனாவரையர் அகம், புறம் போன்றவை எப்படிக் கண் உருபால் பதிலீடு செய்யப்பட்டாலும் பொருள் மாறவில்லை என்பதை உதாரணத்துமூலம் விளக்கியுள்ளார்.

'ஊர்க்காற் சேயை, ஊர்க்கட் சேய் என்றும் ஊர்ப்புறத்து நின்ற மரத்தை ஊர்க்கண் மரம்' என்றும் எல்லா உருபுகளுக்கும் உதாரணங்கள் காட்டியுள்ளார்.

> 'அன்ன பிறவும்' என்றதனால் பொருட்கண் உணர்வு, என்கண் அன்புடையன், மலர்க்கண் நாற்றம் ஆகாயத்துக்கட் பருந்து என்னும் தொடக்கத்தன கொள்க'

என்ற சேனாவரையர் வாசகத்தில் அவர் ஏழாம் வேற்றுமை உருபு பருப்பொருளில் மட்டும் என்று மனதில் கொண்டு நுண்பொருளிலும் என்று விரிவுபடுத்துவது புலனாகிறது.

> 'ஆலின் கீழ்க் கிடந்தது ஆ, ஆலின் கண் இருந்தது குரங்கு என்ற வழி கீழ்க் கிடந்தது ஆ, மேலிருந்தது குரங்கு என இவ்வாறு வரும் இடவேறுபாடும் குறித்துக் கொள்ளப்படும்'

என்ற தெய்வச்சிலையார் வாசகம். அதே உதாரணத்தோடு விளக்குகிறது. இதை ஏழாம் வேற்றுமை இடப்பொருளில் மட்டும் பொதுப் பொருள், சிறப்புப் பொருள் என்ற வேறுபாடு இருக்கிறது என்று உணர்ந்து கொள்ளவேண்டும். அடுத்த சூத்திர

உரையில் அவர் நேரடியாகவே அதைப் பொதுமைப்படுத்திக் குறிப்பிட்டிருக்கிறார்.

> ''அன்ன பிறவும்' என்றதனால் அ) இல், வயின், வழி, மாட்டு, தேம் மருங்கு பால் வாய் முதல் என வருவன எல்லாம் கூறிய நெறியினால் ஆ) வேறுபாடு உணர்த்துவனவும் இ) உருபு மாத்திரமாகி நிற்பனவும் ஈ) பெயராகி நிற்பனவும் கொள்க'

என்ற வாசகத்தில் ஆ, இ, ஈ ஆகிய மூன்றிலும் சொல் உருபு பற்றிய விளக்கம் சிறப்பாகத் தெளிவுப்படுத்தப்பட்டுள்ளது.

> 'ஏனை வேற்றுமை போலப் பொருட்பாகுபாடு அன்றி உருபின் பாகுபாடு உண்மையின் அதனை விரித்து ஓதினார் எனக் கொள்க. அகம், புறம் என்பன போல்வன எல்லாம் பெயராய் ஆறாவதன் பொருண்மையாய் வருகின்றமையின் ஏழன் உருபு ஆமாறு என்னை எனின், அகம், புறம் என்பன ஓரிடத்தினை வரையறுத்து உணர்த்தும் வழி ஆறாவதாம், அவ்வாறன்றிக் கண் போல இடம் என முழுதுணர்வு செல்லநின்ற வழி ஏழாவதாம் எனக்கொள்க'

என்ற கல்லாடர் விளக்கத்தில் சொல்லுருபு பொதுப்பொருளில் வருவதற்கும் சிறப்புப் பொருளில் வருவதற்கும் இலக்கண நிலையில் வேறுபடுத்தியிருப்பது சிறப்பானது. முன்னது ஏழாம் வேற்றுமை, பின்னது ஆறாம் வேற்றுமை என்பது பொருத்த மானது. சுவர்ப்புறம் என்பது சுவரில் என்று பொருள்படும்போது ஏழாம் வேற்றுமை சுவருக்குப்பின் என்ற பொருளில் சுவரது புறம் என்று விரிக்கலாம்.

இது உலகில் பல மொழிகளில் காணப்படுவதுதான். தமிழில் உருபு, சொல்லுருபு என்ற வேறுபாடு இதை விளக்கும். ஆனாலும் பிற வேற்றுமைக்கு உரிய சொல் உருபுகளில் பொருள் வேறுபாடு இல்லை. கு - பொருட்டு - குஆக(காக), ஆல் - வைத்து - கொண்டு எனவே சொல் உருபுகளில் ஏழாம் வேற்றுமை இடப்பொருளில் மட்டும் பொருள் வேற்றுமை உண்டு. மொழியியலார் உருபை மார்க்கர் (Marker) என்றும் பொருள் வேறுபாடு உடைய சொல் உருபுகளை இம்ப்யூர் மார்க்கர் Impure Marker = தூயது அல்லாத உருபு = தூயல் உருபு) என்று அழைப்பார்கள் (Hockett, 1958: 192).

*4.13.1. மூன்று பொருள்*

இளம்பூரணர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் கல்லாடர் ஆகியோர் வினைசெய் இடம், நிலம், காலம் ஆகிய மூன்று பொருளில் வரும் என்று கொள்வார்கள். தெய்வச்சிலையார் மட்டும் பொழிப்புரையில் 'வினை நிகழும் இடத்து நிலத்தினும் காலத்தினும் அவ்விருவகைக் குறிப்பினும் தோன்றும்' என்று இரண்டு இடத்தில் மட்டும் வரும் என்று கூறினாலும், உதாரணம் தரும்போது

> அரங்கின்கண் வனைந்தான் மாடத்தின்கண் இருந்தான்- இவை நிலம், காலைக்கண் வனைந்தான், மாலைக் கண் வனைந்தான் - இவை காலம். போரின்கண் வந்தான் என்ற வழி, இடம் குறித்தான் ஆயின் பொர நின்றவிடத்து வந்தான் எனவும், காலம் குறித்தானாயின் பொரநின்ற காலத்து வந்தான் எனவும் நிலமும் காலமும் குறித்துக் கொள்ளக் கிடந்தது'

என்று கூறுவதால் அவரும் மூன்று பொருளை ஒத்துக் கொள்வதைக் காணலாம்.

உண்மையில் இந்த விளக்கப்படியும் நிலப் பெயர்கள், காலப் பெயர்கள் இரண்டுக்கும் பொதுவான பெயர்கள் என்று மூன்று வகை இருப்பது தெளிவாகும். உயர்திணை, அஃறிணை என்று இரண்டு திணை மட்டுமே இருந்தாலும் இரண்டு திணைக்கும் பொதுவான பெயர்கள் இருப்பதால் விரவுத் திணை ஒன்று இலக்கண வருணனையில் கொண்டதுபோல அடிப்படையாக நிலம், காலம் ஆகிய இரண்டு பொருள் இருந்தாலும் இரண்டுக்கும் பொதுவாகச் சொற்கள் இருப்பதால் தான் தொல்காப்பியர் மூன்றாக விரித்துக் குறிப்பிட்டுள்ளார்.

வினைசெய் இடம் எப்படி நிலம் காலம் என்ற இரண்டிலிருந்து மாறுபடுகிறது என்ற கேள்வி எழுகிறது. இளம்பூரணரும் சேனாவரையர் வினைசெய் இடத்துக்குத் தட்டுப் புடைக்கண் (நெல் கொழிக்கும் இடம், ஒரு வகை விளையாட்டு) வந்தான் என்ற உதாரணத்தை மட்டும் கொடுத்துவிட்டு விளக்கம் எதுவும் தராமல் போய்விட்டார்கள். இதிலிருந்து நிலம், காலம் ஆகியவைகளைக் குறிக்கும் பெயர்கள் போல, வினைசெய் இடத்தைக் குறிக்கும் பெயர்கள் உண்டு என்று மட்டும்

அறியலாம். ஆனால் சில பெயர்ச் சொற்கள் ஏழாம் வேற்றுமை ஏற்று வந்தால் நிலம், காலம் என்ற இரண்டு பொருளும் காட்டுவதுதான் வினைசெய் இடம் என்பதுபோலத் தோன்றுகிறது.

கல்லாடர் வினைசெய்யிடமும் நிலமும் காலமும் ஆகிய மூன்று பொருட் கண்ணும் வரும் என்று பொழிப்புரைத்தாலும்

> 'வினைசெய்யிடம் - ஒரு தொழில் நிகழும் இடம், நிலம் என்பது ஒரு தொழில் நிகழாது வரையறை உடையதோர் இடம். காலம் என்பது ஒரு தொழில் நிகழ்தற்கு இடமாய் வரையறைப்பட்டு நிற்பது. இம்மூன்றன் கண்ணும் ஏழாவது வருமிடத்து, இடமும், இடத்துநிகழ் பொருளும் வேறுபட வருவனவும் வேறுபடாமல் வருவனவும் என இருவகைய. எ.டு. வினைசெய்யிடம் தட்டுப் புடையுள் வந்தான், தட்டுப்புடையுள் வலி உண்டு. நிலம் - குன்றத்துக்கட் கூகை, குன்றத்துக்கட் குவடு ஆகாயத்துக்கண் பருந்து, காலம் - மாரிக்கண் வந்தான், மாரிக்கண்ணாள் வந்தாள்'

என்று விளக்க உரையில் கூறுவது தெய்வச்சிலையார் உரையிலிருந்து மாறுபட்டது. அவர் கருத்துப்படி வினைசெய்யும் இடமும் நிலமும் ஒன்று. அதற்கு ஆதாரம் 'இடமும் இடத்துநிகழ் பொருளும் அ) வேறுபட வருவனவும் ஆ) வேறுபடாமல் வருவனவும் என இருவகைய' என்ற அவருடைய பாகுபாடுதான். முன்னது குன்றத்துக் கூகை இருந்தது என்று வினை ஏற்று வருவது. பின்னது குன்றத்துக் கூகை போன்று பெயர்த்தொடராக வருவது. உண்மையில் பின்னது குன்றத்து வாழும்/ இருக்கும் கூகை என்று பொருள்படுவது. அப்போது அதுவும் வேறுபட்டு வருவதாகிவிடும். புறநிலையில் இடமும் இடத்துநிகழ் பொருளும் வேறுபடாதன போல் காணப்படினும் புதைநிலையில் எல்லாமே இடமும் இடத்துநிகழ் பொருளும் வேறுபட வருவன தான். எனவே அவருடைய விளக்கமான வினைசெய் இடமும் நிலமும் என்ற கருத்துப் பொருந்தாது என்பது தெய்வச்சிலையாருடைய கருத்து. வினைசெய் இடம் நிலமும் காலமும் சேர்ந்து வருவது என்ற உண்மை சிறப்பானது. அறுவடை, திருமணம், திருவிழா குடமுழுக்கு, கூட்டம் போன்ற பல சொற்கள் இந்த வகையில் அடங்கும்.

# 5
# தொகை

## 5.1. முன்னுரை

மொழிக் கட்டமைப்பில் ஒலிகளால் சொற்களும், சொற்களால் தொகை, தொடர் ஆகிய இரண்டும், தொடரால் வாக்கியங்களும் அமைகின்றன. தொகை இறுகிய கட்டமைப்பை உடையது. அதனால் ஒரு சொல் நீர்மைத்து எனப்படுகிறது. இது எல்லா மொழிக்கும் பொதுவானது. தொகை என்பது சொற்களின் கட்டமைப்பை ஆயும் சொல்லியலுக்கும், தொடர் வாக்கியம் ஆகிய இரண்டின் கட்டமைப்பை ஆராயும் தொடரியலுக்கும் இடைப்பட்டது; இரண்டுக்கும் பொதுவானது.

தொல்காப்பியத்தில் தொகை பற்றி வேற்றுமையியலில் ஒரு சூத்திரமும் (6) எச்சவியலில் 10 சூத்திரங்களும் காணப்படுகின்றன (16-25). இந்தச் சூத்திரங்கள் தொகைகளின் வகை, விரி, சில தொடரியல் பண்புகள் பற்றி விளக்குகின்றன. தொல்காப்பியர் தொகையின் பொது இலக்கணம் பற்றிப் பேசவில்லை. அவைகளின் விரிகளை விளக்கும் போது அவைகளின் தொடரியல் பண்புகளாகவும், ஒலியியல் பண்புகளாகவும் சிலவற்றைக் குறிப்பிட்டுள்ளார். உரையாசிரியர்கள் தொகை என்ன என்பது பற்றி இரண்டு மாறுபட்ட கருத்துகளை விவாதித்துள்ளார்கள். தற்கால ஆய்வாளர்களும் மாற்றிலக்கண மொழியியல் வளர்ச்சியால் தொகை ஆய்வைத் தொடரியல் நோக்கில் செய்து வருகிறார்கள்.

மொழிக் கட்டமைப்பில் தொகையின் இடம், தொகை - தொடர் மாறுபாடு, தொகைக்கு உரிய சொல் வகை, தொகையின் பொருளும் அடிச்சொல்லும், தொகை விளக்கங்கள் ஆகியவை இங்கு விளக்கப்படும்.

## 5.2. தொகையும் மொழிக் கட்டமைப்பும்

தொகை என்பது மொழியியல் நோக்கில் சொல்லியலுக்கும் தொடரியலுக்கும் இடைப்பட்டது அல்லது இரண்டும் கலந்தது.

பெரும்பான்மையும் இரண்டு சொல் சேர்ந்து உண்டாவதால் (மரப்பெட்டி) அது தொடரியலோடு தொடர்பு உடையது. அது ஒரு சொல் போலச் செயல்பட்டு ஒட்டுகளையும் - வேற்றுமை உருபுகளையும் (மரப்பெட்டியை, மரப்பெட்டியிலிருந்து) பெறுவதால் சொல்லியலும் கலந்துள்ளது. 'எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய' என்ற தொல்காப்பியச் சூத்திர (எச்சம். 23) உரை விளக்கத்தில் சேனாவரையர்

> 'ஒரு சொல் நடைய எனப் பொதுப்படக் கூறியவதனால் யானைக்கோடு, கொல் யானை என முன்மொழி பெயராய வழி ஒரு பெயர்ச் சொல் நடைய ஆதலும்... அவை உருபேற்றலும் பயனிலை கோடலும் முதலாகிய பெயர்த்தன்மையும் உடைய வாதல் அவ்வச் சொல்லோடு கூட்டிக் கண்டுகொள்க'

என்று கூறுவதால் அவைகளுடைய சொல்லியல் தன்மையும் (உருபு ஏற்றல் தொடரியல் தன்மையும் (பயனிலை கோடல்) புலனாகின்றன. இதைத் தெளிவாகவே தெய்வச்சிலையார்

> 'இரண்டு சொல்லாகி ஒட்டுப்பட்ட பெயர் பிரிந்து நில்லாது, ஒரு பெயர் மாத்திரமாகி நிற்கும் என்றவாறு. (உதாரணம்) யானைக் கோடு கிடந்தது, துடியிடை நன்று. . . என எழுவாயும் பயனிலையுமாகியும், யானைக் கோட்டை, துடியிடையை . . . என உருபு ஏற்றும் ஒரு சொல் நடையாகி வந்தவாறு கண்டு கொள்க'

என்று குறிப்பிட்டுள்ளார். அதனால்தான் தமிழ் இலக்கண ஆசிரியர்களில் தொல்காப்பியர் எச்சவியலிலும் நன்னூலார் பொதுவியலிலும் தொகையை விளக்கியுள்ளார்கள்.

### 5.3. தொகை என்பதன் இலக்கண விளக்கம்

உரையாசிரியர்களிடம் தொகை பற்றி இரண்டு மாறுபட்ட கருத்து காணப்படுகிறது. அ) வேற்றுமை உருபும் உவம உருபும் உம்மையும் வினைச்சொல் ஈறும் (அதாவது கால ஒட்டுகள் - விகுதிகள்), பண்புச்சொல் ஈறும் தொகுபவை; ஆ) அந்தந்த தொகைகளுக்கு உரிய பொருள்கள் மேல் இரண்டும் பலவும் ஆகிய சொற்கள் பிளவுபடாது ஒற்றுமைப்படத் தம்முள் இயைவது; இ) ஒரு சொல் போல் நடப்பது ஆகிய மூன்றும்

தொகையின் இலக்கணம் என்பது ஏற்றுக் கொள்ளத்தகுந்தது. இவைகளில் மூன்றாவது கருத்து எல்லோருக்கும் உடன்பாடானது. ஆனால் முதல் கருத்தை இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும், இரண்டாவது கருத்தைச் சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் ஆதரித்துள்ளார்கள். நச்சினார்க்கினியர் சேனாவரையர்க்குப் பின் வந்தாலும் அவருடைய எதிர்ப்பை உணர்ந்தும், சேனாவரையர் கருத்துப் பொருந்தாது என்றும் வாதாடியுள்ளார்.

பொதுவாக முன்னது புதைநிலையிலிருந்து புறநிலையை விளக்குவது; பின்னது புறநிலையிலிருந்து புதைநிலையை விளக்குவது என்றும் பொதுமைப்படுத்தலாம்.

### 5.3.1. உருபு முதலிய தொகுவது தொகை

வேற்றுமை உருபு தொக்குநின்ற தொகைச் சொற்கள் அவ்வுருபு இருந்தாங்கே பொருள்படும் என்று இளம்பூரணர் (எச்சம். 17) பொழிப்புரை எழுதி,

> 'நிலங்கடந்தான், தாய் மூவர், கருப்பு வேலி, . . . யானைக் கோடு, குன்றக்கூகை என இவை இவற்றையும் அவ் வுருபு விரித்தாங்கே பொருள்படுமாறு அறிந்து கொள்க. அத் தொகுதிக்கண் (வேற்றுமைத் தொகை) உருபுகள் பல வகையும் புலப்படாதே நின்றன என்ப ஒரு சாரார், ஒரு சாரார் இல்லை என்ப'

என்று குறிப்பிட்டுள்ளார்.

இதில் அ) 'உருபு தொக்கு நின்ற சொற்கள் தொகை' என்ற இலக்கணமும், ஆ) தொகையையும் தொடரையும் வேறுபடுத்தாத நிலையும், இலக்கண உலகில் தொகை பற்றி இரண்டு கருத்துகள் நிலவுவதும் காணப்படுகின்றன. அதை ஒரு நிலையில் சொல்லியல் நோக்கு என்றும் பொதுமைப்படுத்தலாம். அதே சமயத்தில் இந்த விளக்கம் வேற்றுமைத் தொகை, உவமத் தொகை, உம்மைத் தொகை ஆகிய மூன்றுக்கு மட்டும் நேரடியாகப் பொருந்துவதை (அவைகளுக்கான உருபுகள் தொக்கு நிற்பதால் தொகையாவது) உணர்ந்து, வினைத்தொகையும் பண்புத்தொகையும் வேறு விதமாகத் தொகும் என்று இரண்டு விதமான பதில் அந்தந்தச் சூத்திரத்தில் கூறியுள்ள திறம் அறியத்தகுந்தது.

'வினைத்தொகை தொகுங்கால் காலந் தோன்றத் தொகும்' என்று இளம்பூரணர் பொழிப்புரைத்து (எச்சம் 19) கொல் யானை என்பதைக் கொல்லாநின்ற யானை, கொல்லும் யானை என்றும் விரித்துக் காட்டியுள்ளார். பண்புத் தொகை பற்றிய சூத்திரத்தில் கருங்குதிரை என்பது கரியது குதிரை என்றும், வட்டப் பலகை என்பது வட்டமாகியது பலகை என்றும், குறுங்கோல் என்பது குறியது கோல் என்றும், தீங்கரும்பு என்பது தீவியது கரும்பு என்றும் விரித்துக் காட்டிவிட்டு வினைத்தொகையும் பண்புத் தொகையும் சேர்த்து, ஒரு பொது இலக்கணம் கூறும் முகமாக (எச்சம் 20).

> 'வினைத்தொகையும் பண்புத் தொகையும் அவ்வாறு தொக்கு நின்றிலவால் எனின், அவ்வாறு தொகுதலே அன்று தொகையாவது. கொல்யானை என்புழிக் கொல்லும் என்னும் வினைச்சொல் ஒரு கூறு நிற்ப ஒரு கூறு தொக்கமையின் 'வினைத் தொகை ஆயிற்று. கருங்குதிரை என்புழிக் கரியது என்னும் பண்புப் பெயர் ஒரு கூறு நிற்ப ஒரு கூறு தொக்கமையின் பண்புத் தொகை ஆயிற்று'

என்று விளக்கியுள்ளார். இங்கு 'வினைத்தொகையும் பண்புத் தொகையும் அவ்வாறு தொக்குநின்றிலவால்' என்ற வாசகத்தில் ஓர் எதிர் கருத்து - ஓர் அடிப்படையான சந்தேகம் புதைந்துள்ளதையும், அதே சமயத்தில் உரையாசிரியர் என்ற முறையில் 'ஒரு கூறு நிற்ப ஒரு கூறு தொக்கது' என்று கூறிச் சமாதானப்படுத்துவதையும் உணரலாம். உண்மையில் அந்த விளக்கம் புறநிலை விளக்கமே தவிர இலக்கண ரீதியான விள்க்கம் என்று கொள்ளமுடியாது.

நச்சினார்க்கினியர் தொகைகளின் பெயரைக் குறிப்பிடும் போதே (எச்சம். 16)

> 'வேற்றுமை உருபுகள் தொக்க தொகை, உவம உருபுகள் தொக்க தொகை, வினைச்சொல் ஈறுகள் தொக்க தொகை, பண்பு உணர்த்தும் ஈறுகள் தொக்க தொகை, உம் என்னும் இடைச்சொல் தொக்க தொகை, ...இத்தொகைச் சொற்களின் இறுதிக் கண் வந்து பொருள் தரும் வேறோர் சொல் தொக்க தொகை'.

என்று முதலில் கூறி, இறுதியில்

'இவற்றுள் வினைத் தொகையும் பண்பின் தொகையும் சிறிது தொக்குத் தொகையாதலும் ஏனைய முழுவதும் தொக்குத் தொகையாதலும் உணர்க'

என்று விளக்குவதால் தொகை என்பது சொல் அல்லது சொல் கூறு தொக்கது என்பது அவர் கருத்து என்பது புலனாகிறது. மேலும் தொகையின் அடிச்சொல் பற்றித் தொல்காப்பியப் பயிற்சியையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

'ஐம்பாலறியும் பண்புதொகு மொழியும்
செய்யும் செய்த என்னும் கிளவியின்
மெய்யொருங்கு இயலும் தொழில் தொகு மொழியும்
(குற்றியல். 77)

உருபு தொக வருதலும் (வேற்று. மயங்கு. 21)

மெய்யுருபு தொகாஅ இறுதியான (எச்சம். 22)

உம்மை எஞ்சிய இருபெயர்த் தொகை மொழி (உயிர்மய. 21)

எனவும் ஆசிரியர் தொக்கே நிற்கும் எனச் சூத்திரம் செய்தலின், வேற்றுமை உருபும், உவம உருபும், உம்மும் வினைச்சொல் ஈறும் பண்பு உணர்த்தும் ஈறும் இத்தொகைச் சொற்கள் அல்லாததோர் சொல்லும் தொக்கு நிற்றலின் தொகைச் சொல் என்பதே அவர் கருத்தாயிற்று. கேழற்பன்றி, வேழக் கரும்பு என்பனவற்றில் ஒன்றையொன்று.

'விசேடித்து நிற்கின்ற தன்மையை உணர்த்தற்கு வரும் 'ஆகிய' என்னும் வாசகம் தொக்குநின்றது என்றே கோடும்'

என்று தன்னுடைய கருத்தை நச்சினார்க்கினியர் வலியுறுத்தி யுள்ளதற்கு மாற்றுக் கருத்து ஆய்வுலகில் காணப்படுவதே காரணம். ஆனாலும் வினைத்தொகைக்கும் பண்புத்தொகைக்கும் இந்த விளக்கம் பொருத்தமாகக் கொள்ளமுடியாது. அதற்குக் காரணம் அது பிற தொகை அமைப்பிலிருந்து மாறுபட்டு இருப்பதுதான்.

உண்மையில் வேற்றுமை முதலிய மூன்று தொகைகளிலும் உருபு மட்டும் தொக்கது என்பதே விவாதத்துக்கு உரியது ஏனென்றால் வேற்றுமை என்பதே வேற்றுமை ஏற்ற பெயருக்கும்

வினைக்கும் உள்ள தொடர்பை விளக்குவதுதான். அதனாலேயே பொருள் பெயரும், தொழில் பெயரும் சேர்ந்து தொகையாக வரும் கைவீசு, கால்கட்டு போன்று பெயரும் தொழிற்பெயரும் சேர்ந்து வரும் தொகைகளைத் தவிரப் பெயரும் பெயரும் சேர்ந்து வரும் வேற்றுமைத் தொகைகளை விரிக்கும் போது ஒரு வினையை வருவித்தே விளக்கம் தரப்படுகிறது. மரப்பெட்டி என்றால் மரத்தால் செய்த பெட்டி என்றும், யானைக் கோடு என்றால் யானை கோட்டை உடையது என்றும் விரித்தே எல்லோராலும் விளக்கப்படுகிறது. அதனாலேயே உருபும் பயனும் உடன் தொக்க தொகை என்ற கருத்தமைவை (Concept) பிற்கால உரையாசிரியர்கள் (சங்கரநமச்சிவாயர் - நன்னூல் உரை, 363) பேசுகிறார்கள். ஆனால் அவர்கள் நிலங் கடந்தான் போன்றவை களையும் இரண்டாம் வேற்றுமைத் தொகையாகக் கொண்டு அங்கு உருபு தொக்க தொகை என்று கொள்வார்கள். உண்மையில் அதைத் தொகையாகக் கருதாமல் தொடராகக் கருதவேண்டும். எல்லா வேற்றுமைத் தொகைகளும் உருபும் பயனும் உடன் தொக்க தொகையாகவே வரும் என்றும் கொள்ளவேண்டும். உம்மைத் தொகையிலும் வேற்றுமை புதைந்துள்ளது சுட்டிக் காட்டத்தகுந்தது. கபிலபரணர் வந்தார் என்பது கபிலர் வந்தார் பரணர் வந்தார் என்ற வாக்கியத்தின் புறநிலை வடிவமே. அது எழுவாய் வேற்றுமை. அதுபோல் கபில பரணரைப் பார்த்தேன் என்னும்போது கபிலரைப் பார்த்தேன் பரணரைப் பார்த்தேன் என்று விளக்குவதால் அங்கு இரண்டாம் வேற்றுமை புதைந்துள்ளது தெளிவாகும். உவமத்தொகையிலும் வேற்றுமை உருபு புதைந்துள்ளது பற்றி உரையாசிரியர்களும் குறிப்பிட்டுள்ளார்கள். அது பிற்பகுதியில் எடுத்துக்காட்டப்படும்.

### 5.3.2. சொற்கள் பிளவுபடாமல் இயைவது தொகை

> அ) 'வேற்றுமை உருபும், உவம உருபும், உம்மையும், வினைச்சொல் ஈறும், தொகுதலில் தொகை ஆயின என்பாரும்; ஆ) அவ்வப்பொருள் மேல் இரண்டும் பலவுமாகிய சொற்கள் பிளவுபடாது ஒற்றுமைப் படத் தம்முள் இயைதலின் தொகை ஆயின என்பாரும், என இரு திறத்தர் ஆசிரியர்

என்ற சேனாவரையர் வாசகம் சொற்கள் பிளவுபடாது. ஒற்றுமைப்படத் தம்முள் இயைதல் 'தொகை' என்ற ஒரு கருத்து இருந்ததைப் புலப்படுத்துகிறது.

### 5.3.3. ஒரு சொல் நீர்மைப்படுவது

உருபு தொக்கு வருவதும் தொகாமல் வருவதும் தொகை என்று குறிப்பிட்டு, ஒரு சொல் நீர்மைத்தாக வருவதே தொகை என்று வாதிட்டுள்ளார் சேனாவரையர். மேலும்

> அ$_1$) செய்தான் பொருள், இருந்தான் மாடத்து என உருபு தொக்கு ஒரு சொல் நீர்மைப்படாதனவும் தொகையாவான் சேறலின் அவற்றை நீக்குதற்கும், அ$_2$) வேழக்கரும்பு, கேழற்பன்றி என்புழித் தொக்கன இல்லை எனினும் தொகை என வேண்டற்படும் ஆகலான் அவற்றைத் தழுவுதற்கும், உருபு முதலாயின தொகுதலின் தொகை என்பார்க்கும், ஒட்டி ஒரு சொல் நீர்மைப்படுதலும் தொகை இலக்கணம் எனல் வேண்டும். அதனால், உருபு முதலாயின தொகுதல் எல்லாத் தொகையினும் செல்லாமையான் எல்லாத் தொகைக்கண்ணும் செல்லுமாறு, ஒட்டி ஒரு சொல்லாதல் தொகை இலக்கணமாய் முடிதலின் இவ்வாசிரியர்க்கு இதுவே துணிவு எனப்படும்.

என்பார் சேனாவரையர் (எச்சம். 16). எனவே சேனாவரையர் கருத்துப்படி சொற்கள் சேர்ந்து பிளவுபடாமல் இசைத்தலும் ஒரு சொல் நீர்மைப்படுதலும் ஆகிய இரண்டு பண்புகளுமே தொகை இலக்கணம் ஆகும். ஆகவே வேற்றுமைத் தொகை என்பதை வேற்றுமைப் பொருளை உடைய தொகை அல்லது வேற்றுமைப் பொருள் தொக்க தொகை எனவும் அன்மொழித் தொகை தொக்க சொல் அல்லாத மொழி தொக்க தொகை எனவும் வினைத்தொகை என்பது வினையினது தொகை எனவும் பண்புத் தொகை என்பது பண்பினது தொகை எனவும் விரியும் என்று விளக்குவார். மேலும் 'தொகு' என்ற வினையடி மறைந்து நிற்பது என்ற பொருளை உணர்த்தும் என்பதை உணர்ந்து, அந்தப் பொருளில் தொகையை விளக்கக்கூடாது என்பதற்கு, எல்லா இடத்துக்கும் அது பொருந்தாது என்பார். சில இடங்களில் தொக்கு நிற்பது வேறு, விரிப்பது வேறு என்ற முறையில் அமைகிறது. அந்த இடத்திலும் 'தொகு' என்ற வினையடியையே கையாண்டுள்ளதால் உருபு தொக்கது தொகை என்பது பொருந்தாது என்பார். மேலும்

> அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
> (வேற்றுமை மயங்கு. 11) என்புழி 'அது' என் உருபு

> நின்று கெட்டதாயின், நின்ற காலத்துத் திணை வழுவாம். அத்திணை வழு அமைவு உடைத்து எனின் விரிக்கின்றுழி நான்காம் உருபு தொடராது அது தன்னையே விரிப்பினும் அமைவுடைத்து; அதனான் முறைப்பொருள் தோன்ற நம்பி மகன் என இரண்டு சொல் தொக்கன என்பதே ஆசிரியர் கருத்து எனல் வேண்டும். அதனான் உருபும் உவமையும் உம்மையும் தொகுதலாவது தம் பொருள் ஒட்டிய சொல்லால் தோன்றத் தாம் ஆண்டுப் புலப்படாது நிற்றலே ஆம்'

என்பது அவரது வாசகம். 'அது' என்ற உருபு இருந்து கெடவில்லை. அப்படிச் சொல்வது வழு/ அப்படியானால் நம்பி மகன் என்ற தொடர் நம்பியது மகன் என்று விரித்தாலும் வழு அற்றது என்று கருதவேண்டும். ஆனால் அது தவறு. எனவே முறைப் பெயர் தொகை என்பதையே 'அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகை' என்று அப்படி விரிக்கவேண்டும் என்று சொல்லவில்லை.

தெய்வச்சிலையாரின் தொகை பற்றிய கருத்து சேனாவரையர் கருத்தோடு ஒத்தது ஆனாலும் இருவருக்கும் இடையே நுட்பமான வேறுபாடு உள்ளது. அதே சமயத்தில் தொகையாக்கம் பற்றிய கருத்தில் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகியோர் கருத்துக்கும் தெய்வச்சிலையார் கருத்துக்கும் மாறுபாடு காணப்படுகிறது.

> 'தொகைச் சொல்லாவது பொருள் உணர்த்தும் சொல் லாயினும் தொழில் உணர்த்தும் சொல்லாயினும் இரண்டு சொல் விட்டிசைத்து நில்லாது ஒட்டி நிற்பது. இஃது ஒட்டுப்பெயர் எனவும் பெயர் பெறும்'

என்பது தெய்வச்சிலையார் வாசகம் (எச்சம். 15). இங்குப் பொருள் பற்றிய குறிப்பு இல்லாமல் சொல் வகை பற்றிய குறிப்பு உள்ளதும் மாறாகச் சேனாவரையர் விளக்கத்தில் பொருண்மை அடிப்படையாகத் தொகை அமைந்து சொல்வகைப்பாடு பற்றி குறிப்பு இல்லாமல் இருப்பதும் கவனிக்கத்தகுந்தது. இந்த வேறுபாடு தொகை பற்றிய சூத்திர விளக்கத்திலும் பிரதிபலித்துள்ளது.

எல்லாத் தொகைகளிலும் இரண்டு சொல் சேர்ந்து விட்டிசை இல்லாமல் ஒரு சொல் போல நடக்கும்; ஒரு சொல்லால் பதிலீடு செய்யமுடியும், என்ற இரண்டு இலக்கணத்தோடு

தொகைச் சொற்களிடையில் வேறு ஒரு சொல்லைச் செருக முடியாது என்ற இலக்கணத்தையும் மொழியியலார் வற்புறுத்துவார்கள்.

### 5.4. தொகையும் தொடரும்

தமிழ் இலக்கண மரபில் தொகையும் தொடரும் சரியாக வேறுபடுத்தப்படவில்லை என்பதை உரையாசிரியர்கள் வேற்றுமைத் தொகைக்குத் தரும் உதாரணங்கள் மூலம் மறைமுகமாகவும், அவருடைய வாதங்கள் மூலம் நேரடியாகவும் புலப்படுத்தி யுள்ளார்கள்.

உரையாசிரியர்கள் தொகைக்குக் கொடுத்த உதாரணங் களும் இதை உறுதிப்படுத்தும். வேற்றுமைத் தொகைகளுக்குக் கொடுத்த உதாரணங்களில் இளம்பூரணர் இரண்டாம் வேற்றுமைக்கும் (நிலங்கடந்தான்), ஐந்தாம் வேற்றுமைக்கும் (வரைவீழ் அருவி) தொடரை உதாரணங்களாகவும், சேனாவரையர் இரண்டாம் வேற்றுமைக்கு மட்டும் (நிலங் கடந்தான்) தொடரை உதாரணமாகவும், நச்சினார்க்கினியர் நாலாம், ஏழாம் வேற்றுமைக்கு உரியவை தவிர ஏனைய வேற்றுமைகளுக்குத் தொடரை உதாரணங்களாகவும் கொடுத்துள்ளார்கள். அவையாவன:

*(பகடு நடந்த) கூழ் பல்லாரோடு உண்க (கூழ் உண்க)*
- 2ஆம் வேற்றுமைத் தொடர்

*(வல்லவர்) செதுமொழி சீத்த செவி (செதுமொழியால் சீத்த செவி)* - 2ஆம் வேற்றுமைத் தொடர்

*பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும் (பருத்தி வேலி)*
- 4ஆம் வேற்றுமைத் தொடர்

*வரை இழி மயிலின் ஒல்குவள் (வரை இழி மயில்)*
- 5ஆம் வேற்றுமைத் தொடர்

*நின் மைந்துடை மார்பிற் சுணங்கு (மைந்துடை மார்பு)*
- 6ஆம் வேற்றுமைத் தொடர்

*மன்ற வேம்பின் ஒண்குழை மலர்ந்து (மன்ற வேம்பு)*
- 7ஆம் வேற்றுமைத் தொடர்

இங்கு நாலாம், ஏழாம் வேற்றுமைக்கு உரிய உதாரணங்கள் மட்டுமே தொகையாக அமைய ஏனையவை தொடர்களாகவே கருதப்பட வேண்டும்.

அதற்கு ஏற்பவே 'எல்லாச் சொல்லும் ஒரு சொன்னடைய' என்ற சூத்திரத்தில் 'ஒரு சொன்னடைய' என்பதற்குச் சேனாவரையர் நிலம் கடந்தான், குன்றத்திருந்தான் போன்ற உதாரணங்களைத் தந்து தொகை என்று வாதாடியுள்ளதும் நச்சினார்க்கினியர் ஆதரித்துள்ளதும் அவர்கள் இருவரும் தொகையும் தொடரையும் வேறுபடுத்தவில்லை என்பதைப் புலப்படுத்துகிறது.

தெய்வச்சிலையார் எல்லா வேற்றுமைகளுக்கும் முதலில் தொகைகளையும் அடுத்துத் தொடர்களையும் உதாரணங் களாகக் கொடுத்து, அந்தத் தொடர்களும் தொகைகளே என்று வாதாடியுள்ளார் (எச்சம். 16). அவரின் தொகைக்கான உதாரணங்கள்:

| | |
|---|---|
| படைக்கை | = படையைப் பிடித்த கை<br>2ஆம் வேற்றுமைத் தொகை |
| குழைக் காது | = குழையை உடைய காது<br>3ஆம் வே.ற்றுமைத் தொகை |
| குதிரைத் தேர் | = குதிரையால் பூட்டப்பட்ட தேர்<br>3ஆம் வேற்றுமைத் தொகை |
| தாய் மூவர் | = தாயொடு கூடி மூவர்<br>3ஆம் வேற்றுமைத் தொகை |
| கடி சூத்திரப் பொன் | = கடி சூத்திரத்திற்கு வைத்த பொன்<br>4ஆம் வேற்றுமைத் தொகை |
| வரை அருவி | = வரையினின்றும் வீழாநின்ற அருவி<br>5ஆம் வேற்றுமைத் தொகை |
| யானைக்கோடு | = யானையது கோடு<br>6ஆம் வேற்றுமைத் தொகை |
| குன்றக் கூகை | = குன்றத்துக்கண் வாழாநின்ற கூகை<br>7ஆம் வேற்றுமைத் தொகை |

நிலங்கடந்தான் போன்றவைகளைத் தொகைகளாகக் கருதுவதற்கு உரையாசிரியர்களின் வாதங்களைப் பார்ப்போம்.

எல்லாச் சொல்லும் ஒரு சொல் நடைய (எச்சம். 24) என்ற சூத்திர உரையில் சேனாவரையர்.

> 'நிலங் கடந்தான், குன்றத்து இருந்தான் எனப் பெயரும் வினையும் தொக்கன ஒரு சொல் நீர்மை இல ஆகலின், தொகை எனப்படா என்பாரும் உளர்'

என்ற மாற்றுக் கருத்தைக் குறிப்பிட்டு அதற்கு மறுப்பாக

எழுத்தோத்தினுள் (புணரியல் 30)

'பெயரும் தொழிலும் பிரிந்து ஒருங்கிசைப்ப
வேற்றுமை உருபு நிலைபெறு வழியும்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்'

என்றதனான் வேற்றுமை உருபு தொகைப் பெயரும் தொழிலும் ஒருங்கு இசைத்தல் ஆசிரியர் நேர்ந்தார் ஆகலின். அவை தொகை எனவே படும் என்பது. கடந்தான் நிலம், இருந்தான் குன்றத்து' என்பன ஒருங்கு இசையாது பக்கு இசைத்தலின் அவை தொகை அன்மை அறிக'

என்று வாதிட்டுள்ளார். இங்குப் புணர்ச்சியில் விட்டிசை இல்லாமல் ஒலிப்பதை மட்டுமே கூறப்பட்டுள்ளது. ஆனால் பெயரும் வினையும் சேர்ந்து வரும் இரண்டு சொற்கள் (நிலங் கடந்தான் 'நிலத்தைக் கடந்தான்' புலவர்ப் பார்த்தான் 'புலவரைப் பார்த்தான்' = இரண்டாம் வேற்றுமைத் தொடர்) ஒரு சொல்லால் பதிலீடு செய்யமுடியாது. அதனால்தான் தொகையாக மொழியியலாளரால் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. தொகையின் மற்றொரு இலக்கணமாக, (Bloomfield, 1933:232) ஒரு சொல் தொகையாக வரும் இரண்டு சொற்களுக்கு இடையே வேறு ஒரு சொல்லைச் செருகமுடியாது. எனவே நிலங் கடந்தான் என்பது ஒட்டாக இசைத்தாலும் தொடர் என்றே கொள்ள வேண்டும்.

நிலங் கடந்தான் போன்றவை ஒலிநிலையில் இடைவெளி இல்லாமல் ஒலிப்பதையே தொல்காப்பியர் 'ஒருங்கு இசைப்ப' என்று சொன்னார் என்பது உண்மையே ஆனாலும் தொகையின் மற்றொரு இலக்கணமான 'ஒரு சொல் நடைய' (எச்சம். 23) என்ற இலக்கணம் பொருந்தாது. நிலங் கடந்தான் போன்றவை தொடர் (Phrase) என்று அழைக்கப்படவேண்டும். புலவர் பாராட்டினார் என்பது இரண்டாம் வேற்றுமைத் தொடராக அமையும்போது புலவர்ப் பாராட்டினார் என்று வருமொழி இரட்டித்து வருவதே விட்டிசை இல்லாமல் அவை உச்சரிக்கப்படுகின்றன என்பதற்கு நல்ல சான்று. ஆனாலும் அது தொகையாகக் கருதமுடியாது; கருதவும் கூடாது.

சேனாவரையர் (எச்சம். 21) உம்மைத் தொகைப் பற்றிய சூத்திரத்தில் தொல்காப்பியர் கருத்துக்குப் பிற தொகைகளிலிலும் இரண்டுக்கு மேற்பட்ட சொற்கள் சேர்ந்து வரலாம் என்று

குறிப்பிட்டு, கற்சுனை குவளை இதழ் என்று வேற்றுமைத் தொகைக்கு உதாரணமாகக் கொடுத்துள்ளதும் பொருத்தமானதாகக் கொள்ள முடியாது அது தொடராகவே கருதப்பட வேண்டும்.

நிலங் கடந்தான் பெயரும் வினைமுற்றாக வரும்போது அவை ஒரு சொல்லால் பதிலிடமுடியாது என்ற முறையில் தொகை என்ற கருத்தை ஒத்துக்கொள்ளாவிட்டாலும் வினை முற்றாக இல்லாமல் வினையாலணையும் பெயராக அமையும் போது (நிலங்கடந்தான் வந்தான் என்று கூறமுடிவதையும் அதை அவன் வந்தான் என்று பதிலிட முடிவதையும் கவனித்த தெய்வச்சிலையார் வினைமுற்று வினையாலணையும் பெயராக அமைந்தால் அவைகளைத் தொகையாகக் கருதமுடியும் என்று வாதிட்டுள்ளதும் (எச்சம். 16) சிறப்பானதாகக் கொள்ளமுடியாது.

> *1) நிலத்தைக் கடந்தான், வாளால் வெட்டினான், கொலைக்கு உடம்பட்டான், வரையினின்றும் பாய்ந்தான், குன்றத்துக்கண் இருந்தான் என்ற வழி இறுதி நின்ற சொல் தொழில் உணர்த்தாது அது செய்தார்க்குப் பெயராக வந்துழி நிலங்கடந்தான், வாள் வெட்டினான், கொலை உடம்பட்டான், வரை பாய்ந்தான், குன்றத்து இருந்தான் என இரண்டு பெயரும் ஒட்டி ஒரு சொல்லாகி வரும். 2) கள்ளை உண்டல், வாளால் வெட்டல், கொலைக்கு உடம்படல், வரையினின்றும் பாய்தல், மாடத்துக் கண் இருத்தல் என்பன கள் உண்டல், வாள் வெட்டல், கொலை உடம்படல், வரை பாய்தல், மாடத்து இருத்தல் எனத் தொகும். 3) அஃதேல் இவ்வாறு வருவன தொகை என அடங்காவோ எனின், ஆண்டு அவ்வேற்றுமைகட்கு ஓதிய வாய்பாட்டால் தொழிலோடும் பெயரோடும் முடிவுழி, உருபு மாத்திரம் தொக்கு இரண்டு சொல்லாகி நிற்கும்; ஈண்டு ஒரு சொல்லாகி வரும். 4) ஆறாவதன்கண் வரும் தொகை, உருபுதொகையும் பொருட்டொகையும் என வேறுபாடு இன்றால் எனின், ஆண்டும் வேறுபாடு உள. மரக்கோடு என்ற வழி ஒட்டுப்பட்டுப் பொருட்டொகையாகி நின்றது. மரத்தின் கோடு என்ற வழி உருபு தொகையாகி இரண்டு சொல்லாகிநின்றது. இவை சொல் நோக்கான் உணர்க.*

(விவாதத்தில் குறிப்பிடுவதற்கு எண் கொடுக்கப்பட்டுள்ளது) என்பது தெய்வச்சிலையார் வாசகம். முதல் கருத்துப்படி அவை ஒரு பெயராக வரும். இது பற்றி இரண்டு செய்திகள் சுட்டிக் காட்டத் தகுந்தவை: அ) இங்கும் ஒரு வினையடையை இடையே செருகமுடியும். நிலம் வேகமாகக் கடந்தான், வந்தான் என்பதையும் அவன் வந்தான் என்று பதிலிடமுடியும் என்பதால் நிலம் வேகமாகக் கடந்தான் என்பது வினையாலணையும் பெயராக இருந்தாலும் தொகையாகக் கருதமுடியாது என்பது எல்லோருக்கும் ஒத்த கருத்தே. அப்படியே பல வேற்றுமைத் தொடரையும் பெயரெச்சத் தொடரையும் ஒரு சொல்லால் பதிலீடு செய்ய முடியும் என்பதால் அவைகளைத் தொகையாக யாரும் கருதுவது இல்லை.

காலை எட்டு மணிக்கு என்ற தொடரை அப்போது என்ற சொல்லாலும் வந்த ஆசிரியர் என்பதை அவர் என்ற சொல்லாலும் நேற்று வந்த ஆசிரியருக்கு என்பதை அவருக்குச் சொல்லாலும் பதிலீடு செய்யமுடியும். மேலும் வந்த ஆசிரியர் போன்ற பெயரெச்சத் தொடர்கள் பயனிலை ஏற்று வரும் (வந்த ஆசிரியர் பேசினார்) அதனால் அவைகளைத் தொகை என்று யாரும் கருத மாட்டார்கள். எனவே வினையாலணையும் பெயராக அமைந்தால் தொகையாகக் கருதலாம் என்ற தெய்வச்சிலையாரின் வாதமும் சிறப்பாகக் கொள்ளமுடியாது. அதே சமயத்தில் மூன்றாவது கருத்தான தொகை ஒரு சொல்லாக வரும். தொடர் இரண்டு சொல்லாக வரும் என்பது ஓர் அடிப்படையான கருத்து.

மாறாக, சங்கரநமச்சிவாயர் (நன்னூல் 361) வினைமுற்றாக வரும்போது வேற்றுமைத் தொகை என்று கொண்டு வினையாலணையும் பெயராக வரும்போது தொகையாகக் கருத முடியாது என்று வாதிட்டுள்ளது இங்கு எடுத்துக்காட்டத் தகுந்தது.

> 'நிலத்தைக் கடந்தான், நிலங்கடந்தான் என உருபு இடை விரியின் பிளவுபட்டும், தொக்கதேல் பிளவுபடாதும் தொடரும். ஆதலின், 'ஒரு மொழி போல்' (நன்னூல் தொடர் அதற்கு இணையான தொல்காப்பியர் கருத்து 'எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய' எச்சம் 24) என்றும் கூறினார். ஒரு மொழி போல் நடத்தலாவது கொல் யானை வந்தது நிலங் கடந்தான் சாத்தன் என இரண்டு முதலிய பல

> சொல் தொடர்ந்து ஒரு பெயராயும் வினையாயும் நின்று தம் முடிபு ஏற்றல் எனப் பொருள் கூறின் அவ்வாறு தொகாநிலைத் தொடரும் கொன்ற யானை வந்தது, நிலத்தைக் கடத்தைக் கடந்தான் வந்தான் என நடக்கும் ஆதலின் அது பொருந்தாது என்க'

என்பது அவருடைய வாதம். அந்த வாதத்தில் 'பிளவுபடாதும் தொடரும்' என்ற தொடர் கவனிக்கத் தகுந்தது. தெய்வச்சிலையாரின் இரண்டாவது வகை உதாரணமான பெயர் + வினைத் தொழிற் பெயர் என்பது புறநிலையில் இருந்தாலும் இரண்டுக்கும் ஒரு நெருக்கம் இருக்கிறது. பால் கறத்தல், துணி துவைத்தல், தண்டனை கொடு, கடன் வாங்கு போன்றவை வினையும் பெயரும் ஒருங்கிணைந்ததாகக் (Incorporating verbs) கருதப்படும் ஒருங்கிணைந்த பெயர்கள் நெருக்கம் உடையதாகக் கருதியிருக்க வேண்டும். என்றாலும் அவைகளைத் தொகையாகக் கருதமுடியாது.

பொற்கோ (2002:24) சொற் சந்தி, தொடர்ச் சந்தி, தொகைச் சந்தி என்று மூன்று வகையாகப் பிரித்துத் தேர் கண்டான், ஊர் சென்றான் என்ற உதாரணங்களைத் தொடர்ச் சந்திக்கு உதாரணங்களாகக் கொடுத்திருப்பதும் இந்தக் கருத்தை வலியுறுத்தும்.

### 5.5. கலைச்சொற்கள் காட்டும் பண்பு

வேற்றுமைத்தொகை, உவமைத் தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித் தொகை என ஆறு வகைகளைத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். அந்தச் சொல்லாக்கத்தில் இரண்டு வகை இருப்பது சுட்டிக் காட்டத் தகுந்தது. வேற்றுமைத் தொகை, உவமைத்தொகை, உம்மைத் தொகை ஆகிய மூன்றும் இரண்டு பெயர்கள் சேரும்போது அவைகளுக்கு இடையே உள்ள இலக்கண உறவு அடிப்படையில் அமைந்தவை. அன்மொழித் தொகை என்பது அஃறிணைத் தொடர் ஆகி அந்தப் பண்பு உடைய வேறு பொருளை உணர்த்துவது- கருத்தாவுக்கு உரிய ஒட்டு மறைந்து-தொக்கு உள்ளது என்ற முறையில் அமையும். ஆனால் வினைத் தொகை பண்புத் தொகை என்ற இரண்டிலும் தொகைச் சொற்களில் உள்ள முதல் சொல்லின் வகைப்பாட்டை ஒட்டியது என்று கருதலாம். இருந்தாலும் 'வினைத் தொகை காலத்து இயலும்' என்று தொல்காப்பியரே விளக்குவதால் வினையின் முக்கிய

இலக்கணக் கூறான கால ஒட்டு தொக்கு இருப்பதாகக் கருதலாம். அப்படியானால் அதை வேற்றுமைத் தொகை போலக் காலத் தொகை என்று அழைத்திருக்கலாம். என்றாலும் வினையை அடையாளம் காட்டக்கூடிய காலத்தை 'வினை' என்று அழைக்கப்பட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனாலும் கொல் யானை என்பதைக் கொல்லக்கூடிய யானை என்று விரித்துப் பொருள்கொள்ளும்போது அது ஒரு பண்பாகக் கருதத் தகுந்தது. உரையாசிரியர்களும் வினைத் தொகையை ஒரு நோக்கில் பண்புத் தொகைக்குள் அடக்கலாம் என்று வாதிட்டுள்ளார்கள். எனவே வினைத்தொகை, பண்புத் தொகை ஆகிய இரண்டும் வேறுபட்ட நிலையில் அமைந்தன. தொல்காப்பியரே பண்புத் தொகையை 'இன்னது அது' என்ற வாய்பாட்டில் அமையும் என்று குறிப்பிட்டிருக்கிறார். கரியது குதிரை -> கரிய குதிரை என்பது ஒரு வாக்கியம் பெயரெச்சத் தொடராக மாறும் மாற்றமே தவிரப் பண்புத் தொகை என்பது கூறுவது பொருந்துமா என்ற கேள்வி எழுகிறது. அதைப் பண்புத் தொடர் என்று வேண்டுமானால் அழைக்கலாம். தொல்காப்பியரே அன்மொழித் தொகை விளக்கத்தில்

> பண்புதொகவரூஉம் கிளவி யானும்
> உம்மை தொக்க பெயர்வயி னானும்
> வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
> ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே *(எச்சம். 22)*

என்று கூறினாலும் புறநிலையில் பண்புச்சொல் இருக்கும்போது ஒப்புமையாக்கத்தால் அல்லது ஒருமுகப்போக்கு அடிப்படையில் அப்படிக் கூறினாரா என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

நன்னூலாரும் (365) பண்புத் தொகையை விளக்கும்போது 'பண்பை விளக்கும் மொழிதொக்கன' என்று ஒரு வகையைக் குறிப்பிட்டுள்ளார். அதற்கு அதன் உரையாசிரியர்கள் இரண்டு வித விளக்கம் கொடுத்துள்ளார்கள். மயிலைநாதர் 'பொருளின் கண் கிடந்த குணத்தைக் காட்டுதற்கு ஆண்டு வருமொழி தொக்கன' என்று பொழிப்புரை எழுதி, 'வருமொழி ஐ முதலியன' என்று விளக்குவதால் கருமை என்ற பண்புப்பெயரில் உள்ள ஒட்டான -ஐ தொக்கதாக அவர் கொள்கிறார் என்பது தெளிவு சங்கரநமச்சிவாயர் 'ஆகிய என்னும் மொழியாகிய பண்பு உருபு தொக்கு நிற்பன' என்று விளக்கியுள்ளார். இது எவ்வளவு தூரம் பொருந்தும் என்ற கேள்வி எழுகிறது.

## 5.6. தொகை என்றதன் பொருளும் அடிச்சொல்லும்

தொகை என்பது தொகு என்ற அடிச்சொல்லிலிருந்து தோன்றியது உண்மையானாலும் அதன் வினைத் திரிபும் அதன் பொருளும் விவாதத்துக்கு உரியன. தொகை என்பது ஆறு பொருளில் கையாளப்பட்டுள்ளதாக ஆறுமுகம் (1972) எடுத்துக் காட்டியுள்ளார். அவைகளில் அவரே அ) பிளவுபடாது ஒட்டி நிற்றல், ஆ) தொக்கு (சுருங்கி) நிற்றல், இ) கட்புலனாகி அறிவிற்குப் புலனாகி எஞ்சி நிற்றல் என்ற மூன்று பொருளைத் தொகையின் இலக்கணமாக அமைவதற்கு ஏற்றது (ப. 320) என்று குறிப்பிட்டுள்ளார். அதற்கு ஏற்பத் 'தொகு' என்ற வினையடியின் வினைத்திரிபும் மாறுபட்டிருப்பதும் அவைகளுக்கு ஏற்பப் பொருள் மாறுபடுவதும் சுட்டிக்காட்டத் தகுந்தது.

தொகு என்ற வினையடியும் இரண்டு வினைத் திரிபுகளை உடையது. சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதிப்படி ஒன்று தொக்க என்ற இறந்த காலம் உடைய வினைச்சொல் (6ஆம் பிரிவு), இரண்டு தொகுத்த என்று இறந்த கால வடிவம் உடைய (11ஆம் பிரிவு) தொல்காப்பியத்திலும் இந்த இரண்டு வடிவமும் காணப் படுகின்றன. உம்மை தொக்க எனா என் கிளவி (இடை. 41) அது தொகல் என்று தொழில் பெயர் வடிவம் உடையது. அது மறைந்த என்று பொருள் உடையது. இது இளம்பூரணர் கருத்துக்கு ஆதரவாகவும் வேற்றுமை, உவமை, உம்மை, அன்மொழி ஆகிய நாலு தொகைக்கும் பொருந்துவதாகவும் உள்ளது. தொகுத்த (தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல் மரபு, 111. 17) தொகுத்தல் என்ற தொழில் பெயர் வடிவம் உடையது. தொகுத்தல் என்பது குவித்தல் என்ற பொருள் உடையது. இது சேனாவரையர் கருத்துக்கு ஆதரவானது. வினை, பண்பு ஆகிய இரண்டுக்கும் பொருந்துவது. இளம்பூரணரும் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் வினைத்தொகையும் தொகை என்ற தொழிற்பெயர் வடிவமும் இரண்டு வினைத்திரிபுகளிலிருந்து தோன்றியதாகக் கொள்ளவேண்டும்.

தொல்காப்பியரின் சூத்திரங்கள் கவிதை நயம் உடையன என்று பல காலமாகக் கூறப்பட்டு வந்தாலும் இப்போது ஒரு முகப்போக்கு என்ற இலக்கிய உத்தி உடையது (களவியல் 10) (அகத்தியலிங்கம் 1998: 31, 1999: 37) என்பது எடுத்துக்காட்டப் பட்டுள்ளது. அதற்கு ஏற்பவே

பண்பு தொகவரூஉம் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே (எச்சம். 22)

என்ற சூத்திரம் அமைந்ததாகக் கொள்ளவேண்டும். மேலும் வினைத் தொகை, பண்புத் தொகை ஆகிய இரண்டும் கூட ஒருமுகப் போக்கு முறையில் உண்டாக்கப்பட்டவைகளாகத் தோன்றுகிறது.

### 5.7. தொகைக்கு உரிய சொல் வகை

தொகை என்பது பெயர் + பெயர் சேர்ந்தது என்பது எல்லோருக்கும் தெரிந்ததே. கூடுதலாகப் பெயர்+வினை, இடை+ பெயர், வினையடை+பெயர் ஆகியவைகளும் தொகையாக வரும் என்பது சுட்டிக்காட்டத் தகுந்தது.

#### பெயர் + பெயர்

தொகை என்பது தொடரியலில் ஒரு கூறு. பெரும்பான்மையும் இரண்டு சொல் சேரும்போது தொகையாகவோ அல்லது தொடராகவோ அமையும். தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில் பெயரும் பெயரும் சேரும் புணர்ச்சி பற்றி விளக்கும்போது வேற்றுமைப் புணர்ச்சி என்று கூறுவது வேற்றுமைத் தொகை களையே குறிக்கும். வேற்றுமையியலில் முதல் வேற்றுமையான, தோன்றிய நிலையில் நிற்கும் பெயர்ச் சொற்கள், கொண்டு முடியும் சொற்களை ஒரு சூத்திரத்தில் முதலில் வருணித்துவிட்டு அடுத்துப் 'பெயரினாகிய தொகையுமாருளவே' (வேற்று. 6) என்று கூறுவதால் பெயர்ச் சொற்கள் இரண்டு சேர்ந்து இரண்டாம் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை வரை தொகைகளாக அமைவது குறிப்பிட்டுள்ளதாகக் கொள்ளலாம். பொருட் தொழிற் பெயர்ச் சொற்களும் (ஓட்டம், வாழ்க்கை, செய்கை போன்றவை) பெயர்ச் சொற்களில் அடங்கும்.

அந்தச் சூத்திரத்தில் 'தொகையுமாருளவே' என்பதால் இளம்பூரணர் வினையும் பெயரும் சேர்ந்து தொகை அமையலாம் என்று வினைத்தொகையை உதாரணம் காட்டியுள்ளார். கல்லாடரும் இதே கருத்தினரே. ஆனால் சேனாவரையர் அதைத் தொழிற் பெயராகக் கருதவேண்டும் என்று எச்சவியலில் குறிப்பிட்டுள்ளார்.

> 'ஈண்டு 'வினை' (எச்சம். 19) என்றது எவற்றை எனின் வினைச்சொற்கும் வினைப்பெயர்க்கும் முதனிலையாய் உண், தின், செல், கொல் என வினை மாத்திரம் உணர்த்தி நிற்பனவற்றை என்பது. இவற்றை வடநூலார் தாது என்ப'

என்று சேனாவரையர் கூறும்போது வினையடிச் சொல் வினைக்கும் முதனிலைத் தொழிற் பெயர்க்கும் பொது என்று பொதுவாகக் கூறினாலும் இறுதியில்

> 'வினைத்தொகைக்கு முதனிலை பெயராம் அன்றோ எனின், உரிஞ் என்பது முதலாயினவற்றைத் தொழிற்பெயர் என்றார் ஆகலின் தொழில் மாத்திரம் உணர்த்துவன எல்லாம் தொழிற்பெயர் என்பது ஆசிரியர் கருத்து என்க'

என்ற அவர் வாசகம் வினைத்தொகையில் உள்ள வினையைத் தொழிற் பெயராகக் கருத வேண்டும் என்ற உண்மையைப் புலப்படுத்துகிறது. அதுதான் தொல்காப்பியர் கருத்து என்று கூறினாலும் பொருள் நிலையில் தொழிலைக் குறிப்பதாகவே விளக்கம் செய்வதாலும் வினையடி என்பதே பொருந்தும். சேனாவரையரே 'தொக்கவழித் தொகை ஆற்றலாற் காலந் தோன்றும்' என்பதால் முதனிலை தொழிற் பெயராகக் கொள்ளாமல் வினையடியாகவே கொள்ளவேண்டும் என்பதைப் புலப்படுத்தியுள்ளார்.

**பெயர் + வினைப்பெயர்**

இங்கு வினை என்பது வினைமுற்று, வினைதொழிற்பெயர், பொருள்தொழிற் பெயர் என்ற மூன்று வகை அடங்கியுள்ளது என்ற கருத்து காணப்படுகிறது.

எல்லா உரையாசிரியர்களும் உவமைத் தொகையில் வினை உவமத்துக்குப் புலிப் பாய்த்துள் என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளதால் பொருள் தொழில்பெயர் தொகையின் இரண்டாம் சொல்லாக வரும் என்பதில் கருத்து வேறுபாடு இல்லை. ஏனைய இரண்டு பற்றிக் கருத்து வேறுபாடு உண்டு. பெயர் + வினைமுற்று என்ற வகையில் நிலங் கடந்தான் என்பது தொகையாகக் கொள்ளமுடியாது என்பது மேலே விவாதிக்கப் பட்டது.

### இடைச்சொல் + பெயர்

வேற்றுமைத் தொகைச் சூத்திரத்தில் ஏழாம் வேற்றுமையின் சொ,,ல் உருபாக வரும் இடைச்சொற்கள் தொகையின் முதல் சொல்லாக வருவதைக் கவனித்த தெய்வச்சிலையார் மொழி மாற்றாக வரும் என்று கூறியதை நாம் இடைச்சொல் + பெயர் என்று வந்துள்ளதாகக் கொள்ளலாம்.

> 'வேற்றுமைத் தொகையே வேற்றுமையியல' என்றதனால் அவ்வேற்றுமை மொழி மாறி நிற்குமாகலின் அத்தொகைச் சொல் மொழி மாறி நின்று ஒட்டுப்படுதலும் கொள்க. மலையது இடை மலையது அகம் என்பன இடைமலை அகமலை எனவும் வரும். பிறவும் அன்ன'

என்பது தெய்வச்சிலையாரது வாசகம். இங்குப் புறநிலையில் இடைச்சொல் தொகைச் சொல்லாக வருகிறது என்பதே முக்கியம். மேலும் தெய்வச்சிலையார் 'இடை முலை' என்பது பின்மொழி நிலையலுக்கு உதாரணமாகக் கொடுத்துள்ளார். இடைச்சுரம், இடைநா, முன்மொழி, பின்தேர்க்குரவை பின்மொழி, உள்ளுறை போன்ற உதாரணங்கள் தொல்காப்பியத்தில் காணப் படுவதும் இடைச்சொற்களும் தொகைச்சொற்களில் முதல் சொல்லாக வருவது உறுதி. சங்க இலக்கியத்திலும் இடை மதில், உள்ளூர், கடைநாள், கடைப்பெயல், நடு நாள், பின்பகல், பின்பனி, முன்கை, முன்பகல், முன்பனி, மேல்உலகம் போன்ற உதாரணங்கள் காணப்படுகின்றன. இதுவும் உலகப் பொது வானதே. உதாரணமாக வித் அவுட் (without) அப் ஆன் (upon) ஓவர்ஸீஸ் (overseas) முதலானவை (Bloomfield, 1933: 228) தொகைகளர்கவே ஆங்கிலத்தில் கருதப்படுகின்றன.

### வினையடை + பெயர்

விஜயவேணுகோபால் (1979: 40) வினையடையும் செயப்படு பொருளும் சேர்ந்து தொகையாக வரும் என்று குறிப்பிட்டுத் தப்புக் கணக்கு, விரைவு வண்டி, கெட்டி வீடு, செல்லக் குழந்தை, வல்லெழுத்து ஆகிய உதாரணங்களைக் கொடுத்து, தப்பான கணக்கு, விரைவான வண்டி, கெட்டியான வீடு, செல்லமான குழந்தை, வன்மையான எழுத்து என்று விரித்து அவைகளை எப்படி வாக்கியத்திலிருந்து பெறுவது என்று விளக்கும்போது கணக்கைத் தப்பாகப் போட்டான், வண்டியை விரைவாக ஓட்டினான் முதலிய வினையடை + பெயர் என்று

அமைந்துள்ளதாக விளக்கியுள்ளார். அவைகளில் வல்லெழுத்து மட்டும் மரபுப்படிப் பண்புத் தொகையில் அடங்கும்; ஏனையவை வினையடையாகவே கருதத்தகுந்தவை. தொல்காப்பியத்தில் மென் மொழி (மெல்லியவாதல்) (செய். 233), சங்க இலக்கியத்தில் வரும் மென்னடை (மெத்தென்ற நடை - குறுந். 115:5), விரை பெயல் (விரைந்த மழை - ஐங்கு. 252:3) போன்ற உதாரணங்களும் வினை யடையும் தொகையில் முதல் உறுப்பாக வருவதை உறுதிபடுத்தும். இதுவும் உலக மொழிகளில் வினையடை + பெயர் காணப்படு கின்றன (Bloomfield, 1933: 237). பேர்புட் (Barefoot) ஹாட்புட் (hotfoot) போன்றவைகள் உதாரணம்.

### 5.8. தொகைகளின் விளக்கம்

தொல்காப்பியர் வேற்றுமை, உவமை, வினை, பண்பு, உம்மை அன்மொழி என்று ஆறு வகைகளைக் குறிப்பிட்டுள்ளார் (எச்சம். 16). உரையாசிரியர்கள் உவமைத் தொகையில் உருவகத்தையும் குறிப்பிட்டுள்ளார்கள்.

### 5.8.1. வேற்றுமைத் தொகை

தொகையாக்கத்தில் இரண்டு முதல் ஏழு வேற்றுமைகளே பங்கு கொள்ளும்.

### 5.8.1.1. இரண்டாம் வேற்றுமை

தெய்வச்சிலையார் ஒழிந்த எல்லா உரையாசிரியர்களும் இரண்டாம் வேற்றுமைத் தொடருக்குப் பெயர் (செயப்படு பொருள்) + வினைமுற்று என்ற முறையிலேயே உதாரணம் கொடுத்துள்ளார்கள். நிலங் கடந்தான் (நிலத்தைக் கடந்தான்) என்பதே அது. அது தொடராகுமே அல்லாமல் தொகை ஆகாது. எனவேதான் தெய்வச்சிலையார் படையைப் பிடித்த கை படைக்கை எனத் தொகும் என்று ஆறு வேற்றுமைக்கும் உதாரணம் கொடுத்துள்ளார்கள். இதுவே பொருத்தமான உதாரணம் ஆகும்.

### 5.8.1.2. மூன்றாம் வேற்றுமை

இளம்பூரணர் உடனிகழ்ச்சிப் பொருளில் வரும் தொகைக்கும் சேனாவரையர், தெய்வச்சிலையார் ஆகிய இருவரும் உடனிகழ்ச்சி, கருவி ஆகிய இரண்டு பொருளில் வரும் தொகைக்கும், நச்சினார்க்கினியர் கருவிப் பொருளில் வரும் தொகைக்கும் உதாரணம் தந்துள்ளார்கள். தாய் மூவர் என்ற உதாரணத்தையே இளம்பூரணர், சேனாவரையர்,

தெய்வச்சிலையார் ஆகிய மூவரும் கொடுத்துள்ளார்கள். சேனாவரையர் தாயொடு மூவர் என்றும், தெய்வச்சிலையார் தாயொடு கூடிய மூவர் என்றும் விளக்கியுள்ளார்கள். இதைத் தாயரும் மூவரும் என உம்மைத் தொகையாக விரிக்கலாமே தவிர உடனிகழ்ச்சி பொருள் உடையதாக விரிப்பது பொருந்தாது. பொற்குடம் (பொன்னான் இயன்ற குடம்) என்ற உதாரணத்தைச் சேனாவரையரும் குதிரைத் தேர் (குதிரையாற் பூட்டப்பட்ட தேர் என்ற உதாரணத்தைச் செய்வச்சிலையாரும் செதுமொழி சீத்த செவி (பொல்லாச் சொல்லால் துளைக்கப்பட்ட செவி- கலி. 68) என்ற உதாரணத்தை நச்சினார்க்கினியரும் கொடுத்துள்ளார்கள்.

> 'சாத்தனொடு வந்தான் என்னும் பொருட்கண் சாத்தன் வந்தான் எனவும், சாத்தற்குக் கொடுத்தான் என்னும் பொருட்கண் சாத்தன் கொடுத்தான் எனவும், உருபு தொடர்ப்பொருள் உணர்த்தும் ஆற்றல் இல்லன தொகா, அவ்வாற்றல் உடையனவே தொகுவன என்றவாறாம்'

என்பது சேனாவரையர் (எச்சம். 16) வாசகம். பெயர் + வினைமுற்று என்பது தொகையாகக் கருதமுடியாது என்பது மேலே விளக்கப்பட்டது. இருந்தாலும் அந்தக் கொள்கையை ஏற்றுக்கொண்டாலும் மூன்றாம் வேற்றுமையும் நாலாம் வேற்றுமையும் தொகையாக வரா என்பது சேனாவரையர் வாதம். அதற்குக் காரணம் நிலங்கடந்தான் போன்ற உதாரணங்களில் வேற்றுமை உருபு கெட்டாலும் அதன் இலக்கண உறவு மாறவில்லை. ஆனால் மூன்றாம் நாலாம் வேற்றுமைகளில் உருபு கெட்டால் அவைகளின் இலக்கண உறவு மாறிவிடுகிறது. அவை இரண்டுமே கருத்தா உறவாக மாறி விடுகிறது.

### 5.8.1.3. நாலாம் வேற்றுமை

கருப்புவேலி என்ற உதாரணத்தை இளம்பூரணரும் சேனாவரையுரும் கொடுத்துள்ளார்கள். அதைக் கரும்பிற்கு வேலி என்று சேனாவரையர் விரித்துக் காட்டியுள்ளார். கடிசூத்திரப் பொன் என்ற உதாரணத்தைக் கொடுத்து அதைக் கடி சூத்திரத்திற்கு வைத்த பொன் என்று விரித்துக் காட்டியுள்ளார். பருத்திவேலி (கருப்பைப் பார்க்கும்) என்ற புறநானூற்று அடியை (324) மட்டும் நச்சினார்க்கினியர் கொடுத்துள்ளார். அதைப் பருத்திக்கு உரிய வேலி என்று விரிக்கலாம். அதாவது ஒரு வினை புதைநிலையில் இருக்க வேண்டும். அப்படியானால் கருப்புவேலி

என்பதையும் கரும்புக்கு உரிய/போட்ட வேலி என்று விரிப்பதே பொருந்தும்.

### 5.8.1.4. ஐந்தாம் வேற்றுமை

ஐந்தாம் வேற்றுமைக்கு எல்லா உரையாசிரியர்களும் நீங்கல் பொருளில் வரும் தொகைக்கே உதாரணம் கொடுத்துள்ளார்கள். வரைவீழ் அருவி என்ற இளம்பூரணர் உதாரணமும் வரைபாய்தல் என்ற சேனாவரையர் உதாரணமும் வரை இழி மயில் என்ற நச்சினார்க்கினியர் உதாரணமும் தொடராகக் கருதத் தகுந்தவையே. அப்படியே கருவூர்க் கிழக்கு என்ற இன்னொரு உதாரணத்தைச் சேனாவரையர் தந்து கருவூரின் கிழக்கு என்று விளக்கியுள்ளது. ஐந்தாம் வேற்றுமை எல்லைப் பொருளுக்கு உரிய உதாரணமாகக் கருதலாம். இதைத் தொகையாகக் கருத முடியாது. வரை அருவி என்ற உதாரணத்தைத் தெய்வச்சிலையார் கொடுத்து வரையினின்றும் விழாநின்ற அருவி என்று விளக்கியது பொருத்தமே. தொல்காப்பியர் ஐந்தாம் வேற்றுமை உழற்ச்சி (Comparative) காரணம் (அச்சம் - கள்வரின் அஞ்சும்) நீக்கம் (தீர்தல் - ஊரின் தீர்ந்தான்) ஆகிய மூன்று பொருள்களை உடையது. தொல்காப்பியர் கருத்துப்படி ஒப்புப் பொருள் இரண்டாம் வேற்றுமைக்கு உரியது. எனவே உவமைத் தொகை இரண்டாம் வேற்றுமையில் அடங்கும்.

### 5.8.1.5. ஆறாம் ஏழாம் வேற்றுமைகள்

ஆறாம் ஏழாம் வேற்றுமை தொகைகளுக்கு உதாரணங்கள் பொருத்தமானதாகவே உள்ளன.

ஆறாம் வேற்றுமை
இளம் & தெய்வ : யானைக்கோடு
சேனா : சாத்தன் புத்தகம் கொற்றன் உணர்வு

ஏழாம் வேற்றுமை
இளம் & தெய்வ : குன்றக் கூகை
சேனா : மன்றப் பெண்ணை
நச்சர் : மன்ற வேம்பு

### 5.8.2. உவமைத் தொகை

'உவமத் தொகையே உமவ இயல' என்ற உவமைத் தொகை பற்றிய சூத்திரம் வேற்றுமைத் தொகை பற்றிய சூத்திர

அமைப்பிலேயே உள்ளது. உரை விளக்கத்திலேயே உரையாசிரியர்கள் தொகைக் கோட்பாட்டைப் புலப்படுத்தியதோடு எல்லா உரையாசிரியர்களும் உவமைத் தொகையை விரிக்கும்போது இரண்டாம் வேற்றுமை உருபும் இணைந்து வருவதைக் கவனித்து இரண்டுக்கும் உள்ள வேறுபாடு பற்றி விளக்க முயன்றுள்ளார்கள். சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் உவமைத் தொகையின் விரிவை ஒரு வாக்கியத்திலிருந்தே அதுவும் இதிலுள்ள இரண்டு கருத்தாக்களும் ஒரே வினையை உடையதாகக் கொண்டு வருவித்திருப்பது சிறப்பாகக் குறிப்பிடத் தகுந்தது. இளம்பூரணர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் பொருள்நிலையில் விளக்கத் தெய்வச்சிலையார் மட்டுமே வடிவ அடிப்படையில் விளக்கியுள்ளார்.

> 'உவமத் தொகைக்கண் அவ்வுருபு தொக்கு நின்றாலும் அவ்வுருபு விரிந்தாங்கே பொருள்படும்

என்பது இளம்பூரணர் பொழிப்புரை.

> 'உவமத் தொகை உவம உருபு தொடர்ப் பொருள் போலப் பொருள் உணர்த்தும்'

என்பது சேனாவரையர் பொழிப்புரை.

> 'உவம உருபுகள் தொக்க தொகைச் சொற்கள் அவ்வுவம உருபுகள் தொக்கனவேனும் தொகாது நின்றாற் போலப் பொருள் உணர்த்தும் இயல்பின'

என்பது நச்சினார்க்கினியர் பொழிப்புரை. மாறாக 'உவம இயல்புடையன உவமத் தொகை' என்று தெய்வச்சிலையார் பொழிப்புரைத்து

> 'அவ்வுவமையும் உவமிக்கப்படும் பொருளும் விட்டிசைத்து நில்லாது செறிய நிற்பது உவமத் தொகையாம்'

என்று அவர் விளக்குவதால் அது வடிவநிலை பற்றியது என்பது தெளிவு. சுருங்கச் சொன்னால் இளம்பூரணர், சேனாவரையர் நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் தொடரிலிருந்து தொகையை வருவிக்கத் தெய்வச்சிலையார் தொகையின் புற வடிவத்தை மட்டும் விளக்குவதால் அவர் தொகையிலிருந்து தொடரை வருவிக்கிறார் என்று கொள்ளலாம்.

எல்லா உரையாசிரியர்களும் உவமைத் தொகைகளை விரிக்கும்போது இரண்டாம் வேற்றுமை உருபு வருவதைக் கவனித்துக் குறிப்பிட்டு உவமத் தொகையை வேற்றுமைத் தொகையிலிருந்து வேறுபடுத்த முயன்றுள்ளார்கள்.

இதைக் கேள்வியாக இளம்பூரணர் எழுப்பித் தன் காலத்து வழங்கிவந்த ஒரு கருத்தைக் குறிப்பிட்டு அது தனக்குத் திருப்தி அளிக்காததால் 'மெய்யுரை வல்லார் வாய்க் கேட்டுணர்க' என்று கூறியுள்ளார்.

> 'இவ்வுவமத் தொகை என்று காட்டின எல்லாம் வேற்றுமை உருபு பற்றி அன்றி வாரா. என்னை? துடிநடு என்ற விடத்துத் 'துடியை ஒக்கும் நடு' துடிநடு என்று இரண்டன் உருபு பற்றி வரும் ஆகலின், உவமைத் தொகை என்பது என்னை? எனின் அதற்கு ஒரு சாரார் சொல்லுவது. துடிநடு என்புழி உவம உருபும் வேற்றுமை உருபும் என இரண்டு தொக்கவேனும்' 'துடி போலும் நடு' என தொகைக்கு உவமப் பொருளே சிறப்புடைத்து ஆகலின், அது தொகை என்பது. ஐகார உருபு அவ்வுவம உருபினை நோக்கி வந்தது என்ப. என்னை? துடியை நடுவாகக் கொள்ளாது ஆகலின் என்பது. இனி அதற்கு மெய்யுரை வல்லோர்வாய்க் கேட்டுணர்க'.

என்ற அவர் வாசகத்தில் இரண்டு உண்மைகள் புதைந்துள்ளன: அ) தன்னுடைய கருத்தைக் கூறாமல் அவர் காலத்தில் வழங்கி வந்த ஒரு விளக்கத்தைக் கூறிவிட்டு, அது வாசகருக்குத் திருப்தி கரமாக இல்லை என்றால், 'வல்லார்வாய்க் கேட்டுணர்க' என்றதன் உண்மை. அதாவது அவருக்கே அது திருப்தி அளிக்கவில்லை என்று பொருள். ஆ) ஐகார உருபு அவ்வுவம உருபினை நோக்கி வந்தது என்பது கோட்பாட்டு நிலையில் ஒரு முக்கியக் கருத்து. அதாவது சில வினைகளுக்குச் சில வேற்றுமை உருபு கட்டாயம் உண்டு. செயப்படுபொருள் குன்றா வினை என்னும்போது அவை இரண்டாம் வேற்றுமை ஏற்பது ஒரு வகையில் மிகையே. அதனால் அஃறிணை செயப்படுபொருளாக இருக்கும்போது இரண்டாம் வேற்றுமை ஏற்றுவரவேண்டிய கட்டாயம் இல்லை. அதுபோல இங்குப் 'போலும்/போன்ற' என்பவை முக்கியமாகி, வேற்றுமை உருபு மிகையாக வந்தது என்று கொள்ளலாம்.

சேனாவரையரும் அதே கேள்வியை எழுப்பி

> அ) சொல்லுவார்க்கு அது கருத்தாயின் (இரண்டாம் வேற்றுமை) வேற்றுமைத் தொகையுமாம். ஆ) அக் கருத்தான் அன்றிப் புலி அன்ன பாய்த்துள், பொன் மானும் மேனி என வேற்றுமையோடு இயைபு இல்லா உவம உருபு தொடர்ப்பொருட் தொக்க வழி உவமத் தொகையாவது அல்லது வேற்றுமைத் தொகை ஆண்டு இன்மையின், வேற்றுமைத் தொகை ஆமாறு இல்லை என்க'

என்ற அவர் பதிலில் இரண்டு விதச் சமாதானம் உள்ளன. முதலாவது பேசுவோர் நோக்கு அதாவது பேசுவோன் எந்தப் பொருளில் பேசுகிறான் என்பது. அதனால்தான் பொருள்மயக்கம் உடைய தொடரோ வாக்கியமோ பேசும் சூழலால் தெளிவுபடும் என்பார்கள். இரண்டாவது மொழி அமைப்பு நோக்கு. அதாவது உவம உருபுகளான அன்ன, ஏய்ப்ப, உறழ, ஒப்ப போன்றவை இரண்டாம் வேற்றுமை உருபு ஏற்று வரா. 'போலும்' என்ற உவம உருபோடு மட்டும் இரண்டாம் வேற்றுமை உருபு ஏற்று வரும். ஆனால் அது அங்குப் பொருள் முக்கியத்துவம் பெறாது. எனவே இங்கு உவமையே முக்கியம்.

பொருள் தொழிற் பெயராகவோ, பண்புப்பெயராகவோ வரும் தலைச்சொல் உடைய உவமத் தொகையைச் சேனாவரையர் விரித்துக் காட்டியதில் ஒத்தத் தலைச் சொல்லை உவமச் சொல்லுக்கும் ஏற்றிக் காட்டியது சிறப்பானது. புலி பாய்த்துள் என்பதைப் புலி போலப் பாய்த்துள் என்று கூறாமல் புலி பாய்த்துளை ஒக்கும் பாய்த்துள் என்று விரித்துக் காட்டியது சிறப்பானது. செங்குட்டுவன் வீரம் என்ற உவமைத் தொகையைச் செங்குட்டுவன் வீரத்தை ஒக்கும் வீரம் என்று விளக்கலாம்.

தெய்வச்சிலையாரும் அதே கேள்வியை எழுப்பி அதே முறையில் பதில் சொல்லியுள்ளார்.

> 'மழையன்ன வண்கை என்ற வழி இரண்டாம் உருபு விரியாமலும், தான் நின்று உவமிக்கப்படும் பொருளைக் காட்டுதலின் இவ்வாறு வரும் சொற்களை நோக்கி உவமத் தொகை என்றார். அதனானே அன்றே, உவம இயல்பு உடையன உவமத் தொகை என ஓதுவாராயினார்'

என்பது அவருடைய விளக்கம்.

முருகன் தோள்/வாள் என்ற ஆறாம் வேற்றுமைத் தொகைகளை முருகனுக்குத் தோள் உண்டு முருகன் வாளை உடையன் என்றும் விரிக்கலாம். உடைமை என்னும்போது முருகனுக்கு உள்ள தோள் என்பதற்கும் முருகன் தோள் என்பதற்கும் தோள் என்பது பெறும் அழுத்தம் மாறுபட்டது. முன்னது பொருள் அழுத்தம் உடையது. ஆறாம் வேற்றுமைத் தொகையாக வரும்போது அழுத்தம் குறைவு உடையது. அப்படியே துடியைப் போன்ற நடு என்பதற்கும் துடிநடு என்பதற்கும் அழுத்த வேறுபாடு உடையது. அதாவது முன்னதே பொருள் அழுத்தம் உடையது.

கம்பன் திறமை என்பது கம்பன் போன்ற திறமை என்று உவமைத் தொடராக அமையலாம். அது கம்பனுக்கு உள்ளது போன்ற திறமை என்று விரியும். கவுடலியர் மூளை என்பது கவுடலியர் போன்ற மூளை உவமத் தொகை என்னும்போது கவுடலியருக்கு இருந்த மூளை போன்றது என்று பொருள். விஜயவேணுகோபால் (1970: 174) கழுதைக் கால் என்ற உவமத் தொகையைக் கழுதைக்கு உள்ளது போன்ற கால் என்ற வாக்கியத்திலிருந்தே வருவித்துள்ளார்.

### 5.8.2.1. உருவகத் தொகை

தெய்வச்சிலையாரும் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் உருவகத் தொகையையும் உவமைத் தொகைக்குள் அடக்கி யுள்ளார்கள்.

> 'உவம இயல உவமத்தொகை' என்றதனான் உவமையும் உவமிக்கப்படும் பொருளும் மாறி நிற்றலும் கொள்க. முகத்தாமரை கைம்மாரி என வரும். இவை உருவகம் அன்றோ எனின் உருவகத் தொகை என்று ஓதாமையானும் பண்புத்தொகையில் அடங்காமையானும் உவமையுள் அடங்கும். இத் தொகையை வேற்றுமைத் தொகையோடு சேர ஓதியவதனால் அதனோடு இதற்கு ஒற்றுமை உண்டு என்று உணர்க'

என்பது தெய்வச்சிலையார் வாசகம். நச்சினார்க்கினியரும்

> 'முறி மேனி முதலியன (முத்தம் முறுவல், வெறி நாற்றம், வேல் உண்கண், வேய்த் தோள் ஆகியவை)

உருவகமாம் எனின் ஆசிரியர்க்கு உருவகமும் உவமையாமாறு கண்டுகொள்க'

என்று விளக்கியுள்ளார்.

### 5.8.3. வினைத் தொகை

'வினையின் தொகுதி காலத்து இயலும்' என்பது சூத்திரம். இங்கு வினைத்தொகையின் வடிவம், உண்டாகும் முறை, கால வகை ஆகியவை பற்றிக் கருத்து வேறுபாடு காணப்படுகிறது.

இளம்பூரணர், தெய்வச்சிலையார், நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் வினைத் தொகை பெயரெச்சம் + பெயர் என்று கொள்ளச் சேனாவரையர் தொழிற்பெயர் + பெயர் என்று கொண்டுள்ளார். இதற்குக் காரணம் 'காலத்து இயலும்' என்ற சூத்திரத் தொடரை விளக்கும் முறைதான்.

'எக்காலும் காலம் உடையனவாய் இயலும்' என்று இளம்பூரணரும் 'காலச்சொல்லோடு நடக்கும்' என்று தெய்வச் சிலையாரும், 'வினைச்சொல்லினது ஈறாய்த் தொக்கு நிற்கும் எழுத்துகள் காலத்தின் கண்ணே தொக்கு நிற்கும்' என்று நச்சினார்க்கினியரும் விளக்குகிறார்கள். ஆனால் சேனாவரையர் 'அவ்வினை பிரிந்து நின்றவழித் தோன்றாது தொக்கவழித் தொகை ஆற்றலால் காலம் தோன்றும்' என்பார்.

இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் தொடரிலிருந்து தொகை உண்டானதாகக் கருதத் தெய்வச்சிலையார் மட்டும் தொகை இயல்பானதாகக் கருதுகிறார்.

வினைத்தொகையின் அடிப்படை வடிவம் பற்றியும் உரையாசிரியர்களிடையே கருத்து மாறுபாடு காணப்படுகிறது. சேனாவரையர் மட்டும் வினைத் தொகையின் முதல் சொல் (கொல் யானை என்ற வினைத்தொகையில் 'கொல்') தொழிற்பெயர் என்று கருதப் பிறர் எல்லாரும் வினை அதுவும் பெயரெச்சத்துக்கு உரிய அடிச்சொல் என்று கொண்டுள்ளார்கள்.

> 'ஈண்டு 'வினை' என்றது எவற்றையெனின் வினைச் சொற்கும் வினைப் பெயர்க்கும் முதல் நிலையாய் உண், தின்செல், கொல் என வினை மாத்திரம் உணர்த்தி நிற்பனவற்றை என்பது இவற்றை வட நூலார் தாது என்ப'

என்று முதலிலும்

> 'வினைத் தொகைக்கு முதனிலை பெயராம் அன்றோ எனின் உரிஞ் என்பது முதலாயினவற்றைத் தொழிற்பெயர் என்றார் ஆகலின் தொழில் மாத்திரம் உணர்த்துவன எல்லாம் தொழிற்பெயர் என்பது ஆசிரியர் கருத்து என்க'

என்று பின்னரும் கூறுவதால் சேனாவரையர் தொழிற்பெயராகக் கருதுகிறார் என்பது தெளிவு. ஆனால் இளம்பூரணர்

> கொல் யானை என்பது கொன்ற யானை.. கொல்லா நின்ற யானை, கொல்லும் யானை என மூன்று காலத்திற்கும் அதுவே வாய்பாடு பிறிது இல்லை

என்பதால் வினையடி என்று கருதுகிறார் என்பது தெளிவு. தெய்வச்சிலையார் 'தொகுங் காலத்துக் காலப் பொருளை உணர்த்தும் சொல்லே தொகுவதும் விரிவதும் என்று கொள்க' என்று கூறுவதால் வினையடி என்று கொள்கிறார் என்பது புலனாகும்.

கொல் யானை என்பதைக் கொல்லும் இயல்புடைய யானை என்றும் குடிநீர் என்பதைக் குடித்தற்கு உரிய நீர் என்றும் சுடு தோசை என்பதைச் சூடாக உள்ள தோசை என்றும் பொருள் கொள்ள இடம் இருக்கிறது. எனவே இங்குக் காலம் தொக்கியிருக்கிறது என்பது பொருந்தாது. அவைகளைத் தொழில் பண்பாகக் கருதவேண்டும். இதைத்தான் தெய்வச்சிலையார் பண்புத் தொகை ஒரு நோக்கில் வினைத் தொகையுள் அடங்கும் என்று அடுத்த சூத்திர உரையில் குறிப்பிட்டுள்ளார். ஏனென்றால் கரியது குதிரை என்பதில் கரியது வினைக்குறிப்பு என்ற முறையில் வினைத்தொகையில் அடங்கும் என்பது அவர் கருத்து. அவர் அதை முழுதும் ஒத்துக் கொள்ளவில்லை என்பது அவருடைய முழு வாதமும் காட்டும். மாறாக நாம் வினைத்தொகை என்பதை அந்தப் பெயரின் ஒரு வகைப் பண்பு என்று கொள்ளலாம். அது பொருள் நோக்கு ஆகும். இதைச் சிவஞான முனிவர் (நன்னூல் 364):

> 'கால விகற்பம் பற்றிப் புடைபெயர்ச்சி வினை கருதாது, அரிவாள், ஆ உரிஞ்சு தறி என்றாற் போல அடு களிறு என்பது இத்தொழிற்கு உரியது இஃது என்னும் பொருள்பட வரும் ஆயின், வினைத் தொகைக் குறிப்பு எனப்படும் என்க'

என்று குறிப்பிட்டுள்ளதும் இந்தக் கருத்தை வலியுறுத்தும்.

அரிவாள், ஆடரங்கு போன்று உரையாசிரியர்கள் கொடுத்துள்ள உதாரணங்களையும் ஊறுகாய், தின்பண்டம் போன்று இக்காலத்தார் தரும் உதாரணங்களையும் பார்க்கும் போது இங்கும் பொருள் குறுக்கம் உடையனவாய் ஒரு குறிப்பிட்ட பொருளை உணர்த்துவனவாய் வருகின்றவைகளையே வினைத் தொகைகளாகக் கொள்ள வேண்டும். இவைகளைச் சிவஞான முனிவர் கருத்துப்படி (நன்னூல் 275) 'காரணக்குறியாக்கம்' என்று கொள்ளவேண்டும். அதாவது கால்நடை என்பது ஆடு மாடுகளைக் குறிப்பது. ஒரு வகையில் காரணப் பெயராலும் காலால் நடக்கும் எல்லாப் பொருளையும் சுட்டாமல் ஒரு குறிப்பிட்ட பொருளுக்கு ஆகி வருவதால் அது காரண ஆக்கம் ஆகும். பொருள் குறுக்கம் இல்லாவிட்டால் கொல்யானை, புணர்பொழுது, செல்செலவு, உண்நீர், செல்லிடம், செய்பொருள் போன்றவைகளைத் தொடர்களாகக் கொள்ளவேண்டும்.

### 5.8.4. பண்புத்தொகை

வண்ணம், வடிவு, அளவு, சுவை ஆகியவைகளும் அவை போன்ற பிற குணங்களை உடைய பொருட் பெயரும் உடையது பண்புத் தொகை. அது தொடரியல் நோக்கில் இன்னது இது என்ற அமைப்பு உடையது (எச்சம். 20). ஆனாலும் அதை விரித்து விளக்குவதில் உரையாசிரியர்கள் மாறுபடுவது தொகை பற்றிய அவர்கள் கோட்பாட்டை ஒட்டியது.

இங்கு எல்லா உரையாசிரியர்களும் ஒரு பொருட்கண் இருபெயர்ப்பட வரும் இரு பெயரொட்டுத் தொகைகளையும் (சாரைப் பாம்பு, கேழற்பன்றி) பண்புத் தொகையில் அடக்கி யுள்ளார்கள்.

இங்கும் பண்புத் தொகையை விரிப்பதுபற்றிக் கருத்து வேறுபாடு காணப்படுகிறது. இளம்பூரணர் அவரை ஒட்டித் தெய்வச்சிலையாரும் குறிப்புப் பெயரெச்சமாக உள்ள பண்பு அடைகளைக் குறிப்பு வினை முற்றிலிருந்தும் (கரியது குதிரை -> கருங்குதிரை) பெயராக உள்ள பண்பு அடைகளை (வட்டம்) ஆகிய என்ற பெயரெச்சம் சேர்ந்த வடிவத்திலிருந்தும் (வட்டமாகிய பலகை -> வட்டப்பலகை) சேனாவரையர் எல்லாப் பண்புத் தொகைகளையும் குறிப்பு வினைமுற்றிலிருந்து (கரியதாகிய குதிரை -> கருங்குதிரை) வட்டமாகிய பலகை -> வட்டப்பலகை) வருவித்துள்ளார் நச்சினார்க்கினியர் குறிப்பு வினையை அடையாக உடைய தொகைகளைக் குறிப்புவினை முற்று + ஆகிய என்ற தொடரிலிருந்தும் (கரியதாகிய குதிரை ->

கருங்குதிரை), பெயராக உள்ள பண்பு அடைகளை, ஆகிய என்ற பெயரெச்சம் சேர்ந்த வடிவத்திலிருந்தும் (வட்டமாகிய பலகை -> வட்டப்பலகை) வருவித்துள்ளார். தொல்காப்பியர் 'இன்னது இது' என்ற தொடரமைப்பு அடிப்படையில் விளக்குவதால், சேனாவரையர் செய்ததுபோல வட்டப்பலகை போன்ற பெயரைப் பண்பு அடையாக உடைய தொகைகளைப் பலகை வட்டமது என்ற குறிப்புவினையாக்கி வருவிப்பதே பொருத்தமானது.

பண்புத் தொகையை ஒரு நோக்கில் வினைத்தொகை யாகவும் இன்னொரு நோக்கில் வேற்றுமைத் தொகையாகவும் கொள்ள வாய்ப்பு இருப்பதை எடுத்துக்காட்டி, அப்படி விரிக்க வாய்ப்பு இருந்தாலும் பண்புத்தொகை தனிவகை என்று தெய்வச்சிலையார் வாதிட்டுள்ளார்.

> 'கரிய குதிரை நெடிய கோல் எனப் பெயரெச்ச வாய்பாட்டாலும், பண்பு பற்றி வரும் சொல் வினைக்குறிப்பு ஆகி முடிதலானும், வினைத் தொகையுள் அடங்கும் எனின், பண்புத் தொகை ஒரு வாய்பாட்டான் விரிக்கப்படாது என்பது, எழுத்ததிகாரத்துள் ('ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும் புணரியல் நிலையிடை உணரத் தோன்றா' (குற்றியலுகரப் புணரியல் 77) கூறுதலின் பெயரெச்ச வாய்பாடும் வரும், வினைக் குறிப்பு ஆதலானே அன்றே, வினைத்தொகையொடு சேர ஓதுவார் ஆயிற்று என உணர்க'.

என்பது அவருடைய வாதம். அதாவது பண்புத் தொகையில் வரும் குறிப்புவினையின் அடுக்கு நிலையும் (Paradigm) (கரியது (வி. மு.), கரிது (வி. எ.), கரிய, கரும் (பெ. எ) வினைத்தொகையில் வரும் வினையின் அடுக்குநிலையும் (மூன்று கால பெயரெச்சம் (செய்யும், செய்த) வினையெச்சங்கள், (செய்து, செயின்) மூன்று கால வினைமுற்று) வேறுவேறு என்பதால் இரண்டும் வேறு என்பது அவருடைய கருத்து. உண்மையில் இந்த வேறுபாடு சொல்வகையை ஒட்டியது. தொடரியல் நோக்கில் இரண்டும் விசேடிப்பதும் விசேடிக்கப்படுவதும் என்ற உறவு உடையன. இரும்புப்பெட்டி, மரப்பெட்டி என்ற வேற்றுமைத் தொகைகளும் விசேடிப்பதும் விசேடிக்கப்படுவதும் என்ற உறவு உடையவை ஆனாலும், அந்த உறவு முதல் காரணம் - காரியம் (இரும்பால் செய்த பெட்டி, மரத்தால் செய்த பெட்டி) என்ற முறையில் தொடரியல் உறவு உடையது. வினைத் தொகையும்

பண்புத் தொகையும் விசேடிப்பதும் விசேடிக்கப்படுவதும் என்ற முறையில் மட்டுமே அமைந்துள்ளன.

அளவு பற்றிய பண்புத் தொகைக்குக் குறுங்கால் என்ற உதாரணத்தை இளம்பூரணரும், நெடுங்கோல் என்ற உதாரணத்தைச் சேனாவரையரும் தெய்வச்சிலையாரும், குறுமுனி, குறுமாக்கள் என்ற உதாரணங்களை நச்சினார்க்கினியரும் கொடுத்துள்ளார்கள். அளவுப் பெயர்கள் அடிப்படையில் நாழி அரிசி, முழத் துணி போன்றவையையும் பண்புத் தொகையாகக் கருத வேண்டி வரும். எனவே உரையாசிரியர்கள் கொடுத்த வட்டப் பலகையும், நாழி அரிசி போன்றவையும் பண்புத் தொகையாகக் கருத முடியுமா?

குறிப்புவினையாக உள்ள பண்புத் தொகையில் செய்யும் வாய்பாட்டு வடிவம் மட்டுமே பண்புத் தொகையாகக் கருதப்படுகிறது. கரிய குதிரை என்பது பொதுவாகக் குறிப்புப் பெயரெச்சத் தொடர் என்றே கருதப்படுகிறது. யாரும் 'கரிய குதிரை'யைப் பண்புத் தொகை என்று கூறுவதில்லை. காரணம் முன்னது விட்டிசை இல்லாமல் ஒரு சொல் போல உச்சரிக்கப்பட, பின்னது விட்டிசை பெற்று இரண்டு தனிச்சொல்லாக உச்சரிக்கப்படுகிறது. 'கருங்குதிரை'யையும் விட்டிசையோடு கூறலாம். அப்படியானால் அதைப் பண்புத் தொகை என்று எப்படிக் கொள்வது?

ஆங்கில மொழியியலார் பிளாக் பெர்ட் (Black bird) ஒயிட் கேப் (white cap) ஆகியவைகளைத் தொகையாகக் கருதும்போது இவை ஒரு குறிப்பிட்ட வகையைக் குறிக்கும் என்றும் அவைகளைத் தொடராகக் கருதும்போது பொதுப் பொருளைக் குறிக்கும் என்றும் விளக்குகிறார்கள் (Bloomfield, 1933: 232-5).

தமிழில் செந்தாமரை, செவ்வாழை என்பவை அந்த வகையைச் சார்ந்தவை. இங்கு இரண்டு உண்மைகள் புதைந்துள்ளன: (அ) தொகையாக உள்ளவை பொருள்நிலையில் குறுக்கம் பெற்று ஒரு குறிப்பிட்ட பொருளை உணர்த்துபவை. ஆ) இலக்கண நிலையில் அவைகளுக்கு அடுக்கு நிலை கிடையாது. அதாவது செவ்விய தாமரை/வாழை என்று விளக்க முடியாது. குறிப்புவினைமுற்றிலிருந்து உண்டானதாக விளக்க முடியாது. மேலும் தொகையில் இடையே செருகமுடியாது. தொடரில் ஒரு சொல்லைச் செருக முடியும். வடிவு, அளவு, ஆகிய இரண்டும் பெயர்ச் சொற்கள் ஆனாலும் அவை பொருள் குறுக்கம் உடையதாய் வந்தால் தொகையாகக் கொள்ளலாம்.

சதுரப் பலகை என்பது சதுரங்கம் ஆடும் பலகை என்ற பொருளில் வரும்போது ஒரு சொல் சீர்மைத்தாய் ஒரு எடுத்தல் ஓசை மட்டும் உடையதாக அமைந்து தொகை என்ற நிலை பெறும். அப்படியே கலகஞ்சி, பிடிஅரிசி என்பவை ஒரு சொல் நீர்மைத்தாய் ஒரு எடுத்தல் ஓசை மட்டும் பெற்றுப் பொருள் குறுக்கம் உடையதாய் அமையும். ஆயின், அவை தொகை என்றும் இரண்டு சொல்லாய் இரண்டு சொல்லும் இரண்டு எடுத்தல் ஓசை பெறும் ஆயின் அது தொடர் என்றும் கருதலாம்.

தொல்காப்பியர் 'இன்னது இது' என்ற முறையில் விளக்குவதால் அவை தொடராக அமைவதையே கருதினாரோ என்று எண்ண வேண்டியிருக்கிறது.

### 5.8.5. உம்மைத் தொகை

உம்மைத் தொகை ஆறுவகை என்று (எச்சம். 21) கூறினாலும் அதில் சொல் எண்ணிக்கை (இரண்டு சொல், பல சொல்) பொருள் அடிப்படையில் வகை (அளவு, எண்ணியல், நிறை, எண்) ஆகிய இரண்டு பாகுபாடும் அடங்கியுள்ளது.

இரண்டு சொல்லாலும் பல சொல்லாலும் தொகும் என்பதைத் தொல்காப்பியர் 'இருபெயர், பலபெயர்' என்று கூறியதன் விளக்கம்; உம்மைத் தொகைக்கு மட்டும் சொல் எண்ணிக்கை குறிப்பிட்டதன் சிறப்பு ஆகியவை விவாதிக்கத் தகுந்தவை.

இருபெயர் என்பதைத் தெய்வச்சிலையார் ஒழிந்த அனைவரும் இரண்டு சொற்கள் என்று கொள்ளத் தெய்வச்சிலையார் இரண்டு வகைச் சொற்கள் என்று கொண்டுள்ளார். அதே சமயத்தில், தெய்வச்சிலையார் 'இருபெயராவது பொருட்பெயரும் தொழிற்பெயரும்: கபிலன் பரணன், ஆடல் பாடல்' என்று விளக்கி இரண்டு சொற்கள் சேர்ந்து வருவதை விதப்புக் கிளவி மூலம் கொண்டுள்ளார். 'வரையறுத்து ஓதாமையால் இரண்டும் பலவும் வரப்பெறும் என்று கொள்க என்று விளக்க உரையில் குறிப்பிடுவதால் அறியலாம்.

பல பெயர்த் தொகையை இளம்பூரணரும் அவரை ஒட்டிச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் இரண்டுக்கும் மேற்பட்ட சொற்கள் இணைந்து வருவது என்று கொண்டு புலவிற் கெண்டை என்ற உதாரணத்தையே தந்துள்ளார்கள். தெய்வச்சிலையார் 'பன்மை குறித்த பெயர்' என்று கொண்டு

பார்ப்பார் சான்றோர் என்று பலர்பால் சொற்கள் இணைந்து வருவதை உதாரணமாகக் கொடுத்துள்ளார். அதற்கு ஆதரவாக 'மேற்சொல்லப்பட்டன (இரு பெயர்) ஒருமை குறித்தலின்' என்று விளக்கியுள்ளார். ஆனாலும் அவரே புலிவிற்கெண்டை, அந்தணர் அரசர் வணிகர், தூணிப்பதக்கு முந்நாழி என்ற உதாரணங்களை மிகையால் கொண்டுள்ளார்.

இங்குத் தெய்வச்சிலையார் கொண்ட விளக்கம் சிறப்பானதாகக் கொள்ளமுடியாது.

பிற தொகையிலும் இரண்டு மேற்பட்ட சொற்கள் தொக்கு வரும் என்பதைச் சேனாவரையர் உணர்ந்து, தொல்காப்பியர் உம்மைத் தொகைக்கு மட்டும் விதந்து கூறியதன் காரணத்தை - சிறப்பை விளக்கியதில் தொடரியல் கோட்பாட்டில் முக்கியமான அண்மை உறுப்பு உறவில் (Immediate Constituent relation) மாறுபாடு இருப்பது பற்றிக் குறிப்பிட்டிருப்பது சிறப்பானது.

> அ) வேற்றுமைத் தொகை முதலாயின பல சொல்லாற் றொகுதல் சிறுபான்மை. அதனான் உம்மைத் தொகை இரு சொல்லானும் பல சொல்லானும் ஒப்பத் தொகும் என்பது அறிவித்தற்கு 'இரு பெயர், பல் பெயர்' என்றார். ஆ) கற்சுனைக் குவளை இதழ், பெருந்தோட் பேதை எனப் பிற தொகையும் பெரும்பான்மையும் பல சொல்லான் வருமால் எனின், கல் என்பதும் சுனை என்பதும் கற்சுனை எனத் தொக்கு ஒரு சொல்லாய்ப், பின் குவளை என்பதனோடு தொக்கு ஒரு சொல்லாய்ப் பின் இதழ் என்பதோடு தொக்குக் கற்சுனைக் குவளையிதழ்' என ஒன்று ஆயிற்று. பெருந்தோள் என்னும் தொகை ஒரு சொல்லாய்ப் பேதை என்பதனோடு தொக்குப் பெருந்தோட் பேதை என ஒன்று ஆயிற்று. அவை இவ்வாற்றான் அல்லது தொகாமையின் இரு சொல் தொகையே ஆம். இ) புலிவிற் கெண்டை என்புழி மூன்று பெயரும் தொகும் என்னாது (இ$_1$) முதற் பெயர் ஒழித்தும், (இ$_2$) இறுதிப்பெயர் ஒழித்தும் ஏனை இரண்டும் தம்முள் தொக்கு ஒரு சொல்லாய்ப் பின் மற்றையதனோடு தொகும் எனின், முன் தொகும் இரண்டற்கும் ஓர் இயைபு வேறுபாடு இன்மை யானும், இரு தொகைப்படுத்தல் பல செய்கைத்து ஆகலானும், அவை மூன்றுபெயரும் ஒருங்கு தொக்கன எனவேபடும்'

என்பது அவர் வாசகம். இங்கு மூன்று கருத்துகள் புதைந்துள்ளன. முதல் கருத்து உண்மைதான் என்றாலும், தொகை இலக்கணத்தின் கூறாகப் பல சொல்லும் தொகை என்று குறிப்பிட்டிருக்க வேண்டும். ஆக ஒரு வகையில் இலக்கண ஆசிரியர் சொல்லாததற்கு ஒரு சமாதானம்.

இரண்டாவது கருத்தில் 'பிறதொகையும் பெரும்பான்மையும் பல சொல்லான் வருமால் எனின்' என்று கூறியது சிறப்பானது. மொழிக் கட்டமைப்பில் இரண்டுக்கும் மேற்பட்ட சொற்கள் (உவமைத் தொகையில் இணைந்து வருவதற்கும் பிற தொகைகளில் இணைந்து வருவதற்கும்) வேறுபாடு இருப்பது என்று அவர் கூறிய விளக்கம் இருபதாம் நூற்றாண்டு மொழியியலார் கூறும் அண்மை உறுப்பு உறவு மாறுபடுவது என்பதுதான். எனவே அண்மை உறுப்பு ஆய்வின் முன்னோடியாகக் கருதத்தகுந்தது அதாவது ஒரு தொடரில் சொற்கள் நீள்வரிசையில் (Linear) இணையாமல் படி நிலையில் (Hierarchical structure) சேரும் என்பது. அவர் கருத்தை அண்மை உறுப்பு உறவு அடிப்படையில் கீழ்க்கண்டபடி படம் வரைந்து காட்டலாம்.




இரண்டு இரண்டு சொல்லாய்த் தொகும் என்பதை 'இரு சொல் தொகையாம்' என்பதும் அண்மை உறுப்பு ஆய்வின் அடிப்படையை உணர்ந்ததைப் புலப்படுத்தும். மேலும் அதன் அடிப்படையில் உம்மைத் தொகையில் மூன்று சொற்கள் சேர்ந்து வருவதை விளக்கும்போது இரண்டு இயலுமையை (Possibility) எடுத்துக்காட்டி அவை பொருந்தா என்று புதிய அண்மை உறுப்பு உறவை எடுத்துக்காட்டியது மிகவும் சிறப்பானது.

உம்மைத் தொகையில் இரண்டு இயலுமையாலும் (புலிவில்+ கெண்டை, புலி + வில்கெண்டை) பொருள் வேறுபாடு இல்லை. பிற உதாரணங்களில் இப்படிப்பட்ட மாறுபட்ட அமைப்பு மாறுபட்ட பொருளைத் தரும். உதாரணமாகச் செங்கால் நாரை என்பது செங்கால் என்று சேர்ந்து நாரை என்பதனோடு சேர்ந்தது என்றால் சிவந்த காலை உடைய நாரை என்று பொருள். கால் நாரை என்று சேர்ந்தபின் செம் என்பதனோடு சேர்ந்தால் காலை உடைய நாரை சிவந்தது என்று பொருள்படும். மேலும் இரண்டு இரண்டாகச் சேர்ப்பதில் பல சேர்க்கை முறையில் (புலி வில்

என்ற தொகையோடு கெண்டை சேருவது, புலி என்பது வில் கெண்டை என்ற தொகையோடு சேருவது அமைந்தாலும் பொருள் மாறுபடாததால் தான் 'மூன்று பெயரும் ஒருங்கு தொக்கன' என்று முடிவுக்கு வர வேண்டியதாயிற்று. தருக்க ரீதியிலான சிந்தனைக்கு நல்ல எடுத்துக்காட்டாக இது அமைந்துவிட்டது.

'ஒருங்கு தொக்கன' என்பதை மொழியியலார் பன்மை அண்மை உறுப்புகள் (Multiple Immediate Constituents) என்பார்கள். அது ஒரு கோட்பாட்டு நிலையில் சிறப்பான கருத்து. அதைக் கீழ்க்கண்டபடி மொழியியலார் விளக்குவார்கள்.




சேனாவரையர் மூன்று சொற்கள் உடைய தொகைச் சொற்களில் பின் இரண்டும் ஒரு தொகையாக அமைந்து முதலில் உள்ள சொல் அதன் அடையாக வருவதையும் கவனித்துக் குறிப்பிட்டுள்ளார்.

'கலனே தூணிப் பதக்கு, தொடியே கஃசரை, நூற்று நாற்பத்து நான்கு' என்ற தொடர்களை எடுத்துக் காட்டி அவை முறையே

> 'தூணிப் பதக்கு, கஃசரை, நாற்பத்து நான்கு என்பன ஒரு சொற் போல அளவுப் பெயரும் நிறைப்பெயரும் எண்ணுப் பெயருமாய் வழங்கப்பட்டு வருதலின், கலமும்தூணிப் பதக்கும், தொடியும் கஃசரையும், நூறும் நாற்பத்து நான்கும் என இருமொழி நின்று தொக்க என்றலே பொருத்தம் உடைமை அறிக'

என்ற அவருடைய கருத்து அண்மை உறுப்பு உறவில் மாறுபாடு இருப்பதைத் தெளிவுபடுத்தும். அவர் கருத்தைக் கீழ்க்கண்டபடி படம் வரையலாம்.




முன்னது (கற்சுனை குவளை இதழ்) வலது கைப் பிரிவு என்றால் இது (கலனே தூணிப் பதக்கு) இடது கைப் பிரிவு என்று கொள்ளலாம். அதாவது அவைகளின் அண்மை உறுப்பு உறவு மாறுபடுகிறது.

### 5.8.6. அன்மொழித் தொகை

பண்புத் தொகை, உம்மைத் தொகை, வேற்றுமைத் தொகை ஆகிய மூன்றின் மேல் அன்மொழித் தொகை வரும். (எச்சம். 22). இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகியோர் விதப்புக் கிளவியால் ஏனைய இரண்டு தொகைகளான உவமத் தொகையும் வினைத் தொகையும் கூட அன்மொழித் தொகை வரும் என்று சேர்த்துக் கொண்டுள்ளார்கள். தெய்வச்சிலையார் அன்மொழித் தொகைக்கு மாறுபட்ட விளக்கம் கொடுத்து அந்தக் தொகைகளை (உவமத்தொகையும் வினைத்தொகையும்) ஆகுபெயராகக் கருதவேண்டும் என்று வாதாடியுள்ளார்.

அன்மொழித் தொகையாக வரும் பண்புத்தொகை போன்றவைகளுக்கும் வெறும் பண்புத் தொகைக்கும் பொருள் வேறுபாடும் ஒலி வேறுபாடும் உண்டு என்பது இளம்பூரணர் கருத்து.

> 'பண்புத் தொகைப் புறத்துப் பிறந்தது; வெள்ளாடை என்பது; அதனைப்படுத்தல் ஓசையால் சொல்ல வெண்மை மேலும் ஆடை மேலும் கிடவாது அவ்வாடை உடுத்தாள் மேல் கிடக்கும் என்பது. அந்நிறைமொழி ஓசை இன்றிப் பிறிதோர் மொழி ஓசைபட்டுப் பொருள் கொள்ளுமாகலான், அம்மொழி அன்மொழியாயிற்று'

என்பது இளம்பூரணர் வாசகம்.

இதே முறையில் உம்மைத் தொகைக்கும் வேற்றுமைத் தொகைக்கும் 'ஓசை வேறுபாட்டான் அன்மொழிப் பொருள் உணர்த்தும்' என்று விளக்கியுள்ளார். இதன்படிப் படுத்தல் ஒலியனாகவும் தமிழில் அமைகிறது என்பது சுட்டிக்காட்டத் தகுந்தது. சேனாவரையரும் பொதுவாகப் படுத்தல் ஓசை என்று குறிப்பிட்டாரே தவிர அது எங்கே வரும் என்று குறிப்பிடவில்லை. நச்சினார்க்கினியர்தான் 'அத்தொகைகளின் இறுதிச் சொற்கண் எழுத்து' படுத்தல் ஓசையான் அத்தொகைச் சொல் தோன்றிப் பொருள் விளக்குதலின் 'ஈற்று நின்று இயலும்' என்று விளக்கியுள்ளார். அதன்படி,

வெள்ளாடை - பண்புத்தொகை
/
வெள்ளாடை - அன்மொழித்தொகை

பண்புத் தொகை போன்றவற்றுக்கும் அவைகளின் அடியாகப் பிறந்த அன்மொழித் தொகைக்கும் உள்ள உறவுபற்றிச் சேனாவரையர் விளக்கம் மாறுபட்டது. இளம்பூரணர் (பண்புத் தொகை) புறத்துப் பிறந்தது, (உம்மைத் தொகைப்) பற்றிப் பிறந்தது என்று இரண்டு வகையாக விளக்கியுள்ளார். இது சொல் வழியாகப் பொருளைக் குறிப்பது ஆகும். உண்மையில் பொருளிலிருந்து சொல்லுக்குப் போவதே சிறப்பு. அதாவது பொருளைக் குறிப்பதற்கே சொல் என்ற முறையில் அமைய வேண்டும் என்று (பண்புத் தொகை) நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை என்று சேனாவரையரும் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் விளக்குவார்கள். அதற்குச் சேனாவரையர் இரண்டு காரணம் காட்டுகிறார். ஒன்று தருக்க ரீதியில் ஆனது.

> 'பண்புத் தொகைபடவும். . . அச்சொல் தொக்கபின்
> அத்தொகை அன்மொழித் தொகை ஆகாமையின்
> தொகுவதன் முன் அவற்றிற்கு நிலைக்களமாகிய
> சொல் பற்றி வரும்'

என்பது அவரது விளக்கம். இதே முறையில் உவமைத் தொகைக்கும் வேற்றுமைத் தொகைக்கும் விளக்கம் கொடுத்துள்ளார். இந்தக் கருத்தை விளக்குமுகமாகத் தொல்காப்பியரும், தொகை வயினானும் என்னாது, 'பண்பு தொக வரூஉம் கிளவியானும், உம்மை தொக்க பெயர் வயினானும் வேற்றுமை தொக்க பெயர் வயினானும்' என்றார்' என்று சேனாவரையர் மேற்கோள் காட்டியுள்ளார். இந்தக் கருத்தை நச்சினார்க்கினியர் இன்னும் தெளிவாக

> 'முன்னர் அன்மொழியான் உணரும் பொருள்களை
> மனத்தான் உணர்ந்து, தான் பின்னர்ப் பண்புத்
> தொகை முதலியவற்றாற் கூறக் கருதிய வழி
> அத்தொகைகளின் இறுதிச் சொற்கண் எழுந்து
> படுத்தல் ஓசையால் அத்தொகைச் சொல் தோன்றிப்
> பொருள் விளக்குதலின் 'ஈற்று நின்று இயலும்'
> என்றார்.

என்று கூறியுள்ளார்.

தெய்வச்சிலையார் விளக்கப்படி,

> 'இம்மூவகைத் தொகையினும் (பண்புத் தொகை,
> உம்மைத் தொகை, வேற்றுமைத் தொகை) ஈற்று
> நின்று இயலும் என்றதனான், முன்னும் பின்னும்

> நின்ற இரண்டு சொல்லானும் உணரப்படு பொருண்மை உடைத்து அன்மொழித் தொகை என்று கொள்க'

என்று குறிப்பிட்டு உதாரணங்களையும் விளக்கிக் காட்டியுள்ளார். தொல்காப்பியர் ஆகுபெயரை விளக்கும்போது, (வேற்றுமை மயங்கு. 31) இருபெயரொட்டு என்ற ஒரு வகையைக் குறிப்பிடுகிறார். பிற உரையாசிரியர் கருத்துப்படி இருபெயரொட்டு ஆகுபெயரும் அன்மொழித் தொகையும் ஒன்று. தெய்வச்சிலையாருக்கு இரண்டும் வேறு வேறு.

> கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது
> இல்லை நிலக்குப் பொறை (குறள் 570)

> என்றவழிக் கடுங்கோல் என்பது அஃது உடைய அரசர்க்குப் பெயராகி வருதலின் அன்மொழித் தொகை ஆயிற்று. கோலிற்கு அடையாகி நின்ற கடுமையும் அரசன்மேல் ஏறியவாறு கண்டுகொள்க'

என்பது தெய்வச்சிலையார் வாசகம். இங்குக் கடுமையாகத் தண்டிக்கும் கடுமையான அரசன் என்று பொருள். அதாவது கடும் என்ற பண்பு கோலுக்கும் அன்மொழியாக வரும் அரசனுக்கும் (கோலனுக்கும்) பொருந்தி வந்துள்ளது. பரிமேலழகர் உரையும் இந்தக் கருத்தை ஆதரிப்பதாக உள்ளது. 'கடுங்கோல்' என்பது ஈண்டு மிக்கத் தண்டத்தின் மேற்று அன்றி (கடுமையான தண்டனையோடு) அதனைச் செய்வான் மேற்று ஆயிற்று (கடுமையான அரசன்) என்பது பரிமேலழகர் விளக்கம். இந்த உதாரணத்துக்கு இந்த விளக்கம் பொருந்தும் ஆயினும் எல்லாப் பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக்கும் பொருந்துமா என்ற கேள்வி எழுகிறது. உண்மையில் இது (இட) பின் மொழியில் பொருள் நிலையல் என்ற வகைப்படும். வெள்ளாடை என்பது பிற உரையாசிரியர்கள் பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக்குக் கொடுத்த உதாரணம். இங்கு வெண்மை உடைக்கு உரியதே அல்லாமல் அந்த உடையை அணிந்தவளுக்கும் பொருந்தாது. எனவே எல்லாப் பண்புத் தொகைவழிப் பிறந்த அன்மொழித் தொகைக்கும் பொருந்தும் உண்மையாகக் கொள்ளமுடியாது.

உம்மைத் தொகையில் இரண்டு சொல்லும் ஒத்த முக்கியத்துவம் பெறுவதால் இரண்டு சொல்லானும் பொருள் உணரப்படும் என்பதில் சிக்கல் இல்லை.

'பொற்றொடி என்பது வேற்றுமைத் தொகை அதனை உடையாட்குப் பெயராகியவழி அன்மொழித் தொகையாம். ஈண்டுத் தொடிக்கு அடையாகி நின்ற பொன் தொடியையுடையாளது செல்வத்தைக் காட்டுதலின் அவ்விரண்டு சொல்லும் அதனை உடையாளைக் குறித்தவாறும் அறிந்துகொள்க'

என்பது வேற்றுமைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை பற்றித் தெய்வச்சிலையாரின் விளக்கம். இங்கு இரண்டு செய்திகள் சுட்டிக்காட்டத் தகுந்தவை. அ) காரணப் பெயராக இல்லாமல் இடுகுறியாக அமைந்தால் பொன் தொடியுடையாளது செல்வத்தைக் காட்டுதல் என்பது பொருந்தாது. மேலும் முன்னதில் பண்படை அன்மொழித் தொகையாக வந்த சொல்லுக்கும் அப்படியே பொருந்த, இங்குப் பொன் குறியீடாகச் செல்வத்தை உணர்த்துகிறது என்ற வேறுபாடு கவனிக்கத் தகுந்தது. அப்படிப் பல அன்மொழித் தொகை அமையலாம்.

துடியிடை எனவும் தாழ்குழல் என்வும் உவமைத் தொகைப்புறத்தும் வினைத்தொகைப் புறத்தும் அன்மொழித் தொகை வருமால் எனின் துடி என்பதூஉம் தாழ் என்பதூஉம் இடை, சூழல் என்பவற்றிற்கு அடையாக வரின் அல்லது, அவற்றை உடையாட்குப் பெயராகுங்கால் இறுதிநின்ற பெயர்ப் பொருண்மை வந்து ஏனைய வாராமையின் ஆகுபெயர் எனின் அல்லது, அன்மொழித் தொகை ஆகாது எனக் கொள்க. அதனானே அன்றே இரு பெயரொட்டும் என ஆகுபெயர்க்கண் எடுத்து ஓதுவார் ஆயிற்று என உணர்க'

என்பது தெய்வச்சிலையார் வாதம். இங்குத் தொல்காப்பியரும் இந்த இரண்டு தொகைகளும் அன்மொழித் தொகையாக வரா என்று கூறியதை நியாயப்படுத்துவது போல உள்ளது என்பதும் அறியத்தகுந்தது.

கவி இலக்கணம் என்பது நாலாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகக் கவிக்கு இலக்கணம் சொன்ன நூலைக் குறிப்பதாகக் கொள்ளப்படும். ஆனால் தெய்வச்சிலையார் கருத்துப்படி அது ஆகுபெயரே அல்லாமல் அன்மொழித் தொகை அல்ல. அப்படிப்பட்டவை உவமைத் தொகையாகவும் வினைத்தொகையாகவும் வரும். அதாவது அன்மொழித் தொகையாகத் தொல்காப்பியர் கூறிய பண்புத்

தொகை உம்மைத் தொகை, வேற்றுமைத் தொகை ஆகியவை 'முன்னும் பின்னும் நின்ற இரண்டு சொல்லாலும் உணரப்படும்' என்பது அவர் கருத்து.

தெய்வச்சிலையார்க்கு அன்மொழித் தொகை என்பதே பெயரடையின் பண்பை ஒரு வகையில் அன்மொழித் தொகையாக வரும் பொருள் பெற்றிருக்கவேண்டும் என்பதாகும். அது சிறப்பானதாகக் கொள்ளமுடியாது.

### 5.9. பொருள்நிலை மரபு

தொகையின் 'பொருள்நிலை மரபு' என்று (எச்சம். 23) நாலு வகையை ஒரு சூத்திரம் விவரிக்கிறது. அதை இளம்பூரணர் 'பொருள் உணர நிற்கும்' என்றும், சேனாவரையர் 'பொருள் நிலை மரபு' என்றும், தெய்வச்சிலையார் 'பொருள் நிற்கும் மரபு' என்றும் 'பொருள் நிலை' என்றும், பொருள் சிறந்து நிற்கும் (இடம்) என்று நச்சினார்க்கினியரும் விளக்கியுள்ளார்கள். பொதுவாக இன்று 'பொருள் சிறக்கும் இடம்' என்றே விளக்கப்படுகிறது. இது தொகையில் இரண்டு சொற்களில் எந்தச் சொல்லில் பொருள் சிறக்கிறது அல்லது அழுத்தம் பெறுகிறது என்று பொருள்படும். பொருள்நிலை மரபாக அ) முன் மொழி நிலையல், ஆ) பின் மொழி நிலையல், இ) இரு மொழி மேலும் ஒருங்குடன் நிலையல், ஈ) அம்மொழி நிலையாது அயன்மொழி நிலையல் என்ற நாலு வகையைத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். இங்குக் கால முன் (உச்சரிப்புக் காலம்) இடமுன் என்று இரண்டு அடிப்படையில் தொல்காப்பிய உரையாசிரியர்கள் இட முன் அடிப்படையில் தங்கள் கருத்தை விளக்கியுள்ளார்கள். நன்னூல் உரையாசிரியர் சிவஞான முனிவர் கால முன் அடிப்படையில் விளக்கினாலும் ஓர் உதாரணம் இரண்டு மாறுபட்ட கருத்துக்கு இடம் அளித்துள்ளது பின்பகுதியில் விளக்கப்படும். இதன் அர்த்தம் என்ன?

வேங்கைப்பூ என்பதைத் தெய்வச்சிலையார் ஒழிந்த எல்லா உரையாசிரியர்களும் முன் மொழிப் பொருள் நிலையலுக்கு உதாரணம் கொடுத்துள்ளதால் இங்குப் பூ என்பது பொருள் சிறக்க என்று பொருள். அது இடத்தால் முன் மொழி நிலையல் ஆகும்.

> 'முன்மொழிப் பொருள் உணர நின்றது வேங்கைப்பூ என்பது முன்மொழி பின்மொழி ஆதல் இடமும் காலமும் என இருவகைப்படும். இவற்றுள் இடத்தான் முன்மொழிப் பொருள் ஆயிற்று. கால வகை நோக்கிப் பின் மொழிப் பொருளாம். வேங்கை

என்பதும் பொருள் இல்லாதது அன்றுமன்.
அப்பொருளுடன் அறியலுற்ற பூவினை அதனைச்
சிறப்பிப்பான் வந்தது வேங்கை என்னும் சொல்'

என்பது இளம்பூரணர் விளக்க வாசகம். மேலும் விளக்கமாக

வேங்கைப்பூ என்புழிப் பூ என்னும் முன்மொழிக்கண்
பொருள் நின்றது. அது நறிது என்னும் வினையோடு
இயையுமாற்றான் மேற்பட்டுத் தோன்றியவாறு
கண்டுகொள்க... இடவகையால் முன் மொழி ஆயிற்று'

என்று சேனாவரையர் குறிப்பிட்டுள்ளார். நறிது என்ற வினை பூ என்பதை உறுதி செய்கிறது. மாம்பழம் தின்றான் என்ற உதாரணத்தைத் தெய்வச்சிலையார் கொடுத்து, 'தின்னப்பட்டது பழம் ஆதலின் அத்தொகைச் சொல் முன்மொழிக் கண் பொருள் நின்றது' என்று விளக்கியுள்ளார். அதாவது அவை ஏற்ற வினைகள் எதைத் (பூ, பழம்) தலைச் சொல்லாகக் கொள்ள வேண்டும் என்பதைப் புலப்படுத்துகின்றன. இந்த உதாரணங்கள் இருமொழியொட்டுப் பண்புத் தொகை ஆகும்.

பின்மொழி நிலையலுக்குச் சேனாவரையர் அடைகடல் என்ற உதாரணத்தையும் தெய்வச்சிலையார் இடைமுலை என்ற உதாரணத்தையும் நச்சினார்க்கினியர் ஆரமாலை என்ற உதாரணத்தையும் கொடுத்துள்ளார்கள்.

'கடலும் கடல் அடைந்த இடமும் கடல்
எனப்படுதலின் அடைகடல் என்பது அடையாகிய
கடல் என இருபெயர்ப் பண்புத் தொகை'

என்பது தெய்வச்சிலையார் விளக்கம். இது வேற்றுமைத் தொகையாகக் கருதப்பட வேண்டும். இங்கு இடைச்சொல்லும் பெயர்ச்சொல்லும் தொகைச் சொற்களாக அமைந்துள்ளன. அதுபோல நடு வீடு, கடை மடை, புறநகர் போல் பல உதாரணங்கள் உண்டு.

சேனாவரையர் முன்மொழி நிலையல் பின்மொழி நிலையல் ஆகிய இரண்டும் எந்தெந்தத் தொகையில் வரும் எனப் பொதுமைப்படுத்தியுள்ளார்.

வேற்றுமைத் தொகை முதல் நான்கு தொகையும்
(உவமை, வினை, பண்பு) முன்மொழிப் பொருள.
வேற்றுமைத் தொகையும் பண்புத் தொகையும்
சிறுபான்மை பின்மொழிப் பொருளவுமாம் ஆம்'

என்பது அவரது பொதுமை.

நச்சினார்க்கினியர் வேற்றுமைத் தொகை பின்மொழி நிலையலாக வருவதற்கே உதாரணம் கொடுத்துள்ளார். ஆரமாலை என்பதைப் 'பின்மொழி நிலையல்; இவை வேற்றுமைத் தொகை' என்று குறிப்பிட்டிருப்பதால் ஆரம், சந்தனம் அல்லது முத்து என்ற பொருளில் ஆரத்தால் செய்த மாலை என்று பொருள்பட்டு வேற்றுமைத் தொகை ஆகும். பெரும்பான்மை யாக வரும் வேற்றுமைத் தொகை முன் மொழி நிலையலாக வருவதற்கு இளம்பூரணர், சேனாவரையர், தெய்வச்சிலையார் ஆகியவர்கள் உதாரணங்கள் தராதது ஆச்சரியமாக உள்ளது. கரும்புச் சாறு, மரப்பெட்டி போன்ற வேற்றுமைத் தொகைகள் முன்மொழி நிலையலுக்கு உரிய உதாணங்களாகக் கொள்ளலாம். இங்கும் கூடக் கரும்புச் சாறு பழச்சாறு என்றும் மரப்பெட்டி இரும்புப் பெட்டி என்றும் வேறுபடுத்தும்போது அவை பின்மொழி நிலையவாகி விடும். இங்கும் பேசுவோன் கொடுக்கும் கருத்து அழுத்தத்துக்கு ஏற்பப் பொருள் சிறக்கும் இடம் மாறுபடுகிறது. உண்மையில் தொடரியல் அமைப்பு மாறுபடாவிட்டாலும் அதன் ஒலி அழுத்தம் - தொடரிசை மாறுபடுகிறது.

நச்சினார்க்கினியர் 'பெண்ணணங்கு' என்ற உதாரணத்தைக் கொடுத்து, அணங்கு போலும் பெண் என்பதாகலின், 'பின்மொழி நிலையலாம்; இவை உவமைத் தொகை' என்று குறிப்பிட்டுள்ளார். இங்குப் பெண் அணங்காக உருவகப்படுத்தப்பட்டுள்ளாள். எனவே உருவகத் தொகையே. அவர் கருத்துப்படி உருவகத் தொடரும் உவமைத் தொடரில் அடங்கும் என்பது மேலே விளக்கப்பட்டது. ஆதலால் இந்த உதாரணம் உவமைத் தொடராகக் கொள்ளப்பட்டிருக்கலாம்.

'கொல்யானை முன்மொழி நிலையல் இவ்வினைத் தொகைக்குப் பின்மொழி நிலையல் இல்லை' என்றும் நச்சினார்க்கினியர் விதந்து குறிப்பிட்டுள்ளார். அரிவாள், எழுதுகோல் . போன்ற வினைத் தொகைகளில் முன்மொழித். தொகையே ஆகும்.

'தீத்தேன் முன்மொழி நிலையல், அடைகடல் பின்மொழி நிலையல் இது கடலாகிய கரை எனக் கூறுதலே கருத்தாயின் இவை பண்புத் தொகை' என்பது நச்சினார்க்கினியர் விளக்கம். 'செந்தாமரை, வெள் யானை போன்ற பண்புப்பெயர்களில் பின்மொழி நிலையலாகும்.

உரையாசிரியர்கள் பொருள் நோக்கிலும் அத்றகான ஒலி அழுத்தத்தையும் கவனித்துள்ளதாகத் தெரிகிறது. இங்குத் தொடர்க் கட்டுமானமும் (Syntactical construction) புதைந்துள்ளது.

இருமொழி நிலையல் என்பது உம்மைத் தொகை. பல்நிலைத் தொடர் என்றும் 'அம்மொழி நிலையாது அன்மொழி நிலையல்' என்பது ஒரு நிலையல் அன்மொழித் தொகை என்றும் எல்லா உரையாசிரியர்களும் கொண்டுள்ளதால் சிக்கல் இல்லை.

மொழியியல் நோக்கில் குறிப்பாக அண்மை உறுப்பு ஆய்வில் தலைச்சொல் (Head word), அடைச்சொல் (Attribute) என்று பகுத்து உள்வட்டத் தொடர் (Endo centric), வெளி வட்டத் தொடர் (Exo centric), பல்நிலைத் தொடர் (Multiple centric or coordinate) என்று பிரிப்பார்கள். இங்குத் தலைச்சொல் என்ற கருத்தமைவைப் பொருள் சிறக்கும் இடத்தோடு இணைத்துப் பார்க்கலாம். அடைச்சொல் என்பது தலைச்சொல்லின் பொருளுக்குத் துணையாக அதன் பண்பை விளக்குவதாக அமையும். தொல்காப்பியரே வண்ணச்சினைச் சொல்லில் வண்ணத்தை 'அடை' என்று குறிப்பிட்ட (கிளவி. 26). சிறப்பு முன்னர் விளக்கப்பட்டது.

முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும் உள்வட்டத் தொடரின் வகைகளாகவே கருதவேண்டும். இங்கு உள்வட்டத் தொடரில் உள்ள ஒரு சொல்லின் வருகை சுதந்திரமும் தொடரின் வருகைச் சுதந்திரமும் தொடரின் வருகையை ஒத்து இருக்கும். பெரிய ஆள் என்பதிலுள்ள ஆள் என்பதும் பெரிய ஆள் என்பதும் ஒத்த வருகை சுதந்திரம் உடையவை. வயதான ஆள், வயதான பெரிய ஆள், ஓடிய ஆள், ஓடிய பெரிய ஆள், ஆள் வந்தான், பெரிய ஆள் வந்தான் என்று வருவதால் உள்வட்டத் தொடர் ஆகும். பண்புத் தொகையாக வரும் செந்தாமரை என்பதும் தாமரை என்பதும் ஒத்த வருகைச் சுதந்திரம் உடையவையே. ஆனாலும் பண்புத் தொகைக்குள் வேறு சொல்லைச் செருகமுடியாது. பண்புத் தொடராக இருந்தால் இன்னொரு சொல்லைச் செருகலாம். அதுதான் ஒரு சொல் நீர்மைத்து என்ற கருத்து அடிப்படை. பெரிய வயதான ஆள் என்பதால் பெரிய ஆள் என்பது பண்புத் தொகையாகக் கருதப்படுவதில்லை. அது தொடரே; தொல்காப்பியரே அடுத்த சூத்திரத்தில் இந்தக் கருத்தைக் குறிப்பிட்டிருப்பதால் அது பற்றி அடுத்து விளக்கப்படும்.

## 5.10. ஒரு சொல் நடைய

தொகையின் ஒரு பொதுப் பண்பாக 'எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய' என்று ஒரு சூத்திரம் (எச்சம். 24) காணப் படுகிறது. அங்கு ஒரு சொல் நடைய என்பதற்கு உரை யாசிரியர்களுக்கு இடையே கருத்து வேறுபாடு காணப்படுகிறது; அதற்கு ஒரு காரணம் தொகையையும் தொடரையையும் சரியான முறையில் வேறுபடுத்தாதது என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

> 'அறுவகைத் தொகைச் சொல்லும் எழுவாய்
> வேற்றுமை இயல்பாம் என்று எய்துவித்தார்'

என்பது இளம்பூரணர் விளக்கம்.

> 'யானைக்கோடு, கொல்யானை என முன்மொழி பெயராகிய வழி ஒரு பெயர்ச்சொல் நடையவாதலும்– அவை உருபேற்றலும் பயனிலை கோடலும் முதலாகிய பெயர்த்தன்மையும் உடையவாதல் அவ்வச்சொல்லோடு கூட்டிக் கண்டுகொள்க'

என்ற சேனாவரையர் வாசகம் 'எழுவாய் வேற்றுமை இயல்பு' என்பதற்கு விளக்கமாக 'உருபேற்றலும் பயனிலை கோடலும்' என்று விதந்து குறிப்பிடப்பட்டுள்ளது. அதைத் தெய்வச்சிலையாரும் நச்சினார்க்கினியரும் ஏற்றுக்கொண்டு இன்னும் ஓரளவு விரிவு படுத்தியுள்ளார்கள். சேனாவரையர் கொடுத்த உதாரணங்களோடு உவமைத் தொகை (துடியிடை) பண்புத் தொகை (கருங்குதிரை) உம்மைத் தொகை (கழஞ்சரை) அன்மொழித் தொகை (பொற்றொடி) ஆகியவைகளுக்கு உரிய உதாரணங்களை மட்டும் கொடுத்ததால் 'முன்பெயராய வழி' என்ற சேனாவரையர் குறிப்பிட்ட கட்டுப் பாடு பொருந்தாது என்பதைத் தெய்வச்சிலையார் சொல்லாமல் சொல்லிவிட்டார். எப்படி என்றால், உம்மைத் தொகையில் இருமொழியில் நிலையலும் அன்மொழித் தொகையில் அயன் மொழி நிலையலும் என்று கூடுதலாக இரண்டு பொருள் நிலையலும் அடங்கிவிட்டன. ஆனால் நச்சினார்க்கினியர் 'ஒரு சொல் நடைய' என்பதற்கு 'ஒரு சொல் நின்று தன்னை முடிக்கும் சொற்களோடு முடியுமாறு போலத் தாமும் தம்மை முடிக்கும் சொற்களோடு முடிதலை உடைய' என்று பொழிப்புரையில் எழுதியதற்கு ஏற்ப விளக்கவுரையில் 'பெயரும் பெயரும் தொக்கன ஒரு சொல் நீர்மையவாய்ப் பயனிலை கொள்ளும்' என்று கூறிய விதி ஒழிந்த இலக்கணங்கள் எல்லாம் ஈண்டுக் கொள்க; அவை யானைக்கோடு என்னும் பெயரினாகிய தொகை

யானைக் கோட்டைக் குறைத்தான் என உருபு ஏற்றலும். . . ஆம்' என்று கூறியதால் எல்லா வகைத் தொகை பற்றிக் கவலைப்படவில்லை' என்று புலனாகிறது.

> 'ஒரு சொல் நடையன எனப் போந்த இலேசு என்னை எனின் அவை (தொகைகள்) பல சொன்மைப்படப் பொருள் இசையா ஒரு சொல் விழுக்காடுபடத் திரண்டிசைக்கும் என்பது கருத்து'

என்ற இளம்பூரணர் வாசகம் தொகையிலுள்ள இரண்டு சொற்கள் தனித்தனியாக உச்சரித்தால் இரண்டு பொருளாக (யானை, கோடு என்பது விலங்கு, கொம்பு என்ற இரண்டு பொருள்) அமையும். விட்டிசை இல்லாமல் யானைக் கோடு என உச்சரித்தால் ஒரு சொல்லாக ஒரு பொருளையே குறிக்கும். எனவே இங்கு இளம்பூரணர் ஒலி அமைப்பு அதாவது சொற்கள் பிளவுபடாமல் உச்சரித்தல் என்ற கருத்தைப் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம்.

சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகிய இருவரும் நிலங் கடந்தான், குன்றத்து இருந்தான் என்பவையும் ஒரு சொன்னடைய என்று கொள்வது, நச்சினார்க்கினியர் வருகைச் சுதந்திரம் மட்டும் கணக்கில் எடுத்துக்கொண்டது பற்றி மேலே விளக்கப்பட்டது. அவை உள்வட்டத் தொடர் அல்ல.

உரையாசிரியர்கள் இரண்டு சொற்களுக்கு மேல் சேர்ந்து தொகையாக வருவதைப் பற்றிக் கவனித்து விளக்கியுள்ளதில் அண்மை உறுப்பு ஆய்வின் சில அடிப்படைகளைத் தொட்டுக் காட்டிச் சென்றுள்ளது குறிப்பிடத்தகுந்தது.

### 5.11. முடிவுரை

வேற்றுமைத் தொகை, உவமத்தொகை, உம்மைத் தொகை என்பவை ஒரு வகை. வினைத்தொகை, பண்புத்தொகை ஆகிய இரண்டும் மாறுபட்டவை. அன்மொழித் தொகை முன் இரண்டு வகை அடியாகப் பிறந்தது. இங்கு உரையாசிரியர்கள் தொடரியல் கோட்பாட்டில் புதிய சிந்தனைகளை வெளிப்படுத்தியுள்ளது சிறப்பானது.

1. In meaning, compound words are usually more specialized than phrase. For instance, *black bird* denoting a bird of particular species is more specialized than the phrase *black bird* which denotes any bird of this color. Bloomfield 1933:227.

# 6
# வினைத் தொடர்

## 6.1. முன்னுரை

தொல்காப்பியர் வினையியலில் வினை அடிச்சொல்லைச் சொல் வகைப்பாட்டு நோக்கில் காலம் ஏற்பவை வினைச் சொற்கள் என்று முதல் சூத்திரத்தில் (683) விளக்கியது சொல்லியல் நோக்கு ஆகும். பெரும்பான்மையாக அந்த இயல் சொல்லியல் நோக்கு உடையது. ஆனாலும் அங்குச் சில தொடரியல் பண்புகளும் விவரிக்கப்பட்டுள்ளன. அவையாவன:

1. யார் (695), எவன் (704) என்பவைகளை ஏற்கும் எழுவாய்
2. வியங்கோள் வினையின் எழுவாய் 711
3. செய்யும் என்னும் வினைமுற்றின் எழுவாய் 712
4. எச்சங்கள் கொண்டு முடியும் சொற்கள் (715-9, 721)
5. சில கருத்தமைவுக்கு (Concept) ஏற்ற வினைமுற்று (முந் நிலைக் காலமும் தோன்றும் இயற்கைப் பொருள் 725)
6. சில மாற்றம் பெற்ற வாக்கியங்களின் அமைப்பு (செயப் படுபொருளைச் செய்தது போலக் கிளத்தல் 731)
7. சில வாக்கியங்களின் இலக்கண விளக்கம் (இது செயல் வேண்டும் 728)

இவைகளோடு பிற இயல்களிலும் வினைச் சொற்களின் தொடரியல் பண்புகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. அவையாவன:

**கிளவியாக்கம்**

1. செல், வா, தா, கொடு ஆகிய வினைகளின் கட்டுப்பாடுகள் 511, 514, 931

**வேற்றுமை மயங்கியல்**

1. வேற்றுமை + வினை
2. தொழில் முதனிலை 596: 7

## பெயரியல்

செய்யும் என்னும் நிகழ்கால வினைமுற்று பால் உணர்த்தும் (658) வினை என்ற சொல் வகை முக்கியமானது. வினையடியாகப் பிறந்த பல வகைச் சொற்களை முற்று என்ற முறையில் அதன் உள் அமைப்பை ஒரு சூத்திரத்திலும் (கால ஒட்டும் இட ஒட்டும் சேர்ந்தது 910), எச்சங்களை அடுக்குநிலையில் மூன்று சூத்திரங்களிலும் (713, 719, 723) விவரித்துள்ளார். அவை சொல்லியல் நோக்கு வருணனை. எச்சங்களின் தொடரியல் ஆற்றல் பற்றி 8 சூத்திரங்களில் (715-720, 722, 724) வருணித்துள்ளது அடுத்த இயலில் ஆராயப்படும். பொதுவான வினையின் ஆற்றல் பற்றி அதாவது ஒரு வினை அதிகபட்சமாக ஏற்கக் கூடிய பெயர்களை முதலில் தொகுத்துக் கொடுத்து, அடுத்துச் சில வகைகள் குறைந்து வரலாம் என ஒரு சூத்திரம் செய்துள்ளார். அவை தொழில் முதனிலை (முதல் + நிலை) - வினைக்கு முதலாக- அடிப்படையாக இருப்பது என்று பெயர் கொடுத்துள்ளார். தொடரியல் நோக்கில் அது ஒரு முக்கியமான சூத்திரம்.

### 6.2. தொழில் முதனிலை

> வினையே, செய்வது, செயப்படு பொருளே
> நிலனே, காலம் கருவி என்றா
> இன்னதற்கு இதுபய னாக என்னும்
> அன்ன மரபின் இரண்டொடும் தொகைஇ
> ஆயெட்டன்ப தொழில்முத னிலையே (596)

என்பதே அந்தச் சூத்திரம். இது ஒரு வினைச்சொல் அதிக பட்சமாக எட்டு அலகுகளை ஏற்று வரும் என்பதை வினைச் சொல்லின் இலக்கண ஏற்பு அலகுகள் என்று கூறலாம்.

'தொழில் முதனிலை' என்பதை இளம்பூரணர் 'தோன்ற நிற்கும் வினைச்சொற்கள்' என்றும், நச்சினார்க்கினியர் முன்னுரையாக 'வேற்றுமைப் பொருள்கள் தோன்றும் இடம்' என்றும், கல்லாடர் 'வினைச் சொல் பிறத்தற்கு இடமாகிய பொருளது நிலைமை' என்றும் கூறுவது வினைச்சொல் ஏற்று வருகிற வேற்றுமை ஏற்ற பெயர்கள் எண்ணிக்கை என்று கொள்ளலாம். ஆங்கில இலக்கண நூல்களில் வினைச் சொற்களை ஓரிட வினை (One place predicate), ஈரிட வினை (Two place predicate), மூவிட வினை (Three place predicate) என்று

கூறுவார்கள். அதன்படி அதிகபட்சம் தமிழில் எட்டு இட வினைகள் உண்டு என்று பொருள்.

பொதுவாக நிலம், காலம் என்பவை எல்லா வினைக்கும் பொதுவானவை என்ற ஒரு கருத்து உண்டு. அது ஒரு செயல் ஒரு காலத்தில், ஓர் இடத்தில் நடைபெறும் என்ற உலகளாவிய உண்மை அடிப்படையானது. ஆனால் இங்கு அது குறிக்கப் படாமல் ஒரு சில வினைகள் நடைபெறுவதற்கு வேண்டிய இடத்தையும் காலத்தையும் குறிப்பதாகக் கொள்ளலாம். இருந்தாலும் அந்த வினை எங்கு, எப்போது நடந்தது என்று குறிக்கலாம். பாடு என்ற வினை நடைபெற இடம், காலம் தேவை இல்லை. இருந்தாலும் வீட்டில் இரவில் பாடினான் என்று கூறும்போது அந்த வினை நடந்த குறிப்பிட்ட இடம், காலம் என்ற முறையில் முக்கியமானதாக இருந்தாலும் பாடு என்ற வினை நடைபெற ஏழாம் வேற்றுமை கட்டாயம் இல்லை. மாறாக எழுது என்ற வினைக்கு ஓர் இடம் வேண்டும். சுவரில்/தாளில் என்பதே மேலும் வீட்டில்/பள்ளியில் (எழுது) என்பன போன்ற இடங்கள் பொதுவானவை. எனவே முன்னதே ஏழாம் வேற்றுமை ஏற்கும் வினை என்ற தகுதியைத் தருகிறது. அதுபோல அரை என்ற வினை அம்மி/மிக்ஸி என்ற இடப்பெயர் ஏற்கும் அம்மியில்/மிக்ஸியில் அரை. இங்கும் வீட்டில் என்பது பொதுவான இடம் அந்த வினை நடைபெறுவதற்கு வேண்டும். இங்கும் பின்னது பொது இடம் என்று கொள்ளவேண்டும்.

சேனாவரையர் தொழிலுக்கு உரிய காரணங்கள் அதாவது காரகம் என்றும், தெய்வச்சிலையார் 'எழு வகை வேற்றுமையிலும் காரக வேற்றுமை வரையறுத்து உணர்த்துதல்' என்றும், நச்சினார்க்கினியர் பதவுரையில் 'காரியத்திற்கு முன்னிற்கும் காரணம்' என்றும் கூறுவது வினைச் சொல்லுக்கும் அதை 'அடுத்து வரும் வேற்றுமைக்கும்' உள்ள புதைநிலை வேற்றுமை உறவைக் குறிக்கும். காரகம் என்பது வடமொழி இலக்கணக் கருத்தமைவு.

தெய்வச்சிலையார் குறிப்பிட்டபடி ஆறாம் வேற்றுமையைக் காரகமாகக் கொள்ளமுடியாது. ஏனெனில் ஆறாம் வேற்றுமை வினைகொண்டு முடியாமல் பெயர்கொண்டு முடிகிறது. ஆனாலும் தொல்காப்பியரே 'வினை' என்பதும் ஆறாம் வேற்றுமை கொண்டுமுடியும் சொற்களில் ஒன்றாகக் கூறியுள்ளதால் உரையாசிரியர்கள் சாத்தனது வரவு என்ற

உதாரணத்தைக் கொடுத்துள்ளார்கள். 'சாத்தன் வந்தான், அந்தச் செயல்' என்ற புதைநிலையிலிருந்து உண்டானதாக அதைக் கருத வேண்டும். மேலும் மாற்றிலக்கண மொழியியலார் ஒரு வாக்கியத்தி லிருந்தே ஆறாம் வேற்றுமைத் தொடரை வருவிக்கிறார்கள். அப்படியானால் அதுவும் புதைநிலையில் வினை உடையதாகவே கருதவேண்டும். பிற வேற்றுமைகள் வினைத் தொடரின் பகுதியாக அமைய ஆறாம் வேற்றுமை பெயர்த் தொடராக அமைகிறது.

ஏழாம் வேற்றுமை நிலம், காலம் என்று இரண்டு முதனிலையாக - காரணமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. அதாவது வேற்றுமைக்கும் தொழில் முதனிலைகளுக்கும் வேறுபாடு இருக்கிறது. இருந்தாலும் உரையாசிரியர்கள் இரண்டையும் ஒன்றாகவே கருதியுள்ளார்கள்.

செய்வது, செயப்படுபொருள், நிலன், காலம், கருவி, இன்னதற்கு ஆகியவை வேற்றுமைப் பொருள் அல்லது காரகம் எனலாம். செய்வது என்பது முதல் வேற்றுமையான கருத்தாவையும், செயப்படுபொருள் என்பது இரண்டாம் வேற்றுமையான செயப்படுபொருளையும், கருவி என்பது மூன்றாம் வேற்றுமையான கருவியையும், நிலன், காலம் ஆகியவை ஏழாம் வேற்றுமையையும், இன்னதற்கு என்பது நான்காம் வேற்றுமையையும் குறிக்கும். வினை என்பது சிறப்பு வினை (அதுவும் இரண்டாம் வேற்றுமை ஏற்ற தொழில் பெயர் + செய் என்ற பொதுவினையைக் குறிக்கும். அணிந்தான் = அணிதலைச் செய்தான். இது பற்றி முன்னரே (சண்முகம், 1992: 33-55) விளக்கப்பட்டுள்ளது.

### 6.3. தேர்வுக் கட்டுப்பாடுகள்

இட அடிப்படை = அடிச்சொற்கள்

பால் அடிப்படை | ஒட்டு
| அடிச்சொல்

தொடரியல் ஆய்வில் முக்கியமானது சொற்கள் இணையும்போது சில கட்டுப்பாடு இருப்பதைத் தொல்காப்பியர் உணர்ந்து கூறியதுதான். பொதுவாக எல்லா வினைச்சொல்லும் எல்லாத் திணை பால் இடமும் ஏற்று வரும் என்றாலும் சில வினையடிகள் குறிப்பிட்ட இடத்துக்கு வருவதும், பாலுக்கு வருவதும் எல்லா மொழியிலும் காணப்படுவதுதான். அவற்றைத் தேர்வுக் கட்டுப்பாடு (Selectional restriction) என்று பொதுவாக

மொழியியலார் அழைப்பார்கள். இந்தத் தேர்வுக் கட்டுப்பாட்டில் உலகப் பொதுமையான கட்டுப்பாடும் (Language Universal) ஒரு குறிப்பிட்ட மொழிக்கு (Language specific) உரிய கட்டுப்பாடும் உண்டு. மேலே குறிப்பிட்ட கட்டுப்பாடு வினைக்கு உரிய திணை-பால் கட்டுப்பாடு என்ற சிறப்புப் பெயர் பெறும். இன்னொரு வகையான கட்டுப்பாடு வினைகள் பெயர்த் தொடரை ஏற்பதில் உள்ளது. அவைகளில் ஒன்றுதான் வினைகளைச் செயப்படு பொருள் குன்றிய வினை, குன்றாவினை என்று பாகுபடுத்துவது; அதாவது வினைச் சொற்களில் செயப்படு பொருளை ஏற்காதவை (நட, ஓடு, அடங்கு போன்றவை), செயப்படுபொருளை ஏற்பவை (செய், பார், உண் போன்றவை) என்ற பாகுபாடும் தேர்வுக் கட்டுப்பாட்டில் அடங்கும். இது இலக்கண நிலையில் அமைந்தாலும் பொருண்மைத் தொடர்பும் உடையது. ஒரு சொல்லே பொருள் மாறுபடுவதற்கு ஏற்ப இரண்டு நிலையும் பெறலாம். பேசு என்பது உரையாடு என்ற பொருளில் ஏழாம் வேற்றுமை ஏற்கும்போது (என்னிடம் பேசினான்) செயப்படு பொருள் குன்றாவினை; வை அல்லது திட்டு என்ற பொருளில் இரண்டாம் வேற்றுமை ஏற்கும்போது (என்னைப் பேசினான்) செயப்படுபொருள் குன்றாவினை. உலக மொழிகளில் பெரும் பான்மையான சொற்களுக்குச் செயப்படுபொருள் குன்றியவினை, குன்றாவினை என்ற வேறுபாடு பொதுவாக இருந்தாலும் சிலசில சொற்களின் பண்பு மாறுபடும்.

### *6.3.1. இடக்கட்டுப்பாடு : அடிச்சொற்கள்*

கிளவியாக்கத்தில் செல், வா, தா, கொடு ஆகிய நாலு வினைகளின் கட்டுப்பாடு விளக்கப்பட்டுள்ளது (511-513). செல், வா, தா, கொடு ஆகிய நான்கு சொற்களும் தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூன்று இடத்துக்கும் உரிய என்று முதலில் பொதுவாகக் குறிப்பிட்டு (511), அடுத்த இரண்டு சூத்திரங்கள் என்னென்ன வினை என்னென்ன பெயரோடு குறிப்பாகப் பதிலீட்டுப் பெயர்களான தன்மை, முன்னிலை, படர்க்கைப் பெயர்களோடு வரும் என்று குறிப்பிடுகின்றன.

பொதுவாக எல்லா வினைச் சொற்களும் எல்லா இடத்தோடும் வரும் என்பது வினையியலில் கூறப்பட்டுள்ளதால் இந்தப் பொது சூத்திரம் தேவை அற்றது என்ற எண்ணம் தோன்றும். வினையியலில் வினைகள் இட விகுதிகளை ஏற்று இடம் உணர்த்தும். ஆனால் இங்கு வினையடி நிலையிலேயே

இவை இடம் உணர்த்தும் பெயர்களை ஏற்று வரும் என்று சேனாவரையர் சுட்டிக்காட்டியது சிறப்பானது.

> 'வினைச்சொல் மூன்றிடத்திற்கும் உரியவாதல் வினையியலில் பெறப்படுதலில் ஈண்டுக் கூறவேண்டா எனில்'

என்ற கேள்வியை எழுப்பிக் கொண்டு,

> 'ஆண்டுப் பால் உணர்த்தும் ஈற்றான் இடத்திற்கு உரிமை கூறினார், ஈண்டு ஈற்றான் அன்றிச் செலவு முதலாயின முதனிலை தாமே இடங்குறித்து நிற்றல் உடைமையான் இவ்வேறுபாடு ஆண்டுப் பெறப்படாமையின் ஈண்டுக் கூறினார்'

என்று சேனாவரையர் விளக்கியுள்ளார். 'முதனிலை தாமே இடங் குறித்து நிற்றல் உடைமை' என்பது கோட்பாட்டு நிலையில் முக்கியமானது. மேலும் அடுத்த இரண்டு சூத்திரங்களில் அவை இடக்கட்டுப்பாடு உடையது என்பது தொடரியல் நோக்கில் முக்கியமானது. ஆனாலும் அங்கு அந்த வினைகள் என்ன வேற்றுமை ஏற்று வரும் என்று தொல்காப்பியர் குறிப்பிடவில்லை.

> *அவற்றுள்*
> *தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்*
> *தன்மை முன்னிலை ஆயீர் இடத்த (512)*
>
> *ஏனை இரண்டும் ஏனை இடத்த (513)*

என்பவை இளம்பூரணர் தரும் உதாரணங்கள். இங்கு வினைகள் பெயரெச்சமாக வந்துள்ளன. அந்த நான்கு வினைகளும் இன்னாருக்கு (தொல்காப்பியம் இன்னதற்கு) என்ற தொழில் முதனிலை ஏற்பதில் உள்ள கட்டுப்பாட்டு - வேற்றுமை விகுதி ஏற்கும் பெயர்/குறிப்பாக மூவிடப்பெயரில் உள்ள கட்டுப்பாடு விளக்கப்பட்டுள்ளதாக நாம் கொள்ளலாம். இது தமிழ் மொழி அமைப்பில் காணப்படும் ஒரு நுண்ணிய தேர்வுக் கட்டுப் பாட்டைத் தொல்காப்பியர் உணர்ந்ததைப் புலப்படுத்துகிறது.

> எனக்குத் தந்தான் நினக்குத் தந்தான் அவற்குக் கொடுத்தான்
> என்னுழை வந்தான் நின்னுழை வந்தான் அவனுழைச் சென்றான்

என்ற உதாரணங்களைச் சேனாவரையர் கொடுத்துள்ளார். அதாவது தா, கொடு என்ற வினைகள் இன்னாருக்கு என்ற

தொழில் முதனிலையையும் வா, செல் என்ற வினைகள் இடம் (தொல்காப்பியர் கருத்துப்படி நிலம் அதாவது ஏழாம் வேற்றுமை) என்ற தொழில் முதனிலையையும் ஏற்பதில் உள்ள இடக்கட்டுப்பாட்டை விளக்குவதாக அமையும். அதாவது கொடை வினைகளான தா, கொடு ஆகிய இரண்டும் நாலாம் வேற்றுமையும் இயக்க வினைகளான வா, செல் ஆகிய இரண்டும் ஏழாம் வேற்றுமையும் ஏற்று வரலாம்.

> 'தரப்படும் பொருளை ஏற்பான் தானும் முன்னின்றானும் ஆகலானும், வரவுதொழில் தன் கண்ணும் முன்னின்றான் கண்ணும் சென்று முடிதலானும் ஈற்றான் அன்றி இவ்விரு சொல்லும் தன்மை முன்னிலைக்கு உரியவானவாறு கண்டுகொள்க'

என்று பொருள் நோக்கிலும் சேனாவரையர் தேர்வுக் கட்டுப் பாட்டை - இடக் கட்டுப்பாட்டை விளக்கியுள்ளார். அதாவது தா, வா என்ற வினைகள் தன்மை, முன்னிலை என்ற இரண்டு இடத்துக்கும், கொடு, செல் ஆகிய இரண்டு வினைகளும் படர்க்கை இடத்துக்கும் மட்டுமே உரியவை.

வா, செல் என்ற இரண்டு வினைகளின் பல பொருளான இயங்கு என்ற வினைக்கும், தா, கொடு என்ற வினைகளின் பல பொருள் ஒரு சொல்லான ஈ என்ற வினைக்கும் இந்தக் கட்டுப்பாடு பொருந்தாது என்று சேனாவரையர் தன்னுடைய விளக்க வுரையில் சுட்டிக்காட்டியுள்ளார். உண்மையில் இயங்கு என்பது செல், வா என்ற இரண்டு வினைக்கும் பொதுப் பொருளே தவிர அதற்குக் கூடுதல் பொருள் உண்டு. அதாவது செல் என்பது படர்க்கையை நோக்கி இயங்கு என்ற சிறப்புக் கூறும் உள்ளடங்கியது. வா என்பது இயங்கு என்னும் பொருளோடு அதைப் பேசுவோன் நோக்கில் நகர்வது என்ற பொருளும் உடையது. எனவேதான் வா, செல் ஆகிய இரண்டும் இடக்கட்டுப்பாடு உடையன. ஆங்கிலத்தில் கம் (Come), கோ (Go) ஆகிய இரண்டுக்கும் இந்தக் கட்டுப்பாடு பொருந்தும். Come to me, Go to him அதாவது உலகப் பொதுமையானது. தா, கொடு என்ற இரண்டு சொற்களுக்கும் இணையாகக் கிவ் (Give) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இந்தக் கட்டுப்பாடு இல்லை. உரையாசிரியர்கள் பிற்கால இலக்கியத் தமிழில் இந்தக் கட்டுப்பாடு பின்பற்றப்படவில்லை என்று உதாரணம் காட்டியுள்ளார்கள். ஆனால் இன்றைய பேச்சுத் தமிழில்

நாகர்கோவில் கிளைமொழியிலும், மலையாள மொழியிலும் இந்தக் கட்டுப்பாடு இன்றும் கடைப்பிடிக்கப்படுகிறது.

மேலும் சுட்டு அடியாகப் பிறந்த இடவினையடையும் (ஆங்கு, ஈங்கு) இந்தக் கட்டுப்பாட்டைப் பெறும் என்று சேனாவரையர் குறிப்பிட்டுள்ளார்.

> 'இச்சூத்திரத்துள் ஈங்கு முதலாயின தன்மைக்கண்ணும் ஆங்கு முதலாயின படர்க்கைக் கண்ணும் அடக்கப் பட்டன'

என்பார் சேனாவரையர். உதாரணம் ஈங்கு வந்தான் ஆங்குச் சென்றான். இவை பொருத்தமானவையே. அதாவது அண்மைச் சுட்டு தன்மைக் கண்ணும், சேய்மைச் சுட்டு படர்க்கைக் கண்ணும் அடங்கும். இயங்கு வினையாக இருப்பதால் பேசுவோன்/ கேட்போன் பேசப்படுவோன் என்ற முறையிலேயே தன்மை, படர்க்கை ஆகிய இரண்டும் சுட்டப்பட்டுள்ளன.

அப்படியே போதல், புகுதல் என்ற இரண்டு வினையும் இடக்கட்டுப்பாடு உடையன என்று குறிப்பிட்டு

> 'போதல் என்பது படர்க்கைக்கும் புகுதல் என்பது தன்மைக்கும் உரித்தாய் வருமேனும் ஆசிரியர் காலத்து இவை மூவிடத்திற்கு உரியவாய் இருத்தலின் இவற்றை வரையறைப்படுத்தாராயினார்'

என்ற சுந்தரமூர்த்தி (கிளவி 28 விளக்க உரை) கருத்து பொருந்தாது. ஏனெனில் புகுதல் என்பது தன்மை இடத்துக்கு வருதல் என்ற பொருளோடு உள்ளே செல்லுதல் என்ற பொருளும் படுவதால் இணையான சொற்களாகக் கருதமுடியாதவை. அதனால்தான் தொல்காப்பியர் அவைகளைச் சேர்க்கவில்லை.

### 6.3.2. வினை ஒட்டு : இடக்கட்டுப்பாடு

வியங்கோள் விகுதி முன்னிலை, தன்மை ஆகிய இரண்டோடும் வராது என்று தொல்காப்பியர் கூறிய கட்டுப்பாடு பற்றித் தனியே விரிவாக ஆராயப்படும்.

### 6.4. செய்யும் என்னும் வினைமுற்று

பல வினைமுற்று விகுதிகள் குறிப்பாக ஒரு திணை/ பாலுக்கே உரியவை மேலும் எழுவாய்க்கும் வினைமுற்று விகுதிக்கும் ஒருவித ஒலி இயைபு காணப்படுவதால் (யான் = என்,

அவன் = அன் போன்றவை) ஆனாலும் ஒரு சில, பொது விகுதிகளாக ஒன்றுக்கு மேற்பட்ட எழுவாய்க்கு உரியதாக வரும். அவற்றுள் ஒன்று செய்யும் என்னும் முற்று. அது பற்றி வினையியலில் ஒரு சூத்திரம் (712) உள்ளது.

> பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
> அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
> செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா

அதாவது பலர்பால், முன்னிலை, தன்மை ஆகிய மூன்றோடும் செய்யும் என்னும் வினைமுற்று வராது.

தெய்வச்சிலையாரும் நச்சினார்க்கினியரும் சில மாறுபட்ட உதாரணங்களை எடுத்துக்காட்டி இலக்கணம் மாறுபடுவதால் வேறு பொருள் கொடுத்துள்ளார்கள்.

> ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
> ஆஅதும் என்னு மவர்

என்ற குறளில் (653) அவர் என்னும் பலர்பால் எழுவாய் ஓஒதல் வேண்டும் என்னும் வினைமுற்றை ஏற்றுவந்திருப்பது, மேலே சொன்ன சூத்திரத்துக்கு மாறுபட்டது. எனவே தெய்வச்சிலையார்

> 'அவர் என்பது பல்லோர் படர்க்கை ஆதலின் வேண்டும்
> என்னும் முற்றுச் சொல் கொண்டு முடியாமையின்.....
> வேண்டிக்கோடல் பொருண்மைக் கண் வந்தது'

என்று முன் சூத்திர (711) உரையில் குறிப்பிட்டுள்ளார். அதன்படி செய்யும் என்னும் வினைமுற்றும் வியங்கோள் பொருளில் வரும் என்பது அவர் கருத்து. ஆனால் முன் சூத்திரத்திலேயே 'ஓஒதல் வேண்டும்' என்பதற்குத் 'தவிர்வாராக' என்று பொருள் எழுதியுள்ளார். எப்படியானாலும் செய்யும் என்னும் முற்றும் வியங்கோளைச் சொல்லுருபாக அல்லது அகராதியனாக உணர்த்துகிறது என்று பொருள்.

### 6.5. பால் கட்டுப்பாடு

சில வினையடிகள் குறிப்பிட்ட பாலுக்கு உரியன என்பதைத் தொல்காப்பியர் நேரடியாகச் சொல்லாமல் மறைமுக மாகத்தான் சொல்லியிருக்கிறார். அதனால் அந்த வினைகளை விதந்து சொல்லவில்லை. உண்மையில் அந்தக் கருத்து அவருக்கு பளிச்சொலியாகத் (Flash) தான் தோன்றியிருக்க வேண்டும் என்று கருதவேண்டியிருக்கிறது. அதற்கு இரண்டு காரணம் கூறலாம்:

1. இந்தச் சூத்திரம் பெயரியலில் காணப்படுவது. 2. விரவுப் பெயர்களை விளக்கிக்கொண்டு வரும்போது அவைகளின் திணை/பாலை எப்படித் தெரிந்துகொள்வது என்ற கேள்வியை மனதில் கொண்டு

'.................................. தத்தம் மரபின்

வினையோ டல்லது பால்தெரி பிலவே' (657: 3, 4)

என்று கூறும் சூத்திரத்தை அடுத்துக் குறிப்பிடுவது. அதாவது வினைமுற்றின் திணை - பால் கொண்டு விரவுப் பெயர்களின் பாலைத் தெரிந்துகொள்ளலாம் என்று கூறும்போது எழுந்த சிந்தனையாக, விரவுவினைகளாக இருக்கும் வினைமுற்றுக்களைக் கொண்டும், பெயர்ச்சொற்களின் திணை-பாலை வினை அடியில் இருக்கும் கருத்தாகக் கட்டுப்பாடு மூலமும் உணர்ந்து கொள்ளலாம் என்ற உண்மை தொல்காப்பியருக்குப் பளிச்சிட்டிருக்க வேண்டும். அதனால் அந்த வினைகளைப் பட்டிய லிட்டுக் காட்டாமல் ஒரு குறிப்பிட்ட விரவுவினை மூலம் மட்டும் கூறிச் சென்றுவிட்டார். உண்மையில் அதே வினையடியின் பிற விரவு வினைகளான எச்சத்தின் மூலமும் (சாந்து அரைத்த சாத்தி போன்றவை) கருத்தாவின் பாலை உணர்ந்து கொள்ளலாம்.

இங்குச் சூத்திர உருவாக்கம் பற்றிய பிரச்சினை அடங்கி யுள்ளது. முன்னரே சிந்தித்துத் திட்டமிட்டுச் சூத்திரம் உருவாக்குவது என்பது ஒன்று. ஒரு கருத்தை விளக்கிக் கொண்டு வரும்போது பளிச்சிடும் இன்னொரு கருத்தையும் அங்கேயே கூறுவது என்பது மற்றொன்று. அப்போது அது பற்றிய முழு உண்மையும் தெளிவாக விவரிக்காமல் விட்டுவிடுவது. இரண்டாவது வகையைச் சார்ந்தது இந்தச் சூத்திரம்.

நிகழூஉ நின்ற பால்வரை கிளவியின்
உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே
அன்ன மரபின் வினைவயி னான (658)

என்பதே அந்தச் சூத்திரம். இங்கு நிகழூஉ நின்ற பால்வரை கிளவி என்பது செய்யும் வாய்பாட்டு வினைமுற்றே; உண்மையில் அங்குப் பால் உணர்த்துவது அடிச்சொல்தான். அதனால் அப்படிப்பட்ட வினைகள் எந்தத் திணை, பால், எச்சம் ஆகியவைகளுக்குரிய விகுதிகளை ஏற்றாலும் பால் உணர்த்துவதைக் குறிப்பிடாமல் விரவுப் பெயர் பற்றிப்

பேசுவதால் விரவுத் திணையை மனதில் கொண்டு ஒரு குறிப்பிட்ட வாய்பாட்டு வினைக்கு உரியதாகக் கூறிவிட்டார். மேலே குறிப்பிட்ட காரணத்தினால்தான் அந்த வினைகளைச் சுட்டிக்காட்டாமல் 'அன்ன மரபின் வினை' என்று பொத்தம் பொதுவாகப் பெயரியலில் வினை பற்றிக் கூறுகிறார்.

சாத்தன் யாழ் எழூஉம், சாத்தி சாந்து அரைக்கும் என்ற உதாரணங்களைக் கொடுத்து

> 'யாழ் எழுதலும், சாந்து அரைத்தலும் அஃறிணைக்கு
> ஏலாது ஒருவற்கும் ஒருத்திக்கும் ஏற்றலின் உயர்திணை
> ஒருமைப்பால் விளங்கியவாறு கண்டு கொள்க'

என்பது இளம்பூரணர் விளக்கம். இங்குச் செயப்படுபொருளும் வினையும் சேர்ந்தே பால் உணர்த்துவதாகக் கருதப்பட்டிருப்பது சிறப்பாகக் கொள்ளமுடியாது. தனி வினை மட்டும் பால் உணர்த்துவதாகக் காட்டவேண்டும். பொரு, உழு போன்ற வினைகள் ஆண்பாலுக்கு உரியவை, அரை என்பது பெண் பாலுக்கு உரிய வினை.

> 'யாழ் எழுஉதலும், சாந்து அரைத்தலும் முதலாகிய
> தொழில் வேறுபாடு பற்றி வரும் முன்னிலை
> வினையானும், வியங்கோளானும் இருவகை எச்சத்
> தானும் எல்லாம் உயர்திணைப் பால் தோன்றுதலால்'

என்று சேனாவரையர் ஒத்துக்கொண்டாலும் தொல்காப்பியர் 'நிகழூஉ நின்ற பால்வரை கிளவி' என்று கூறியிருப்பதால் அதை உரையாசிரியர் என்ற முறையில் நியாயப்படுத்த வேண்டும் என்று வாதிட்டுள்ளார். அது விதண்டா வாதமே. ஆனால் இறுதியில்

> 'இருவகை எச்சத்தானும் வியங்கோளானும்
> சிறுபான்மை உயர்திணைப் பால் தோன்றல் ஒன்றென
> முடித்தல் என்பதனால் கொள்க'

என அவரே ஒத்துக்கொண்டுள்ளார். சேனாவரையர் இன்னொரு பிரச்சினையும் இருப்பதை நினைத்துப் பார்த்திருக்கிறார். ஒருமை வினையால் அஃறிணை பால் தோன்றுவது பற்றியது. ஆனால் அவருக்குச் சரியான உதாரணம் கிடைக்காததால் ஒரோவழி வருவது, சிறுபான்மை என்று குறிப்பிட்டு நியாயப்படுத்தி யுள்ளார்.

> 'சாத்தன் புல் தின்னும், சாத்தி கன்று ஈனும் எனச் செய்யும் என்னும் சொல்லான் அஃறிணைப்பாலும் தோன்றுதலின் அது கூறாராயிற்று என்னை'

என்பது அவருடைய கேள்வி.

> 'எழுஉதலும் அரைத்தலும் அஃறிணைக்கு என்னும் இயைபு இல்லாதவாறு போலப் புற்றின்றல் உயர்திணைக்கு எவ்வாற்றானும் இயைபின்று எனப் படாமையானும், கன்றீனும் என்புழி ஈனும் என்னும் வினையான் அன்றிக் கன்று என்னும் சார்பான் அஃறிணைப் பால் தோன்றுதலானும், ஒருமை வினயான் ஒரு வழி அஃறிணைப் பால் தோன்றினும் அது சிறுபான்மை ஆகலானும் கூறாராயினார்'

என்பது அவரது விளக்க வாசகம். இங்குத் தின், ஈன் என்ற இரண்டு வினைகளும் உயிர்ப் பொருளுக்கு (மக்களுக்கும் மற்றும் உயிருள்ள பறவை, விலங்கு போன்றவைகளுக்கும் உரிய வினைகள். உயர் திணையான மக்கள் அல்லாதவைகளுக்கு உரிய திணை அல்ல. அதனால் தான் சேனாவரையர் வலிந்து விளக்கம் கொடுக்க வேண்டியதாகிவிட்டது.

மாறாகத் தெய்வச்சிலையார் மேயும் என்ற வினையைக் காட்டிச் 'சாத்தி புல் மேயும்' என்ற வழி அஃறிணை என்பது பெறப் பட்டது என்று சுருக்கமாகச் சொல்லிச் சென்றுள்ளார். மேலும் அதே வினைகள் எச்சமாக வந்தாலும், சில பெயரடைகளை ஏற்றுவந்தாலும் பால் உணர்ந்து கொள்ளலாம் (சண்முகம், 1984: 67-77). இதன்மூலம் தொல்காப்பியர் வினையடிகள் பால் உணர்த்துவது பற்றி முழுமையாகக் குறிப்பிடவில்லை என்பதே புலனாகிறது. எப்படியானாலும் தொல்காப்பியர் வினையடிகள் அதற்குரிய கருத்தா ஏற்பதில் கட்டுப்பாடு உண்டு என்பதை விரவு வினை மூலம் ஓரளவே உணர்ந்திருந்தார் என்பதும் கோட்பாட்டு நோக்கில் முக்கியமானது.

### 6.6. யார்

யார் என்ற வினா வினைச்சொல் உயர்திணை மூன்று பாலுக்கும் பொது என்பதை

> யாஅர் என்னும் வினாவின் கிளவி
> அத்திணை மருங்கின் முப்பாற்கும் உரித்தே (695)

என்ற சூத்திரம் குறிப்பிடுகிறது. அதாவது ஆண், பெண், பலர் ஆகிய மூன்று பாலுக்கும் உரியது. தொல்காப்பியரே தன்மை ஒருமை, பன்மையை உயர்திணையில் சேர்த்துள்ளதால் இவைகளுக்கும் உரியதாகவே கொள்வேண்டும். மேலும் விரவுப் பெயர் என்று தொல்காப்பியரால் குறிப்பிடப்பட்ட முன்னிலை பதிலீட்டுப் பெயர்களோடும் யார் என்ற வினா வரும்.

### 6.7. எவன்

> அத்திணை மருங்கின் இருபால் கிளவிக்கும்
> ஒக்கும் என்ப எவன்என் வினாவே (704)

என்பது ஒன்றன் பால், பலவின்பால் இரண்டற்கும் பொதுவாக வரும் என்பது தொடரியல் நோக்கே.

'நுமக்கு இவன் எவனாம்' என்ற உதாரணத்தைச் சேனாவரையர் காட்டி இங்கு எவன் என்ற அஃறிணை வினைமுற்று இவன் என்ற உயர்திணை கொண்டு முடிந்து வந்துள்ளது எப்படிப் பொருந்தும் என விவாதித்துள்ளார்.

> 'ஆண்டு அது முறை பற்றி நிற்றலின் அஃறிணைக் கண் வந்தது எனவே படும் என்பது. அஃதேல் 'நுமக்கு இவன் என்ன முறையனாம் என்பதல்லது என்ன முறையாம் என்பது பொருந்தாது எனின், என்ன முறை என்பது ஆண்டு முறை மேல் நில்லாது ஒற்றுமை நயத்தான் முறை உடையான் மேல் நிற்றலின் அமையும் என்க'

என்பது சேனாவரையர் வாதம். இங்கு எவன் என்பது வினைமுற்றாக இல்லாமல் குறிப்பு வினையாலணையும் பெயராக வந்துள்ளது. அவன் உனக்கு என்ன வேண்டும் என்றால் 'என்ன உறவுமுறை' வேண்டும் என்றும், உனக்கு என்ன வேண்டும், 'என்ன பொருள்' வேண்டும் என்ற கருத்தில் இன்றும் பயன்படுத்தப் படுகின்றன. அதற்கு உரிய பயனிலை ஆம் என்னும் செய்யும் வாய்பாட்டு வினைமுற்று. எனவே நுமக்கு இவன் எவனாம் என்பதில் எவன் உயர்திணைக்கண் வரவில்லை. எவன் என்ற வினைமுற்று வினையாலணையும் பெயராக வந்துள்ளது.

வேற்றுமை ஏற்ற பெயர் + வினை என்பது முன் இயலில் விளக்கப்பட்டது. வினையெச்சம் + வினை அடுத்த இயலில் விளக்கப்படும்.

## 6.8. வினைமுற்று

தமிழில் வினைமுற்றுகள் திணை பால் இட விகுதிகளை உடையவை என்பதால் அவைகளுக்கு உரிய எழுவாயின் திணை பால் இடம் இலக்கணப்படி வரையறுக்கப்பட்டது. ஆனால் சில வினைமுற்று விகுதிகள் திணை பால் வரையறை உடையவை. அவைகளில் சில உலகப் பொதுவானவை; வேறு சில குறிப்பிட்ட மொழியின் வரலாற்று நிலையைப் பிரதிபலிப்பவை. எனவே அவைகளின் எழுவாயின் திணை பால் இடம் வரையறை வழக்கு ஒட்டி நிர்ணயிக்க வேண்டியவை. அந்த முறையில் தொல்காப்பியர் சில வினைமுற்றுகளின் எழுவாயின் திணை பால் இடம் வரையறுத்துக் காட்டியுள்ளார்.

செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று தன்மை ஒருமை, தன்மைப் பன்மை, முன்னிலை ஒருமை, பலர் பால் ஆகிய எழுவாயை ஏற்று வராது என்பது தொடரியல் நோக்கு உடையதே. அப்படியே வியங்கோள் வினைமுற்று பற்றிய தொடரியல் கட்டுப்பாடு தனி இயலில் விளக்கப்படும்.

# 7
# எச்சத்தொடர்

## 7.1. முன்னுரை

வினையெச்சம், பெயரெச்சம் என்று இன்று நாம் வழங்குபவைகளைத் தொல்காப்பியம் முறையே வினையெஞ்சு கிளவி (204, 210:6, 707, 713 முதலியவை), பெயரெஞ்சு கிளவி (210:5, 721 முதலியவை) என்றும்; எச்சம் (717, 724 என்றும் சூழலால் வினையெச்சம் என்பது உணர்ந்துகொள்ளலாம்) கையாண்டுள்ளது.

வினையெச்சம் பற்றி எழுத்ததிகாரத்தில் இரண்டு சூத்திரங்களும் (222, 236), வினையியலில் 11 சூத்திரங்களும் (707, 710, 713-8, 721-2, 724), எச்சவியலில் மூன்று சூத்திரங்களும் (914-5, 940) உள்ளன. பெயரெச்சம் பற்றிய எழுத்ததிகாரத்தில் ஒரு சூத்திரமும் (210), வினையியலில் ஆறு சூத்திரங்களும் (707, 719, 720, 721-3), எச்சவியலில் இரண்டு சூத்திரங்களும் (913, 916) உள்ளன.

### 7.1.1. கலைச்சொல் காட்டும் மொழியியல் உண்மைகள்

பெயர், வினைகளை அவை ஏற்று வரும் திரியொட்டு விகுதி (பெயர் வேற்றுமை ஏற்பது, வினை கால விகுதி ஏற்பது) அடிப்படையில் விளக்கியது போலப் பெயரெஞ்சுகிளவி, வினையெஞ்சுகிளவி என்று அவை கொண்டு முடியும் சொற்கள் அடிப்படையில் பெயரிட்டிருப்பது அவைகளின் தொடர்நிலை (Syntagmatic relation) முறை வகைப்பாடு (category) ஆகும்.

எச்சம் என்பது முற்றுப்பெறாதது என்று பொருள். முற்று (910) என்பதன் எதிர்ச்சொல்லாகக் கையாளப்படுவது. அது காலமும், இடவிகுதியும் பெற்று வருவது என்று இங்கு விளக்கப்பட்டுள்ளது.

எச்சவியலில்

> வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
> நினையத் தோன்றிய முடிபா கும்மே... (915)

என்றும்

பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே (916)

என்றும் முடியும் சொற்களைப் பற்றி வெளிப்படையாகக் கூறினாலும் அத்தொடர்களின் பொருள் விவாதத்துக்கு உரியது. ஏனெனில் அவை எஞ்சுகிளவியாகிய எச்சம் பற்றியவை. அதனால் அங்குக் கூறியது எந்த வகையான எச்சம் என்பது பற்றி உரையாசிரியர்களிடையே கருத்து வேறுபாடு உண்டு.

### 7.2. எச்சம் : விரவுத் திணை

தமிழில் வினைமுற்று அல்லாமல் வினையெச்சம், பெயரெச்சம் என்ற இரண்டும் சொல்லியல் நிலையில் முக்கியமான கூறுகளாகும். அதனால்தான் முற்று, எச்சம் என இரண்டு வகையான பாகுபாட்டைப் பிற்கால இலக்கணங்கள் (நேமிநாதம் - சொல் 38, நன்னூல் 322 முதலியவை - சுப்பிரமணியன், 1971: 216 தொ.) குறிப்பிட்டுள்ளன. தொல்காப்பியர் வினைகளைத் திணை-பால் அடிப்படையில் பாகுபடுத்தியதால் முற்று, எச்சம் என்று பாகுபடுத்தாமல் உயர்திணை, அஃறிணை ஆகிய இரண்டு திணைக்கும் பொதுவான விரவு வினைகள் ('இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய') என்ற பட்டியலில் எச்சங்களைச் (707) சேர்த்துள்ளார். அதில் சில வகை முற்றுகளும் (முன்னிலை வினைமுற்று, வியங்கோள்) அடங்கும்.

(முன்னிலை வியங்கோள்) வினையெஞ்சு கிளவி
(செய்ம்மன) செய்யும் செய்த என்னும்
அம்முறை நின்ற ஆயென் கிளவியும்
பிரிவுவேறு படூஉம் செய்திய வாகி
இருதிணைச் சொற்கும்ஓ ரன்ன உரிமைய. (707)

இங்கு இரண்டு செய்திகள் சுட்டிக்காட்டத் தகுந்தவை: 1. வினையெச்சம் போலப் பெயரெச்சத்தைப் பொதுமைப்படுத்திக் கூறாதது. செய்யும் என்ற வடிவம் பெயரெச்சமாகவும் வினைமுற்றாகவும் வரும் என்பதால் இங்குப் பெயரெஞ்சுகிளவி என்று பொதுமைப்படுத்திவிட்டால், செய்யும் என்பது வினைமுற்றாக வருவதைத் தனியாகக் கூறவேண்டியிருக்கும். அதாவது வருணனைச் சுருக்கத்தை மனதில் கொண்டே பெயரெஞ்சுகிளவி என்று பொதுமைப்படுத்தவில்லை. 2. எச்சங்கள் விரவுத் திணை என்பதன் அடிப்படை என்ன? அந்த வினைச் சொற்களின் கருத்தா உயர்திணைக்கும் அஃறிணைக்கும் பொது என்பதா?

அவை கொண்டு முடியும் சொற்கள் இரண்டு திணைக்கும் பொது என்பதா? என்ற கேள்வி எழுகிறது.

இளம்பூரணரும், கல்லாடரும் (719), சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் (சூ. 710) கருத்தா அடிப்படையிலேயே இரண்டு திணைக்கும் பொது என்ற உதாரணங்களைக் கொடுத்துள்ளார்கள் (அவன்-அவள்-அவர்-அது-அவை செய்யும் பொருள்). அதே சமயத்தில் இளம்பூரணரும் கல்லாடரும் வினை முதல் கொண்டு முடியும் பெயரெச்சத்தில் அந்த வினைமுதல் ஐந்து பாலும் (உயர்திணையும் அஃறிணையும்) ஏற்று வந்ததற்கு உதாரணம் கொடுத்துள்ளார்கள் (உண்ணும் அவன்-அவள்-அவர்-அது-அவை), அதாவது, அவை கருத்தா நிலையிலும், கொண்டு முடியும் சொற்கள் நிலையிலும் இரண்டு திணைக்கும் வரும்.

**வினையெச்சம்**

| | |
|---|---|
| வந்து பார்த்தேன் / பார்த்தான் | - உயர்திணை |
| (நான்) வர (அவன்) போனான் | - உயர்திணை |
| (நான்) வரின் அவன் போவான் | - உயர்திணை |
| வந்து பார்த்தது | - அஃறிணை |
| (மழை) பெய்யக் குளம் நிறைந்தது | - அஃறிணை |
| மழை பெய்தால் (குளம்) நிறையும் | - அஃறிணை |

**பெயரெச்சம்**

| | |
|---|---|
| வந்த பையன் | - உயர்திணை |
| வரும் பையன் | - உயர்திணை |
| வந்த மாடு | - அஃறிணை |
| வரும் மாடு | - அஃறிணை |

மாறாக, வினைமுற்று அதற்கேற்ற பெயரை- அதாவது ஒரு பாலுக்கு உரிய பெயரை மட்டுமே கொண்டு முடியும்.

வந்தான் அவன் / *அவள்
வந்தார் அவர்
வந்தது அது / *அவள்

(வருணனை மொழி நூல்களில் உடுக்குறிக்குப் பின் வரும் சொல்லோ தொடரோ அது இலக்கணப்படி தவறானது என்று பொருள்).

எச்சங்கள் எல்லாத் திணை - பாலுக்கும் உரிய பெயர்களைக் கருத்தாவாகவும், கொண்டு முடியும் சொற்களாகவும் ஏற்றுவரும்

என்ற முறையில் விரவுத் திணை என்று கொண்டுவிட்டார். அதற்குப் பெயரியலையும் வினையியலையும் ஒரே முறையில் வருணிக்கவேண்டும் என்று தீர்மானித்ததும், திணை பால் பாகுபாடு மிக அடிப்படையான இலக்கணக் கூறு என்று கருதி விட்டதும் கூடுதல் காரணங்கள் ஆகும் (சண்முகம், 1984 : 136 தொ.). வினையெச்சம், பெயரெச்சங்களை விரவுத் திணை என்றதன் மூலம் அவைகளின் ஒரு தொடரியல் பண்பு - அதாவது தொடர்நிலை (Syntagmatic relation) உறவு புலனாகும். ஆனால் வினையெச்ச பெயரெச்சங்கள் வாய்பாடு அடிப்படையில் வருணிக்கப்பட்டுள்ளதால் அவைகளின் அடுக்குமுறை உறவும் (Paradigmatic relation) குறிப்பிடப்பட்டுவிட்டன.

இங்கு எச்சம் பற்றிய தொல்காப்பிய வருணனையில் காணப்படும் சொல்லியல் கோட்பாடு, தொடரியல் கோட்பாடு, தமிழ்த் தொடரியல் உண்மைகள் ஆகியவை விளக்கப்படும்.

### 7.3. எச்ச வருணனை : சொல்லியல்

வினையெச்சம், பெயரெச்சம் ஆகிய இரண்டையும் 'செய்து, செய்யூச் செய்மிய' என்று வாய்பாட்டு அடிப்படையிலேயே தொல்காப்பியர் வருணித்துள்ளார். அந்த முறையே பெரும்பாலான பிற்கால இலக்கணங்கள் பின்பற்றியுள்ளன (சுப்பிரமணியன், 1971: 251 தொ.). இதை மொழியியல் நோக்கில் அடுக்குநிலை (Paradigm) வருணனை என்று கூறுவார்கள். தொல்காப்பியர் வேற்றுமை உருபுகள், சாரியைகள் இடம்-திணை-பால் விகுதிகள் ஆகியவைகளைப் பகுக்கும்போது நுண்ணிய சொல்லியல் கோட்பாடுகளைப் புலப்படுத்தியிருந் தாலும் (சண்முகம், 1978), வினையெச்சங்களையும் பெயரெச்சங் களையும் பகுக்காமல், சொல்லாக - அடுக்கு நிலையில் ஏன் கூறினார் என்ற கேள்வி எழுகிறது?

எச்சங்களை உரையாசிரியர்களும், இன்றைய மொழியியல் ஆய்வாளர்களும் பகுப்பாய்வு செய்துள்ளார்கள். உதாரணமாகச் சேனாவரையர் சொல் பகுப்புச் செய்துள்ளதோடு சில வினையெச்சங்களைக் கூறாததற்கும் சமாதானமும் கூறியுள்ளார்.

ஒன்பது வினையெச்சங்களில் எட்டு விகுதிகளைப் (உ(செய்து, செய்பு) ஊ, என, இயர், இய, இன், அ, கு) பகுத்துக் காட்டிவிட்டுச் சேனாவரையர்

> 'இறுதியிடைச் சொல் ஏற்றவாற்றாற் பிரித்துணர வாய்பாடு ஓதினாற்போல, ஏற்றவாற்றான் இறுதி இடைச்சொல் பிரித்துணர்ந்துகொள்ள ஈண்டும் வாய்பாடு பற்றி ஓதினார்'

என்று கூறுவதில் வாசகனும் இலக்கணப் பயிற்சியில் ஈடுபட வேண்டும்; இலக்கணத்தில் எல்லாம், விவரமாகச் சொல்லப் பட்டிருக்காது என்ற தொனி இருக்கிறது. இது ஆசிரியரைக் குறை கூறாத உரையாசிரியர்களின் ஒரு பண்பு. மேலும் இலக்கண ஆசிரியர்கள் பல உத்திகளைக் கையாளலாம் என்ற மரபு உண்டு. அவைகளில் நச்சினார்க்கினியர் வினையெச்சச் சூத்திரத்தில் 'தொகுத்த மொழியான் வகுத்தனர் உணர்த்தல்' (தொல். 1610. 17) என்ற உத்தி கையாளப்பட்டுள்ளது என்று குறிப்பிட்டுள்ளார்.

அப்படியில்லாமல் ஆசிரியர் ஏன் பகுப்பு முறையை மேற்கொள்ளாமல் வாய்பாடு முறையை மேற்கொண்டார் என்று எண்ணினால் அமைப்பியல் நோக்கில் இரண்டு காரணங்கள் இருப்பது புலனாகிறது.

அ. எச்சங்களின் அமைப்பு ஒரு சீர்மைத்தாக இல்லாமல் இருப்பது. இது வினையெச்சத்துக்கும் பெயரெச்சத்துக்கும் பொருந்தும்.

உதாரணமாகச் செய்து என்ற வினையெச்சங்களில் நடந்து, உழுது போன்ற வினையெச்சங்கள் வினையடி+காலம்+வினை யெச்ச விகுதி என்ற மூன்று இலக்கணக் கூறுகளையும், ஓடி, பாடி, போய் போன்றவை வினையடி+காலம் என்ற இரண்டு இலக்கணக் கூறுகளையும் கொண்டுள்ளன. செயின் என்ற வினையெச்சம் வினையடி+நியதி வினையெச்ச விகுதி என்ற இரண்டு இலக்கணக் கூறுகளையும் பெற்றுள்ளன. பெயரெச்சத் திலும் இந்த முரண் காணப்படுகிறது. செய்த என்ற பெயரெச்சம் வினையடி+காலம்+ பெயரெச்ச விகுதி என்ற மூன்று இலக்கணக் கூறுகளையும் செய்யும் என்ற பெயரெச்சம் வினையடி + காலம் என்ற இரண்டு இலக்கணக் கூறுகளையும் பெற்றிருக்கின்றன'. எனவேதான் எச்சங்களைப் பகுக்காமல் அடுக்கு நிலையில் கூறியிருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது.

ஆ. நூல் முழுமையும் பார்த்தால் தொல்காப்பியர் வினைச் சொற்களில் திணை-பால் விகுதி தவிர ஏனையவைகளைப் பகுப்பு

ஆய்வு செய்யவில்லை; பொதுவாகத் தொல்காப்பியர் தீவிர சொல் பகுப்பாய்வில் ஈடுபடவில்லை; பகுப்பதற்குத் தயக்கம் காட்டுவதும் புலனாகிறது. எழுத்ததிகாரத்தில் பண்புத் தொகை போன்றவைகளையும் (48நு) த, ந, எ ஆகிய மூவிடப் பெயர்களின் அடியிலிருந்து உண்டாகும் முறைப் பெயர்களைப் 'பிரிப்பப் பிரியா' (893) என்று கூறுவதால் அறியலாம்.

இருபதாம் நூற்றாண்டில் சொல்லியலில் உலகளாவிய நிலைகளில் கோட்பாடு வளர்ந்திருப்பதால் வினையெச்சத்தில் சொல்லமைப்பு நோக்கில் இரண்டு வகை இருப்பதாகக் கொண்டும்; செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தில் விகுதி சூனிய மாற்றுருபு இருப்பதாகக் கொண்டும் (செய்+உம் + $\emptyset$); பெயரெச்சத்தில் எங்கும் ஒரே வகை (மூன்று இலக்கணக் கூறுகள்) இருப்பதாகக் கொண்டும் விளக்குகிறார்கள்.

**7.4. எச்சம்: ஒரு வரையறை**

வினைகொண்டு முடிவன எல்லாம் வினையெச்சம் என்று தெய்வச்சிலையார் கருதி 'அன்ன மரபினாற்' (714) கொள்ளப் படுவனவாக 'இனிக் கொண்டான், நனி வந்தான் என்பவைகளைக் காட்டியதால் அவைகளையும் வினையெச்சம் என்று கருதுகிறார் என்பது தெளிவு. உண்மையில் இனி ஓர் இடைச் சொல், நனி ஓர் உரிச் சொல் அப்படியே பெயர் கொண்டு முடிவன எல்லாம் பெயரெச்சம் (வந்த இடத்து என்பது வந்தபோது என்ற பொருள் படும்போது வினையெச்சம் ஆகும்) என்றோ முடிவு செய்யக் கூடாது என்பார் அகத்தியலிங்கம் (1972). எனவே தொல்காப்பியர் கூறிய வாய்பாட்டில் வருபவைகளே அல்லது வினையடியாகத் தோன்றிய அந்த வாய்பாட்டுச் சொற்களே வினையெச்சம் அல்லது பெயரெச்சம் என்று கருதப்பட வேண்டும்.

இங்கு நன்னூலார் வினையெச்சத்துக்குக் கொடுத்த விளக்கம் சிலரால் சிறப்பாகக் கருதப்பட்டாலும் அதுவும் குறை உடையது என்பது சுட்டிக்காட்டத்தக்கது.

தொழிலும் காலமும் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினையெச் சம்மே (342)

என்ற நன்னூல் விளக்கம் செய்து என்னும் வினையெச்சத்துக்கே பொருந்தும். செய்தான் என்ற வினைமுற்றிலிருந்து திணை-பால் விகுதியாகிய - ஆன் என்பதை நீக்கிவிட்டால் செய்து என்ற வினையெச்ச வடிவம் கிடைக்கும். செயின், செய்தால், செய, செயற்கு

போன்ற பிற வினையெச்சங்களைப் பெற முடியாது. எனவேதான் நன்னூலார் வரையறையும குறை உடையதே. வினையெச்சச் சொற்களின் அமைப்பு மாறுபட்டுள்ளதால்தான் தொல்காப்பியர் அடுக்குநிலையில் வினையெச்சங்களை வருணித்திருக்கவேண்டும்.

## 7.5. வினையெச்சம்

வினையெச்சத்தின் தொகைபற்றி வினையியலில் இரண்டு சூத்திரங்களும் (713, 714) அதன் வடிவ வேறுபாடு பற்றி எச்சவியலில் ஒரு சூத்திரமும் அதன் தொடரியல் பண்பு பற்றி வினையியலில் ஐந்து சூத்திரங்களும் (715-8, 722) கருத்தாடல் நோக்கில் பொருண்மை பற்றி எட்டு சூத்திரங்களும் (724-7, 729-30) 732-33) உள்ளன. வினையெச்சம், பெயரெச்சம் ஆகியவைகளின் எதிர்மறை பற்றி ஒரு சூத்திரமும் (721) காணப் படுகின்றது. இங்கு வினையெச்சங்களின் தொகை, தொடரியல் பண்பு, கருத்தாடல் பயன்பாடு ஆகியவை தொல்காப்பியர் கருத்துகள் உரையாசிரியர்கள் நோக்கில் விளக்கப்படும்.

### 7.5.1. தொகை

> செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
> செய்யியர் செய்யிய செயின்செய செயற்கென
> அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி (713)

எனத் தனி வினையெச்சங்களையும்

> பின்முன் கால்கடை வழிஇடத்து என்னும்
> அன்ன மரபின் காலங் கண்ணிய
> என்ன கிளவியும் அவற்றியல் பினவே (714)

எனக் கூட்டு வினையெச்சங்களையும் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். அவர் எதிர்மறை எச்சங்களைப் பொருள் நிலையில் மட்டுமே விவரித்துள்ளார்.

> பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்
> எதிர்மறுத்து மொழியினும் பொருள்நிலை திரியா
> (721)

அதை ஒட்டி உரையாசிரியர்கள் எதிர்மறைப் பெயரெச்சங்களாக செய்யா, செய்யாத என்பவைகளையும், எதிர்மறை வினையெச்சங் களாகச் செய்யாது, செய்யாமை, செய்யாமல் (செய்யாமே என்பது மரூஉ வழக்கு என்பார் கல்லாடர்) என்பவைகளையும் சுட்டிக் காட்டியுள்ளார்கள். மேலும் எந்தெந்த உடன்பாட்டுக்கு எது எது

எதிர்மறையாக வரும் என்றும் உரையாசிரியர்கள் சுட்டிக் காட்டிச் சென்றுள்ளார்கள்.

### 7.5.1.1. தனிவினையெச்சம் : தொகை

வினையெச்சத் தொகையைப் பொறுத்தவரையில் இரு பிரச்சினைகள் உள்ளன: 1. நூல் முழுதும் பார்க்கும்போது வருவது. 2. வினையெச்சங்களாகப் பட்டியல் இட்டதில் அவைகளை வேறு விதமாக விளக்கிச் சிலவற்றை நீக்கிவிடலாம் என்பது. அது வருணனையில் உள்ள பிரச்சினை.

#### 7.5.1.1.1. நூல் முழுதும்

தொல்காப்பியரே எழுத்ததிகாரத்தில் 'செய்யா என்னும் வினையெஞ்சு கிளவி' (222) என்று கூறியிருந்தும் அதை இங்குச் சேர்க்காதது விவாதத்துக்கு உரியது. சேனாவரையர் செய்து என்ற வாய்பாடு இகர ஈறு (ஓடி), யகர ஈறு (போய்) ஆகியவை அடங்குவது போலச் செய்யூ என்னும் வாய்பாட்டின் திரிந்த வடிவமாகச் செய்யா அடங்கும் என்று கருதியே தொல்காப்பியர் இந்தப் பட்டியலில் சேர்க்கவில்லை என்று வாதிட்டுள்ளார்.

> 'ஊகாரம் உண்ணூ வந்தான்.... வரும். அஃது உண்ணா
> என ஆகாரமாய் வரும்'

என்பது அவர் வாசகம். தெய்வச்சிலையார் ('செய்யூ என்பது இறந்த காலமும் நிகழ்காலமும் காட்டும். 'செய்யா' என்னும் வினையெஞ்சுகிளவியும்' எழுத்ததிகாரத்து (உயிர்ம. 20) ஓதுதலின் அவ்வாய்பாடும் இப்பொருட்டாகி வருதலின் அதுவும் கொள்க') என்பார். செய்யூ என்பதற்குச் செய்யா என்பதும் ஓர் வாய்பாடு என்பது கல்லாடர் வாசகம். அதாவது சேனாவரையர் கருத்தை ஒட்டியது. நச்சினார்க்கினியர் செய்யூ வடிவத்துக்குக் கீழ்ச் செய்யா வடிவத்தைப் பேசினாலும் இரண்டையும் தொடர்புபடுத்த வில்லை. ஆனால் அகத்தியலிங்கம் (1986: 207). 'உண்ணூ, உண்ணா ஆகிய இரண்டும் பதில்நிலை வழக்கில் வருவனவாக இருப்பினும் ஒன்றிலிருந்து ஒன்றை வருவிப்பது அவ்வளவு பொருத்தமாக இல்லை' என்று பொதுவாகக் கூறித் தனித்தனியே விளக்கி இரண்டுக்கும் பொருள் வேறுபாடு காட்டியுள்ளார். ஊகார எச்சம் வரிசைப் பொருள், துணைநிகழ்ச்சிப் பொருள், உடனிகழ்ச்சிப் பொருள், காரணப்பொருள், நோக்கப்பொருள் ஆகியவற்றில் வந்துள்ளது என்றும் (ப. 210), ஆகார விகுதி துணை நிகழ்ச்சிப் பொருளிலும், உடனிகழ்ச்சிப் பொருளிலுமே மிக

அதிக எண்ணிக்கையில் வந்துள்ளது (ப. 227) என்றும் குறிப்பிட்டுள்ளார். எனவே தொல்காப்பியர் 713-ஆம் சூத்திரத்தில் குறிப்பிட்ட தொகை குன்றக்கூறலாக அமைகிறது.

### 7.6. பட்டியலில் உள்ளவை

#### 7.6.1. செய்தென

செய்தென என்பதை மீனாட்சிசுந்தரனார் (1965:81) செய்து என்ற பழங்கால வினைமுற்றும், 'என' (எனவே) என்ற இடைச் சொல்லும் சேர்ந்து, செய்வான் எனவே, செய்தான் எனவே என்று பொருள்படும் என்று விளக்கி, செய்து என்பது வினைமுற்று என்ற வழக்கு ஒழிந்ததாலும் இப்போது 'செய்தென' என்று ஒரு சொல் போலச் செயல்படுவதாலும் வினையெச்சமாகக் கருதப் பட்டது என்று சமாதானம் செய்துள்ளார். அகத்தியலிங்கம் (1986: 44) செய்து + என இரண்டாகப் பிரிக்கலாம் என்பதால் 'அதனை ஒரு வினையெச்சமாகக் கொள்வது அவ்வளவு பொருத்தமில்லை' என்று முதலில் கூறினாலும், பின்னர் (1987: 190) அது பற்றி விரிவாக ஆராய்ந்து 'செய்த பின், செய்யுமுன் போன்றவற்றைப் போல அதுவும் ஒரு சொல் நீர்மைத்தாய், பிரிக்க முடியாதபடி நின்று கூட்டு வினையெச்சமாக வருகிறது எனக் கருதலாம்' என்று குறிப்பிட்டுப் பிற கூட்டு எச்சத்துக்கும் இதற்கும் உள்ள வேறுபாட்டைச் சுட்டி அது உணர்த்தும் பொருள் பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார்.

1. கூட்டு வினையெச்சம் ஆனாலும் பிற கூட்டு வினையெச்சங்கள் போல் பெயரெச்சத்தோடு வராமல் வினை யெச்சத்தோடு வந்துள்ளது. 2. பின், முன், கால் பெயராகவோ இடைச்சொற்களாகவோ அமைய 'என' என்பது என் வினையடி யாகத் தோன்றியது ஆகிய இரண்டு காரணங்களால் முதல் வகையில் கூறியிருக்கலாம் என்பது அவருடைய கருத்து. பொருளைப் பொறுத்த வரையில் செய்ததால், செய்தவுடன், செய்ததாக என்று மூன்று பொருளில் வரும்.

#### 7.6.2. செயற்கு

செயற்கு என்பது வேற்றுமை ஏற்ற பெயராகக் கருதக் கூடாது என்று உரையாசிரியர்கள் இரண்டு காரணங்களை எடுத்துக்காட்டி வாதாடியுள்ளார்கள்.

> 'செயற்கு என்னும் வினையெச்சம் உருபேற்று நின்ற தொழிற்பெயரோடு ஒப்புமை உடைத்தாயினும்

> உருபும் பெயரும் ஒன்றாகாது பகுப்பப் பிளவுபட்டு இசையாது ஒன்றுபட்டு இசைத்தலான் அதனின் வேறாயது....'

என்று சேனாவரையர் கிளவியாக்கச் சூத்திரத்திலும் (40), 'செயற்கு என்னும் வினையெச்சம் நான்கன் உருபேற்று நின்ற தொழிற் பெயரின் வேறாயது' என்று வினையெச்சத் தொகை பற்றிய சூத்திரத்திலும் (713) கூறி இரண்டுக்கும் ஒலிப்பு நிலையில் வேறுபாடு காட்டியுள்ளார். வேற்றுமை ஏற்ற வடிவமாக இருப்பது பகுப்பப் பிளவுபட்டு இசைக்கும்; வினையெச்சம் பகுப்பப் பிளவுபட்டு இசையாது என்பது அவர் கருத்து. அது பொருந்தாது என்று கருதியே நச்சினார்க்கினியர் வேறு காரணம் குறிப்பிட்டுள்ளார். அகத்தியலிங்கம் (1987: 8) பொதுவாக வேற்றுமை ஏற்ற எல்லாச் சொற்களும் பிளவுபடாமல்தான் இசைக்கின்றன என்பதால் சேனாவரையர் கூறிய வேறுபாடு பொருந்தாது என்று சுட்டிக்காட்டியுள்ளார்.

பொருள் நிலையிலும் சொல்லியல் நிலையிலும் செயற்கு என்பதைத் தனி வினையெச்சமாகக் கொள்ளவேண்டும் என்பது நச்சினார்க்கினியரின் கருத்து.

> 'உண்டான், உண்டவன் என்னும் தொழில்பெயர்கள் உண்டாற்கு, உண்டவற்கு என நான்கன் உருபை ஏற்றுழிச் செயற்கு எனும் எச்சப்பொருள் தரும் மயக்கம் இன்மையும், உணல் என்னும் வினைப் பெயர் குகரம் அடுத்துழி உண்டலைச்செய்தற்கு என்னும் பொருள் தந்து எச்சப் பொருட்டாயே நிற்றலின் வினைப்பெயர் நான்கன் உருபு பெற்று நின்றது என்னும் மயக்கம் இதற்கு இன்மையும் உணர்க'

என்பது அவரது வாசகம். அவர் கருத்துப்படி வினையாலணையும் பெயர் குகரம் ஏற்று வருவதே பெயர்த் தொடர்; அதற்குக் காரணம் அவை தொழிலைக் குறிக்காது கருத்தாவைக் குறிக்கின்றன. அதைத் தொழில் பெயர் என்று அவர் குறிப்பிட்டுள்ளார். ஆனால் செயல் என்பதை வினைப்பெயர் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். அப்படியானால் வினைத் தொழில் பெயர் அல்லது இன்று பரவலாக வழங்கும் தொழில் பெயர் - 'Verbal noun' என்று கொள்ளலாம் போலத் தோன்றுகிறது. தொழில்பெயர் குகரம் ஏற்று வருவது.

வினையெச்சம். உண்மையில் இதே காரணம் வேற்றுமை உருபு ஏற்றது என்று கொண்டாலும் பொருந்தும். செய்ததால் என்ற கருவி வேற்றுமை ஏற்ற சொல்லும் வினைகொண்டே முடியும்.

செயற்கு என்பதிலேயே இரண்டு விதம் இருப்பதாகக் கல்லாடர் ஒரு வேறுபாடு காட்டியுள்ளார்.

'பெயர்ப் பொருண்மை நோக்கிய வழி அதுவாகவும்
(தொழில் பெயர் நான்காம் வேற்றுமை ஏற்றது)
காலம் நோக்கிய வழி வினையெச்சமாகவும் கொள்க'

என்பது அவர் வாசகம். அதன் பொருள் என்ன? என்பது சந்தேகமாக உள்ளது. இரண்டுமே பெயர்ப் பொருண்மை - செயலை உணர்த்தி, முன்னது நிகழ்காலத்தையும், பின்னது எதிர்காலத்தையும் கூடுதலாக உணர்த்துகிறது என்று வேண்டுமானால் கொள்ளலாம்.

உண்டலைப் பார்த்தான் - உண்ணுவதைப் பார்த்தான்
- நிகழ்ச்சி நடைபெறுவது

உண்டற்குப் பார்த்தான் - உண்ணுவதற்குப் பார்த்தான்
- நிகழ்ச்சி நடைபெறப் போவது

உண்டலால் மகிழ்ந்தேன் - உண்ணுவதால் மகிழ்ந்தேன்
- நிகழ்ச்சி நடைபெறுவது

உண்மையில் உண்டற்கு என்பதை உண்ண என்று செய வென் எச்சமாக மாற்றலாம். முன்னதை அப்படிச் செய்யமுடியாது. உண்டலால் என்பதையும் உண்ண என்று மாற்ற முடியும். செய வென் வினையெச்சம் நோக்கம், உடனிகழ்ச்சி, தாக்கம், காரணம் ஆகிய பொருளில் வரச், செயற்கு என்ற வேற்றுமை ஏற்ற வடிவம் நோக்கப் பொருளில் மட்டுமே வரும்.

1. எந்த வேற்றுமைச் சொல்லும் அதே முறையில் உச்சரிக்கப்படுவதால், பிளவுபடாமல் ஒலிப்பதால் தொகை என்ற காரணம் பொருந்தாது, (2) நன்னூல், இலக்கண விளக்கம் ஆகிய பிற்கால இலக்கண நூல்கள் செயற்கு என்பதை வினை யெச்சமாகக் கொள்ளவில்லை; என்ற இரண்டு காரணங்களால் செயற்கு என்பதை வினையெச்சமாகக் கொள்வது சிறப்பு இல்லை என்று அகத்தியலிங்கம் (1987) வாதிட்டுள்ளார் (ப. 9).

### 7.6.3. முற்றெச்சம்

தொல்காப்பியர் சில வினைமுற்றுகள் இன்னொரு வினையை- வினைமுற்றை ஏற்று வரும் என்று குறிப்பிட்டுள்ளார்.

தன்மை ஒருமை வினைமுற்றான செய்கு என்ற வடிவமும் (689) மார் என்ற பலர்பால் விகுதியும் (692) வினைகொண்டு முடியும் என்று அவர் குறிப்பிட்டுள்ளார். இவை முற்றெச்சமாகத் (முற்றுச் சொல் எச்சமாக வருவது) தோன்றினாலும், அவைகளை உரையாசிரியர்கள் முற்றெச்சம் என்று அழைக்க விரும்பவில்லை. அதற்கு அவர்கள் அமைப்பியல் முறையில் பதில் சொல்லி யுள்ளார்கள்.

செய்கு என்று பொருட்டுப் பொருளில் (Purposive) வருவதால் அது தன்வினையும் பிற வினையும் ஏற்கவேண்டும்; ஆனால் தன்மை ஒருமையாக வரும் செய்கு எப்போதுமே தன்வினையை அதுவும் தன்மை வினையை மட்டும் ஏற்று வருகிறது. அதனால் செய்கு என்பதை முற்று எச்சமாகப் பயன்படுகிறது என்று கொள்ளக் கூடாது என்பது அவர்கள் வாதம். இது அமைப்பியல் ஒட்டிய வாதம். வரலாற்று நிலையை ஒட்டிப் பார்ப்பதும் வேறு சில உண்மைகளைப் புலப்படுத்தும்.

இந்த வகையில் சேரக்கூடிய இன்னொரு வினையெச்சம் செய்மார். தொல்காப்பியர் பலர்பால் விகுதிகளை முதலில் விளக்கிவிட்டு (அர், ஆர், ப - சூ. 691) அடுத்து

> மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
> காலக் கிளவியொடு முடியும் என்ப (692)

என்று குறிப்பிட்டுள்ளார். அதற்கு இளம்பூரணர் கொண்மார் வந்தார் என்ற உதாரணத்தைக் கொடுத்து

> 'இது முற்றுச் சொல்லாகலான் வினைகொண்டு முடிதல் வேற்றுமை கண்டு அஃது உணர்த்தியவாறு என்பது'

என்று விளக்கம் கொடுத்திருப்பதன்மூலம் இங்கு வினைமுற்றாகக் கருதுகிறார் என்பது தெளிவு. சேனாவரையரும்

> 'மாரைக் கிளவி வினையோடு அல்லது பெயரோடு முடியாமையின் எச்சமாய்த் திரிந்து வினை கொண்டது எனப்படாமை அறிக'

என்று கூறியது இளம்பூரணர் கருத்தை வலியுறுத்தும். அதாவது செய்மார் என்பது இங்கு இன்னொரு பலர்பால் வினைமுற்றைக் கொண்டு முடிந்திருக்கிறது. ஆனால் அகத்தியலிங்கம் (1972: 218) மார் என்பது பலர்பால் விகுதி என்று ஒத்துக்கொண்டு அவை

வினைகொண்டு முடியும்போது வினையெச்சமாகவே செயல் படுகிறது என்று கூறியுள்ளார்.

> '(பிற பலர்பால் விகுதிகளான) 'அர், ஆர், ப ஆகிய மூன்றும் பெயர்கொண்டு முடியும், ஆனால் மார் என்பது வினைகொண்டு முடியும் என்று உரை யாசிரியர்கள் தவறாகக் கருதி இருக்கின்றனர்; நாம் கொடுத்த விளக்கத்தின்படி அர், ஆர், ப ஈறுகள் வினையெச்சமாக வருதலில்லை. ஆனால் மார் ஈறு வினைமுற்றாகவும் வரும், வினையெச்சமாகவும் வரும்'

என்பது அவரது வாசகம். உரையாசிரியர்கள் மார் ஈறு பெயர் கொண்டு முடியும் என்று காட்டிய உதாரணங்களில் வரும் பெயர்கள் அந்தந்த வாக்கியங்களின் எழுவாய்கள் பின்னிறுத்தத்தால் செய்யப்பட்டவை - அதாவது எழுவாய் + பயனிலை என்பது பயனிலை + எழுவாய் என்று மொழிமாற்றம் செய்யப்பட்டவை என்று அவர் காட்டியுள்ளார். உரையாசிரியர்கள் கொடுத்த உதாரணங்கள் அல்லது அவர்களுக்குக் கிடைத்த உதாரணங்கள் எல்லாம் பலர்பால் வினைமுற்றைக் கொண்டுமுடிந்தவை; எனவே அவர்கள் கருத்துக்கு ஆதரவாக அமைந்துவிட்டது. அகத்திய லிங்கம் (1972:217) ஆண்பால் எழுவாயைக் கொண்டு முடியும் உதாரணத்தை எடுத்துக்காட்டி வினையெச்சமாகக் கருதலாம் என்று நிறுவியுள்ளார்.

> ................................................................ சென்னி
> குடிக்கடன் ஆகலின் குறைவினை முடிமார்
> ................................................................ பாழி நூறி (அகம். 375: 11-3)

என்ற அடிகளின் சென்னி என்ற ஆண்பால் பெயர் முடிமார் என்ற வினைகொண்டு முடிந்துள்ளது. அதாவது முடிமார் என்ற வினையின் எழுவாய் சென்னி என்ற ஆண்பால் பெயர். அப்படியானால் பலர்பால் வினைமுற்றாக வரும் செய்மார் ஒன்று; வினையெச்சமாக வருவது இன்னொன்று. அதுவே அந்த வினைக்கு உரிய கருத்தாவாக எல்லாத் திணை-பால் பெயர்ச்சொற்களைப் பெற்றுவரும். மேலும் மார் ஈற்று வினைகள் வினைமுற்றாகவும் வினையாலணையும் பெயராகவும் வருவதற்குப் பல உதாரணங்கள் கொடுத்துள்ளார். ஆகவே தொல்காப்பியர் பலர்பால் விகுதி கூறும்போது 'மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை' என்று 'பல்லோர் படர்க்கையை மட்டும் கூறியது குன்றக்கூறலாக அமைந்துவிட்டது.

ஆனாலும் வரலாற்று நோக்கில் வினைமுற்றுகளே வினையெச்சமாக வரும் என்பதற்கு இது முன்னோடி. வினையெச்சமாகச் செயல்படத் துவங்கியபோது எல்லாத் திணை- பால் பெயர்களையும் கொண்டு முடிந்திருக்கவேண்டும் என்ற இன்னொரு வரலாற்று மாற்றத்தையும் நாம் ஊகிக்கலாம். அதாவது வினைமுற்றுகள் முதன்முதலில் அவைகளுக்கு உரிய திணை - பாலை மட்டுமே ஏற்று வந்திருக்கும். இந்த நிலையை மட்டும் தொல்காப்பியர் சுட்டுவதாகக் கொள்ளலாம். எப்படியானாலும், வினைமுற்றுகளும் அடுக்கி வரும் என்று தொல்காப்பியர் கூறியுள்ளது (912) வினைமுற்று இன்னொரு வினைமுற்றைக் கொண்டு முடியும் என்பதற்கு இன்னொரு சான்று.

இங்கு இரண்டு செய்திகள் சுட்டிக்காட்டத் தகுந்தவை: 1. செய்கு என்பதைப் பொறுத்தவரையில் '..... வினையொடு முடியினும், அவ்வியல் திரியாது' என்று குறிப்பிட்டதால் அவரே வினைமுற்று என்று கருதுகிறார் என்று தெளிவாகிறது. ஆனால் மார் என்ற விகுதி வினை கொண்டு முடியும் என்று மட்டுமே கூறியுள்ளார். ஆனாலும் உரையாசிரியர்கள் முற்றெச்சமாகக் கொள்ளவில்லை. அகத்தியலிங்கம் (1972; 222, 1987: 148) செய்மார் என்பதை முற்றாகவும், எச்சமாகவும் கருதலாம் என்று குறிப்பிட்டுள்ளார்.

செய்கு என்பது இன்னொரு வினைமுற்றோடு வருதற்கு சங்க இலக்கியத்திலிருந்து நச்சினார்க்கினியர் ஓர் உதாரணம் மட்டுமே கொடுத்துள்ளார்.

> .............................................. நின்
> ஆற்றலொடு புகழ் ஏத்தி
> காண்கு வந்திசிற் பெரும (புறம். 17: 31-3)

இங்குக் காண்கு வந்திசின் என்பது தன்மை வினைமுற்று என்பதில் ஐயமில்லை. அதனால் வந்திசின் என்பதையும் தன்மை வினைமுற்றாகக் கொள்ளலாம்; தொல்காப்பியரும் (இ)சின் என்பது தன்மை இடத்தில் வரலாம் என்பதை இடையியலில் (760) குறிப்பிட்டுள்ளார். எனவே அது மிகப் பழைய காலப் பயிற்சி என்பது புலனாகிறது. அதாவது மிகப் பழங்காலத்தில் வினை முற்றுகள் தொடர்ந்து பயன்படுத்தப்பட்டன; அப்போதுமுதல் வினைமுற்று எச்சமாகக் கருதப்பட்டது. பின்னரே அந்த இடத்தில் வினையெச்சத்தைக் கையாளும் முறை தோன்றியிருக்க வேண்டும்.

இங்கு இன்னொன்றும் கவனிக்கத் தகுந்தது. குறிப்பாகச் செய்து வினையெச்சங்களே வினைமுற்றாகப் பயன்படுத்தப்பட்ட நிலையும் உண்டு. முன்னின்று (-மகிழ்ந நின்தேரே. ஐங்குறு. 52. 4) என்ற செய்து என் வாய்பாட்டு வடிவம் வினைமுற்றாகவே கையாளப்பட்டுள்ளது.

செய்தாங்கு, செய்தென என்ற கூட்டு வடிவங்கள் சொல்லியல் நோக்கில் எளிமையானதாக இருந்தாலும் தொடரியல் நோக்கில் சிக்கலானவையே. நான் செய்தாங்கு என்பதை நான் செய்தேன் ஆங்கு -> நான் செய்தது ஆங்கு -> நான் செய்தாங்கு என்று விளக்க முடியும். திணை-பால் விகுதி இல்லாமல் வினைமுற்று கையாளப்பட்டது என்பதற்கு இது ஓர் ஆதாரம். அதனுடைய முழு நிலையே மலையாள மொழியில் திணை-பால் விகுதி இல்லாத வினைமுற்றுகள். இதற்கு முற்றிலும் மாறுபட்ட நிலை திணை-பால் உள்ள வினைமுற்றுகள் எச்சமாகப் பயன்படுத்தப் படுவது. இங்குத் தொல்காப்பியர் இரண்டு நிலைகளையும் குறித்துள்ளார்.

அ) செய்கு, செய்மார் என்ற வடிவங்கள் பற்றியது. அவை இரண்டும் வரலாற்று நோக்கில் எதிர்கால விகுதிகளை (-க்-/-ம்-) உடையவை. அதன் விரிவாகப் பின்பழந்தமிழில் இன்னொரு எதிர்கால விகுதியான ப்/வ் வந்த வினைமுற்றுகள் எச்சமாகப் பயன்படுவது: செய்வான் (அதன் மாற்று வடிவமாக -பான்-: உண்பான்) வாய்பாட்டு வடிவம்.

ஆ) '...... தத்தம் கிளவி அடுக்குந வரினும்,
எத்திறத் தானும் பெயர்முடி பினவே' (912)

என்ற சூத்திரம் வினைமுற்றுகள் அடுக்கி வருவது பற்றியது. உண்டான், தின்றான், ஓடினான், பாடினான் சாத்தன் என்று இளம்பூரணர் கொடுத்துள்ளார். நச்சினார்க்கினியரே 'நின்றான் இருந்தான் கிடந்தான், தன் கேள் அலறச் சென்றாள்' (நாலடி. 29) என்ற இலக்கிய மேற்கோளை எடுத்துக்காட்டியுள்ளார். இங்கு இரண்டு முக்கியச் செய்திகள் சுட்டிக்காட்டத் தகுந்தவை. 1. அந்தத் தொடர் வினைகள் தொடர் நிகழ்ச்சிகளாக அமைந்து பேசுபவனுடைய அலட்சிய மனப்பான்மையைப் புலப்படுத்துவன.

சிலம்பில் (துன்பமாலை. 30) கோவலன் கொலை உண்டதைக் கேட்டதும் 'பொங்கி எழுந்தாள், விழுந்தாள்' என்று

வருணித்திருப்பது இரண்டு வினைமுற்றுகள் பயன்படுத்தி யிருப்பது அந்தச் செயல் ஒவ்வொன்றும் முக்கியத்துவம் பெறும்.

ஆர்த்தனர் களித்தன ராடிப் பாடினர்
வேர்த்தனர் தடித்தனர் சிலிர்த்து மெயம்மயிர்
போர்த்தொழில் மன்னனைப் புகழ்ந்து வாழ்த்தினர்
தூர்த்தன ரிருநிதி சொல்லி னார்க்கெலாம்

என்று கம்பராமாயணப் பாடலில் (மந். சூ.ப. 26) பல வினை முற்றுகள் பயன்படுத்தப்பட்டிருப்பது பலர் தனித்தனியாகச் செய்த செயல்களைக் குறிக்கும். இந்தப் பண்பு குறிப்பு வினை முற்றிலும் காணப்படுகிறது. இங்கும் ஆர்த்து, களித்து ஆடிப்பாடி வேர்த்து என்று வினையெச்சமாக அடுக்கிச் சொல்லும்போது அச்செயல்கள் ஒவ்வொன்றும் அழுத்தம் பெறுகின்றன.

விரையினர் மலரினர் விளங்கு மேனியர்
உரையினர் பாட்டினர் ஒசிந்த நோக்கினர்
சாந்தினர் புகையினர் தயங்கு கோதையர்

என்ற சிலப்பதிகார அடிகளில் (1, 54-6) பல பெண்கள் தனித் தனியாகச் செய்த செயல்களைக் குறிப்பதற்காகவே குறிப்பு வினை முற்றுகள் தொடர்ச்சியாகக் கையாளப்பட்டிருக்கின்றன. இதன் மூலம் பொதுவாக அடுக்கிவருவது உணர்ச்சியுடன் கூறும்போதே கையாளப்படும். ஆனால் கருத்தாடலில் சிறப்பு விளைவு ஏற்படுத் துவதற்காக ஒரு மொழிஉத்தியாகவும் அது கையாளப்படும்.

வினையெச்சங்களும் அடுக்கிவருவது பற்றிய

ப்ன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியாது அடுக்குந வரினும்
முன்னது முடிய முடியும்மன் பொருளே(718)

என்ற தொல்காப்பியச் சூத்திரத்துக்கு உரையாசிரியர்கள் எல்லோரும் உழுது உண்டு தின்று ஓடிப் பாடி வந்தான் போன்ற உதாரணங்களைக் கொடுத்துள்ளார்கள்.

பொதுவாக எச்சங்கள் இலக்கணக் கூறாக இருப்பதைத் திராவிட மொழிகள் வடமொழியிலிருந்து மாறுபட்டதற்கு ஓர் உதாரணமாகக் கருதுவர் (Caldwell. 1856: 51); எனவே தொடர் நிகழ்ச்சியாக வினையெச்சத்துக்குப் பதிலாக வினைமுற்றையும் பயன்படுத்துவது உண்டு. இது ஒப்புமையாக்கத்தால் ஏற்படுவது. அது கருத்து அழுத்தத்துக்காகவும் ஒரோவழிக் கையாளுவது

உண்டு. அது மனிதனின் மொழி படைப்பாற்றலின் வெளிப்பாடு. அவைகளில் எதிர்கால வினைமுற்றை வினையெச்சமாகப் பயன்படுத்துவது செயவென் எச்சப்பொருளில் உணர்த்துவதால் அது ஓரளவு அதிகப் பயிற்சி உடையதாக அமைந்து இடைக் காலம் வரையிலும் தமிழில் தொடர்ந்துள்ளது. ஆனால் எச்சப் பொருள் உணர்த்தியதும் அதன் தொடரியல் பண்பும் மாறி விட்டது. அதாவது பிற திணை-பால் ஏற்ற வினைமுற்றுகளையும் கொண்டு முடிய ஆரம்பித்ததும் வான், பான் என்பவை பகுபதமாக இருந்தவை பகாப்பதமாக மாறிவிட்டன. தற்காலத் தமிழில் அது மறைந்துவிட்டது.

இன்னொரு முறை: வேறு திணை-பால் ஏற்ற வினைமுற்று களும் எச்சமாகப் பயன்படுத்தப்படுவது. இது பற்றி உரையாசிரி யர்கள் 'வினையெஞ்சுகிளவியும் வேறுபல்குறிய' (940) என்ற சூத்திரத்தில் விளித்துள்ளார்கள். 'மோயினள் உயிர்த்த காலை' (அகம். 5) என்ற தொடரில் முதல் வினைமுற்றாக இருந்தாலும், அது எச்சமாகவே (மோந்து உயிர்த்தகாலை) என்றே பொருள் படுவதால் முற்றெச்சம் என்ற கருத்துத் தோன்றியது. அதாவது முற்றும் இன்னொரு வினையைக் கொண்டு முடியும்போது எச்சமாகக் கொள்ளப்படுகிறது.

### 7.6.4. எதிர்மறை வினையெச்சங்கள்

தொல்காப்பியர் எதிர்மறை வினையெச்ச வடிவங்களைப் பற்றிப் பேசவில்லை என்றாலும் அவர் காலத்தில் வழங்கிய எதிர்மறை வினையெச்ச வடிவங்களை அறிந்துகொள்வது அவசியம்.

> 'உண்ணா என்பது உண்ணும் உண்ட என்னும் இரண்டற்கும் எதிர்மறையாம். உண்ணாத என்பதும் அது. உண்ணாது என்பது உண்டு, உண்ணூ, உண்குபு என்பவற்றிற்கு எதிர்மறை. உண்ணாமைக்கு என்பது உண்ணியர், உண்ணிய, உணற்கு என்பனவற் றிற்கும், உண்ண எனச் செயற்கு என்பதுபட வரும் செயவென் எச்சத்திற்கும் எதிர்மறையாம்;

என்ற சேனாவரையர் விளக்கம் செய்யா/செய்யாத என்பவை எதிர்மறைப் பெயரெச்சம் என்றும் செய்யாது/செய்யாமல்/ செய்யாமை என்பவை எதிர்மறை வினையெச்சம் என்றும் குறிப்பிடுகிறது.

> 'செயின் என்பதற்கு மழை பெய்யாவிடில் அறம் பெறாது, மழை பெய்யாவிடின், மரம் குழையாது

எனப் பிற சொல்லால் மறை வரும். இனி உண்ணாத பின், உண்ணாத முன், உண்ணாக்கால், உண்ணாக் கடை, உண்ணாவழி, உண்ணாவிடத்து எனவும் வரும்'

என்ற நச்சினார்க்கினியர் விளக்கம் செய்யாவிடின், செய்யாத பின், செய்யாதமுன், செய்யாக்கால், செய்யாக்கடை ஆகியவை நிபந்தனை எதிர்மறை வினையெச்சம் என்றும் குறிப்பிடுகிறது.

சங்க இலக்கியத்தில் செய்யா, செய்யாது, செய்யாமல், செய்யாமை ஆகிய வினையெச்சங்களே பயின்றுள்ளன. அவைகளில் செய்யாது என்பதே மிகப் பெரும்பான்மை வழக்கு. அதனை அடுத்த நிலையில் செய்யா என்பதும் அதற்கும் அடுத்த நிலையில் செய்யாமை என்பதும் அதற்கு அடுத்த நிலையில் செய்யாமல் என்பதும் வந்துள்ளன (அகத்தியலிங்கம் 1985: 42-3).

பொதுவாகத் தொல்காப்பியர் சொல்லியல் நோக்கில் பகுக்காததும், ஓர் அவைகளுடைய பொருள் பற்றிக் குறிப்பிடாததும் சிறு குறையே.

### 7.7. வினையெச்சப் பாகுபாடுகள்

தொல்காப்பியர் வினையெச்சங்களைப் பொருள், பயன்பாடு ஆகியவைகளின் அடிப்படையில் நேரடியாகப் பகுக்காவிட்டாலும் அவைகளின் தொடரியல் பண்புகளை விளக்கும்போது செய்து, செய்யூ, செய்பு ஆகிய மூன்றும் தன்வினை (அதாவது வினையெச்சத்தின் கருத்தாவும் அதை ஏற்று வரும் வினையின் கருத்தாவும் ஒன்றாக இருக்கும்) ஏற்றுவரும் என்று ஒரு சூத்திரத்தில் (715) கூறியிருப்பதால் அவை மூன்றையும் ஒரு வகையாகக் கொள்ளலாம் என்பது புலனாகும். மொழி யியலாரும் இம்மூன்றையும் வினையடையாகச் செயல்படுபவை என்ற பொருளில் Adverbial Participle என்றும், இணைப்பானாகச் செயல்படுபவை என்ற பொருளில் Conjunctive participle என்றும் அழைக்கிறார்கள். அவைகளில் கால ஒட்டு வெளிப்படையாகவோ, மறைவாகவோ இருப்பதால் அவைகளைக் கால எச்சம் (1986: 48) என்பார் அகத்தியலிங்கம். தொல்காப்பியர் 'செய்தென் எச்சத்து இறந்த காலம்' (724) என்று கூறுவதால் அங்கு இறந்த கால விகுதி உள்ளதை அவர் உணர்ந்திருக்கிறார் என்பது தெளிவு. தொல்காப்பியர் ஏனைய எச்சங்களைப் பாகுபடுத்தவில்லை. ஆனால் செய, செய்யிய, செய்யியர், செய்மார் ஆகியவைகளைக் குறையெச்சம் (Infinitive) என்றும், செயின் என்பதை நிபந்தனை

(Conditional) எச்சம் என்று இரண்டு வகையாக மொழியியலார் (உதாரணம் அகத்தியலிங்கம், 1986: 43) பிரிப்பார்கள். எனவே வினையெச்சங்களைக் கால வினையெச்சம் (செய்து, செய்யூ, செய்பு), குறைவினையெச்சம் (செய, செய்யிய, செய்யியர், செய்மார்), நிபந்தனை வினையெச்சம் (செயின்) என்று மூன்று வகையாகப் பாகுபடுத்தலாம். தொல்காப்பியர் கருத்துப்படி செய்து, செய்யூ, செய்பு) என்பவை ஒரு வகை; மற்றையவை இன்னொரு வகை என்று அமையும்.

### 7.7.1. வினையெச்சங்களின் தொடரியல் பண்புகள்

தொல்காப்பியர் வினையெச்சங்களின் இரண்டு விதத் தொடரியல் பண்புகளை விவரித்துள்ளார். 1. வினையெச்சத் தொடரில் இரண்டு வினைகள் இருப்பதால் அவைகளுக்கு உரிய கருத்தா பற்றிய விளக்கம். 2. அவைகளின் தொடர்நிலைப் பண்பு.

**கொண்டு முடியும் வினையின் கருத்தா: கால வினையெச்சம்**

தொல்காப்பியர் தொகைப் பட்டியலில் குறிப்பிட்ட முதல் மூன்று வினையெச்சங்கள் (செய்து, செய்யூ, செய்பு) 'வினைமுதல் முடிபின' (715) என்று கூறுவதால் வினையெச்ச வினையும் கொண்டு முடியும் வினையும் ஒரே கருத்தா என்பது பொருள். அதைத்தான் தொல்காப்பியர் 'வினைமுதல் முடிபின' என்று குறிப்பிட்டுள்ளார். ஏனைய வினையெச்சங்கள் கொண்டு முடியும் வினை தன்வினையாகவோ, பிறவினையாகவோ இருக்கலாம் என்பது தொல்காப்பியர் கருத்து (717).

ஆனால் உரையாசிரியர்கள் இந்தக் கருத்துக்குச் சில எதிர் உதாரணங்களைக் கொடுத்து விளக்கியது விவாதத்துக்கு உரியது.

ஞாயிறுபட்டு வந்தான், கோழி கூவிப் பொழுது புலர்ந்தது என்ற இரண்டு உதாரணங்கள் இந்தச் சூத்திரக் கருத்துக்கு முரணாவதை எச்சவியல் சூத்திரமான (940) 'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' வில் எடுத்துக்காட்டி அவைகளை வேறு வினையெச்சமாக மாற்றவேண்டும் என்று இளம்பூரணர் வாதிட்டுள்ளார்.

> 'ஞாயிறுபட்டு வந்தான், ஞாயிறு படவந்தான் என்பதுமன் ஆகற்பாலது. பட என்பது செயவென் எச்சம். அது திரிந்து, பட்டு என்னும் செய்து என எச்சமாகி நின்றதென்பது. கோழி கூவிப் புலர்ந்தது என்பதூஉம் செயவென் எச்சம் செய்தென் எச்சமாகித்

திரிந்து நின்றது என்பது அங்ஙனம் நின்றவேனும், அவற்றைச் செயவென் எச்சமாக உணர்ந்து கொளல்வேண்டும் அல்லாக்கால் சொல்முடிபு எய்தாது என்னை? ஞாயிறுபட்டு என்றக்கால் வந்தான் என்றலும் முடியற்பாலது. பின்னும் ஞாயிற்றின் மேல் வினைகொண்டு முடியற்பாற்று, 'முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின' (வினை. 31) என்று உரைத்தார் ஆகலின் என்பது'

என்பது இளம்பூரணர் வாசகம் (எச்சம். 60). அதாவது இலக்கண விதியை ஒட்டிப் புற வடிவத்தை மற்றொன்றின் வடிவத் திரிபாகக் கொள்வது. தெய்வச்சிலையாரும் (சூ. 940) இதே கருத்தினரே.

"உரற்கால் யானை ஒடித்து உண்டு எஞ்சிய வாய் வரி நீழல் துஞ்சும் (குறுந். 232) (உரல் போன்ற காலை உடைய யானை யா மரத்தின் கிளையின் ஒடித்து உண்டு (விட்டு) எஞ்சிய யா மரக்கிளையின் நிழலில் தூங்கும்) என்ற வழி உண்டு என்பது வினைமுதல் வினையோடு முடியாமையின் உண்ணா எனத் திரித்தல் வேண்டிற்று'

என்பது தெய்வச்சிலையார் வாசகம்' (எச்சம் 60). இருந்தாலும் இதைச் சிறப்பானதாகக் கொள்ளமுடியாது. சேனாவரையர் இரண்டு வடிவமும் பொருள் வேறுபாடு உடையன என்று காட்டிச் செயவென் எச்சத்தின் மாற்று வடிவமாகக் கொள்ளமுடியாது என்று வாதாடியுள்ளார்.

'ஞாயிறு பட்டு வந்தான் என்பதூஉம் பிறவினை கொண்டனவாயினும் செயவென் எச்சத்திற்குரிய இறந்த காலம் உணர்த்தலான் ஏனைக் காலத்திற்குரிய செய்தேன் எச்சத்தின் திரிபு எனப்படா. செயவென் எச்சத் திரிபாயின் செயவென் எச்சத்திற்குரிய காலம் உணர்த்தல் வேண்டும். மழை பெய்ய மரம் குழைத்தது எனச் செயவென் எச்சத்திற்கு இறந்த காலமும் உரித்து எனின் காரணக் காரியப் பொருண்மை உணர்த்தும் வழி யல்லது செயவென் எச்சம் இறந்தகாலம் உணர்த்தாது– ஞாயிறு படுதலும் எஞ்சுதற்கும் வருதற்கும் காரணம் அன்மையான் ஆண்டு இறந்த காலம் உணர்த்தாமையின் செய்தென் எச்சமாய் நின்று தமக்கு உரிய இறந்தகாலம் உணர்த்தின எனப்படும். அதனால் செயவென் எச்சம்

> செய்தென் எச்சமாய்த் திரிந்தன என்றலும் அவர் கருத்தன்று என்க. ஞாயிறு பட்டு வந்தான் என்பது ஞாயிறு பட்ட பின் வந்தான் என இறந்தகாலம் உணர்த்தலும் ஞாயிறு பட வந்தான் என்பது ஞாயிறு படாநிற்க வந்தான் என நிகழ்காலம் உணர்த்தலும் வழக்கு நோக்கிக் கண்டுகொள்க'

என்ற சேனாவரையர் வாசகத்தில் இரண்டு உண்மைகள் புதைந்துள்ளன. அ) ஞாயிறுபட வந்தான், ஞாயிறு பட்டு வந்தான் என்ற இரண்டும் வழக்கில் இருப்பன. ஆ) அவை இரண்டு பொருள்படுவதால் (முன்னது நிகழ்காலம், பின்னது இறந்த காலம்) இளம்பூரணர் கருத்துப் பொருந்தாது. 'அப்படியானால் இலக்கண மீறல் ஏற்படுகிறதே என்ற கேள்விக்கும் சேனாவரையர் பதில் சொல்லியுள்ளார். நச்சினார்க்கினியரும் இதே கருத்தினரே (940 உரை). ஆனால் இருவரும் செய்தென் எச்சம் பிறவினை கொண்டு முடிந்ததற்கு வேறு சில உதாரணங்களை எடுத்துக் காட்டியுள்ளதால் கால எச்சங்கள் தன்வினை கொண்டு முடியும் என்ற இந்தச் சூத்திரம் குன்றக் கூறலாய் அமைந்துள்ளது என்று ஆகும். எனவே விலக்குவிதிகளை எப்படி விளக்குகிறார்கள் என்று பார்க்க வேண்டும்.

தொல்காப்பியர் எச்சவியலில் வினையெச்சம் 'வேறு பல் குறி(ய)' என்று கூறியதைச் சேனாவரையர் 'வேறுபட்ட இலக்கணத்தை உடைய' என்று விளக்கிச் 'செய்தென் எச்சம் வினைமுதல் கொள்ளாது பிறிதின் வினையும் கோடலும் ஈறு திரிதலும்' உண்டு என்று குறிப்பிட்டுள்ளார். அதாவது பிறவினை கொண்டு முடிதல் சிறுபான்மை என்பதுபோலக் கொண்டுள்ளார். நச்சினார்க்கினியர் காரண காரியப் பொருட்டாய் வரும் செய்தென் எச்சம் பிறவினைகொண்டு முடியும் என்று பொதுமைப்படுத்தியுள்ளது மிகவும் சிறப்பானது (வினை 34, 716).

'மாஅல் யானையொடு மறவர் மயங்கித் தூறு அதர்ப்பட்ட' 'யானையும் வீரர்களும் சேர்ந்து சென்றதால் தூறுகள் அதர்ப்பட்டன' (கலி. 6); 'வெறிநிரை சாரல் ஓடி நெறி மயக்குற்ற' 'யானைக்கூட்டம் மலைச் சாரலில் ஓடியதால் வழி மயக்குற்றது' (கலி. 12) என்று அகத்தியலிங்கம் (1986: 133) சங்க இலக்கியத்திலிருந்து பல உதாரணங்களை எடுத்துக்காட்டிக் 'காரணப்பொருளில் கால எச்சங்கள் வரும்போது பெரு வாரியான இடங்களில் இருவேறு எழுவாய்கள் வருவது காணத் தக்கது' என்று குறிப்பிட்டுள்ளார். எனவே செய்தென் வினை யெச்சம் காரணப்பொருளில் வரும்போது பிற வினையும்

கொள்ளும் என்று பொதுமைப்படுத்தலாம். அதே சமயத்தில் ஞாயிறுபட்டு வந்தான், உரற்கால் ஒடித்துண்டு எஞ்சிய யா ஆகிய இரண்டும் காரணம் காரணம் இன்றி வந்தன என்பார் நச்சினார்க்கினியர். இங்கு இரண்டு செய்திகள் சுட்டிக்காட்டத் தகுந்தவை. அ) செய்து என் எச்சம் கால எச்சம் என்று குறிப்பிட்டு அதன் மாற்று வடிவங்களையும் பொருள்களையும் விரிவாக ஆராய்ந்த அகத்தியலிங்கம் (1986) கால எச்சம்: 1. வரிசைப் பொருள் (Sequential), 2. துணைப்பொருள் (Part of an action), (வீட்டுக்குப் போய்ச் சாப்பிடு, முதல் நிகழ்ச்சி இரண்டாவது நிகழ்ச்சிக்கு வழி வகுத்தல்), 3. காரணப்பொருள் (Causal), 4. உடனிகழ்ச்சி (Simultaneous). 5. நிலைமைப் பொருள் (Stative), 6. தாக்கப்பொருள் (Effective), 7. வினையடைப்பொருள் (Adverbial) என்ற பொருள்களில் வரும் என்று குறிப்பிட்டு அவைகளைப் பொருள் வாரியாகவும் ஒரு எழுவாய் ஏற்பவை, இரண்டு எழுவாய் ஏற்பவை என்றும் பாகுபாடு செய்துள்ளார். எல்லாப் பொருள்களிலும் கால வினையெச்சம் ஓர் எழுவாயும் (தன்வினை மட்டும்), இரண்டு எழுவாயும் (தன்வினையும் பிற வினையும்) ஏற்று வந்துள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார். அப்படியானால் தொல்காப்பியர் கால வினையெச்சம் தன்வினை மட்டும் ஏற்றுவரும் என்ற தொல்காப்பியர் கருத்துக் குன்றக்கூறலே. அவரே (1987: 25) குறையெச்சத்தை ஆராயும்போது ஓர் எழுவாய் ஏற்றுச் சிறுபான்மையாகவும் (2. 8. சதவிகிதமாக) இரண்டு எழுவாய் ஏற்றுவருவது மிகப்பெரும்பான்மையாகவும் (97.2 சதவிகிதமாக) வந்துள்ளதை எடுத்துக்காட்டி 'இதனால்தான் கால எச்சங்களையும் குறையெச்சங்களையும் பற்றிக் குறிப்பிடும்போது காலவெச்சங்களைப் பொதுவாக ஒரே எழுவாயையும் குறை யெச்சங்கள் இருவேறு எழுவாயைக் கொண்டுமுடியும் என்று குறிப்பிடுவர்' (தொல்காப்பியர்) என்று எழுதியுள்ளார்.

அதே சமயத்தில் ஒரு குறிப்பிட்ட எழுவாய் ஏற்றுவருகிற செய்தென் வினையெச்சம் பிற வினை ஏற்றுவரும் என்று தொல்காப்பியரே அடுத்த சூத்திரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

### 7.7.2. சினையின் வினையாகக் கால எச்சங்கள்

சினை (உடல் உறுப்பு) எச்சத்தில் எழுவாயாக இருக்கு மானால் முதலுக்கு (கருத்தாவுக்கு) உரிய எழுவாயைக் கொண்டு முடியலாம்.

> அம்முக் கிளவியும் சினைவினை தோன்றின்
> சினையொடு முடியா முதலொடு முடியினும்
> வினையோ ரனைய என்மனார் புலவர்

என்பது அந்தச் சூத்திரம் (716). கையிற்று வீழ்ந்தான் கையிறூ(உ) வீழ்ந்தான், கையிறுபு வீழ்ந்தான் என்ற மூன்று உதாரணங் களையே நச்சினார்க்கினியர் தவிர்ந்த ஏனைய உரையாசிரியர்கள் கொடுத்து, கையிற்று வீழ்ந்தான் என்பது கை இற்று வீழ்ந்தது என்ற பொருள் உடையதாகக் கொண்டுள்ளார்கள் போலவே தோன்றுகிறது. இன்று நாம், கை இற்று அவன் வீழ்ந்தான் என்ற பொருளை உடையது என்றே உணர்கிறோம். 'ஈண்டு இறுதல் கையாகிய சினையின்' தொழில் 'வீழ்தல் கையினை உடையா னாகிய முதலின் தொழிலாம்' என்பது வெள்ளைவாரணனார் (1971:271) விளக்கம். சிவலிங்கனாரின் (1984: 212 அகு1) அடிக்குறிப்பும் இந்த முறையிலேயே உள்ளது. ஆனால் இளம்பூரணர் முதலிய உரையாசிரியர்கள் வீழ்தல் என்பதைச் சினையின் தொழிலாகவே கொண்டுள்ளார்கள்

> 'அச்சொல் சினைப்பொருளது முதல் கொண்டு
> முடியினும் அமையும்'

என்று இளம்பூரணர் பொழிப்புரை எழுதிவிட்டு விளக்க வுரையில்,

> 'முதலொடு முடியினும் என்ற உம்மை சிறப்பு உம்மை; அதனால் சினையொடு முடிதலே வலியுடைத்து என்பதூஉம் ஆம்; அது கையிற்று வீழ்ந்தது, கையிறூ வீழ்ந்தது, கையிறுபு வீழ்ந்தது எனவரும்'

என்று விளக்கவுரையில் குறிப்பிட்டுள்ளார்.

> 'கையிற்று வீழ்ந்தது...... எனற்பாலன கையிற்று வீழ்ந்தான்.......... என வீழப்பட்டது கையாயினும் அதனோடு முடியாது அதன் முதல் வினையோடு முடியினும் குற்றம் இல என்றவாறு'

என்ற தெய்வச்சிலையார் வாசகம் இளம்பூரணர் கருத்தைத் தெளிவுபடுத்தும்.

> 'முதல் வினையோடு முடியினும் முதலொடு சினைக்கு ஒற்றுமை உண்மையால் பிறவினை கொண்டன ஆகா. வினைமுதல் வினை கொண்டனவேயாம்'

என்ற சேனாவரையர் விளக்கம் தெளிவில்லாமல் உள்ளது.

> 'கையிற வீழ்ந்தான் எனச் செயவென் எச்சத் திரிபு ஆகற்பாற்று எனின், அவ்வாறு ஆவது இறுதல்

> தொழில் கையதும், வீழ்தல் தொழில் முதலதும் ஆயின் அன்றே. இறுதலும் வீழ்தலும் கையதாகக் கூறுகின்றதாயின் இதனுள் அடங்காது என்பது அதன் பொருள் கையிற்று வீழ்ந்தவாறாகக் கொள்க'

என்ற கல்லாடர் விளக்கமும் சான்றாக அமையும். அப்படியானால் வினைவிகுதிதான் பிறவினை விகுதி. உண்மையில் கையிற்று வீழ்ந்தது, கையிற்று வீழ்ந்தான் என்பவை, பொருளும் மாறுபட்டவை. முன்னது கை இற்று வீழ்ந்தது அவன் விழவில்லை. கை மட்டுமே விழுந்தது எனறு பொருள்; பின்னதில் கை இற்றதால் அவன் விழுந்தான் என்று பொருள். அதற்கு ஏற்பத் தொடரியல் உறவு மாறுபடும். முன்னது (அவனுடைய) கை இற்று வீழ்ந்தது என்று பொருள்பட்டு (அவனுடைய) கை எழுவாய், கையிற்று வீழ்ந்தது. பயனிலைத் தொடர் ஆகும். கையிற்று வீழ்ந்தான் என்னும்போது அவன் என்பது தோன்றா எழுவாய், கையிற்று வீழ்ந்தான் என்பது பயனிலைத் தொடர். எனவே கையிற்று வீழ்ந்தது, கையிற்று வீழ்ந்தான் என்பவை ஒரு பொருள் உடையதாகக் கொள்ள முடியாது. மேலும் இப்படிப் பட்ட உதாரணங்கள் குறைவே. அதனால்தான் நச்சினார்க்கினியர் வேறு உதாரணங்களைக் கொடுத்துள்ளார்.

கண் நொந்துகிடந்தான், கண் வலியக் கிடந்தான், வயிறு குத்துபு கிடந்தான் என்ற உதாரணங்களோடு இலக்கிய உதாரணங்களையும் கொடுத்துச் 'சினைப்பொருள்கண் வந்த வினையெச்சம் காரணக் காரியப்பொருட்டாய் வினைமுதலோடு முடிந்தன' என்று நச்சினார்க்கினியர் விளக்கியுள்ளார். 'கண்துயின்று முன்றிற் போகா முதிர்வினள் யாய்' (புறம். 159), 'தாள் ஒற்றித் தப்பி வீழ்ந்தார் தறி கவை மானிற் பட்டார்' (சீவக. 2768) எனவும், சினைப்பொருட்கண் வந்த வினையெச்சம் காரணக் காரியப் பொருட்டாய் வினைமுதலோடு முடிந்தன. 'அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து நல்விருந்து ஓம்புவான் இல்' (குறள். 84), 'காமன் கணையொடு கண்சிவந்து புலந்தாள்' என்பன காரணக் காரியம் இன்றி அங்ஙனம் வந்தன என்பவை நச்சினார்க்கினியரின் கூடுதல் உதாரணங்களும் விளக்கமும். எனவே நச்சினார்க்கினியர் கருத்தே பொருத்தமாக உள்ளது.

### 7.8. குறைவினையெச்சங்கள்

தொல்காப்பியர் பிற வினையெச்சங்கள் தன்வினையும் பிற வினையும் ஏற்கும் என்று அடுத்த சூத்திரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

ஓர் உரையாசிரியர் கொடுத்த உதாரணங்களில் சில பொருத்தமாக அமையவில்லை என்று வேறு உதாரணங்கள் பின்னால் வந்தவர்கள் கொடுத்துள்ளார்கள்; வேறு அதிக மாற்றம் இல்லை.

### 7.8.1. செய்தென (த.வி)

மழை பெய்தென வளம் பெற்றது என்பது இளம்பூரணர் உதாரணம் : வளம் பெற்றது என்பதைத் தன்வினையாகக் கொள்ள முடியாது. அதற்கு உரிய எழுவாய் நாடு/ ஊர் என்று தான் இருக்கமுடியும். அதனால் சேனாவரையர் மழை பெய்தெனப் புகழ்பெற்றது என்ற உதாரணத்தைக் கொடுத்துள்ளார். புகழ்பெற்றது என்பது இரண்டாம் வேற்றுமைத் தொடர் (மழை புகழைப் பெற்றது என்று பொருள்). எனவே அதே உதாரணத்தையே தெய்வச்சிலையாரும் நச்சினார்க்கினியரும் கொடுத்துள்ளார்கள். ஆனால் கல்லாடர் இளம்பூரணர் உதாரணத்தையே ஏற்றுக்கொண்டுள்ளார்.

செய்தென (பி.வி) இளம். மழை பெய்யியர் உலகம் ஆர்த்தது. மரம் குழைத்தது என்ற இரண்டு உதாரணங்களைக் கொடுத்துள்ளார். இவை பொருத்தமான உதாரணங்களே மழை பெய்தென உலகம் ஆர்த்தது, மழை பெய்யிய மாதவர் அருளினார் என்ற கூடுதல் உதாரணங்களைக் கல்லாடர் கொடுத்துள்ளார்.

### 7.8.2. செயவென் எச்சம்

செயவென் எச்சம் தன்வினை கொண்டு முடிவதற்கு இளம்பூரணர் கொடுத்த உதாரணம் பிறவினை கொண்டு முடிவதாகவே உள்ளது. மழை பெய்யப் பயிர் (ஒலி) எழுந்தது என்பது பிறவினை கொண்டு முடிந்ததே. எனவே சேனாவரையரும் அவரை ஒட்டித் தெய்வச்சிலையாரும் நச்சினார்க்கினியரும் மழை பெய்யப் புகழ் பெற்றது என்ற உதாரணத்தையும் கல்லாடர் மழை பெய்ய எழுந்தது என்ற உதாரணத்தையும் கொடுத்துள்ளார்கள். புகழ் பெற்றது என்பது இரண்டாம் வேற்றுமைத் தொடராய் மழை என்ற தோன்றா எழுவாய் பெற்றுத் தன்வினை கொண்டது என்பது பொருத்தமானதே. அப்படியே கல்லாடர் உதாரணத்தில் எழுந்தது என்பது மழை என்ற தோன்றா எழுவாய் பெற்றாலும் இங்கு மழை என்பது மேகம் என்று பொருள்படுவதால் தன்வினையாகக் கொள்ள முடியாது.

### 7.8.3. செய்யியர் எச்சம்

செய்யியர் எச்சம் தன்வினை கொண்டதற்குச் சேனாவரையர் முதலான எல்லா உரையாசிரியர்களும் மழை பெய்யியர் எழுந்தது என்ற உதாரணத்தையே கொடுத்துள்ளார்கள். இங்கும் எழுந்தது என்பதன் கருத்தா மழை ஆயினும் மழை நேர்ப்பொருள்படாமல் மேகம் என்று பொருள்படுவதால் பொருத்தமான உதாரணமாகக் கொள்ளமுடியாது. உண்ணியர் சென்றான் போன்ற உதாரணம் பொருந்தும். அது பிறவினை கொண்டதற்குச் சேனாவரையரும் அவை ஒட்டி நச்சினார்க்கினியரும் மழை பெய்யியர் பலி கொடுத்தார்/கொடுத்தவர் என்ற உதாரணத்தையும் தெய்வச் சிலையாரும் அவரை ஒட்டிக் கல்லாடரும் மழை பெய்யியர் மாதவர் அருளினர்/ அருளினார் என்ற உதாரணத்தையும் கொடுத்துள்ளார்கள் அவை பொருத்தமானவையே.

### 7.8.4. செய்யிய: (தன்வினை)

| | |
|---|---|
| சேனா. & நச்சர். | மழை பெய்யிய முழங்கும் |
| தெய்வ. & கல்லாடர் | மழை பெய்யிய எழுந்தது |

இங்கும் மழை தோன்றா எழுவாய் ஆனாலும் மேலே குறிப்பிட்ட படி மழை என்பதற்கு மேகம் என்ற பொருளே பொருந்தும். அப்படியானால் தன்வினை என்பது பொருந்தாது.

(பிறவினை)

| | |
|---|---|
| சேனா. & நச்சர். | மழை பெய்யிய வான் பழிச்சுதும் |
| தெய்வ. & கல்லா. | மழை பெய்யிய, மாதவர் அருளினர்/ அருளினார் |

### 7.8.5. செயின் (த.வி)

| | |
|---|---|
| சேனா., தெய்வ. & நச்சர். | மழை பெய்யிற் புகழ் பெறும் அதாவது இங்கு மழை என்பது தோன்றா எழுவாயாகும் |
| கல்லா. | மழை பெய்யின் அறம் பெருகும் |

### 7.8.6. செயற்கு (த.வி)

| | |
|---|---|
| சேனா. & நச்சர். | மழை பெயற்கு முழங்கும் |
| தெய்வ. & கல்லாடர் | மழை பெயற்கு எழுந்தது |

இங்கு இரண்டு உதாரணங்களிலும் மழை தோன்றா எழுவாயாக அமைந்தாலும் (மழை பெயற்கு மழை முழங்கும்/எழுந்தது)

பின்னது மேகம் என்று பொருள்படுவதால் பொருத்தமான உதாரணங்களாக அமையா. உணற்கு வந்தான் போன்ற உதாரணங்களே அமையும்.

(பிறவினை)
சேனா. & நச்சர். மழை பெயற்குக் கடவுள் வாழ்த்தும்
தெய்வ. மழை பெயற்கு அறம் அஞ்சுதும்
கல்லாடர் மழை பெயற்கு மாதவர் அருளினார்

இவ்உதாரணங்கள் சில பொருந்தாதவையாக இருந்தாலும் கொள்கை அளவில் அவ்வினையெச்சங்கள் தன்வினையும் பிற வினையும் ஏற்று வரும் என்பதில் மாறுபாடு இல்லை.

### 7.9. தொடர் வினையெச்சங்கள்

பல வினையெச்சங்கள் அடுக்கி வரலாம் என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளதற்குச் சேனாவரையர் ஒழிந்த உரையாசிரியர்கள் செய்தென் வினையெச்சம் மட்டும் அடுக்கி வருவதையும், சேனாவரையர் செய்தென் வினையெச்சமும் வெவ்வேறு வகை வினையெச்சங்களும் அடுக்கி வருவதற்கும் உதாரணம் கொடுத்துள்ளார்கள்.

உழுது உண்டு தின்று ஓடிப் பாடி வந்தான் என்று உதாரணம் கொடுத்து 'இஃது ஓர் இனத்து எச்சம் பல அடுக்கி வந்தது' என்பார் இளம்பூரணர். ஓர் இனத்து எச்சம் என்பது ஒரே வாய்பாட்டு வினையெச்சம் என்றாலும் இங்குச் செய்து என்ற வாய்பாட்டு வினையெச்சமே அடுக்கி வந்துள்ளது.

> 'பல இனத்து எச்சம் அடுக்கி வருமாறு வழக்கினகத்துக் கண்டு கொள்க'

என்பார் இளம்பூரணர். சேனாவரையர் பொழிப்புரையிலேயே

> 'ஒரு வாய்பாட்டானும் மற்றைப் பல வாய்பாட்டானும் வினையெஞ்சுகிளவி அச்சொற்கள் முறையான் முடியாது அடுக்கி வரினும் முன்னின்ற எச்சம் முடிய ஏனையவும் பொருள் முடிந்தனவாம்'

என்று குறிப்பிட்டுச் செய்தென் வினையெச்சம் அடுக்கி வந்ததற்கும் 'உண்டு பருகூஉத் தின்குபு வந்தான் எனவும் வரும்' எனப் பலவகை வினையெச்சம் அடுக்கி வந்ததற்கும் உதாரணம் காட்டியுள்ளார்.

பல வாய்பாட்டு வினையெச்ச அடுக்கு உதாரணங்களில் ஒன்று பொருந்துவதையும் மற்றொன்று பொருந்தாததையும் சேனாவரையர் சுட்டிக்காட்டி அதற்கு ஒரு நியதி கண்டு கூறியுள்ளது சிறப்பானது.

> 'முன்னது முடிய முடியும்' என்றாராயினும் உண்டு, தின்று, மழை பெய்யக் குளம் நிறையும் என்ற வழி முன்னதன் தொழிலான் ஏனைய முடியாமையின் பல முறையான் அடுக்குங்கால் முன்னதன் தொழிலான் முடிதற்கு ஏற்பனவே கொள்க'

என்ற சேனாவரையர் வாசகத்தில் 'முன்னதன் தொழிலான் முடிதற்கு ஏற்பனவே கொள்க' என்பது பொருள் நிலையில் உள்ள கட்டுப்பாட்டை விளக்குகிறது.

தெய்வச்சிலையார் கொடுத்த உதாரணத்தில் வேற்றுமை ஏற்ற வினையெச்சமும் உள்ளது. 'உண்டு பருகிக் கூத்திற் புக்கு வந்தான்' என்ற அவருடைய உதாரணத்தில் 'கூத்திற் புக்கு' என்பது ஒருவினைத் தொடர் என்ற முறையில் ஒன்றுபட்டுப் பருகி என்பதற்கும் முடிக்கும் சொல்லாய் வந்துள்ளது. இன்னொரு வினையெச்சத்தைக் கொண்டு முடியும் வினையாக அமைகிறது என்பது கோட்பாட்டு அளவில் முக்கியம். அதனாலேயே நச்சினார்க்கினியர் உழுது நண்பனொடு விரைஇ வந்தான் என்ற ஓர் உதாரணத்தையும் கொடுத்துள்ளார்.

சேனாவரையரும் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் பெயரெச்ச அடுக்கு ஒரு வாய்பாட்டான் மட்டுமே அடுக்கி வரும் என்று காட்டிய உதாரணங்கள் பெயரெச்சம் என்ற பிரிவில் விளக்கப்படும்.

### 7.10. கூட்டு வினையெச்சங்கள்

> பின் முன் கால் கடை வழி இடத்து என்னும்
> அன்ன மரபின் காலங் கண்ணிய
> என்ன கிளவியும் அவற்றியல் பினவே (714)

என்று தொல்காப்பியம் கூட்டு வினையெச்சத்தை விளக்குகிறது. இங்கு அவைகளுக்கு முன் வருகிற வினைச் சொல்லின் அமைப்புப் பற்றிய குறிப்பு இல்லை. 'காலங்கண்ணிய' என்பதால் பெயரெச்சமாக இருக்க வேண்டும் என்று எல்லோராலும் கொள்ளப்படுகிறது. இதை முதன்முதலில் கல்லாடர்தான் வெளிப்படையாக

> 'இவை செய்த, செய்யாநின்ற, செய்யும் என்னும் பெயரெச்சங்களும் இவற்றின் மறைகளும் இவற்றின் தொகையாகிய வாய்பாடும் போலும் வாய்பாடுகளை அடைந்தல்லது வாரா'

என்று குறிப்பிட்டுள்ளார். இங்கும் 'வாய்பாடு போலும்' என்று கூறியது கவனிக்கத் தகுந்தது. அதற்குப் பதில் சொல்வதுபோல அவ்வாக்கியங்களுக்கு முன்னர்

> 'மற்று இக்காட்டிய உதாரணங்கள் எல்லாம் பெயரெச்சமும் பெயரும் ஆகற்பால எனின், இவற்றின் பொருள் நோக்கும் சொல்நிலையும் சந்தி நிலையும் அன்னவன்மையின் இவ்வாறு வருவனவற்றை வினை யெச்சம் என்கின்றார் போலும்'

என்று குறிப்பிட்டுள்ளது கவனிக்கத்தகுந்தது.

சொல் நிலை என்பது பெயரெச்சம் + பெயர் என்ற தொடராக இருந்தால் ஒலி நிலையில் ஒலி விட்டிசை பெற்று வரும். அவை வினையெச்சமாக இருந்தால் ஒலி விட்டிசை இல்லாமல் - ஒரு சொல் நீர்மைத்தாய் வரும். பொருள் நிலை என்பது இரண்டு நிலையிலும் பொருள் மாறுபடுவது.

வந்த வழி என்பது பெயரெச்சத் தொடராக இருந்தால் ஒலி விட்டிசை பெற்று 'எந்த வழியில் வந்தாயோ அந்த வழி' என்றும்; ஒலி விட்டிசை பெற்று ஒரு சொல் நீர்மைத்தாய் வந்தால் 'எங்கு வருகிறதோ அங்கு' என்றும் பொருள்படும். அப்படியே இடத்து என்பதும் பெயரெச்சத் தொடராக அமையும்போது (நேர்ப்பொருளான இடப்பொருளிலும்) வினையெச்சமாக வரும்போது காலப் பொருளிலும் (செல்லும் இடத்து - செல்லும் போது) வரும்.

சேனாவரையரும் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் பின், இடத்து என்பவை இரண்டு பொருளிலும் வந்துள்ளதாக எ்டுத்துக் காட்டியுள்ளார்கள். பின் என்பது வினையெச்சமாகச் செயல்படும்போது போது என்ற காலப் பொருளிலும் (அதாவது அதே நேரத்தில்) பெயரெச்சத் தொடராக அமையும் போது பின்னர்ப் பிறகு (நேரம்கழித்து) என்ற பொருளிலும் கையாளப் பட்டுள்ளன. ஆனால் அவர்கள் விளக்கமும் உதாரணங்களும் மயக்கம் தருவதாக உள்ளன. சேனாவரையர் 'நீயிர் பொய்கூறிய பின் மெய் கூறுவார் யார்' என்பதை வினையெச்சத்துக்கு

உதாரணமாகத் தந்துள்ளார். அவை பொய் கூறிய போது, பொய் கூறிய பிறகு என்ற இரண்டு பொருளிலும் கையாளப்பட்டுள்ளன. ஆனால் அவர்கள் விளக்கமும் உதாரணங்களும் மயக்கம் தருவதாக உள்ளன. சேனாவரையர் 'நீயிர் பொய்கூறிய பின் மெய் கூறுவார் யார்' என்பதை வினையெச்சத்துக்கு உதாரணமாகத் தந்துள்ளார். அது பொய் கூறியபோது/பொய் கூறிய பிறகு என்ற இரண்டு பொருளிலிலும் வருவதாகக் கொள்ளலாம். அதனால் நச்சினார்க்கினியர் கூடுதலாக 'இன்மையும் தருவதோ இறந்த பின்னே' என்ற கலித் தொகை அடியையும் (15:26) கொடுத்துள்ளார். அதுவும் போன பிறகு என்று பொருள் கொள்ளப்படுவதால் பொருத்தமான உதாரணமாகத் தோன்றவில்லை.

> கூதிர் போன பின் வந்தான் என்ற உதாரணத்தைத் தந்து
>
> 'பின் முதலாயின பெயரெச்சத்தோடும் வந்தவழி இறப்பு முதலாகிய காலம் கண்ணாமையின் அவற்றை நீக்குதற்குக் காலங்கண்ணிய என்றார்'

என்பது சேனாவரையர் வாசகம். நச்சினார்க்கினியர் உதாரணமும் விளக்கமும் சேனாவரையரை முற்றுமாகத் தழுவியதே. அந்த உதாரணம் கூதிரின்போது என்ற பொருள்படாது கூதிர் போன பிறகு - கழிந்த பிறகு என்ற பொருள்படுவதால் இறந்த காலம் உணர்த்தும் பெயரெச்சத் தொடர் என்று கொள்ளவேண்டும். ஆனால் உரையாசிரியர்கள் இருவரும் அப்படி விளக்காமல் 'இறப்பு முதலாகிய காலம் கண்ணாமையின் அவற்றை நீக்குதற்குக் காலங்கண்ணிய என்றார்' என்று கூறுவது பொருத்தமாக இல்லை. உண்மையில் வினையெச்சத்துக்கும், பெயரெச்சத் தொடருக்கும் உள்ள வேறுபாடு மேலே குறிப்பிட்டபடி பொருள் நிலையில் உண்டு.

பின் என்பது தனியாகவும் (பின் நினைந்து இரங்கிப் பெயர்ந் தேனே - ஐங்குறு. 118:3) பெயரெச்சத்துக்குப் பின் காலப் பொருளில் வருப்வைகளுக்கு அகத்தியலிங்கம் (1987: 206) காட்டிய உதாரணங் களில் பொழுது, பிறகு என்ற வகையும் காணப்படுகின்றன.

> எல்லை சென்றபின் மலரும் கூம்பின (நற். 385:1)
> - ஞாயிறு சென்ற போது - உடன் மலரும் கூம்பின
>
> எந்தையும் யாயும் உணரக் காட்டி
> ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்
> மலைகெழு வெற்பன் தலைவந்து இரப்ப (குறுந். 374:1-3)

என்ற அடிகளில் கிளந்தபின் என்பதற்குக் கிளந்த பிறகு தலைவன் வரைவு இரப்ப என்று பொருள் கொள்ளலாம். ஆனாலும் கிளந்த போது என்று கூறும்போது தற்செயல் நிகழ்வாக அமையும்.

................ நின் வெய்யோள் பயந்த

புகழ்சால் புதல்வன் பிறந்த பின் வா என (புறநானூறு 222:2-3)

என்ற அடிகளில் பிறந்த பின் என்பது பிறந்த பிறகு என்ற பொருளே பொருந்தும் என்பதில் ஐயம் இல்லை.

இங்குப் பின் என்பது இடப்பொருளில் வராமல் காலப் பொருளில் வருவதால் பொருள் மாற்றம் ஏற்பட்டுள்ளது. அந்த முறையில் கூட்டு வினையெச்சம் வடிவத்தாலும் பொருளாலும் சிறப்பு உடையதாக ஆகிறது. ஆனால் முன் என்பது அப்படி இரண்டு வகையாகப் பொருள் கொள்ளப்படவில்லை.

இங்குப் பின்றை/பின்னர் ஆகியவை பிறகு என்ற பொருளிலேயே பயன்படுவதால் அவைகளைப் பெயரெச்சத் தொடராகவே கருதவேண்டும். வினையெச்சமாக அல்ல.

அந்த முறையில் பார்க்கும்போது முன் என்பது நேர்ப் பொருளில் வருவதால் அதை இங்குச் சேர்த்தது பொருந்துமா என்ற கேள்வி எழுகிறது. அதே சமயத்தில் பிற சொற்கள் அதே பொருளை உணர்த்துவதும் குறிப்பிடத்தகுந்தது. அளவை/ ஊங்கே/கணம் என்ற மூன்று சொற்கள் முன்/முன்னர் என்ற பொருளை உணர்த்துகின்றன.

வழங்கா அளவை = பலியிடுதற்கு முன்னர் அகம். 242:11
மணவா ஊங்கு = மணத்தற்கு முன் குறுந். 357:8
மாரி படாஅக்கணம் = மழை பெய்வதற்கு முன்னே

உரையாசிரியர்கள் பெயரெச்சத்தின் காலம் பற்றிக் குறிப்பிட்டு அதன் பொருள் பற்றி ஒன்றும் பேசாமல் போய்விட்டார்கள். அவை பொதுவாகக் காலம், பாங்கு (Manner), ஒப்பு, காரணம், நிபந்தனை ஆகிய ஐந்து பொருளையும் உணர்த்தும் என்று கண்டறியப்பட்டுள்ளது.

கால் : சேனா. & நச்சர். விடுத்தக் கால், நாடுங்கால்.

### 7.11. கருத்தாடல் நோக்கு

தொல்காப்பியர் வினையெச்சங்கள் கருத்தாடலில் பயன் படுவதைப் பற்றியும் அதன் பொருள் பற்றியும் விளக்கியுள்ளார்.

செய்தென் எச்சம் இறந்த காலம் உணர்த்தினாலும் அது எதிர்கால வினைமுற்றையும் கொண்டு முடியும் என்பது ஒரு சூத்திரம் (724). இங்கு இறந்த காலம் என்பது உறவுநிலையில் அமைந்தது என்ற சேனாவரையர் விளக்கம் சிறப்பானது.

'உழுது வரும் சாத்தன் என்புழிச் செய்தென் எச்சம் எதிர்காலத்திற்கு ஏற்றது' என்பது இளம்பூரணரின் உதாரணமும் விளக்கமும்.

> 'இறந்த காலம் என்றது முடிபாய் வரும் வினைச் சொல்லால் உணர்த்தப்படும் தொழிற்கு அவ்வெச்சத்தால் உணர்த்தப்படும் தொழில் முன் நிகழ்தலை. அது வாராக் காலம் எய்துதலாவது அம்முன்நிகழ்வு சிதையாமல் அவ்வெச்சம் எதிர்காலத்து வருதல்'

என்று சேனாவரையர் பொழிப்புரையில் குறிப்பிட்டு

> 'நீ உண்டு வருவாய், உழுது வருவாய் எனச் செய்தென் எச்சம் பொருள் சிதையாமல் எதிர்காலத்து வந்தவாறு கண்டுகொள்க'

என்று விளக்கியுள்ளார். வருவாய் என்பது முன்னிலை ஏவல் நிகழ்காலத்துக்கு உரியது. எனவே தெய்வச்சிலையார் எதிர் காலத்துக்குரிய உதாரணமாக 'நாளை உழுது வருவன்' என்ற உதாரணத்தைக் கொடுத்து

> 'இறந்த காலத்தாற் கூறப்படும் வினையது (உள்ளபடியே) நிகழ்ந்துழிக் கூறுதலன்றி நிகழாத முன்னும் அவ்வாய்பாட்டான் வரப்பெறும்

என்று விளக்கியுள்ளார். நச்சினார்க்கினியர் இருவருடைய உதாரணத்தையும் சேர்த்துக் கொடுத்து எளிமையான விளக்கம் கொடுத்ததோடு ஒரு கூடுதல் உண்மையையும் புலப்படுத்தியுள்ளார்.

> 'நீ உண்டு வருவாய் என்பது நாளை உண்டு வருவாய் என்னும் பொருள் உணர்த்தவும் வருதல் தொழிலுக்கு உண்டல் தொழில் முன் நிகழ்ந்து, ஆண்டும் தன் இறந்த காலமே உணர்த்திற்றாம்'

என்பது அவர் வாசகம். 'கொடி ஆடித் தோன்றும் என்புழித் தோற்றமும் ஆட்டமும் உடன்நிகழ்தலின் செய்து என்பது நிகழ்காலத்திற்கு உரித்து ஆதல் 'வாராக் காலம்' எனவே அடங்கும்.

'வறல் நீந்தி நீ செல்லும் நீளிடை நினைப்பவும்' (கலி. 3) என்பதும் அது'. வினையெச்சங்கள் அடுக்கி வரும்போது உடன்நிகழ்ச்சிப் பொருளில் வரும் என்ற முறையிலேயே நிகழ்காலத்தில் வந்துள்ளன.

அவ்வழக்குகள் இயல்பானவை. ஆனால் சேனாவரையரும் கல்லாடரும் கால வழுஅமைதியாகக் கொண்டது சிறப்பான தாகக் கொள்ளமுடியாது.

> 'எய்திடன் உடைத்தே வாராக் காலம் என்றதனால் உண்டு வந்தான், உழுது வந்தான் என அவ்வெச்சம் இறந்த காலத்து வருதல் இலக்கணம் என்பதாம். இறந்த காலத்துச் சொல் எதிர் காலத்து வந்த தாயினும் அமைக எனக் கால வழு அமைத்தவாறு'

என்பது சேனாவரையர் வாசகம். இங்கு 'எச்சத்தால் உணர்த்தப் படும் தொழில் முன் நிகழ்தல்' என்ற அவர் கொடுத்த விளக்கத்துக்கு மாறுபட்டு விடுகிறது. தொல்காப்பியர் 'எய்திடன் உடைத்து' என்று கூறியதே சேனாவரையர் வழுவாமையாகக் கொள்ள ஒரு காரணம். உண்மையில் 'செய்தென' என்ற முதலடி அமைந்திருப்பதால் அடி எதுகையாகவே தொல்காப்பியர் 'எய்திடன்' என்ற தொடரைக் கையாண்டிருக்கவேண்டும். மேலும் செய்தென் எச்சம் இறந்த காலம் என்பது சொல்லியல் அல்லது எளிய வாக்கிய நோக்கு; கலவை வாக்கியம் வரும்போது உறவு நிலையில் பேசுவோன் மனநிலையை ஒட்டியே காலப்பொருள் அமையும்.

கால வழு அமைதி என்பதை விடத் தொடரியல் நோக்கில் உறவு நிலையில் இறந்த காலமாகக் கையாளப்பட்டிருக்கிறது என்று விளக்குவதே பொருந்தும்.

### 7.1.2. பெயரெச்சம்

பெயரெச்சத்தைப் பற்றிக் கோதண்டராமன் (1972) சுருக்க மாகவும், அண்ணாமலை (1997) விரிவாகவும் ஆராய்ந்து உள்ளார்கள்.

பெயரெச்சத்தைப் பொறுத்தவரையில் அதன் தொடரியல் பண்பை ஒரு சூத்திரத்திலும், செய்யும் என்பதன் மாற்று வடிவத்தை (Ø - உகரம் கெட்டுச் செய்ம் என்று வரும்) ஒரு சூத்திரத்திலும் தொல்காப்பியர் விவரித்துள்ளார்.

தொடரியலைப் பொறுத்தவரையில் பெயரெச்சம் கொண்டு முடியும் சொற்களைப் பற்றியே குறிப்பிட்டுள்ளார்.

> நிலனும் பொருளும் காலமும் கருவியும்
> வினைமுதற் கிளவியும் வினையும் உளப்பட
> அவ்வறு பொருட்கும்ஓ ரன்ன உரிமைய
> செய்யும் செய்த என்னுஞ் சொல்லே (719)

இங்கு உரையாசிரியர்கள் பல கேள்விகளை எழுப்பிப் பதில் சொல்லியுள்ளார்கள். 1. நிலன், பொருள் என்பவை எவைகளைக் குறிக்கின்றன? இளம்பூரணர் சொல்லைக் குறிப்பதாகக் கொண்டு விட்டார். அதனால் பொருள் என்பதற்கு நேர்ப்பொருள் கொண்டதால் (அவன்/அவள்/அவர் செய்யும் பொருள் என்பவை அவருடைய உதாரணங்கள்). வேற்றுமை மயங்கியலில் கூறிய வினை, செய்வது போன்றவற்றில் வரும் பொருளும், காலமும், கருவியும் வினைமுதற் கிளவியும் என்பது விடுபட்டு விட்டதாகக் குறிப்பிட்டுள்ளார். இதன் மூலம் இந்த ஆறும் தொழில் முதனிலைகளோடு தொடர்பு உடையன என்றும் பொருள்பட்டுவிட்டன. இதைப் பிற உரையாசிரியர்களும் நேரடியாகவே வேற்றுமை மயங்கியலில் கூறிய வினை, செய்வது போன்ற தொழில் முதனிலைகளோடு தொடர்புபடுத்தி விவாதித்துள்ளார்கள்.

செய்யும் என்னும் முற்றும் எச்சமும் பெயர் கொண்டு முடிவதில் உள்ள வேறுபாடு பற்றி இளம்பூரணர்

> 'இருநிலைமைக்கண்ணும் பெயர்கொண்டு முடிதல் ஒக்கும் பிற எனின்; செய்யும் என்பது முற்றாய நிலைமைக்கண், பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை ஒழிந்த நான்கு பாலையும், தன் ஈற்றகத்துக் கண் ஒருவாற்றாற் கொண்ட அப்பெயரானே அமைந்து முடியுமாறும், அஃது எச்சமாய நிலைமைக்கண் முடிபாய் வரும் பெயர்க்கு அடையாய் நிற்கும். எனவே எச்சமான நிலைமைக்கண் முடிபாக வரும் பெயர் பயனிலை செப்பலும் உருபேற்றலும் உடையவாயிற்று

என்று விளக்கியுள்ளார். இங்குப் பெயர் கொண்டு முடிவதில் முற்றுக்கும் எச்சத்துக்கும் இரண்டு வேறுபாடு உண்டு: 1. முற்றுச் சொல் ஏற்றுவரும் பெயர்களில் கட்டுப்பாடு இல்லை, எச்சத்துக்குக் கட்டுப்பாடு உண்டு. 2. முன்னது வேறு ஒன்றும்

ஏற்காது, பின்னது வேற்றுமை உருபு ஏற்றும் பயனிலையாகப் பிற சொற்களை ஏற்றும் வரும். மேலும் முன்னது கருத்தா உறவு மட்டுமே உடையது, பின்னது தொழில் முதனிலைகளாகக் குறிப்பிட்ட எல்லா உறவுகளையும் ஏற்று வரும் வேறுபாடும் கூறலாம்.

'பொருள்' என்பதைச் செயப்படுபொருள் என்று கொண்டு கற்கும் நூல் என்ற உதாரணத்தைச் சேனாவரையர் கொடுத்துள்ளார்.

நச்சினார்க்கினியர் கொண்டு முடியும் பெயர்களில் வினைமுதற் கிளவியாக வரும் பெயர்களுக்கும் பிறவற்றிற்கும் ஒரு வேறுபாடு காட்டியுள்ளார். வினை முதலாக வருபவை இன்னொரு வினையை நேரடியாக ஏற்று வரும் (படிக்க சாத்தன் வந்தான்) மற்றவை ஒரு வினைமுதலை ஏற்றபின்பு வினையை ஏற்கும் (படித்த நூலை முருகன் மூடினான் எழுதிய பேனாவை முருகன் கீழே வைத்தான் முதலியவை).

> 'வினைமுதற் கிளவி ஒழிந்தனவற்றிற்கு வினை முதற் பொருள் முன் வந்தே, பின்வரும் வினையோடு முடிந்து பொருள் தருதலும், வினைமுதற் கிளவி யாயின் பின்வரும் வினையோடு முடிந்துபொருள் தருதலும் கொள்க'

என்பது அவருடைய வாசகம். அதாவது பெயரெச்சத் தொடர்கள் வாக்கியமாகப் பயன்படும் விதத்தை இது விளக்குகிறது.

இங்கு அறுபொருள் என்பது பெயரெச்சத் தொடரிலுள்ள வினைக்கும் பெயருக்கும் உள்ள இலக்கண உறவு, தொழில் முதனிலை உறவு பற்றியதே. அப்படியானால் ஏழாம் வேற்றுமைப் பொருளான நிலம், காலம் என்று தனித்தனியே கூறுவானேன் என்ற கேள்வியை அண்ணாமலை (1997: 134) எழுப்பி, தொல்காப்பியர் தொழில் முதனிலையை வருணிக்கும்போதும், ஏழாம் வேற்றுமையை வருணிக்கும்போதும் இரண்டையும் ஒரு பொதுச் சொல்லால் குறிப்பிடாததே காரணம் ஆகலாம் என்பார்.

தமிழில் இன்னும் சில வகை இலக்கண உறவுகள் காணப் படுகின்றன. இன்னதற்கு, இது பயன் என்ற இரண்டை விட்டு விட்டதைச் சேனாவரையர் சிறுபான்மை என்று காரணம் கூறி சமாதானப்படுத்தியுள்ளார்.

> 'அரசன் ஆ கொடுக்கும் பார்ப்பான் = இன்னாருக்கு (அரசன் பார்ப்பானுக்கு ஆ கொடுக்கும் ஆடை ஒலிக்கும் கூலி = இது பயன் (கூலிக்கு ஆடை

ஒலிக்கும் கூலி எனவும் ஏனை இரண்டற்கும்
சிறுபான்மை உரியவாய் வந்தவாறு

என்பது சேனாவரையர் விளக்கம். இது சிறந்த சமாதானமாகப்பட வில்லை. அதே சமாதானத்தை நச்சினார்க்கினியர் வழிமொழிந்து விட்டார்.

மொழியமைப்பு நோக்கில் ஏதாவது காரணம் கண்டுபிடித்துக் கூறுவதே மொழியியல் நோக்கில் ஏற்றுக் கொள்ளக்கூடியது. உரையாசிரியர்களே இன்னும் சில உறவுகளைக் கண்டு கூறியுள்ளார்கள்.

சேனாவரையர் கூறும் புதுவகை

நோய் தீரும் = ஏது நோய் மருந்தால் (மருந்து காரணமாக) தீரும் இதைக் கருவியின் கீழ் அடக்கலாம் என்பார்)

பழம் உதிருங் கோடு = நீங்கல் = கோட்டிலிருந்து பழம் உதிரும் / சிறுபான்மை வழக்கு)

நின் முகம் காணும் மருந்தினேன் (கலி. குறி. 24) என்பதைக் காணும் காட்சியை என்பது வினைப்பெயர் கொண்டது/ காணும் காட்சி

ஆறு சென்ற வியர் = வியர் ஆறு சேறலான் வந்தது காரியம் ஆகலின் செயப்படுபொருட் கண் அடங்கும். ஆற்றைச் சேறுதல் என்று கொண்டு அப்படிக் குறிப்பிட்டிருக்க வேண்டும். இதைச் சிறப்பாகக் கொள்ளமுடியாது. அதனால்தான் நச்சினார்க்கினியர் 'காரியத்தின்கண் அடக்குக' என்று மட்டுமே கூறியுள்ளார்.

நின் முகம் காணும் மருந்தினேன் என்பதை நச்சினார்க்கினியர் நின் முகத்தைக் காண்டல் காரணமாக அதன் காரியமாகப் பிறந்த அருளை மருந்தாதல் தன்மையாக உடையன் என்று விளக்கிக் காரியம் என்ற பிரிவில் அடக்கியுள்ளார். இதை அண்ணாமலை (1997: 35) எழுவாய் நிரப்பி (Subject complement) என்பார்.

### 7.1.3. அடுக்கு எச்சங்கள்

சேனாவரையரும் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் பெயரெச்ச அடுக்கு ஒரு வாய்பாட்டான் மட்டுமே வரும் என்று வினையெச்சம் அடுக்கி வரும் என்ற சூத்திர உரையில் (718) சுட்டிக்காட்டியுள்ளார்கள்.

நெல்லரியும் இருந்தொழுவர்
தென் கடல் திரை மிசைப் பாயுந்து
தண் குரவைச் சீர் தூங்குந்து

............................

................ மகளிர் தலைக்கை தருஉந்து
முந்நீர் உண்டு முந்நீர்ப் பாயும்
தாங்கா உறையுள் நல்லூர் கெழீஇய
ஓம்பா ஈகை மாவேள் எவ்வி மிழலை'

என்ற புறநானூற்று அடிகளை (24) எடுத்துக்காட்டிச் செய்யும் என்னும் பெயரெச்சம் அடுக்கி வந்து (பாயுந்து.... தூங்குந்து..... தருஉந்து...... பாயும்) எவ்வி...... மிழலை என்னும் ஒரு பொருள் கொண்டு முடிந்தவாறு கண்டு கொள்க என்பார். சேனாவரையர் அதாவது பாயும் என்னும் பெயரெச்சம் மிழலை என்ற பெயரைக் கொண்டு முடிந்தது. மேலும் தாங்கா உறையுள் நல்லூர் கெழீஇய என்னும் இன்னொரு பெயரெச்சம் இடைநிலையாய் வந்தது என்பார் சேனாவரையர். அதாவது தொடருக்குள் ஒரு தொடர் எப்படி வினையெச்ச அடுக்கில் கொண்டு முடியும் ஒரு வினை அடையைப் பெறுவது போல் பெயரெச்ச அடுக்கில் கொண்டு முடியும். பெயர் கூடுதலாக ஒரு பெயரெச்சத்தைக் கொண்டு முடியலாம். அது ஒரு பெயர்த் தொடராக அமையும். அங்கு வந்த கருஞ்சட்டை அணிந்த நேற்றுப் பாடிய பையன் என்னும் போது வந்த அணிந்த என்ற பெயரெச்சத் தொடர் நேற்றுப் பாடிய பையன் என்னும் பெயர்த்தொடரோடு கொண்டு முடிந்தது என்று பொருள். இரண்டு பெயரெச்சம் ஒரு கருத்தாவை ஏற்று வந்திருக்கிறது. அங்குள்ள வினைகள் சில தொழில் முதனிலைகளைப் பெற்றுள்ளதால் கலவை வாக்கியமாக அமைந்து விடுகிறது.

---

1. சேனாவரையரும் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் உம் என்பதைப் பெயரெச்ச விகுதியாகக் கொண்டுள்ளார்கள்.

'செய்யும் என்னும் பெயரெச்சம் உம்மீறு கால வெழுத்து பெறாது ஆறு பொருட்கும் உரித்தாய வந்தவாறு' / சேனாவரையர் - நச்சினார்க்கினியர்.

# 8
# முன்னிலை, ஏவல், வியங்கோள்

## 8.1. முன்னுரை

தொல்காப்பியர் முன்னிலை, வியங்கோள் என்ற இரண்டு இலக்கணக் கூறுகளையே அங்கீகரித்துள்ளார்.

> முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
> இன்மை செப்பல் வேறென் கிளவி
>
> ....................................................................................
>
> பிரிவுவேறு படூஉம் செய்திய வாகி
> இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய
>
> (வினை. 23. 707)

என்பது அந்தச் சூத்திரம். இருந்தாலும் அவர் 'ஏவல் குறித்த உரையசை மியா' - (உயிர் மயங்கியல் 224) என்று எழுத்ததிகாரத்தில் கூறிவிட்டு அதைச் சொல்லதிகாரத்தில் முன்னிலை அசைச் சொற்களில் ஒன்றாக (இடையியல் 758) குறிப்பிட்டுள்ளதால் முன்னிலையில் ஏவலைத் தனி இலக்கணக் கூறாக அமைக்கவில்லை என்பது புலனாகிறது. அதற்கு ஏற்பவே வினையியலில் (27) செயல்வினைக்கும் ஏவல் வினைக்கும் உரிய ஒட்டுகளைச் சேர்த்தே கூறியுள்ளார். உதாரணமாக முன்னிலைப் பன்மைக்கு உரிய மூன்று விகுதிகளில் இர், ஈர் (வந்தினிர், வந்தீர்) ஆகிய இரண்டுமே கால விகுதிக்குப் பின் வரும் செயல்வினை, விகுதிகள், மூன்றாவது விகுதியான -மின் (வருமின்) அடிச் சொல்லுக்குப் பின்வரும் ஏவல் விகுதி. ஆனால் பிற்கால இலக்கணங்கள் முன்னிலையில் ஏவல் என்ற ஓர் உள்கூறை (உதாரணம், நன்னூல் 335, 337) அங்கீகரித்துள்ளன. மொழி யியலாரும் முன்னிலையைச் செயல்வினை (Indicative verbs) ஏவல் வினை (Imperative verb) என்று பிரித்துப் பேசுவார்கள். இரண்டும் இடத்தால் முன்னிலைக்கு உரியன ஆனாலும், பொருளாலும் அமைப்பாலும் மாறுபடுவதுதான் அதற்குக் காரணம் ஆகும். முன்னிலை செயல்வினை. வினையடி + காலம் + முன்னிலை விகுதி

என்ற மூன்று இலக்கணக் கூறுகளையும், ஏவல் வினையடி + ஏவல் விகுதி என்ற இரண்டு கூறுகளையும் உடையன. ஆனால் எதிர்மறையில் (செய்யன்மின்) ஏவலும் மூன்று கூறுகளை உடையதே. செயல் வினை என்பதால் மூன்று காலத்துக்கும் உரியது. ஏவல் எதிர்காலத்துக்கு மட்டும் உரியது. அப்படியே ஏவலும் வியங்கோளும் பகிர்வாலும் (முன்னது முன்னிலைக்கும் பின்னது படர்க்கைக்கும் உரியவை) எண்ணாலும் (முன்னது ஒருமை/பன்மை வேறுபாடு பெற்றிருக்கப் பின்னது எண் வேறுபாடு அற்றது) வேறுபட்டிருந்தும் தொல்காப்பியர் 'ஏவல் கண்ணிய வியங்கோள்' என்ற தொடர் மூலம் (*உயிர் மயங்கியல் 210:4) ஏவலை வியங்கோளுக்கு உரிய ஓர் விருப்பக் கூறாகக் கொண்டுள்ளார் என்று அறியமுடிகிறது. மேலும் செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல் செய் என்று ஆகும் (எச்சம். 54) எனக் கூறியதன் சொல்லியல் நோக்கும் விவாதத்துக்கு உரியதாக உள்ளது. தொல்காப்பிய உரையாசிரியர்களும் இந்த மூன்றையும் தெளிவாக வேறுபடுத்தவில்லை. எனவே அவை இங்கே ஆராயப்படுகின்றன.

தொல்காப்பியத்தில் முன்னிலை, வியங்கோள் ஆகிய இரண்டின் சொல்லியல், தொடரியல் பற்றி 10 சூத்திரங்கள் உள்ளன. செயல் வினை, ஏவல் வினை விகுதிகளைச் சேர்த்து வினையியலில் இரண்டு சூத்திரமும் (708-9) இடையியலில் ஒரு சூத்திரமும் (758), எச்சவியலில் வடிவ மாற்றம் பற்றி 2 சூத்திரமும் (933, 934) விளக்குகின்றன. உயிர் மயங்கியல் சூத்திரம் (210:4) ஏவலை வியங்கோளின் கூறாகக் கூறுகிறது. தொல்காப்பியம் வியங்கோளின் வடிவம் (விகுதி) பற்றிக் குறிப்பிடாமல் தொடரியல் பண்பு பற்றி வேற்றுமையியலும் (550) வினையியலும் (711) விளக்குகின்றன.

### 8.2. முன்னிலை/வியங்கோள்/ஏவல்

> 'முன்னிலை என்பது 'முன்னின்றான் தொழின்மை கூறுவது'
> வியங்கோள் என்பது ஏவ நிற்பது' (வினை. 23)

என்ற இளம்பூரணர் விளக்கத்தில் 'முன்னின்றான் தொழின்மை கூறுவது' என்பது செயல்வினை என்பதைத் தெளிவுபடுத்துகிறது. நடந்தாய் என்ற முன்னிலை என்பது வினை முன்னின்றான் செய்த 'நட' என்ற தொழிலை உணர்த்துகிறது. அப்படியே வியங்கோள்

என்பது 'ஏவ நிற்பது' என்பது நடக்க/வாழ்க என்ற வியங்கோள் வினைகள் அந்தச் செயல் நடைபெற்றதை உணர்த்தாமல் அந்தச் செயல் நடைபெறும்படி ஆணையிட்டதாக / விரும்பியதாக அமையும். அப்படியானால் அவ்அடிச்சொற்கள் பிற வினையாகும். வியங்கோள் விகுதிதான் தன்வினை; அதாவது அங்கு இரண்டு கருத்தாக்கள் உள்ளன. மாறாகச் செயல் வினையில் (நடந்தாய்) ஒரே கருத்தாவின் பிரதிபலிப்புதான் - ஆய் என்ற விகுதி. இது ஒரு நுட்பமான கருத்து என்றாலும் விளக்கம் இல்லாமல் இருப்பதும் வியங்கோளை வெறும் ஏவல் என்று கூறியதும் அவர் விளக்கத்தின் சிறப்பு ஆய்வுலகில் உரிய கவனம் பெறாமல் போய்விட்டது. ஆனாலும் பின்னால் வந்த உரையாசிரியர்கள் ஓரளவு அதிக விளக்கம் கொடுத்துள்ளார்கள்.

அடுத்த சூத்திர உரையில் அவர்

'ஒரு காலத்திற்கே ஏற்கும் இகரம் முற்கூறினமையின் உண், தின், கிட, நட, வா, போ என்னும் தொடக்கத் தனவும் கொள்க'

என்னும்போது முன்னிலை செயல்வினை, விகுதி பெற்றும்; ஏவல் விகுதி பெறாமலும் அமைந்ததை உணர்ந்தும், இரண்டையும் (செயல்வினையையும் ஏவலையும்) சொல்லியல் நிலையில் வேறுபடுத்தாமல் போய்விட்டதை உணரலாம். வியங்கோள் பற்றித் தனியே விளக்கம் எதுவும் அவர் தரவில்லை.

### *8.2.1. சேனாவரையர்*

'முன்னிலை வினைச்சொல்லாவது எதிர்முகமாய் நின்றான் தொழில் உணர்த்துவது. வியங்கோள் - ஏவற் பொருட்டாய் வருவது. வாழ்த்துதல் முதலாகிய பிற பொருளும் உடைத்தாகலின் இக்குறி மிகுதி நோக்கிச் சென்ற குறி என உணர்க' (வினை. 23)

என்பது சேனாவரையர் விளக்கம். இளம்பூரணர் கருத்தைத் தழுவியது. வியங்கோள் ஏவலும் வாழ்த்தும் கலந்தது என்னும் போது அவர் உரையிலிருந்த குறை ஓரளவு நீங்கியுள்ளது. அவர்கள் இருவரும் அடிச்சொல் மட்டும் முன்னிலை ஒருமையாய் வருவதைக் கவனித்திருந்தாலும் ஏவல் என்று தனிப் பெயர் கொடுக்கவில்லை.

> உண், தின், நட, கிட என்னும் தொடக்கத்து முன்னிலை ஒருமை பெறுமாறு என்னை எனின் அவை ஆய் ஈறாதல் எச்சவியலுட் பெறப்படும்

என்றும் வினையியலில் (24) கூறுவதால் தொல்காப்பியரைப் போலவே இவர்களும் ஏவல் ஒரு தனி இலக்கணக் கூறு என்று கருதவில்லை. வியங்கோளைப் பொறுத்தவரையில் (வினை. 27)

> 'நீ வாழ்க என்னும் வாழ்த்துதற் பொருண்மைக் கண்ணும் யானும் நின்னொடு உடன்உறைக என்னும் வேண்டிக்கோடற் பொருண்மைக்கண்ணும் வருவனவாம்'

என்று சேனாவரையர் கூறுவது பொருள்நிலையில் ஏவலுக்கும் வியங்கோளுக்கும் வித்தியாசம் இருப்பதைப் புலப்படுத்துகிறது. ஆனால் அதைத் தொடர்ந்து,

> 'தன்மைக்கண் ஏவல் இல்லை, முன்னிலைக்கண் ஏவல் வருவது உண்டேல் கண்டுகொள்க'

என்னும்போது வியங்கோளையும் ஏவலையும் வேறுபடுத்தாத நிலையே புல்ப்படுகிறது.

### 8.2.2. தெய்வச்சிலையார்

> 'முன்னிலை வினை என்னாது 'முன்னிலை' எனப் பொதுப்பட ஓதினவதனால் அச்சொல் இருவகைப் படும். முன் நின்றான் தொழில் உணர்த்துவனவும் அவனைத் தொழில்படுத்தற்கு ஏவல் குறித்து வருவனவும் என'

என்ற தெய்வச்சிலையார் வாசகத்தில் (வினை. 24) 'முன் நின்றான் தொழில் உணர்த்துவன' என்பது செயல் வினை வாக்கியம் என்பதும் (நீ வந்தாய் என்றால் முன்னிலையில் இருப்பவன் செய்த தொழிலைக் குறிப்பது) 'அவனை (முன் நின்றானை) தொழில் படுத்தற்கு ஏவல் குறித்து வருவன' என்பது ஏவல் வாக்கியம் என்பதும் புலனாகிறது. அதாவது ஏவல் முன்னிலையில் இருப்பவனைத் தொழில் செய்ய ஆணையிடுவது. நீ வா என்றால் முன்னிலையில் இருப்பவனை வா என்ற தொழில் செய்ய ஆணையிடுவது என்று பொருள். இங்குப் பொருள் நிலையில் செயல்வினையும் ஏவல் வினையும் தெளிவாக வேறுபடுத்தப் பட்டுள்ளன. அதை வரைபடம் மூலம் கீழ்க்கண்டபடி விளக்கலாம்.




ஒருவன் (நீ வாழ்) கட்டளையிடு = (நீ வாழ்) ஏவல்
ஒருவன் (நீயிர் வாழ்மின்) கட்டளையிடு = (நீயிர் வாழ்மின்) ஏவல்பன்மை
ஒருவன் (அவன் வாழ்) வேண்டு = (அவன் வாழ்க) வியங்கோள்

(ஏவலில் / வியங்கோளில் இரண்டு வேறு கருத்தா (எழுவாய்) இரண்டு வேறு வினைகள் புதைந்துள்ளன. செயல்வினையில் ஒரு கருத்தா, ஒரு வினைதான் உள்ளது).

இங்கு ஏவல்/வியங்கோள் புறநிலையில் ஒரு விகுதியாக இருந்தாலும் அது புதைநிலையில் ஒரு முழு வினையாக ஒரு கருத்தா பெற்றது என்று விளக்கியது மிகவும் சிறப்பானது. ஆணையிடு, விரும்பு, வேண்டு ஆகியவை செயப்படுபொருள் குன்றாவினையாக இருப்பதால் புதைநிலையில் தலைமை வாக்கியத்தின் செயப்படுபொருளாகக் கொண்டு அந்தச் செயப்படுபொருள் ஒரு வாக்கியமாகக் கொள்வது இன்னும் சிறப்பாக இருக்கும். இராமன் சீதையை விரும்பினான். தசரதன் இராமன் சீதையைக் காதலிப்பதை விரும்பினான். இது உண்மையில் இங்கு அயல் கூற்றாக உள்ளது. அதை நேர்க்கூற்றாக மாற்றினால் தசரதன் இராமா! நீ சீதையை காதலி/ காதலிக்க என்று அமையும். சுருக்கமாகச் சொன்னால் உரையாசிரியர்கள் செயல்வினை எளிய வாக்கியம் என்றும், வியங்கோள்/ஏவல் சொல்வியல் நோக்கில் புறநிலையில் எளிய வாக்கியமாக இருந்தாலும் புதைநிலையில் இரண்டு வினை இரண்டு கருத்தா கொண்ட கலவை வாக்கியம் என்றும் கருதுகிறார்கள் என்று நாம் கொள்வது தவறாகாது.

வியங்கொள வருதல் (வேற்று. 5) என்பதைத் தெய்வச்சிலையார் தொழிலைப் பெயர்ப்பொருள் கொள்ளுமாறு வரும் ஏவற் சொல்' என்று விளக்கியது மேலே குறிப்பிட்ட 'அவனைத் தொழில்படுத்தற்கு ஏவல் குறித்து வருவன' என்பதற்கும் வேறுபாடு இல்லை. அதாவது தெய்வச்சிலையார் ஏவலையும் வியங்கோளையும் சரியாக வேறுபடுத்தவில்லை.

வியங்கோள் பற்றிய சூத்திரத்தில் (வினை. 27) அவரே

> 'வியங்கோள் என்பது யாதோ எனின் (1) செய்க என்னும் பொருட்கண்ணும், தவிர்க என்னும் பொருட்கண்ணும், வேண்டிக்கோடற் பொருட் கண்ணும் வருவது, (2) அஃதாவது வாழ், உண், தவிர் என்னும் ஏவல் குறித்த சொற்கள் தன்மைப் பெயர்க் கண்ணும் படர்க்கைப் பெயர்க்கண்ணும் ஏலாது, முன்னிலை ஒருமைப் பெயர்க்கண் நீ வாழ், நீ உண், நீ தவிர் என ஏற்றலின் ஆண்டுப் பால் உணர்த்தும் சொல்லோடு ஒரு நிகரனவாகி முன்னிலை வினையுள் அடங்கின. (3) அப்பொருட் கண் தன்மை கூறும் வழி யான் வாழ்வல்/உண்பல்/தவிர்தல் எனக் கூற வேண்டலின் அவை தன்மை வினையுள் அடங்கின. (4) இனிப் படர்க்கைக்கண் வருங்கால் அவன் வாழ்க/உண்க/தவிர்க எனக் ககரம் கடையாத்துக் கூற வேண்டுதலின் அவ்வாறு வரும் சொல் பால் உணர்த்தாமையின் வியங்கோள் என வேறு குறி பெற்றது. அவன் வாழ்க, அவள் வாழ்க, அவர் வாழ்க, அது வாழ்க, அவை வாழ்க என ஐந்து பாற்கும் உரித்தாகி வந்தவாறு கண்டுகொள்க.' (5) நீ வாழ்க / உண்க எனவும் வருமால் எனின் அவை அக்ககரம் பெறாக்காலும் பொருள் இனிது விளங்குதலின் அவ்வாறு வருவன மரூஉ வழக்கு என்று கொள்க. என்முதற் பிழைத்தது கெடுக என் ஆயுள்' (சிலம்பு. வழக்குரை. 77) எனத் தன்மைக்கண் வந்ததால் எனின், ஆண்டுக் கெடுக எனப்பட்டது ஆயுள் ஆதலின் அதன் மேல் வந்தது என்க' (விவாதத்தில் குறிப்பிடுவதற்கு எண் கொடுக்கப்பட்டுள்ளது)

என்பார். இங்கு முதல் கருத்து வியங்கோள் செய்தல் (செய்க), தவிர்த்தல், வேண்டுதல் என்ற மூன்று பொருளை உடையது என்று விளக்குகிறது. அதே சமயத்தில் 2ஆவது 3ஆவது 4ஆவது கருத்துகள் அடிப்படையில் இன்னொரு உண்மை புதைந்துள்ளதாக எண்ணவேண்டியிருக்கிறது. அதாவது தொல்காப்பியர் 'மன்னதாகும் வியங்கோட் கிளவி' என்று கூறியதைப் பிற உரையாசிரியர்கள் வியங்கோள் வடிவத்தை (வாழ்க என்ற முழு வடிவத்தை)க் குறிப்பதாகக் கொள்ளத் தெய்வச்சிலையார் வியங்கோள் விகுதியை மட்டும் கொண்டுவிட்டதாகவே

தோன்றுகிறது. அதனால்தான், வியங்கோள் மூன்று இடத்துக்கும் (தன்மையிலும் முன்னிலையிலும் கூட) வேறுவேறு விகுதிகள் பெற்றுவரும் என்று கொண்டுள்ளார். 5ஆவது கருத்து முன்னிலையிலும் வியங்கோள் விகுதி வந்ததற்கு மரூஉ வழக்கு அதாவது பேச்சு மொழியில் திரிந்து வந்தது என்ற சமாதானம். தன் கொள்கைக்கு மாறாக வந்த இலக்கிய உதாரணத்தையும் எடுத்துக்காட்டி விளக்கியிருப்பது அறிவு நேர்மையைக் காட்டுகிறது.

> 'கடாவுக பாக நின் கால்வல் நெடுந்தேர்' எனச் செய்யுளகத்தும் வந்ததால் எனின் நீ கடாவுக என வாராது பாக கடாவுக என வருதலின் அது படர்க்கைப் பெயர் விளியேற்ற வழி வந்தது என்க'

என்பது அவரது வாசகம். பொதுவாகப் படர்க்கைப் பெயர்கள் விளி ஏற்றால் முன்னிற்பவன் ஆகும்போது முன்னிலை ஆகி விடுகிறான். அதனால்தான் நீ என்ற முன்னிலை வடிவத்தை அந்தச் சூழலில் கையாளமுடியும். அதற்கு ஏற்பவே இங்கு நின் (தேர்) என்ற வடிவம் கையாளப்பட்டிருப்பதும் உறுதிசெய்கிறது. 'அது படர்க்கைப் பெயர் விளியேற்ற வழி வந்தது' என்பதும், முன்னிலை என்பதும் ஒன்றே.

'என்முதற் பிழைத்தது கெடுக என் ஆயுள்' (சிலம்பு. வழக்குரை. 77) என்பதில் தன்மையில் வரவில்லை. 'கெடுக எனப்பட்டது ஆயுள் ஆகலின் அதன்மேல் வந்தது என்க' என்பது அவரது சமாதானம். இங்கும் ஆயுள் கெடும்படி வேண்டுதல் யானே அதாவது தன்மையே. மேலும் வஞ்சினக் காஞ்சி என்ற துறைப் (புறநானூறு) பாடல்களில் தன்மை நேரடியாகக் கையாளப்பட்டுள்ளது.

> ........................................................ பிறர்
> வன்புலக் காவலின் மாறியான் பிறக்கே (புறம். 71:18-9)

என்ற அடிகளில் தன்மையும் வியங்கோள் பொருளில் வந்துள்ளது. பெரும்பாலும் தன்மையில் வஞ்சினம் கூறும்போது நான் இது செய்தால்/செய்யாவிட்டால் என்ற ஒரு நியதி வினை சேர்ந்தே வரும். மேலே காட்டிய புறப்பாடலிலும் 'யான் புறங் காணேன் ஆயின்' என்று வந்துள்ளது. எனவே தொல்காப்பியர் வியங்கோளைப் படர்க்கைக்கு மட்டும் ஏன் வரையறுத்தார் என்பது தெளிவாகவில்லை.

### 8.2.3. நச்சினார்க்கினியர்

> 'வினைநிலை உரைத்தல் தன் தொழில்; வியங்கொள வருதல், மேல் தன்கண் தொழில் நிகழ்வதாக ஒருவன் ஏவப்படுதல். இரண்டற்கும் இதுவே வேறுபாடு'

என்ற நச்சினார்க்கினியர் (வேற்றுமையியல் சூ. 5) விளக்கத்தில் வியங்கோளையும் ஏவலையும் வேறுபடுத்தாத குறை இருந்தாலும் வியங்கோள் 'தன்கண் தொழில் நிகழ்வதாக ஒருவன் ஏவப்படுதல்' என்பதில் இரண்டு இரண்டு வினை இருப்பதாகவும் அவைகளில் முன்னது (பகுதியாக உள்ள வினை பிறவினை (வாழுதல்) என்றும் வியங்கோளைக் குறிக்கும் வினை தன்வினை (வாழ் என்று விரும்புதல்) என்றும் கொள்ளும்படி விளக்கம் அமைந்துள்ளது. எனவே இந்த விளக்கம் கொஞ்சம் தெளிவானது. ஆனாலும் (ஒருவன்) 'ஏவப்படுதல்' என்பதற்குப் பதிலாக 'விருப்பப்படுதல் அல்லது வேண்டப்படுதல்' என்று கொள்வது இன்னும் பொருத்தமாக இருக்கும்.

> 'முன்னிலை, எதிர்முகமாக நின்ற பொருளினது தொழில் உணர்த்தும் முற்றுச் சொல்லும்; வியங்கோள், படர்க்கைப் பொருள் மேல் ஏவற் பொருண்மையைக் கொண்டு வரும் முற்றுச் சொல்லும் (வினை. 23)

என்ற நச்சினார்க்கினியர் விளக்கம் முன்னிலையையும் வியங்கோளையும் இட அடிப்படையில் (முன்னது முன்னிலை, பின்னது படர்க்கை) மட்டுமே வேறுபடுத்தினாலும் வியங்கோள் பற்றிய சூத்திரத்தில் (வினை. 27) வியங்கோளை 'ஏவற் பொருண்மையை முற்ற முடித்தலை உணர்த்தும் சொல்' என்று பொழிப்புரைக்கும்போது ஏவலையும் முன்னிலையையும் வேறுபடுத்தாத நிலை தெளிவாகிறது. மேலும் அவர் வியங்கோள், கூடுதலாக 'அஃறிணைக்கண் பெரும்பான்மையும் நிலைபெறாது, உயர்திணைக்கண் பெரும்பான்மையும் நிலைபெறும்' என்று கூறி அதற்குத் தொல்காப்பியப் பொருளதிகாரச் சூத்திரங்களை (பொருளியல், 2. செய்யுளியல். 198) மேற்கோள் காட்டியுள்ளார். உண்மையில் அவை உலக வழக்கை ஒட்டியன. அவரே குறிப்பிட்டபடி இலக்கியத்தில் அந்தக் கட்டுப்பாடு இல்லை.

விதித்தல், வேண்டிக் கோடல் என்ற இரண்டு பொருளில் மட்டும் என்று நச்சினார்க்கினியர் குறிப்பிட்டு அவை சமூக மாறுபாட்டோடு தொடர்பு உடையன என்று விளக்கியுள்ளார்.

> 'அவைதாம் கூறுகின்றவர் கருத்தான் ஏவல் கண்ணியே வரும். உயர்ந்தான் இழிந்தானை இன்னது செய்க என விதித்தல் ஏவல் கண்ணியது இழிந்தான் உயர்ந்தானை இன்னது செய்யவேண்டும் என வேண்டிக் கோடலும் ஏவல் கண்ணிற்று.' இனி உயர்திணைப் பொருளாகிய முன்னிலைக்கண் வாழ்க வாழிய என வாழ்த்துப் பொருண்மைக்கண் வந்ததும் ஏவல் கண்ணிற்று. 'கடாவுக பாக நின் கால் வல்நெடுந்தேர்' என வேண்டிற் கோடற் பொருண்மைக்கண் வந்ததும் ஏவல் கண்ணிற்று. இனி உயர்திணைத் தன்மைக்கண் 'யானும் நின்னோடு உடன் உறைக' என வேண்டிற்கோடற் பொருண்மைக்கண் வந்ததும் ஏவல் கண்ணிற்று. இது சிறுபான்மை என்பது உணர்த்துதற்கு முன்னிலையை முற்கூறினார்'.

என்பது நச்சினார்க்கினியர் வாசகம். உயர்ந்தான் இழிந்தானை இன்னது செய்க என விதித்தல் ஏவல் கண்ணியது, ஏனையவை வேண்டிக் கோடல் பொருண்மைத்து எனச் சுருக்கமாகக் கூறலாம்.

### 8.2.4. கல்லாடர்

> கல்லாடர் வேற்றுமையியலில் (5)
>
> 'இது (வியங்கொள வருதல்) மேற்சொல்லுகின்ற வினைநிலை உரைத்தலுள் அடங்கும் ஆயினும் வேறுபாடு உண்டு. அது (வினைநிலை உரைத்தல்) தன்கண் நிகழ்வதோர் வினை. இது தன்கண் நிகழ்வதாக ஒருவனால் ஏவப்பட்டு நிற்கும் நிலை'

என்று கூறும்போது, மேலே விளக்கியபடி வியங்கோளில் இரண்டு வினைகள், இரண்டு கருத்தாக்கள் உண்டு என்பது தெளிவாகிறது. ஆனால் வியங்கொள உரைத்தல் என்பதற்கு ஏவலைக் கொள்ள வரும் என்றும் வியங்கோட் கிளவி என்பதற்கு ஏவற் பொருண்மையை உணர்த்தும் சொல் என்றும் விளக்கு வதால் இவரும் ஏவலையும் வியங்கோளையும் வேறுபடுத்த வில்லை என்று அறியலாம். அதே சமயத்தில் வினையியலில் (27)

> 'இவ்வியங்கோள் ஏவல் கண்ணியதும், ஏவல் கண்ணாததும் என இருவகைத்து. ஏவல் கண்ணியதாவது உயர்ந்தான் இழிந்தானை இன்னது செய்க என விதித்தல், ஏவல் கண்ணாததாவது இழிந்தான் உயர்ந்தானை இன்னது செய்யப் பெற வேண்டிக் கோடல்'

என்ற விளக்கத்தில் உயர்ந்தான்/இழிந்தான் என்ற வேறுபாடு இன்று நாம் ஏற்றுக் கொள்ளமுடியாதது. ஆனாலும் 'ஏவல் கண்ணியதாவது இன்னது செய்க என விதித்தல், ஏவல் கண்ணாத தாவது இன்னது செய்யப் பெற வேண்டிக்கோடல்' என்ற வேறுபாடு முறையே ஏவல், வியங்கோள் என்று கொள்ளலாம்.

வேற்றுமையியலில் வினைநிலை உரைத்தலுக்கும் வியங்கொள வருதலுக்கும் எல்லா உரையாசிரியர்களும் செய்த வேறுபாடு பொருண்மை நோக்கு உடையதாயினும் தொடரியல் முக்கியத்துவம் உடையது என்பது மேலே காட்டிய வரைபடம் நன்கு தெளிவுபடுத்தும்.

இனிச் சிறப்பு வடிவங்களாக வருவது பற்றிய தொல்காப்பியர் கருத்தை ஆராய்வோம்.

### 8.3. முன்னிலை / ஏவல்

> செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
> செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே (933)

என்ற சூத்திரத்தில் (எச்சம். 54) செய்யாய் என்ற செயல் வினைதான் செய் என்ற ஏவல் வினையாக ஆகும் என்று பொருள் படுவதாகத் தோன்றுகிறது. ஆனால் அதில் பல பிரச்சினைகள் அடங்கியுள்ளன. இங்கு உரையாசிரியர்களிடையே மூன்று மாறுபட்ட கருத்துகள் காணப்படுகின்றன. 1) வடிவ மாற்றம் (செய்யாய் என்ற முன்னிலை செய் ஆக மாறும்), 2) வடிவ மாற்றமும் இலக்கண மாற்றமும் (செய்யாய் என்ற முன்னிலை வடிவம் செய் என்ற ஏவல் வடிவமாக மாறும்), 3) வடிவம் மாற்றமும் இலக்கண மாற்றமும் பொருள் மாற்றமும் (செய்யாய் என்ற முன்னிலை எதிர்மறை வடிவம் செய் என்ற உடன்பாட்டு முன்னிலை ஏவல் வடிவமாக மாறும்) இவைகளை உரையாசிரியர் நோக்கில் சொன்னால்

அ) செய்யாய் என்ற வடிவம் செய் என்று பொருள்படும். இங்கு அதன் இலக்கணக் கூறு பற்றியோ, பொருள் பற்றியோ குறிப்பு இல்லை. அது இளம்பூரணர் கருத்து.

ஆ) செய்யாய் என்ற முன்னிலை மறை (எதிர்மறை) வினை, செய் என்ற ஏவலாக மாறும். இது உரையாசிரியர் கருத்து (அதாவது சேனாவரையர் மாற்றுக் கருத்தாகத் தன்னுடைய உரையில் குறிப்பிடுவது) நச்சினார்க்கினியரும் இதே கருத்தினரே. ஆனால் நச்சினார்க்கினியர் ஏவல் என்று கூறாமல் முன்னிலை என்றே குறிப்பிட்டுள்ளார்.

இ) செய்யாய் என்பது முன்னிலை மறைவினையாகவும் விதி (உடன்பாட்டு) வினையாகவும் வரும். அது சேனாவரையர், தெய்வச்சிலையார், நச்சினார்க்கினியர் ஆகிய மூவருக்கும் உடன்பாடு. அதற்கு நச்சினார்க்கினியர் சங்க இலக்கிய உதாரணங்களைக் கொடுத்துள்ளார்.

ஈ) சேனாவரையர் விதி வடிவமும் மறைவடிவமும் வேறுவேறு புதைநிலை வடிவம் கொண்டன என்றும் நச்சினார்க்கினியர் ஓசை வேறுபாடு என்றும் விளக்கியுள்ளனர்.

உ) செய்யாய் என்னும் விதி வினையே செய் என்ற நிற்றலும் உடைத்து. செய்யாய் என்பதன் மாற்று வடிவம் செய் என்பது. இது சேனாவரையர், தெய்வச் சிலையர் ஆகிய இருவரின் கருத்து. சேனாவரையர் பிற முன்னிலை வடிவங்களிலும் குறைப்பு காணப்படுகிறது என்று எடுத்துக்காட்டியுள்ளார்.

இங்கு முதல் கருத்து பொதுவானது. இரண்டாவது கருத்தே விவாதத்துக்கு உரியது. அதைச் சேனாவரையர் மறுத்தும் உள்ளார். அதற்கு அவர் கூறிய காரணங்கள்:

> செய்யாய் என்னும் எதிர்மறை வினையும் செய்யாய் என்னும் விதி வினையும் முடிந்த நிலைமை ஒக்கும் ஆயினும், எதிர்மறைக்கண் மறை உணர்த்தும் இடைநிலையும் உண்மையான் முடிக்கும் சொல் வேறு எனவே படும். மறை உணர்த்தும்

இடைநிலையாவன உண்ணலன், உண்டிலன், உண்ணாது, உண்ணேன், என்புழி வரும் அல்லும், இல்லும், ஆவும் ஏயும், பிறவும் ஆம். உண்ணாய், உண்ணேன் என்புழி எதிர்மறை ஆகார ஏகாரம் கெட்டு நின்றன எனல் வேண்டும். அல்லாக்கால் மறைப்பொருள் பெறப்படாமையின் எதிர்மறைச் சொல்லே விதி வினைச் சொல் ஆகாமையின் அவர்க்கு அது கருத்து அன்று என்க'

என்பது அவரது வாசகம். இங்குச் செய்யாய் என்ற உடன்பாட்டு வடிவம் இருப்பதை உரையாசிரியர் உணரவில்லையோ என்று கருதியதோடு விதிவினையும் மறைவினையும் ஒரே வடிவம் பெற்றிருந்தாலும் அவைகளின் இலக்கணம் - அமைப்பு மாறுபடுகிறது என்று கூறியது சிறப்பானது. மொழியியல் கோட்பாட்டு நிலையில் உயர்ந்தது. அதை அகத்தியலிங்கம் (1985: 89) 'அவருடைய நுண்மாண் நுழைபுலத்தைக் காட்டும்' என்று பாராட்டி 'ஒரே உருவத்தைக் கொண்டிருந்தாலும் அமைப்பில் வேறானவை' என்று பொதுமைப்படுத்துவார். உண்மையில் அதுதான் இன்றைய மாற்றிலக்கண மொழியியலாரின் மொழியியல் கோட்பாட்டின் அடிநாதம். 'முடிந்த நிலை ஒக்கும் ஆயினும்.... முடிக்குஞ் சொல் வேறு' என்று சேனாவரையர் கையாண்ட தொடர்கள் சிறப்பானவை. முடிந்த நிலை என்பது புற வடிவம்; முடிக்கும் சொல் என்பது புதை வடிவம். புறநிலை ஒத்தாலும் புதை வடிவங்கள் வெவ்வேறானவை என்பதுதான் சிறப்பு. செய்யாய் என்பதில் புறநிலையில் இரண்டு கூறு (செய் + ஆய்) இருப்பதுபோலத் தோன்றினாலும் 'எதிர்மறைக்கண் மறை உணர்த்தும் இடைநிலை உண்மையான்' என்று வலியுறுத்தியதால் மூன்று கூறு (வினை அடி + எதிர்மறை+ முன்னிலை) இருப்பதாகக் கொள்ளவேண்டும். அதற்கு வேறு பல இடங்களில் வெளிப் படையாக எதிர்மறை விகுதி இருப்பதை எடுத்துக்காட்டி வாதிட்ட ஆய்வு நெறிமுறை இன்னும் சிறப்பானதுதான். 2) ஆசிரியர் அக்கருத்தினராயின் 'செய்யாய் என்னும் எதிர்மறை வினைச்சொல்' என்று ஓதுவார்மன். அவ்வாறு ஓதாமையான் அவர்க்கு அது கருத்து அன்மையான் உரையாசிரியர்க்கும் அது கருத்து அன்மை அறிக' என்ற வாசகம் வாத முறையில் ஒன்று - நூலாசிரியர் கருத்து அது இல்லை என்று மறுப்பது.

நச்சினார்க்கினியர் அறியாய் என்ற வடிவம் (அறியாய் வாழி தோழி) (அகநானூறு 53..) என்ற அடியில் எதிர்மறையிலும்

'அறியாய் வாழி தோழி பொறிவரி' என்ற அடியில் (அகம். 268:1) உடன்பாட்டிலும் வந்துள்ளதை எடுத்துக்காட்டியுள்ளார். இது தமிழ் மொழி அமைப்பு பற்றிய ஒரு பொது உண்மை. அகத்தியலிங்கம் (985: 86) இன்னும் பல உதாரணங்களை எடுத்துக்காட்டியுள்ளார்.

4ஆவது கருத்து: செய்யாய் ஒரே வடிவம் இரண்டு பொருள்படுவதற்குக் காரணத்தைக் குறிப்பிடுகிறது. சேனாவரையர் காரணம் மேலே விளக்கப்பட்டது. அதை அமைப்பு மாறுபாடும் (உடன்பாடு இரண்டு கூறு, எதிர்மறை மூன்று கூறு) புணர்ச்சி மாற்றமும் (அவர் கருத்துப்படி இரண்டு ஒத்த நெடில் வந்தால் ஒரு நெடில் கெடும்) காரணம்.

நச்சினார்க்கினியர் 'மறைச்சொல் உடம்பாட்டுப் பொருளைப்படுத்தல் ஓசையாய் உணர்த்தி நிற்றல் சான்றோர் செய்யுளுள் பெரும்பான்மை என்று உணர்க' என்று கூறியதோடு வேறு ஒரு வடிவம் நாலு பொருளை ஓசை மாறுபாட்டான் உணர்த்துதற்கும் இரண்டு உதாரணம் கொடுத்தன்மூலம் தமிழில் இது ஒரு பொது உண்மை என்று வலியுறுத்தியுள்ளார்.

> 'உண்பாய் என்னும் சொல் ஓசை வேற்றுமையான் முற்றும், தொழிற்பெயரும், வினையெச்சமும் வியங்கோளுமாய் நின்றாற் போலவும், தபு என்பது ஓசை வேற்றுமையான் ஒன்றனைக் கொல் என்றும் 'நீ சா' என்றும் நின்றாற் போலவும் மறைச்சொல் ஓசை வேற்றுமையான் உடம்பாடு உணர்த்திற்று என்று உணர்க'

என்பது அவருடைய விளக்கம். இங்கு 'ஓசை வேற்றுமை' என்று பொதுவாகச் சொன்னாலும் மேலே உடம்பாட்டுப் பொருளைப் படுத்தல் ஓசை என்று கூறியதால் எதிர்மறை எடுத்தல் ஓசை என்று நாம் ஊகித்துக் கொள்ளலாம். எப்படியானாலும் ஒரு வடிவம் எப்படி இரண்டு பொருள் உணர்த்தும் என்பதல்ல கேள்வி. செய் என்ற ஏவல் வடிவத்தின் மாற்று வடிவம் செய்யாய் என்ற விதி வடிவமா? மறை வடிவமா? என்பதே. அதில் மறை வடிவத்திலிருந்து செய் வடிவம் முன்னிலை வினைச்சொல் என்ற கருத்து ஏற்கமுடியாதது என்பதற்குச் சேனாவரையர் வாதம் மேலே காட்டப்பட்டது.

> 'செய்யாய் என்ற வாய்பாட்டுச் சொல் செய்யாதே என்ற பொருளில் எங்கும் வருவதாக இல்லை.

> எதிர்மறைகள் அனைத்தும் 'நீ செய்யாதிருப்பாய்' என முன்னிலை ஒருமைப் பொருளில் (Second person negative indicative) வருவதாகவே உள்ளன. இவை முன்னிலையில் வருகின்றனவே அன்றி எதிர்மறை ஏவலில் வருவதில்லை. எனவே செய்யாய் என்ற சொல் உடன்பாட்டுச் சொல்லே என்பதும் அதுவே செய் என்னும் ஏவல் பொருளில் வரும் என்பதும் குறிப்பிடத்தக்கது'

என்பது அகத்தியலிங்கம் (1985:89) வாதம். அவர் பல சங்க இலக்கிய உதாரணங்களை எடுத்துக்காட்டியுள்ளார். மேலும் அவர்

> 'முன்னிலை வினைமுற்றுகள் ஏவல் வினையாக வருதல் உண்டு... ஏவல் முன்னிலையிலும் எதிர்காலத்திலும் வருவதால் முற்றுகளில் எதிர்கால வினைமுற்றுக்களே ஏவலாகப் பயன்படும் என எண்ணலாம். இன்றைய தமிழிலும் வாக்களிப்பீர்... போன்ற சொற்கள் ஏவலில் பயன்படுவதைக் காணலாம்' (ப. 84)

என்பார். எனவே செய்வாய் என்ற வாய்பாட்டுச் செயல்வினை ஏவலாக வந்ததற்குச் சங்க இலக்கிய உதாரணம் காணவேண்டும். முன்னிலைப் பன்மை எதிர்காலச் செயல்வினை ஏவலில் வந்ததற்கு

> சென்றிடுவீர் எட்டுதிக்கும் - கலைச்
> செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்

என்ற பாரதி பாடல் (தமிழ்த்தாய்) சான்று. அதில் சென்றிடுவீர், சேர்ப்பீர் என்ற இரண்டு முன்னிலை, எதிர்கால வீனைமுற்றுகள் ஏவலாகவே கையாளப்பட்டுள்ளதைக் காணலாம். அப்படி யானால் செய்வாய் என்பது எங்காவது செய் என்ற பொருளில் வந்துள்ளதா என்று தேட வேண்டும்.

அடுத்து, செய்யாய் என்பதன் குறைப்பு வடிவம் செய் என்பதும் மொழியியல் நோக்கில் ஒத்துக் கொள்ளப்படுவதில்லை. 'செய்யாய் முன்னிலை செயல்வினை, செய் என்பது ஏவல் அதனால் முன்னிலையிலிருந்து ஏவல் உண்டாகிறது எனக் கூறுவது பொருந்தாது ஆகும்' என்பார் அகத்தியலிங்கம் (ப. 94). அப்படியானால் சேனாவரையர் காட்டிய பிற உதாரணங்களின் நிலை என்ன என்று விளக்கவேண்டும்.

அங்கு இரண்டு வகை உதாரணங்கள் உள்ளன. ஒன்று: மின் என்ற ஏவல் பன்மை கெட்டு வருதல். தம்மின் -> தம், வம்மின்-> வம் என்றால் வருமின் தருமின் என்பவை *வர்மின் > வம்மின் என்ற மாற்றங்கள் பெற்றிருக்கவேண்டும். உண்மையில் அவை இரண்டும் தரும், வரும் என்ற முன்னிலைப் (ஏவல்) பன்மையின் மரூஉ வடிவம் என்பது இயல்பான விளக்கம். அப்படியானால் அங்குக் குறைப்பு எதுவும் இல்லை. அலையலை -> அலையல், அழியலை -> அழியல் என்ற வடிவங்களைப் பொறுத்த வரையில், இணையாகப் 'பயனில் சொல் பாராட்டுவானை' என்ற குறளில் (196) வந்துள்ள 'மகன் எனல்' என்று எதிர்மறை வடிவமும் 'பதடி எனல்' என்ற விதி வடிவமும் உண்மை அறியப் பயன்படும். குறளில் 'எனல்' என்பதை ஏவலாகவும் வியங்கோளாகவும் கருதலாம். அல் என்பது வியங்கோள் விகுதி என்பது சேனாவரையர் உள்பட எல்லோருக்கும் உடன்பாடே. குறளில் உடன்பாட்டு வடிவம் இரண்டு கூறுகளையும் (வினையடி + ஏவல்/ வியங்கோள், எதிர்மறை மூன்று கூறுகளையும் வினையடி + எதிர்மறை (அல்)+ ஏவல் (வியங்கோள்) (அல்) என்று அமைவதால் அலையல் போன்றவைகளை அசைகெடல் (Haplology) என்ற முறைப்படி கெட்டது என்று கொள்ளவேண்டும். இங்குச் சேனாவரையர் கருதுவதுபோல முன்னிலை விகுதி -ஐ இருப்பதாகக் கொள்ள வேண்டியதில்லை.* அலையலல் -> அலையல்; *அழியலல் -> அலையல் என்று அசைகெடல் மூலம் கெட்டது என்று கொள்ளவேண்டும். அதாவது அவர்காட்டிய கூடுதல் உதாரணங்களும் அவர் கருத்துக்கு ஆதரவாக அமையவில்லை. எனவே செய், வா, போன்ற ஏவல் ஒருமைக்கு விகுதி எதுவும் இல்லை என்று கருதுவதே பொருந்தும். இன்று பரவலாக வினையடியே ஏவலாகக் கையாளப்படுகிறது என்று அனைவரும் ஒத்துக்கொள்ளும் உண்மை. அப்படியானால் செய்யாய் என்ற வாய்பாட்டு வடிவம் ஏவலாக வருவதை எப்படி விளக்குவது என்ற கேள்வி எழுகிறது.

இங்கு மொழியியல் நோக்கில் இரண்டு கேள்விகள் எழுகின்றன. அ) ஏவலாக வரும் செய்யாய், செய் என்ற இரண்டு வடிவங்களும் ஒரே பொருள் உடையனவா? அதன் பொருள் வேறுபாடு என்ன? ஆ) முன்னிலையாகவும் ஏவலாகவும் எப்படி விளக்குவது?

எல்லோரும் செய்யாய் என்ற வடிவம் ஏவல் உணர்த்துவதை ஒரே பொருள் உணர்த்துவதாகவே கொண்டுள்ளார்கள். செய்

என்று கட்டளையிடுதல் என்ற பொருள் இருத்தல் போல் செய்யாய் என்ற வடிவத்தில் இல்லை என்றே தோன்றுகிறது. அங்கு ஒரு விதமான வேண்டுகோள் இருப்பதாகவே தோன்றுகிறது. எனவே அதை அன்பு ஏவல்/உரிமை ஏவல் என்று பொருள் கொள்ளலாம். அப்படியானால் அது ஒரு புது இலக்கணக் கூறு என்று கொள்ளவேண்டும்.

செய்யாய் என்ற முன்னிலை ஒருமையை முன்னிலை செயல் வினையில் 'கால உருபு இருந்து கெட்டது எனக் கருதுதல் வேண்டும். உண் + Ø (சூனியம்) + ஆய் என்பதில் வரும் Ø (சூனியம்) உருபு காலம் காட்டுவது எனக் கருதலாம்' என்று அகத்தியலிங்கம் (1985: 89) விளக்கியுள்ளார். செய்வாய் போன்ற வடிவங்களும் மொழியில் இருப்பதால் Ø (சூனியம்) எதிர்காலத்துக்குரிய ஒரு மாற்றுருபாகக் கருதவேண்டும். அப்படி உண்டாவதற்கு வரலாற்றுக் காரணம் ஏதாவது உண்டா என்ற கேள்வி எழுகிறது. அதற்கு முன் வருணனை நிலையிலேயே செய்யாய் என்று ஏவலாக வருவதையும் எதிர்காலச் செயல் வினையாக வருவதையும் வேறுபடுத்த வேண்டும் என்று சுட்டிக்காட்டத் தகுந்தது.

செய்யாய் என்ற அன்பு ஏவல் வடிவம் இரண்டு இலக்கணக் கூறே (வினையடி + ஏவல்) உடையது. எனவே ஆய் என்பதை அன்பு ஏவல் விகுதியாகவே கருத வேண்டும். அது எதிர்கால முன்னிலையாக வரும்போது பொருளாலும் பகிர்வாலும் அமைப்பாலும் மாறுபடுகிறது. அதாவது முன்னிலை - ஆய் என்பது தொடர்நிலையில் மூன்று இலக்கணக் கூறுகள் உடைய (வினையடி + காலம் + இடம்) உடையது அடுக்கு நிலையில் தன்மை, படர்க்கையோடு வேற்றுநிலை வழக்கு உடையது. ஐ (செய்தனை, செய்தவை) என்ற இன்னொரு விகுதியோடு துணை நிலை வழக்கு உடையது. ஏவல் இரண்டு கூறுகளை உடையதாய் ஒருமை (செய்) பன்மை, (செய்மின்) என்ற இரண்டு வேற்றுநிலை வழக்கே உடையது. பொருள் மாற்றம், தொடர் நிலை மாற்றம், பகிர்வு மாற்றம் ஆகியவைகளால் வடிவத்தாலும் வரலாற்றாலும் ஒத்திருந்தாலும் வேறுவேறு இலக்கணக் கூறாகவே கருதவேண்டும்.

செய்யாய் என்பது மறையாய் பெரும்பான்மை என்று உரையாசிரியர்கள் உள்ளுணர்வால் கூறிய கருத்து இன்று பழக்க (frequency) அடிப்படையில் அகத்தியலிங்கம் (ப. 87)

**இவற்றின் (செய்யாய் என்பது முன்னிலை செயல் வினை, ஏவல் வினை, மறை வினை) வரவு எண்ணிக்கையை**

> நோக்கின் எதிர்மறையாய் வருவதே கூடுதலாக உள்ளது என்பது தெரிய வரும். உடன்பாட்டில் மிகக் குறைவாகவே உள்ளன

என்பார். அதன் உள்கிடை என்ன? ஒரு வரலாற்று மாற்றத்தின் துவக்கநிலை எனலாம்.

அங்குப் பொதிந்துள்ள வரலாற்று மாற்றம் ஆராயத் தகுந்தது. எதிர்மறை வடிவத்துக்குச் சேனாவரையர் கொடுத்த சொல்லியல் விளக்கம் ஓரளவு பொருத்தமானதே. உடன் பாட்டிலும் ஏவலிலும் வருபவை எதிர்கால வினை என்பதில் சந்தேகமே இல்லை. சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்ட எல்லாம் மெல்வினைகளாகவே உள்ளன. அங்கு ஏற்பட்ட ஒலி மாற்றத்தால் ஆய் (< வாய்) ஏற்பட்டிருக்கவேண்டும் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. அதாவது செய்வாய், பெய்வாய் என்ற யகர ஈற்று வினையடிகளில் முன்னோக்கு ஓரினமாத லாலும், செய்வாய் -> செய்யாய்) ஐகார (நனைவாய், நினைவாய்) இகர ஈற்று (திரிவாய், எரிவாய்) ஈற்று வினையடிகளில் முன்னுயிர் செல்வாக்கால் வகரமாகி (*திரியாய், *நினையாய்) மாறியிருக்க வேண்டும். அப்போது மன மறு ஆய்வு (Reshaping and Metanalysis) செய்ததன் எல்லா வினையிலும் - ஆய் விகுதியாக முன்னிலையில் கையாளப்பட்டிருக்கவேண்டும். இதே போன்று ஏவல் பன்மையிலும் மாற்றம் நடைபெற்றிருக்கவேண்டும். சங்க இலக்கியத்திலும் முன்னிலைப் பன்மை விகுதியான ஈர் என்பது எதிர்மறையாக வந்துள்ளதை அவர் (1983:239) எடுத்துக்காட்டியுள்ளார்.

> வைகல் தோறும் இன்பமும் இளமையும்
> எய்கணை நிழலிற் கழியும்இவ் வுலகத்து
> காணீர் என்றலோ அரிதே அதுநனி
> பேணீர் ஆகுவிர் ஐய! (நற்றி. 46:1-4)

இங்குக் காணீர் என்பது சிறப்பொருமையாக எதிர்மறையில் வந்துள்ளது சரியானது. ஆனால் பேணீர் ஆகுவிர் என்பதை அகத்தியலிங்கம் உரையாசிரியரை ஒட்டிப் 'பிரியீராய் உறைவீராக' என்று பொருள்கொண்டு வினையாலணையும் பெயருக்குப் பின்னர் Ø (சூனியம்) வந்ததாய் விளக்குவார். உண்மையில் பேணு என்பது போற்றுதல், பாதுகாத்தல் என்று பொருள்படும் உடன்பாட்டு வினை. அதனால் பாதுகாப்பீர் ஆவிர்/பாதுகாத்தல் செய்வீர் என்று பொருள்கொண்டால் ஏவல் விதி சிறப்பொருமையாகக் கொள்ளலாம். அப்படியானால் -ஈர்

என்பது அன்பு ஏவல் சிறப்பொருமையாகச் சங்க காலத்திலேயே வந்துள்ளது ஆகும்.

**இலக்கிய வழக்குகள்**

*வாராய் 'வருவாயாக' (சிலம்பு. 30:103)*
*உழல்வாய் - அப்பர் (தேவா. 4164)*
*வணங்காய் - அப்பர் (தேவா. 4240)*
*முரலாய் - அப்பர் (தேவா. 4243)*
*நினையாய் - அப்பர் (தேவா. 4245)*

*எனக்கு இனிக் கதி என் சொல்வாய் கோவே - நா.தி.*
*(தொண்டரடிப்பொடியாழ்வார் 901:4)*

*கூவாய் பூங் குயிலே - நா.தி.*
*(திருமங்கையாழ்வார், 1944:1)*

*இவ்வரம் நல்காய் - கம்ப இராம.*
*(அயோ. கைகேசி சூழ்வினை. 3530)*

*அன்னாய் உரையாய் (நகர் நீங்கு, 37)*

**செய்யீர்**

*அணங்கு இதுவோ காணீர் (சிலம்பு. 7:11-2)*

*பரமனைக் கைகாள் கூப்பித் தொழீர் - அப்பர்*
*(தேவா. 4246)*

*சூலை தவிர்த்தருளீர் - அப்பர் (தேவா. 4161)*

*பவள வாயீர் வந்து காணீரோ - நா. தி.*
*(பெரியாழ்வார். 23:4)*

*எனக்கு ஒன்று பணியீரே - நா. தி.*
*(நம்மாழ்வார் 3629:4)*

*உரைத்தது காணீரோ - கம்ப இராம.*
*(அயோ. கங்கைகாண். 22:4)*

செய்யாய் என்பது செய்வாய் எதிர்கால வினை முற்றிலிருந்து ஒலிமாற்றத்தாலும் ஒப்புமையாக்கத்தாலும் உருவானதாக இருந்தாலும், செய்வாய் என்ற வாய்பாட்டுக்கு உரிய வல்வினை, மெல்வினை மாறுபாடு இல்லாதது; *தராய், *வராய் என்ற வடிவங்களுக்குப் பதிலாக வாராய், தாராய் என்ற வடிவம் வழங்குவது ஆகிய இரண்டு காரணங்களால் தனி இலக்கணக் கூறாகக் கருதும்படி ஆகிவிட்டது.

20ஆம் நூற்றாண்டில் பாரதி பாடல்களில் அன்பு ஏவல் பன்மையாகக் காணப்படுகிறது.

நிதி மிகுத்தவர் பொற்குவை தாரீர் என்ற பாடலில் (சரஸ்வதி தேவியின் புகழ் 10) அருளீர், நல்கீர், பேசீர், வாரீர் ஆகிய வடிவங்களையும் கையாண்டுள்ளார். அவைகளை உரிமை ஏவல் பன்மையாகக் கொள்ளலாம். இதனால் வரலாற்று நோக்கில் ஆய், ஈர் என்ற இரண்டும் (எதிர்கால வினையோடு வரும்போது முன்னிலை இடவிகுதியாகவும் அன்பு ஏவலாக வரும்போது முறையே ஒருமை, பன்மை அல்லது சிறப்பொருமை கையாளப்படுவது தெளிவாகிறது. பின்னர் உரிமை ஏவலாக கையாளப்பட்ட பிறகு அது எல்லா வினையடிக்கும் உரியதாக அமைந்ததோடு, அமைப்பு, பகிர்வு ஆகியவைகளால் உரிமை ஏவல் என்ற தனி இலக்கணக் கூறு என்று கருதும்படி அமைந்துவிட்டது.

### 8.4. வியங்கோள்

உரையாசிரியர்கள் எல்லாரும் வியம் என்ற சொல்லுக்கு ஏவல் என்றே பொருள் கொண்டுள்ளார்கள் என்பது முன்னால் எடுத்துக்காட்டப்பட்டது.

> 'ஏவல் வியங்கோள் என்பன ஒரு பொருட் கிளவியாயினும் இருதிணை ஐம்பால் மூவிடங் களிலும் செல்லும் ஏவலை வியங்கோள் என்பது தொன்னெறி மரபாம் என்க'

என்ற நன்னூல் உரையாசிரியரான சங்கரநமச்சிவாயர் வாசகம் (338) இரண்டும் ஒரு பொருள் ஆயினும் இரண்டுக்கும் ஒரு மாறுபாடு (வியங்கோள் பால் - இடக்கட்டுப்பாடு இல்லாதது, ஏவல் இடக்கட்டுப்பாடு) உடையது என்பதைப் புலப்படுத்துகிறது. உண்மையில் பொருளிலும் இரண்டுக்கும் வேறுபாடு உள்ளது. வியங்கோள் வாழ்த்துதல், வேண்டிக்கோடல் பொருள்களில் வர ஏவல் விதித்தல் அல்லது ஆணையிடல் என்ற பொருளில் மட்டுமே வரும்.

இசரயேலும் (1976: 50) விழைவு குறித்த ஏவல் வியங்கோள் என்று குறிப்பிட்டுச் சங்க இலக்கியத்தில் வியம் என்ற சொல் ஏவல் என்ற பொருளில் வந்துள்ளதை எடுத்துக்காட்டியுள்ளார். சங்க இலக்கியத்திலும் சிலப்பதிகாரத்திலும் வியங்கோள் என்பது கூட்டுவினையாகவே வந்துள்ளது.

ஏவல் வியங்கொண்டு இளையரொடு எழுதரும்
(பதிற்று. 54:15)

(இளையரை முன்பு போர்க்குக் கையும் அணியும் வகுப்புழி ஏவித் தாமும் ஏவல்களைச் செய்து கொண்டு என்றவாறு என்பது பழைய உரை...)

செல்கம் செலவியங் கொண்மோ (குறுந். 114)
(செல்வோம், செல்ல விடுவாயாக)

வினைக்கடை கூட்ட வியங்கொண்டான் (சிலம்பு. 9:78)
(ஊழ்வினை தூண்ட ஏவலை மேற்கொண்டான்)

நேர்ப்பொருள் ஏவலை மேற்கொண்டான் என்பது. வினையின் பயனை அனுபவித்தல் என்ற பொருள் எனவே பொருள் தொழில்பெயராக வியங்கோள் என்ற சொல் அமைந்தது.

தொல்காப்பியரும் 'ஏவல் கண்ணிய வியங்கோள்' என்று கூறியது வியங்கோளில் ஏவல் தொனி இருக்கிறது என்பது பெறப்படுகிறது. ஆங்கிலத்தில் வியங்கோள் மறைமுக ஏவல் (Implied Command) என்று அழைக்கப்படுவதும் அதை உறுதி செய்கிறது.

வியங்கோள் ஏவுதல் என்று விளக்கிய சேனாவரையர் 'வாழ்த்துதல் முதலாகிய பிற பொருளும் உடைத்ததாகலின்' என்று கூறுவதால் (707) கூடுதல் பொருள் இருப்பதே தனி வகையாகக் கருதத் தூண்டியிருக்கவேண்டும் என்பது புலனாகிறது.

தெய்வச்சிலையார் 'வியங்கொள வருதலாவது தொழிலைப் பெயர்ப் பொருண்மை கொள்ளுமாறு வரும் ஏவல்' என்று வேற்றுமையியலில் (550) விளக்கும்போது ஏவலும் வியங்கோளும் சரியாக வேறுபடுத்தப்படவில்லை என்றாலும் அவரே வினையியலில் 'வியங்கோள் என்பது யாதோ எனின் செய்க எனினும் பொருட் கண்ணும், தவிர்க என்னும் பொருட்கண்ணும், வேண்டிக்கோடல் பொருட்கண்ணும் வருவது என்று விளக்கும் போது வியங்கோள் என்பது தவிர்க/வேண்டுக + ஏவல் என்று கொள்ளவைத்து வியங்கோள் ஒரு வகையான ஏவல் என்பதைப் புலப்படுத்துகிறார். அவர் கருத்துப்படி, செய்க என்னும் பொருள் என்பது உடன்பாட்டில் விதித்தல் பொருள் என்றும் தவிர்க என்னும் பொருள் என்பது எதிர்மறையில் (இங்குச் சொல் நிலையில் எதிர்மறை; சொல்லியல் அதாவது விகுதி நிலையில் விதித்தல் என்றும், வேண்டிற்கோடல் பொருள் என்றும் அவைகளை

விளக்கலாம். இவைகளுக்கான விகுதி, ஏவல் விகுதியிலிருந்து மாறுபட்டது மட்டுமல்ல; இடத்துக்கு இடம் (தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகியவைகளுக்கும்) மாறுபட்டது என்பது அவர் கருத்து. அது பற்றி முற்பகுதியில் விளக்கப் பட்டது.

முன்னிலையிலும் வியங்கோள் (நீ வாழ்க) வருவதைக் கவனித்த சேனாவரையர் அது சிறுபான்மை என்று கொள்ள நச்சினார்க்கினியர் முன்னிலையில் ஏவலுக்கும் வியங்கோளுக்கும் பொருண்மை நிலையில் வேறுபாடு காணாமல் திணை நிலையிலும் சமூக நிலையிலும் ஏவல் கண்ணியது/ஏவல் கண்ணாதது என்ற நிலையிலும் வேறுபாடு குறிப்பிட்டுள்ளார்.

விதித்தல், வாழ்த்துதல், வேண்டிக்கோடல் என்ற மூன்று பொருண்மையை நச்சினார்க்கினியர் இடம் (முன்னிலை, தன்மை, படர்க்கை) ஏவல் கண்ணியது/கண்ணாதது என்ற இரண்டு நிலையில் உயர்ந்தோன், இழிந்தோன் என்று மூன்று கூறுகளை இணைத்தே பேசுகிறார்.

> 'கூறுகின்றவர் கருத்தான் ஏவல் கண்ணியே வரும். உயர்ந்தான் இழிந்தானை இன்னது செய்க என விதித்தல் ஏவல் கண்ணியது. இழிந்தான் உயர்ந்தானை இன்னது செய்ய வேண்டும் என வேண்டிக்கோடலும் ஏவல் கண்ணிற்று'

என்பார் நச்சினார்க்கினியர். இங்கு விதித்தல், வேண்டிக்கோடல் ஆகிய இரண்டுமே வியங்கோள் என்று நச்சினார்க்கினியர் கொள்ள, விதித்தல் ஏவல் கண்ணாதது என்று கல்லாடர் கொண்டுள்ளார். உண்மையில் தொல்காப்பியர் இங்குச் சமூக மாறுபாடு பற்றிக் குறிப்பிடவில்லை. எனவே அங்கு நச்சினார்க்கினியரின் கால உணர்வும் அவருடைய சமூக உணர்வும் அடங்கியுள்ளன.

> 'முன்னிலையும் .தன்மையும், ஆகிய இரண்டு இடத்துப் பொருளோடும் அஃறிணைக்கண் பெரும்பான்மையும் நிலைபெறாது; உயர்திணைக் கண் பெரும்பான்மையும் நிலைபெறும்.

என்பது வியங்கோள் பற்றிய சூத்திரத்தின் நச்சினார்க்கினியர் பொழிப்புரை. சுருக்கமாகச் சொன்னால் ஏவல் பொருள் வேறு; வியங்கோள் பொருள் வேறு. முன்னது படர்க்கையாரை

முன்னிலையாக்கி ஏவுதல் - விதித்தல் மட்டும் செய்து. ஆனால் வியங்கோள் படர்க்கையாரை ஏவுதல், வேண்டிக்கோடல், வாழ்த்துதல் ஆகியவைகளைச் செய்வது என்று வேறுபாடு செய்யலாம். ஆனால் இளம்பூரணர், தெய்வச்சிலையார், நச்சினார்க்கினியர், கல்லாடர் ஆகியோர் தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூன்று இடத்துக்கும் வரும் என்று கூறினாலும் அவர்களுக்குள் சிறுசிறு வேறுபாடு உள்ளது.

தொல்காப்பியர் முதல் வேற்றுமை கொண்டுமுடியும் சொற்களைப் பட்டியலிடும்போது 'வியங்கொளவருதல், வினைநிலை உரைத்தல்' (550) என்று கூறுவதால் வினைநிலை உரைத்தல் என்பது முற்றுவினைகளைக் குறிப்பதால் வியங்கோளில் ஏவல் அடங்கியிருப்பதாக நினைக்கத் தோன்றுகிறது. முன்னர் ஏவலுக்கும் வியங்கோளுக்கும் பொருள் தொடர்பு இருப்பது விளக்கப்பட்டது. அந்த நிலையில் அவை துணை வழக்கில் வருவதாக அமைந்துவிடுகிறது. ஆனாலும் அவைகளுக்கு உரிய விகுதிகளும் மாறுபட்டு இடக் கட்டுப்பாடு (ஏவல் முன்னிலையில் வியங்கோள் படர்க்கையில் வருவது) எண் கட்டுப்பாடு (ஒருமை/பன்மை ஏவலுக்கு உள்ள வியங்கோளுக்கு இல்லை) ஆகிய காரணங்களால் தனித்தனி இலக்கணக் கூறாகக் கருத வைத்துவிட்டது.

### 8.5. தொடரியல் : இடக்கட்டுப்பாடு

> முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடும்
> மன்னா தாகும் வியங்கோட் கிளவி (711)

தொல்காப்பியர் வியங்கோள் தன்மை, முன்னிலை ஆகிய இரண்டு இடத்துக்கும் வராது என்று குறிப்பிட்டுள்ளார். வழக்கம் போல எல்லா உரையாசிரியர்களும் படர்க்கையில் வருவது பெரும்பான்மை; ஏனைய இரண்டு இடங்களில் வருவது சிறுபான்மை என்று கருத்துத் தெரிவித்துள்ளார்கள். அவைகளில் சிறுசிறு வேறுபாடு இருந்தாலும் தன்மையிலும் முன்னிலையிலும் வரும் என்ற கருத்து தொல்காப்பியர் கருத்துக்கு மாறுபட்டது.

> 'முன்னிலை தன்மை இரண்டு இடத்தும் செல்வன வாகிய வியங்கோள் வினைச்சொல் சிறுவரவின என்ற வாறு. வரலாறு: நீர் செல்க, நீ செல்க, யான் செல்க. இனி அவன் செல்க, அவள் செல்க, அவர் செல்க, அது செல்க, அவை செல்க என்பன பெருவரவினதாம்'

என்பது இளம்பூரணர் வாசகம்.

உண்மையில் பெரும்பான்மை, சிறுபான்மை என்பது இரண்டு கேள்விகளை எழுப்புகிறது. 1. பெரும்பான்மை என்பது பயிற்சி எண்ணிக்கையா (Token Frequency), அதிக வினைகளில் வரும் வகை எண்ணிக்கையா (Type Frequency)?

வருணனை இலக்கணத்தில் பயிற்சி எண்ணிக்கை பற்றிக் கருத்துச் செலுத்தமாட்டார்கள். அதனால்தான் பிற உரையாசிரியர்கள் பொருள் வேறுபாடு, விகுதி வேறுபாடு, இட வேறுபாடு ஆகிய கட்டுப்பாடுகளை விதித்துள்ளார்கள். இளம்பூரணர் ஏவுதல் பொருளை மட்டும் உடையதாகக் கொண்டுள்ளார்.

> ''ஆயீரிடத்தொடு கொள்ளாது' என்னாது 'மன்னாது ஆகும்' என்றதனான் அவ்விடத்தொடு சிறுபான்மை வருதல் கொள்க'

என்று சேனாவரையர் முதலில் கூறி

> 'தன்மைக்கண் ஏவல் இல்லை, முன்னிலைக்கண் ஏவல் வருவதுண்டேல் கண்டுகொள்க'

என்று பிற்பகுதியில் கூறுவதால் வியங்கோள் ஏவல் பொருளில் தன்மையிலும் முன்னிலையிலும் வராது என்பது புலனாகும். வாழ்த்துதல், வேண்டிக்கோடல் பொருளில் மட்டுமே வரும் என்பது அவர் கருத்து. அவர் உதாரணங்கள் வருமாறு:

சிறுபான்மை: நீ வாழ்க வாழ்த்துதல் பொருள்/முன்னிலை ஒருமை

யானும் நின்னொடு உறைக - வேண்டிற்கோடல் பொருள்/(உளப்பாட்டுத் தன்மைப் பன்மை)

கடாவுக பாக நின் தேர் வேண்டிற்கோடல் பொருள்/முன்னிலை ஒருமை

இங்கு 1. படர்க்கைக்கு உதாரணங்கள் கொடுக்காதது. 2. தன்மைக்கண் ஏவல் இல்லை என்பது உலகப் பொதுவானது. 3. முன்னிலைக்கண் ஏவல் வருவதுண்டேல் கண்டு கொள்க என்பது. நீ செல்க போன்ற வடிவம் வராது என்று பொருளா? என்று கருதவேண்டியிருக்கிறது.

தெய்வச்சிலையார் கருத்துப்படி ஏவுதல் (உடன்பாடு, எதிர்மறை) வேண்டிக்கோடல் ஆகிய பொருளில் வியங்கோள் வரும். செய்க, தவிர்க உண்க என்பவை படர்க்கை வியங்கோள். இது படர்க்கை ஐந்து பாலுக்கும் உரியது. அவன்/அவள்/அவர்/அது/அவை வாழ்க என வரும்.

நீ வாழ், நீ உண், நீ தவிர் என்பவை ஏவல் முன்னிலை.

யான் வாழ்வல், உண்பல், தவிர்வல் என்பவை தன்மை.

இதன்படிப் பொருள் ஒன்று, வடிவம் வேறுவேறு. அதே சமயத்தில் முன்னிலையிலும் -க விகுதி வருவதைக் கவனித்த தெய்வச்சிலையார் அது 'மரூஉ வழக்கு' என்று குறிப்பிட்டுள்ளார்.

> 'நீ வாழ்க, உண்க எனவும் வருமால் எனின் அவை அக் ககரம் பெறாக்காலும் பொருள் இனிது விளங்குதலின் அவ்வாறு வருவன மரூஉ வழக்கு என்று கொள்க'

என்ற அவர் வாசகத்தில் நீ வாழ்க - வாழ் என்பன உறழ்ச்சி. ககரம் சேர்ந்தது மரூஉ வழக்கு என்பது பேச்சு வழக்கு அல்லது பிற்கால வழக்கு. இதன்படிப் பிற்காலத்தில்தான் ஏவலும் வியங்கோளும் இணைந்துவிட்டன என்று பொருள். அதே சமயத்தில் 'கடாவுக பாக நின் கால்வல் நெடுந்தேர்' என்று பிறர் காட்டிய செய்யுள் வழக்கில் முன்னிலையில் வியங்கோள் ஏவுதல் பொருளில் வந்ததுள்ளதற்கும் அவர் கூறிய சமாதானம் மேலே விளக்கப்பட்டது.

> 'முன்னிலையும் தன்மையுமாகிய அவ்விரண்டு இடத்துப் பொருளோடு அஃறிணைக்கண் பெரும் பான்மையும் நிலைபெறாது; உயர் திணைக்கண் நிலைபெறும்'

என்று நச்சினார்க்கினியர் திணைக் கட்டுப்பாடு விதித்துள்ளார். தொல்காப்பியர் இலக்கியத்தில் அஃறிணைப் பொருளும் பேசுவது போலவும் கேட்பது போலவும் கூறலாம் என்று (1142, 1456) என்று குறிப்பிட்டாலும்

> 'முன்னிலைக்கண் வரும் அஃறிணை ஏவற் பொருண்மையை முற்ற முடியாது என்று உணர்த்தற்கு 'மன்னாதாகும்' என்றார். எனவே அஃறிணைக்கண் வரும் முன்னிலை வியங்கோட்கு ஓரன்ன உரிமை இன்று என்றார் ஆயிற்று. தன்மை அஃறிணைக்கு இன்மை கூறல்வேண்டாவாயினும் உயர்திணைக் கண் சிறுபான்மை வழங்குதல் பற்றி உடன் ஓதினார்'

என்பது அவரது சமாதானம்.

தொல்காப்பியத்திலேயே வியங்கோள் என்று பல இடங்களில் பயின்று வந்துள்ளது (பாலசுப்பிரமணியன், 1983 (2001:14) இப்போது கண்டறியப்பட்டுள்ளது. அப்படியானால் தொல்காப்பியம் இலக்கணம் குன்றக் கூறலாக அமையும் அல்லது தொல்காப்பியர் வியங்கோள் என்பதற்கு மறைமுகமாகப் படர்க்கையில் உள்ளவனை மட்டும் வேண்டுதல் என்று பொருள் கொண்டிருக்க வேண்டும் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. தொல்காப்பியரே எழுத்ததிகாரத்தில் ஏவல் கண்ணிய வியங்கோள் (210:4) என்ற ஒரு வகையைப் பற்றிக் கூறுவதால் அது ஏவல் கண்ணாததாகப் படர்க்கையில் வருவதாக இருக்கலாம். அப்படியானால் முன்னிலையில் வருவது ஏவல் கண்ணாத வியங்கோள்/அதாவது மறைமுக ஏவல் (Implied command) அல்லது மரியாதை ஏவல் (polite command or honorific imperative) என்று வேண்டுமானால் கொள்ளலாம். மேலும் ‘செய்யார்/செய்யீர் என்பவைகளை உரிமை ஏவல் என்று கொள்ள வேண்டும். எனவே தமிழில் செவ்வெண் ஏவல், உரிமை ஏவல், அன்பு ஏவல் (வியங்கோள்) என்றும் மூன்று வகை இலக்கணக்கூறுகள் அமைக்க வேண்டும்.

செவ்வெண் ஏவல் = வினைஅடி + (எதிர்மறை) + ஏவல் (ஒருமை/பன்மை)

| | |
|---|---|
| செய் | - ஒருமை |
| செய்மின் | - பன்மை |
| செய்யன்மின் | - எதிர்மறைப்பன்மை |

உரிமை ஏவல் = வினையடி + உரிமை ஏவல் (ஒருமை/பன்மை)

| | |
|---|---|
| செய்யாய் | - ஒருமை |
| செய்யீர் | - பன்மை |

அன்பு ஏவல் (வியங்கோள்) = வினையடி + (எதிர்மறை) + வியங்கோள் (எண் வேறுபாடு இல்லாதது)

செய்க
செய்யற்க

முன்னது இரண்டும் முன்னிலைக்கும், பின்னது முன்னிலைக்கும் படர்க்கைக்கும் உரியன.

# 9
# உயர்சொற் கிளவி

## *9.1. முன்னுரை*

*தமிழில் எண் என்ற இலக்கணக் கூறில் ஒருமை, பன்மை என்ற இரண்டு வகை இருப்பது பலரும் பரவலாக அறிந்ததே; உயர்வு ஒருமை (Honorific Singular) 'சிறப்பு' அல்லது சிறப்பொருமை என்ற மூன்றாவது இலக்கணக் கூறு இடைக் காலத்திலிருந்து அங்கீகரிக்கப்பட்டுள்ளது ('ஒருவன், ஒருத்தி, ஒன்றாம் சிறப்பொடு பல்லோர், பலவை' என்பது வீரசோழியம். 30:1.). சங்க இலக்கியத்திலேயே உயர்வு ஒருமை இருப்பது பலராலும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது (உ.ம். சண்முகம், 1971: 130; முத்துச் சண்முகன், 1974; அகத்தியலிங்கம் 1983:143-62, 1984). மேலும் தொல்காப்பியர் இதை **உயர்சொற்கிளவி** (கிளவி. 27) என்று குறிப்பிட்டு அதன் வடிவத்தையும், பொருளையும், துறைவழக்கு நோக்கில் அதன் பயன்பாட்டையும் விளக்கியுள்ளார். மேலும், இடையியலில் (சூ. 22) இயற்பெயர்கள் உயர்வு ஒருமையாகப் பயன்படும் முறை பற்றியும் அதன் வினைமுற்று வடிவம் பற்றியும் விவரித்துள்ளார். இவைகளுக்கு மாறாக, எச்சவியலில் (64) ஒருமைச் சொல் பன்மைக்கு ஆகும் இடம் உண்டு என்று ஒரு சூத்திரம் காணப்படுவதும் இங்குக் கவனிக்கப்பட வேண்டியதே.*

*உயர்சொற்கிளவி பற்றிய தொல்காப்பியச் சூத்திரங்கள் அவர் காலத்தில் நடந்த சமூக மாற்றத்தால் ஏற்பட்ட மொழி மாற்றத்தையும் (பன்மைச் சொல்லை ஒருமைக்குப் பயன் படுத்துதல்), அது பற்றிய அவர் மனப்பாங்கையும் (மொழி உணர்வு அதாவது பேச்சு மொழியில் கையாளலாமே தவிர எழுத்துமொழியில் பயன்படுத்தக்கூடாது) விவரிக்கின்றன. இங்குச் சூத்திர உருவாக்கமுறை, உயர்சொற்கிளவி எந்தெந்த நிலையில் வரலாம் ஆகியவை பிரச்சினைக்கு உரியவையாக உள்ளதால் அவை ஆராய எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.*

முத்துச்சண்முகன் (1974) சங்க இலக்கியத்தில் - குறிப்பாகக் குறுந்தொகையில் வரும் முன்னிலை, படர்க்கை மூவிடப் பெயர்களின் பயன்பாடுகளில் முரண் - 'ஒரே ஆள் தலைவனை நீ எனவும், நீர் எனவும், அவன் எனவும், அவர் எனவும் சுட்டும் வழக்கைக் கவனித்து அதற்கான காரணங்களை ஆராய்ந்து அவை இடப்பேச்சு வழக்காகவோ (வட்டார வழக்கு), சாதிப் பேச்சு வழக்காகவோ (சமூக வழக்கு), தோழி, தலைவி மனநிலை ஒட்டிய வழக்காகவோ இருத்தல் இயலாது எனவும், பாட்டு யார் கூற்று என்று கொண்டு அதாவது கூற்று (பேசுவோர்) அடிப்படையில் சில பொதுமைகளையும், மீறல்களையும் புள்ளியியல் அடிப்படையில் கண்டு, சில மீறல்களை அதற்குரிய கூற்றுக்கு உரியாரை மாற்றலாம் என்றும், சிலவற்றை உயர்சொற்கிளவி கையாளத் தொடங்கும் வரலாற்று மாற்றத்தின் காரணமாகக் 'கண்டிப்பான வரன்முறை ஏற்படாததும் காரணம் என்றும் விளக்கியுள்ளார் (ப. 10-1). அகத்தியலிங்கம் (1983, 1984) கேட்போர், பேசுவோர் என்ற பாகுபாடு செய்தாலும் வரலாற்று நோக்குக்கே முக்கியத்துவம் கொடுத்துள்ளார்.

### 9.2. உயர்சொற்கிளவி

ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய உயர்சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல (கிளவியாக்கம் 27)

என்பதே அந்தச் சூத்திரம். இங்கு நான்கு பிரச்சினைகள் உள்ளன. அவையாவன: 1. 'ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவியும், ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்' என்பதன் பொருள் என்ன? மொழிப் பொருள் பிரச்சினை. 2. அவை எந்தெந்த வடிவங்களைக் குறிக்கின்றன? - அதாவது வடிவப் பிரச்சினை. 3. 'உயர்சொற்கிளவி' என்பதன் சமூகப் பொருள் என்ன? - சமூகப் பொருள் பிரச்சினை. 4. 'வழக்கு'; 'இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல' என்பதன் பொருள் என்ன? - துறைவழக்கு (Register) பிரச்சினை. 4. இவைகளோடு சூத்திரத்தில் தொடர் அமைப்பு - சூத்திர உருவாக்க நோக்கில் புறநிலை அமைப்பும் அது உணர்த்தும் குறிப்புப் பொருளும் விவாதத்துக்கு உரியவை.

பன்மை வடிவமே உயர்வு ஒருமையைக் குறிப்பதால் சூழலே ஒருமை என்ற கருத்தைப் பெறவைக்கிறது. மொழி அமைப்பு நோக்கில் பன்மைப்பெயர் வடிவம், ஒருவர் என்ற

சொல்லால் பதிலீடு செய்வது என்றும் விளக்கலாம். மேலும் ஒரு என்ற எண்ணுப் பெயரடையை ஏற்று வருவது என்பதும் அதன் சிறப்பு. ஆசிரியர் என்பது பன்மை வடிவமாக இருந்தாலும் சிறப்பொருமையாக இருந்தால் மட்டுமே 'ஒரு' என்ற அடையை ஏற்கும்.

உரையாசிரியர்களின் கருத்துகளையும் அவைகளின் வன்மை மென்மைகளையும் முதலில் பார்த்துவிட்டு, சூத்திரத்தின் கருத்தையும் அமைப்பையும் புரிந்துகொள்ள முயலுவோம்.

### 9.2.1. மொழிப் பொருள்

'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும், ஒன்றனைக் குறிக்கும் பன்மைக் கிளவியும் பெயர்களைக் குறிக்கிறதா? அல்லது பெயர்களையும் வினைகளையும் குறிக்கிறதா என்ற கேள்வி முதலில் எழுகிறது. உரையாசிரியர்கள் எல்லோரும் பெயர் களையும் குறிப்பாகப் பதிலீட்டுப் பெயர்களையும், அவைகளுக்கு இணையான பயனிலைகளையும் குறிப்பதாகக் கொண்டுள்ளார்கள். 'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி' என்பது உயர்திணைப் பன்மைச் சொல்லைப் - பலர்பால் சொல்லைக் குறிக்கிறது என்பதில் யாருக்கும் சந்தேகமே இருக்கமுடியாது. இருந்தாலும் அதற்கு உரிய சரியான உதாரணம் என்ன? என்பதில் உரையாசிரியர்களிடையே கருத்து வேறுபாடு காணப்படுகிறது. இது பற்றிப் பின்னால் விளக்கப்படும். 'ஒன்றனைக் குறிக்கும் பன்மைச் சொல்' என்பதைப் பொதுவாக அஃறிணைப் பன்மைச் சொல் - பலவின் பால் என்றே கருதத் தோன்றும். ஆனால், உரையாசிரியர்கள் அதையும் பலர்பால் சொல்லாகவே கொண்டுள்ளார்கள்.

இளம்பூரணர் பொழிப்புரையில் 'அஃறிணை ஒன்றைப் பன்மையாற் சொல்லுதல்' என்று எழுதி 'ஒருவனையும் தாம் வந்தான் என்ப. ஒன்றனையும் தாம் வந்தார் என்ப' என்று விளக்கியுள்ளார். அதாவது உயர்திணை, அஃறிணை ஆகிய இரண்டுக்கும் ஒரே உதாரணத்தைக் கொடுத்துள்ளார். தாம் என்பது இலக்கணப்படிப் படர்க்கை விரவுப்பன்மைப் பெயர்; வந்தார் என்பது படர்க்கைப் பலர்பால் பயனிலை. அதாவது எழுவாய் உயர்திணைக்கும் (பலர்பால்) அஃறிணைக்கும் (பலவின் பால்) பொதுவானது. அஃறிணை எழுவாயை உயர்சொற்கிளவி யாகக் கருதுவதால் பயனிலை, உயர்திணைக்கு உரிய பலர்பாலை ஏற்று வந்திருக்கிறது. அப்படியானால், 'பன்மை' என்பது பெயரில்-

எழுவாயில் படர்க்கை விரவுப் பன்மையையும், வினையில் - பயனிலையில் படர்க்கைப் பலர்பாலையும் குறிக்கும் என்றாகிறது. அது எப்படிப் பொருந்தும் என்ற கேள்வி எழுகிறது. அந்தக் கேள்விக்குப் பதில் காணப் பிற உரையாசிரியர்கள் எப்படி உரை எழுதியுள்ளார்கள் என்று பார்ப்போம்.

சேனாவரையரும் 'ஒன்றனைக் கூறும் பன்மைக்கிளவி' என்பதற்கு 'ஒன்றனைச் சொல்லும் பன்மைச் சொல்' என்று பொழிப்புரை எழுதிவிட்டு, இரண்டு வகைக்கும், உதாரணமாகத் தன்மைப் பன்மை வடிவத்தையும் (யாம் வந்தோம் - யாம் தொல்காப்பியர் கருத்துப்படி (பெயர். 8) உயர்திணைப்பன்மை), முன்னிலைப் பன்மை வடிவத்தையும் (நீயிர் வந்தீர் - நீயிர் தொல்காப்பியர் கருத்துப்படி (பெயர். 30) விரவுப் பன்மை), அண்மைச் சுட்டுப் பலர்பால் வடிவத்தையும் (இவர் வந்தார் - இவர் உயர்திணைப் பலர்பால்) கொடுத்து, வினைகளை - பயனிலைகளை அந்தந்த எழுவாய்க்கு ஏற்றவையாகக் கொடுத்துள்ளார். மேலும் அவர், சூத்திர வாசகத்துக்கும் உதாரணத்துக்கும் இடையே ஏற்பட்ட முரணை உணர்ந்து, விளக்கவுரையில் 'பன்மைக் கிளவியும்' எனப் பொதுவகையாற் கூறினாரேனும் உயர்திணைப் பன்மையும், விரவுப் பன்மையுமே என்றதற்கு 'வழக்கினாகிய' என்றார் என்று கூறி ஓரளவு சமாளித்துவிட்டார். அப்படியானால், ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவிக்கும், ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவிக்கும் அம்மூன்று உதாரணங்களையும் கொள்ளவேண்டும் என்று நினைக்கவேண்டியிருக்கிறது. உண்மையில் ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவிக்கு உதாரணமாகப் படர்க்கைப் பலர்பால் மட்டுமே பொருந்தும். அதாவது அது பேசப்படுவோராக - பேசப்படு பொருளாக மட்டுமே கருதுவது பொருந்தும். அப்படியானால், 'இவர்' அஃறிணை உயர்ச்சொற் கிளவியாகச் செயல்படும்போது அது திணை மாற்றமும் (உயர்திணை அஃறிணை ஆதல்), எண் மாற்றமும் (பன்மை, ஒருமையாய் உயர்சொற்கிளவி ஆதல்) பெறுகிறது. சூத்திரத்தில் திணை மாற்றம் குறிப்பிடப்படவில்லை. அதே சமயத்தில், 'இவர்' என்பது ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவிக்கும் பொருந்துவதில் ஐயம் இல்லை. உண்மையில், சூத்திர வாசகப்படி 'இவர் வந்தார்' உயர்திணை உயர்சொற்கிளவி என்றால் 'இவை வந்தன' என்பது அஃறிணை உயர்சொற் கிளவியாக இருக்கவேண்டும். 'வழக்கு' - இலக்கியமே 'ஒன்றனைக் குறிக்கும் பன்மை' என்பது

வினைமுற்றில் பலர்பால் இருக்க வேண்டும் என்று கொள்ள வைத்து அதற்கேற்ப எழுவாயைப் பலர்பாலாக இருக்கவேண்டும் என்ற நிலையை ஏற்படுத்திவிட்டது. எனவே, இங்கு இரண்டு கேள்விகள் எழுகின்றன: 1. ஒருவரைக் குறிக்கும் பன்மைக்கிளவி உயர்திணை என்பதால் தன்மைப் பன்மையும், பலர்பாலும் அடங்கும் என்பதில் சந்தேகம் இல்லை. விரவுப் பன்மையான முன்னிலைப் பன்மை எப்படி அடங்கும். 2. 'ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவி' என்பதற்குப் பலர்பால் கிளவி என்று எப்படிக் கொள்வது?

நச்சினார்க்கினியர் இரண்டாவது கேள்வியை நினைத்துப் பார்த்து 'ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவி' என்பதற்கு 'அஃறிணை ஒன்றனை உயர்திணைப் பன்மைப் பாலாற் சொல்லும் சொல்' என்று பொழிப்புரை எழுதி நம் சந்தேகத்தை ஓரளவு தீர்த்தாலும், 'பன்மைக் கிளவி' என்பதற்கு 'உயர்திணைப் பன்மைச் சொல்' என்று கொண்டதற்கு ஆதாரம் என்ன? என்ற கேள்வி எழுகிறது. அதற்கு உரையில் விடை இல்லை. உரைக்கும் சூத்திர வாசகத்துக்கும் முரண் இருப்பதை மறுக்கமுடியாது.

தெய்வச்சிலையாரும் 'ஒன்றனைச் சொல்லும் பன்மைச் சொல்' என்று பொழிப்புரை எழுதி அவர் வந்தார் என்ற உதாரணம் கொடுத்து 'ஒருவரையும், ஒருத்தியையும், ஒன்றினையும் இவ்வாறு கூறுதல்' உண்டு என்று விளக்கியுள்ளார். இங்குப் பொழிப்புரையும் உதாரணமும் எப்படிப் பொருந்தும் என்று நினைத்துப் பார்த்து, அதற்கு அவர் எந்த விதச் சமாதானத்தையும் தரவில்லை.

கல்லாடரும் பொழிப்புரையில் நச்சினார்க்கினியரைப் பின்பற்றினாலும், இளம்பூரணரைத் தழுவி உதாரணம் (தாம் வந்தார்) கொடுத்துள்ளார். பொதுவாக உரையாசிரியர்கள் ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவி என்பது உயர்திணைப் பன்மையைக் குறிப்பதாகக் கொண்டுவிட்டார்கள். அவர்கள் கொடுத்த உதாரணங்களின் வன்மை-மென்மை பின்னால் விளக்கப்படும்.

### 9.2.2. சூத்திர அமைப்பு

உரை, வழக்கு ஆகிய இரண்டின் அடிப்படையில் பார்க்கும் போது, 'பன்மைக்கிளவி' என்பது பலர்பாலைக் குறிக்கிறது என்பது தெளிவு. எனவே அதற்கு முன்னுள்ள 'ஒருவரைக் குறித்த', 'ஒன்றனைக் குறித்த' என்ற பெயரெச்சத் தொடர்கள் இரண்டும்

'இனச் சுட்டில்லாப் பண்பு' (Non-restrictive adjective) ஆக வந்துள்ளது என்று இலக்கண நிலையில் கொள்ளவேண்டும். இலக்கிய நிலையில் பார்த்தால், தொல்காப்பியர் *'ஒன்றனைக் கூறும் பலர்பால் கிளவியும்' என்பதற்குப் பதிலாக 'ஒன்றனைக் குறிக்கும் பன்மைக் கிளவியும்' என்று சூத்திரம் செய்தது ஒழுங்கமைவு அல்லது ஒருமுகப்போக்கு (அதாவது முதலடியைப் பின்பற்றியது) என்ற உத்தி கருதியது என்று நினைக்கத் தோன்றுகிறது. பொதுவாக இந்தச் சூத்திரம் எளிமையான அமைப்பை உடையது போலத் தோன்றினாலும் வாக்கிய அமைப்பைக் கூர்ந்து கவனிக்கும்போது சிக்கல் இருப்பதை உணர முடிகிறது.

முதல் இரண்டு அடியில் குறிப்பிட்ட ஒருவரைக் குறித்த பன்மைக் கிளவி, ஒன்றனைக் குறித்த பன்மைக் கிளவி ஆகிய இரண்டின் பொதுப் பெயரே 'உயர் சொற் கிளவி' என்பது. அல்லது உயர்சொற் கிளவி என்பதன் விளக்கமே அடுத்த இரண்டு அடியும். அதன் சமூக வழக்கு - துறை வழக்குப் பற்றிய விளக்கமே. அந்தப் புறநிலை வாக்கியத்தின் முந்தைய புதைநிலை அமைப்பு: 'உயர் சொற்கிளவி வழக்கின் ஆகியது; அது இலக்கண மருங்கிற் சொல்லாறு அல்ல' என்பதே. இங்குள்ள இரண்டு வினைத் தொடரில், முன்னதைப் (வழக்கின் ஆகியது) பெயரெச்சத் தொடராக்கி 'உயர்சொற்கிளவி' என்ற எழுவாய்க்கு அடையாக (வழக்கினாகிய உயர்சொற்கிளவி) அமைத்ததன் மூலம் இரண்டாவது வினைத் தொடருக்கு (இலக்கண மருங்கிற் சொல்லாறு அல்ல) அந்த வாக்கியத்தின் ஒரே பயனிலை என்ற தகுதியைக் கொடுத்து முக்கியப்படுத்தப்பட்டிருப்பதை உணரலாம். அதன்மூலம் பொருள் நிலையில் உயர்சொற்கிளவி இலக்கண வழக்கு அல்ல என்பதற்குக் கூடுதல் அழுத்தம் ஏற்படுகிறது. ஆகவே, உயர்சொற்கிளவியை- உண்மையில் சமூக மாற்றத்தால் ஏற்பட்ட மொழிமாற்றத்தை இலக்கிய வழக்காகத் தொல்காப்பியர் கொஞ்சம் வன்மையாக ஏற்க மறுக்கிற உணர்வு இங்குப் புலப்படுகிறது.

'இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல' என்ற தொடரும் குறிப்புப் பொருள் உடையதாகவே தோன்றுகிறது.

> இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
> வழக்காறு அல்ல செய்யுள் ஆறே (கிளவி. 18)

என்ற சூத்திரத்தை ஒப்புநோக்கும்போது அந்தத் தொடர்க்கட்டு (இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல) பற்றிய உண்மை புலனாகும்.

'இலக்கண மருங்கின் சொல்' என்ற தொடர் 'செய்யுள்' என்ற சொல்லுக்குப் பதிலாக இங்குப் பயன்படுத்தப்பட்டிருப்பதை உணரலாம். 'செய்யுள்' என்ற தனிச்சொல் ஓர் அடியாக அமைய முடியாது என்பதற்காக 'இலக்கண மருங்கிற் சொல்' என்ற தொடரை உருவாக்கியுள்ளாரோ என்றுகூட நினைக்கத் தோன்று கிறது. இதற்கும் மேலாக, வழக்கில் வந்தாலும் இலக்கணப்படி சரி இல்லை என்றால் செய்யுளில் வருவதைப் பற்றிப் பேசவே வேண்டாம் என்ற கருத்தைப் புலப்படுத்துவதற்கு இப்படி அமைத்தாரோ என்றும் கருதத் தோன்றுகிறது. அப்படியானால் உயர்சொற்கிளவியைத் தொல்காப்பியர் கடுமையாக எதிர்க்கிறார் என்று ஆகும். இதைச் சரியாகப் புரிந்துகொள்ளச் செய்யுள், வழக்கு என்பதை எந்தெந்தப் பொருளில் கையாண்டுள்ளார் என்று பார்க்கவேண்டும். அது பின்னால் (5) மேற்கொள்ளப்படுகிறது.

இந்த நோக்கில் பார்க்கும்போது 'உயர்சொற்கிளவி' என்ற தொடரின் அமைப்பையும் கவனிக்கத் தோன்றுகிறது. சேனாவரையரே எச்சவியலில் (20) 'உயர்சொல்' என்று கூறினாலே போதும்; எனவே உயர்சொற்கிளவி என்ற தொடரில் 'கிளவி' என்பது மிகை என்று முதலில் கூறிவிட்டுப் பின்னால் அதைப் பயன்படுத்தியதற்குச் சமாதானமும் சொல்லியுள்ளார். 1. தொல்காப்பியரே இடைச்சொற் கிளவி, உரிச்சொற்கிளவி போன்ற தொடர்களைக் கையாண்டுள்ளார். அங்கும் 'கிளவி' என்பது மிகையே. 2. சாரைப் பாம்பு என்ற இருபெயரொட்டுப் பண்புத்தொகையில் சாரை என்பது பாம்பை விசேடித்துநின்றது என்று கொள்ளலாம் என்பது அவர் கருத்து. ஆனால் அவரே சாரைப் பாம்பு என்ற தொடரை விளக்கும்போது அங்குப் பாம்பு என்பது மிகை என்ற கருத்தை ஒத்துக்கொண்டு வழக்கில் 'கேட்டார்க்குப் பொருள் இனிது விளங்க வழங்கப்பட்டு வருவது' என்று சமாதானமும், 'வந்தேன்', 'யான் வந்தேன்' ஆகிய இரண்டும் பொருள் ஒன்றாயினும், பின்னதும் வழக்கில் இருப்பதுபோல என்ற விளக்கமும் கொடுத்துள்ளார்.

பொதுவாக, உரையாசிரியர்கள் சூத்திரத்தில் மிகைச் சொற்கள் இருக்கக் கூடாது என்ற எண்ணம் உடையவர்கள். அதனால்தான், சேனாவரையர் மேலே கண்ட சமாதானத்தைக் கூறியுள்ளார் என்று எண்ணத் தோன்றுகிறது. சுருக்கமாகச் சொன்னால், தொல்காப்பியர் சூத்திரம் நுண்மையாக (Abstract) ஆக இருக்கக் கூடாது என்ற கருத்து உடையவர் (பார்க்க: தொல். மரபு. 102). ஆனால், உரையாசிரியர்கள் சூத்திரம் அப்படி

இருக்கவேண்டும் என்று எண்ணினாலும், நூலாசிரியாரை மதித்து அதற்கு ஓர் அமைதியோ அல்லது புதிய மொழி அமைப்பு உண்மையோ எடுத்துக்காட்டிவிடுவார்கள். இதைப் பொதுவாக, உரையாசிரியர்கள் தாங்கள் எழுதும் மூலநூலில் குறை காண மாட்டார்கள்; மாறாக அதிலுள்ள குறையைத் தங்கள் சாமர்த்தியத்தால் நிறைசெய்வார்கள் என்று கூறலாம்.

இதற்கும் மேலாக, இடைக்காலத் தமிழகத்தில் ஒரு புறம் அகத்தியர் என்பவர் எழுதியதாக அகத்தியம் என்ற நூலின் வழி நூலாகத் தொல்காப்பியத்தையும், அகத்தியரின் மாணவராகத் தொல்காப்பியரையும் கூறும் தொன்மம் கற்பிக்கப்பட்டது. இன்னொரு புறம், தொல்காப்பியம் தங்கள் கால மொழியின், இலக்கியத்தின் உண்மைகளை எல்லாம் கூறும் நூலாகக் காட்டும் முயற்சியும் உரையாசிரியர்களால் மேற்கொள்ளப்பட்டது. அது ஒருவகையில் வரலாற்றை முடக்கும் முயற்சி. இந்த நூற்றாண்டிலேயே தொல்காப்பியம் சங்ககால இலக்கண நூல்; அங்கு நேரடியாகக் குறிப்பிட்ட உண்மைகள் தவிர உரையாசிரியர்கள் கூறும் பிற உண்மைகள் சில அவர் கூறத் தவறியவை, சில பிற்காலத்தவை அதாவது தொல்காப்பியத்துக்கு மாறாக மொழியில் ஏற்பட்ட மாற்றங்கள் என்ற அறிவு ஏற்பட்டுத் தொல்காப்பியம் பற்றிய உரையாசிரியர்கள் ஏற்படுத்திய மாயை - எல்லாக் காலத்துக்கும் உரிய இலக்கண நூல் என்பது நீங்கியது.

### 9.2.3. வடிவங்கள்

உரையாசிரியர்கள் எல்லோரும் கிளவியாக்கச் சூத்திரத்தில் (27) பதிலீட்டுப் பெயர்களையே உதாரணங்களாகக் கொடுத்து, விதப்புக் கிளவியாக உயர்திணைச் சொற்கள் அஃறிணையிலும், அஃறிணைச் சொற்கள் உயர்திணையிலும் வருவதையும் எடுத்துக் காட்டியுள்ளார்கள். இவைகளைப் 'பொருள் உயர்வுச் சொற்கள்' என்று பொதுமைப்படுத்தலாம். இலக்கிய வழக்குகளைப் பார்க்கும்போது பொதுப்பெயர்களும், முறைப் பெயர்களும் கூட இதில் அடங்கும் என்றே நினைக்கவேண்டியிருக்கிறது. உரையாசிரியர்கள் இடையியல் (22) சூத்திரத்தில் அவைகளை அடக்க முயற்சித்துள்ளார்கள்.

#### 9.2.3.1. பதிலீட்டுப் பெயர்கள்

உயர்சொற்கிளவியாக வரும் பதிலீட்டுப் பெயரிலும் உரையாசிரியர்களிடையே கருத்து வேறுபாடு காணப்படுகிறது.

இளம்பூரணரும் அவரை ஒட்டிக் கல்லாடரும் பெயர் தெரியாத உரையாசிரியரும் தாம் என்ற படர்க்கைப் பதிலீட்டுப் பெயரையும், தெய்வச்சிலையார், 'அவர்' என்ற படர்க்கைச் சுட்டுப் பதிலீட்டுப் பெயரையும், சேனாவரையரும் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் யாம், நீயிர், இவர் என்ற தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூவிடப் பதிலீட்டுப் பெயர்களையும் உதாரணமாகக் கொடுத்துள்ளார்கள்.

தாம், அவர் என்பவை படர்க்கைப் பெயர்கள். எனவே கருத்தாடலில் பேசப்படுவோரை மட்டுமே குறிக்கும். ஆனால் உலகத்தில் பேசுவோர் தன்னையும் கேட்போரையும் உயர்சொற் கிளவியில் குறிப்பது உண்டு. வள்ளுவரே 'பெறுமவற்றுள் யாம் அறிவதில்லை' என்ற குறளில் (61) தன்னைப் பன்மையால் குறிப்பிட்டுள்ளார். அப்படியே உலகத்தில் சிலர் தன்னைப் பன்மையால் குறிக்கும் வழக்கம் இருப்பதை

வெண்மை எனப்படுவது யாதெனின் ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு

என்ற குறளில் (844) சுட்டிக்காட்டியுள்ளார். தொல்காப்பியரும் உரியியலில்

அன்ன பிறவும் கிளந்த அல்ல
பன்முறை யானும் பரந்தன வருஉம்
உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்
வரம்பு தமக்கு இன்மையின் ......... (98. 1-4)

என்று தன்னைப் படர்க்கைப் பன்மையால் (தமக்கு) குறித்துள்ளதைக் காணலாம். சங்க இலக்கியத்தில் மூவிடப் பெயர்கள் எல்லாம் உயர்சொற் கிளவிகளாக வந்துள்ளன. எனவே இளம்பூரணர், கல்லாடர், தெய்வச்சிலையார் ஆகியவர்கள் படர்க்கைப் பெயர் களை மட்டும் கொடுத்தது குன்றக் கூறலாய்ப் போய்விடுகின்றது. சேனாவரையரும் அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் மூன்று மூவிடப் பதிலீட்டுப் பெயர்களையும் உதாரணங்களாகக் கொடுத்தது சரியே. முத்துச் சண்முகன் (1974) குறுந்தொகையில் வரும் முன்னிலை, படர்க்கை மூவிடப்பெயர்களையும் பொதுப் பெயர்களையும் மட்டுமே ஆராய்ந்துள்ளார். அவர் தலைவனை நீர், அவர் என்ற மூவிடப் பெயர்களைத் தோழி கையாண் டுள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார்.

உயர்சொற்கிளவியைக் கருத்தாடல் நோக்கில் பார்ப்பதற்குப் பேசுவோர், கேட்போர் ஆகிய இருவருக்கும் இடையே இருக்கும் உறவுநிலை தெரிந்திருக்கவேண்டும். அதை இலக்கியத்திலிருந்து அறிந்துகொள்வதற்குப் பேசுவோர், தன்னையும் கேட்போரையும் குறிக்கப் பயன்படுத்தும் பதிலீட்டுப் பெயர்ச்சொற்கள் உதவி செய்யும்.

| பேசுவோர் | கேட்போர் |
|---|---|
| ஒருமை | ஒருமை |
| பன்மை | பன்மை |
| ஒருமை | பன்மை |
| பன்மை | ஒருமை |

என்று நான்கு வகையில் பயன்படுத்தலாம். முன்னிரண்டும் ஒத்த நிலையைக் குறிக்கும். இருந்தாலும், முதலாவது நெருக்கத்தையும் எளிமையையும் (Simplicity - Non-formality) இரண்டாவது முறை மரபொழுங்கையும் (Formality), தூரத்தையும் உணர்த்தும், மூன்றாவது கேட்போரின் உயர்நிலையையும், நாலாவது பேசுவோரின் உயர்நிலையையும் குறிக்கும். மூன்றாவதை வழக்கமாகப் பயன்படுத்துவோர் முதலாவதை நெருக்கம், கோபம் போன்ற காரணங்களுக்காகப் பயன்படுத்துவதும் உண்டு. உயர்நிலையை அதிகாரம் என்று சமூகமொழியியலார் பொதுமைப்படுத்துவார்கள். சில சமயங்களில் அதை மதிப்பு என்றும் நாம் கொள்ளலாம். அதிகாரமும், மதிப்பும் சமூகவயப்பட்டவை. நெருக்கமும் கோபமும் சூழல் வயப்பட்டவை. முன்னதைப் பண்பாட்டுச் சூழல் (Context of Culture) என்றும், பின்னதைப் பேச்சுச் சூழல் (Context of Utterance) என்றும் கொள்ளலாம்.

முத்துச்சண்முகன் (1974: 6) குறுந்தொகையில் பரணர் 3 பாடல்களில் (24, 60, 399) தலைவனை 'அவர்' என்றும், ஒரு பாடலில் (35) 'அவன்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளதை எடுத்துக் காட்டியள்ளார். இம்மூன்று பாடல்களிலும் தலைவனைக் குறித்துத் தலைவி ஏங்குவதாகவே உள்ளது.

'குழைய கொடியோர் நாவே;
காதலர் அவலக் கல்லென் றவ்வே' (குறுந். 24:5,6)

என்னும்போது ஊரார் அலர் தூற்றுவதால் பிரிவுத் துன்பம் அதிகமாகிறது.

'........................... காதலர்
நல்கார் நயவார் ஆயினும்,
பல்காற் காண்டலும் உள்ளத்துக்கு இனிதே' (குறுந். 60:4-6)

என்ற அடிகளிலும்,

'காதலர்
தொடுவுழி தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழி பரத்த லானே' (குறுந். 399:2-5)

என்ற அடிகளிலிலும் காதலனுக்கு ஏங்குவதே விவரிக்கப் படுவதால் உயர்சொற்கிளவி கையாளப்பட்டுள்ளது. மாறாக,

'நெஞ்சு களனாக நீயலென் யானென
நற்றோள் மணந்த ஞான்றை மற்றவன்
தாவா வஞ்சினம் உரைத்தது
நோயோ தோழி நின்வயி னான' (குறுந். 36:3-6)

என்பதில் தலைவன் சொன்ன சொல்லைக் காப்பாற்றாததால் 'அவன்' என்று கோபம் காரணமாக ஒருமையில் குறிப்பிடுகிறாள்; எனவே பாட்டின் கருவுக்கும் மூவிடச்சொல் ஒருமை-பன்மை பயன்பாட்டிற்கும் தொடர்பு இருப்பதுபோலத் தோன்றுகிறது. இந்த உண்மையை அவர் காட்டிய உலோச்சனார் பாடல்களும் (248, 177) ஔவையார் பாடல்களும் உறுதி செய்கின்றன.

'கடலும்பா டலிந்து...
அன்றிலும் பையென நரலும் இன்று அவர்
வருவர்கொல் வாழி தோழி நாந்தப்
புலப்பினும் பிரிவாங்கு அஞ்சித்
தணப்பருங் காமம் தண்டி யோரே (குறுந். 177:1, 4-7)

என்ற பாடல் தோழி கூற்றாகக் கருதப்பட்டாலும், தலைவன் வரவில்லையே என்ற ஏக்கம் மட்டுமே வெளிப்படுத்தப் பட்டுள்ளதால், உயர்சொற்கிளவி கையாளப்பட்டுள்ளது. ஆனால் 248ஆம் பாடலில்

'அதுவரல் அன்மையோ அரிதே அவன்மார்பு
உறுக என்ற நாளே குறுகி
ஈங்கா கின்றே.........
................ துறைவனைப்
பெரிய கூறி யாய்அறிந் தனளே'

வரைவு நீட்டித்தலால் ஏற்பட்ட கோபமே தலைவனை ஒருமையில் கூறுவதற்குக் காரணமாக இருக்கலாம். ஒருமையைப் பயன்படுத்தியதன்மூலம் தலைவியின் அல்லது தோழியின் மனநிலை புலப்படுத்தப்பட்டுள்ளதாகக் கருதலாம்.

பழைய கால மொழிப் பயன்பாட்டை எழுத்துச் சான்று குறிப்பாக இலக்கியம் மூலம் அறிந்துகொள்ள முயலும்போது இன்னொரு பொது உண்மையையும் மனதில் கொள்ளவேண்டும். அதாவது இவை எல்லாம் மாந்தர்கள் நேரடியாகப் பேசியவை அல்ல; புலவர் மாந்தர்கள் பேசியதாகச் சித்திரித்தவை - அதாவது புலவர்கள் வெவ்வேறு மாந்தர்களின் பேச்சாக வேறுபடுத்தியவை. எனவே சில சமயங்களில் புலவர்கள் குன்றக் கூறலாகவும், மிகையாகவும் கூறுவதற்கு வாய்ப்பு உண்டு என்பதை மறந்து விடக்கூடாது.

பேச்சுச்சூழல் உரையாடும்போது அமைவது என்றாலும், அது எப்போதும் ஒரே நிலையில் இருக்கவேண்டும் என்ற கட்டாயம் இல்லை; ஏனென்றால் அது உரையாடும்போதே கூட மாறலாம். அதனால்தான் ஒருவர் பேச்சை உயர்சொற்கிளவியில் - பன்மையில் ஆரம்பித்து ஒருமைக்கு மாறுவதும் உண்டு. இது இலக்கியத்திலும் காணப்படுகிறது. திருக்குறளில்

> எனைத்துணைய ராயினும் என்னாம் தினைத்துணையும்
> தேரான் பிறனில் புகல் *(144)*

'எனைத்துணையர்' என்று உயர்சொற்கிளவியால் (துணையர்- பன்மை) முதலில் குறிப்பிட்டது. அவரைச் சில காரணங்களுக்காக மதிப்பதையும், அவரையே அடுத்து ஒருமையால் (தேரான் - ஒருமை ஆண்) கூறுவது அவரின் 'பிறர் மனைநயக்கும் பண்பை அறிந்தபோது உடனே மதிக்காமையையும் புலப்படுத்துகிறது. இப்படிப்பட்டவைகளைச் சங்க இலக்கியத்திலும் காணமுடியும். குறுந்தொகை 185-ஆம் பாடலில் முன்னிலையில் பன்மை-உயர் சொற்கிளவியாலும் படர்க்கையில் ஒருமையாலும் தலைவி தலைவனைக் குறிப்பிடுகிறாள்.

> நுதல்பசப் பிவர்ந்து திதலை வாடி
> நெடுமென் பணைத்தோள் சாஅய்த் தொடிநெகிழ்ந்(து)
> இன்ன ளாகுத னும்மி னாகுமெனச்
> சொல்வி னெவனாந் தோழி பல்வரிப்
> பாம்புபை அவிழ்ந்தது போலக் கூம்பிக்

கொண்டலிற் றொலைந்த வொண்செங் காந்தள்
கன்மிசைக் கவியு நாடற்கென்
நன்மா மேனி யழிபடர் நிலையே

என்ற இந்தப் பாடலில் 3ஆவது அடியில் முன்னிலை வடிவம் நும்-; 7ஆவது அடியில் படர்க்கை ஒருமை - ஆண்பால் வடிவம், நாடன். அதே அடியில் தன்மை ஒருமை வடிவம், என்- ஆகியவை வந்துள்ளன. முதல் வடிவமும் கடைசி இரண்டு வடிவமும் தலைவனுக்கு உரியவை. இங்கு ஒருவரை நேரே சொல்வதற்கும், அவரைப் படர்க்கையில் குறிப்பிடுவதற்கும் வேறுபாடு காணப் படுகிறது. குறுந்தொகை 178-இல் தலைவி தன்னை ஒருமையிலும் பன்மையிலும் குறிப்பிட்டுக் கொள்கிறாள். தலைவனிடம் நேரே பேசும்போது அவனை முன்னிலைப் பன்மையாற் குறிப்பதற்கு ஏற்பத் தன்னைப் பன்மையால் குறிப்பிட்டுக்கொண்டு, தனியே தன்னை ஒருமையில் குறிப்பிட்டுக்கொள்கிறாள்.

..........................................................................................

ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்கிவள்
இடைமுலைக் கிடந்து நடுங்க லானீர்
தொழுதுகாண் பிறையிற் றோன்றி யாநுமக்(கு)
அரிய மாகிய காலைப்
பெரிய நோன்றனிர் நோகோ யானே,

நடுங்கலானீர், நுமக்கு, நோன்றனிர் ஆகியவை தலைவனைக் குறித்த முன்னிலைப் பன்மை (உயர்சொற்கிளவி) சொற்கள்; யா(ம்) என்பது தலைவியைத் தலைவனுக்கு நேராகக் குறித்த முன்னிலைப் பன்மை; இவள் என்பது தலைவி தன்மைப் படர்க்கையில் குறித்த ஒருமை.

பேசுவோன் அல்லது ஒருவன் தன்னைப் பன்மையால் குறிப்பிடும் வழக்கையே தன்மைப் பன்மை உயர்சொற் கிளவி புலப்படுத்துகிறது. யாம், நாம் ஆகியவையும், அவற்றின் வேற்றுமை ஏற்கும் வடிவங்கள் ஆகிய எம், நம் ஆகியவையும் உயர்வு ஒருமை களாக, ஒருமை குறிக்கும் பதிலிடு பெயர்களாக வந்துள்ளன என்று பல உதாரணங்களை அகத்தியலிங்கம் (1984: 163-87) கொடுத்துப் பேசுபவர் யார், கேட்பவர் யார், என்ற பட்டியலும் தந்துள்ளார். மேலும், 'புலவர்கள் அரசனிடம் பேசும்போதும், பிற இடங்களிலும் காணமுடிகிறது' என்றும் குறிப்பிட்டுள்ளார் (ப. 165). சங்க இலக்கியம் கூற்று முறையில்

அமைந்துள்ளதால் பேசுபவருக்கும் கேட்பவருக்கும் உள்ள உறவு நிலையும், மனநிலையும் பொறுத்தே பேசுபவர் ஒருமை அல்லது பன்மை வடிவத்தைத் தேர்ந்தெடுப்பார். தலைவி தன்னையும், தலைவனை ஒருமையில் குறிப்பிடுவதையும் சங்க இலக்கியங்களில் பார்க்க முடிகிறது. உ.ம்.

> யாரும் இல்லை தானே கள்வன்
> தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ (குறுந். 25:1-2)

இங்குத் தலைவி தன்னையும், தலைவனையும் ஒருமையால் குறிப்பிட்டுள்ளாள். இது ஒத்த மதிப்பு உடைமையைப் புலப்படுத்துவதாகக் கருதலாம். இப்படியே இருவரையும் பன்மையாலும் குறிக்கப்படும் வழக்கும் காணப்படுகிறது. 'மறந்தோர் மன்ற மறவா நாமே' (குறுந். 200), 'உரவோர் உரவோர் ஆக, மடவம் ஆக மடந்தை நாமே (குறுந். 20:2-3). இங்குத் தலைவி தன்னையும், தலைவனையும் பன்மைக் கிளவியால் குறித்துள்ளாள். இதுவும் இருவரும் ஒத்த மதிப்பு உடைமையைப் புலப்படுத்தும். சில இடங்களில் தலைவி, தன்னை ஒருமையிலும் தலைவனைப் பன்மையிலும் குறிப்பிடுவதையும் காணலாம். உ.ம். யானோ தேனேன் அவர் பொய் வழங்கலரே' (குறுந். 21:5), என்னை (தலைவர்) இன்றியும் கழிவது கொல்லோ.... காதலர் அகல' (குறுந். 24:2,6), 'அலப்பென் தோழி அவர் அகன்ற ஞான்றே' (குறுந். 41:6) முதலியன. இவை ஆணுக்குப் பெண்ணை விட உயர்ந்த சமூக மதிப்பு இருப்பதன் வெளிப்பாடு. உண்மையில் மூன்றாவது வகைதான் (தலைவி தன்னை ஒருமையிலும், தலைவனைப் பன்மையிலும் கூறுவது) உயர்சொற்கிளவியாகக் கருதவேண்டும். குறுந்தொகையைப் பொறுத்தவரையில் 'தலைவி தலைவனைத் தவிர யாரையும் உயர்திணைப் பன்மைச் சொற்களால் சுட்ட வில்லை; தன் தந்தையையும், உடன்பிறந்தாரையும் ஆண்பால் ஒருமையிலும், தாயைப் பெண்பால் ஒருமையிலும் சுட்டுகிறாள்' என்று முத்துச்சண்முகன் (1974: 4) கூறுவது அறியத்தகுந்தது. அந்த நிலையில் தலைவி தன்னைப் பன்மையிலும் தலைவனை ஒருமையிலும் (முன்னிலை, படர்க்கை) குறிப்பிடுவதையும் காண முடிகிறது. உ.ம். 'வேண்டேம் பெரும நின் பரத்தை' (ஐங். 48:4), 'துறைவனொடு, யாத்தேம் யாத்தன்று நட்பே'. (குறுந். 313:3-4). இங்குக் கோபத்தாலேயே தலைவி இப்படிக் குறிப்பிடுகிறாள் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. இவை சமூகநிலையையும் தாண்டிப் பேச்சுச் சூழல் (Context of Situation or Context of utterance)

என்று கருதவேண்டும். எனவே உயர்சொற்கிளவியை ஆராயும் போது பேசுபவர், கேட்பவர் ஆகிய இரண்டோடு பேச்சின் சூழலையும் கவனிக்கவேண்டும் என்பார்கள் சமூகமொழியிய லாளர்கள் (Trudgill, 1974: 103). இந்த நோக்கில் இரண்டாவது வகையை (தலைவி தன்னை ஒருமையாலும் தலைவனைப் பன்மையாலும் குறிப்பிடுவது)ச் சமூகச் சூழல் (Context of culture) என்பார்கள் சமூகமொழியியலாளர்கள். இப்படிச் சமூகச் சூழல், பேச்சுச் சூழல் ஆகிய இரண்டையும் கணக்கெடுத்துக் கொண்டால் தான், பதிலீட்டுப்பெயரின் பண்பாடு பற்றிச் சரியான காரணத்தைப் புரிந்துகொள்ளமுடியும்.

வேற்றுமை ஏற்கும் தன்மைப் பன்மை வடிவங்கள் எல்லாம் உயர்வு ஒருமையைச் சுட்டுவதில்லை என்பதும் குறிப்பிடத் தகுந்தது. இன்றைய பேச்சு மொழியில் காணப்படும் ஒரு பண்பே நம்மைச் சந்தேகிக்க வைக்கிறது. பொதுவாக இருக்கிற - ஒருவருக்கு மேற்பட்ட சொந்தமான பொருளைக் குறிக்கும் சொற்களுக்கும் (அப்பா, அம்மா, அண்ணன் போன்ற மரியாதைக் குரிய உறவுச் சொற்கள், ஊர், நாடு போன்ற இடப் பெயர்கள்) அடையாக வேற்றுமை ஏற்கும் தன்மை வடிவங்கள் எப்போதும் பன்மையாகவே (எங்க அப்பா, அம்மா, அண்ணன், ஊர், நாடு) இருக்க; ஏனைய இடங்களில் வேற்றுமை ஏற்கும் தன்மை வடிவங்கள் எப்போதும் ஒருமையாகவே (என் தம்பி, தங்கச்சி, பேனா) இருக்கின்றன. எனவே முன்னதில் உள்ள 'எங்க(ள்) என்பதில் உயர்வு அடைச்சொல்லுக்கு இல்லை; தலைச் சொல்லுக்கே உரியது. இந்தப் பண்பு சங்க இலக்கியத்திலும் காணப்படுகிறது. (வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய வழக்கு தான் இன்றும் தொடர்பாகிறது) வெள்ளிவீதியார் பாடல் ஒன்றில் (நற்றிணை 70) 'குருகே, எம்மூர் வந்து எம் வண்துறைத் துழைஇ, சினைக் கெளிற்று ஆர்கையை..... மகிழ்நர்க்கு என், இறைநெகிழ் பருவரல் செப்பா தோயே' என்று வந்துள்ளது. இங்குத் தலைவி தன்னை ஒருமையில் என்-(என் இறை நெகிழ் பருவரல்) குறிப்பிட்டுவிட்டு, ஊரையும் துறையையும் குறிக்கும்போது எம்- (எம்மூர், எம் வண்துறை) என்ற பன்மை வடிவத்தைப் பயன்படுத்தியுள்ளார். இங்கு எம்- என்பது உயர்வு ஒருமையாகக் கொள்ளக்கூடாது.

அப்படியே கேட்பவனைக் குறிப்பாக முன்னிலையில் இருந்து கேட்பவனை முன்னிலைப் பன்மையால் குறிப்பிடும்

வழக்கும் இலக்கியத்திலும் வழக்கிலும் பரக்கக் காணலாம். 'நீயிர் இச்சுரம் அறிதலும்' (பதிற்று. 49), நல்லோர்க்கு ஒத்தனிர் நீயிர்' (அகம். 26:19), 'நீர்.... ஒளித்த காடே' (நற். 48:8), நும் பொன்னுடை நெடுநகர் (புறம். 198) என்று கேட்பவர் பன்மையால் குறிக்கப் பட்டுள்ளதைக் காணலாம் (அகத்தியலிங்கம், 1984: 160). ஒரு புலவர் இன்னொரு புலவரிடம் பேசும்போதும், தலைவி தலைவனிடம் பேசும்போதும் உயர்வு ஒருமையைக் காண முடிகிறது என்று அகத்தியலிங்கம் (ப. 235) குறிப்பிட்டாலும் படர்க்கை உயர்வு ஒருமையை விளக்கும்போது 'எல்லா இடங்களிலும் உயர்வு ஒருமையைக் காண முடிவதில்லை; தலைவனைத் தலைவி அவன், நாடன் போன்ற சொற்களால் குறிப்பதும், தோழி குறிப்பதும் .... உள்ளன. எனவே இவை பண்டைத் தமிழில் மாறிமாறி வருவதைக் காணலாம்' என்று கூறுவது (184: 157) இந்த உண்மையை உறுதிப்படுத்தும்.

தலைவன் முன்னிலை ஒருமையால் குறிக்கப்பட்டுள்ள பாடல்களும் இலக்கியத்தில் காணப்படுவது சுட்டிக்காட்டத் தகுந்தது. 'ஆர நாறு மார்பினை வாரற்க' (குறுந். 198:7), 'இவளே கானல் நண்ணிய காமர் சிறுகுடி..... பரதவர் மகளே நீயே..... கடுந்தேர்ச் செல்வன் காதன் மகனே' (நற். 45:1-5), 'நீ ஆகியர் என் கணவனை, யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே' (குறுந். 49: 4-5) முதலியன. இங்குத் தலைவி தன்னை ஒருமையால் குறித்துள்ளாள். வேற்றுமை ஏற்கும் பன்மை வடிவமான நும் என்பது எல்லா இடத்திலும் பன்மையாகவோ அல்லது உயர்வு ஒருமையாகவோ வருவதில்லை என்பதும் சுட்டிக்காட்டத் தகுந்தது. 'நின்னொன்று வினவுவல் நும்மூர்' என்ற ஐங்குறுநூற்று அடியில் (137:1) முதலில் நின் என்று ஒருமை வடிவமும், அடுத்து நும் என்ற பன்மை வடிவமும் பயன்படுத்தப்பட்டுள்ளன. தற்காலத் தமிழிலும் சாதாரணச் சிறுவனிடம் பேசும்போது, மேலே குறிப்பிட்டதுபோல, உங்க அப்பா, அம்மா, அண்ணன், ஊர், நாடு என்று பன்மை வடிவத்தையும், உன் தம்பி, உன் பேர் என்று ஒருமை வடிவத்தையும் கையாளுகிறோம். எனவே நும்மூர் என்ற ஐங்குறுநூற்றுத் தொடரில் உள்ள நும்- உயர்வு ஒருமையாகக் கொள்ள வேண்டியதில்லை. இளம்பூரணர் எச்சவியல் சூத்திர உரையில் (64) 'யான் எம்மூர் புகுவல்' என்ற உதாரணத்தைக் காட்டி ஒருமை சுட்டிய பெயர் பன்மையாய் முடிந்தது என்றும், அவரை ஒட்டி அதே சூத்திரத்தில் நச்சினார்க்கினியர் 'யான் எம்மூர் புகுவல்', 'நீ நும்மூர் புகுவல்'

என்றும் எடுத்துக்காட்டியுள்ளது வடிவ நிலையில் ஒருமை, பன்மை மாறி வந்ததை உரையாசிரியர்கள் உணர்ந்துள்ளதைப் புலப்படுத்துகிறது.

படர்க்கை உயர்சொற் கிளவி பேசப்படுபவரைக் குறிக்கும். தோழி தலைவனை 'நசை பெரிதுடையர், நல்கலும் நல்குவர்.... அன்பின தோழி அவர் சென்ற ஆறே' (குறுந். 37:1-4); என்றும் தலைவியும் 'காதலர் உழையர் ஆக... அலப்பென் தோழி அவர் அகன்ற ஞான்றே' (குறுந். 41:1-6) என்றும் தலைவனைப் படர்க்கைப் பலர்பால் சொல்லால் குறிப்பிட்டுள்ளார்கள். இங்கும் ஒருமை யால் குறிப்பிட்ட பாடல்களையும் காண முடிகிறது. 'அவன், தாவா வஞ்சினம் உரைத்தது, நோயோ தோழி நின் வயினானே' (குறுந். 36:3-5) என்று ஒருமை பயன் படுத்தியதற்குக் காரணம், தலைவன், தான் சொன்ன சொல்லைக் காப்பாற்றவில்லை என்ற கோபமே. 'கடுவனும் அறியும்அக் கொடியோ னையே' (குறுந். 26:8) என்ற அடிகளில் தலைவனை ஒருமை விகுதியைப் (-ஓன்) 'பயன்படுத்தியதோடு, கடுமையான சொல்லையும் (கொடிய) பயன்படுத்தியது தோழி அறத்தொடு நிற்கும்போது தலைவனைக் கோபத்தோடு குறிப்பிடுகிற வார்த்தைகள் இவை. இவைகளைப் பேச்சின் சூழலின் தாக்கத்தால் ஏற்பட்டவை என்று பொதுவாகக் கூறலாம்.

இலக்கிய நோக்கில் உரையாசிரியர்கள் எல்லோரும் மூவிடப் பெயர்களை மட்டும் கொடுத்தது பொருந்துமா? என்ற கேள்வியும் எழுவதைத் தடுக்க முடியாது. இந்தக் குறையை உணர்ந்து உரையாசிரியர்கள் இடையியல் சூத்திரத்தில் பொதுப் பெயர்களையும் பிற பெயர்களையும் அடக்க முயன்றாலும், அது செயற்கையாய் இருப்பது அங்கு விளக்கப்படும். உண்மையில் 'ஒன்றனைக் கூறும் பன்மைக்கிளவி' என்ற தொல்காப்பியத் தொடரே உரையாசிரியர்களை உயர்திணைப் பொதுப் பெயர்களும் உயர்சொற்கிளவியாக வருவதைக் குறிப்பிடுவதற்குத் தடையாய் இருந்திருக்கவேண்டும் என்று நினைக்கத் தோன்று கிறது. ஏனென்றால் 'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி' என்பதில் காதலர், தலைவர் போன்ற உயர்திணைப் பொதுப் பெயர்களை அடக்கலாம்.

### 9.2.3.2. இயற்பெயர்கள்

இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
பலர்க்குரி எழுத்தின் வினையொடு முடிமே (இடை. 22)

என்ற சூத்திரத்தில் இயற்பெயர்கள் -ஆர் விகுதி பெற்றுப் பலர்பால் வினைமுற்றுப் பெற்று முடியும் என்று விளக்கியது, இயற்சொல் உயர்சொற்கிளவியாக வழங்கும் முறை பற்றியது தான். இருந்தாலும், தொல்காப்பியர் அதை விதந்து குறிப்பிட வில்லை. காரணம் இயற்பெயர் ஒருமைச் சொல்; அது பன்மை விகுதியை ஏற்று வராத காரணத்தாலேயே பெயர்ச் சொற்களில் அது தனி உள்வகையாகப் பிரிக்கப்படுகிறது (சண்முகம், 1984: 167). எனவே, அது பலர்பால் வினைமுற்றைக் கொண்டு முடியும் என்னும் போதே உயர்சொற்கிளவி என்பதை எல்லோரும் உணர்ந்து கொள்ளமுடியும் என்று அவர் கருதியிருக்க வேண்டும். இதைச் சேனாவரையர்,

> 'பலர்க்குரி எழுத்தின் வினையொடு முடிமே' என
> ஆரைக் கிளவியது இயல்பு உணர்த்தவே அஃது
> உயர்த்தற்பொருட்டு ஆதலும்....... பெற்றாம்'

என்ற விளக்கத்தின்மூலம் சுட்டிக்காட்டியுள்ளார்.

இங்கு 'இயற்பெயர்' என்ன? என்பது பற்றி உரையா சிரியர்கள் கருத்து மாறுபடுகிறார்கள். இளம்பூரணர் உயர்திணை, அஃறிணைப் பொதுப் பெயர்களை மட்டும் (அரசனார், பார்ப்பார், யானையார்) உதாரணமாகக் காட்டச் சேனாவரையர் சிறப்புப்பெயர் (Proper Nouns, பெருஞ்சேந்தனார்), சினைப்பெயர் (முடவனார்), சினைமுதற்பெயர் (முடத்தாமக்கண்ணியார்), முறைப்பெயர் (தந்தையார்) ஆகியவைகளையும், உரை உத்தியால் அஃறிணைப் பொதுப்பெயர்களையும் (நரியார்), உயர்திணைப் பொதுப் பெயர்களையும் (நம்பியார், நங்கையார்) காட்டியுள்ளார். நச்சினார்க்கினியரும், தெய்வச்சிலையாரும் சேனாவரையரைப் பின்பற்றியுள்ளார்கள். இதன் வன்மை-மென்மைகளைப் பார்ப்போம்.

தொல்காப்பியர், 'இயற்பெயர்' என்பதைச் சிறப்புப் பெயர் ('இயற்பெயர் முன்னர்த் தந்தை வரின்' புள்ளி. 52, 'தானும், பேனும், கோனும் என்னும், ஆமுறை இயற்பெயர்' புள்ளி. 56, 'இயற் பெயர்க்கிளவியும் சுட்டுப் பெயர்க்கிளவியும்' கிளவி. 38), பொதுப் பெயர் (கள்ளொடு சிவணும் அவ் வியற்பெயர்' பெயர். 15, தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்' பெயர். 7) என்ற இரண்டு பொருள்களில் மட்டுமே கையாண்டுள்ளார் (பாலசுப்பிரமணியம், 1981). எனவே உரையாசிரியர்கள் இலக்கிய வழக்கில் கண்டதை இலக்கணப்படுத்த வேண்டும் என்பதற்காக அவர்கள் அப்படி

உரை எழுதியுள்ளார்கள் என்று நாம் புரிந்து கொள்ளவேண்டும். பொதுவாக உரையாசிரியர்கள் தாங்கள் உரை எழுத எடுத்துக் கொண்ட நூலைக் குறை சொல்லமாட்டார்கள். இன்னொரு வகையிலும் சூத்திரக் கருத்தை உரைகள் பிரதிபலிக்கவில்லை என்று நாம் மறுக்கலாம். அது உரையாசிரியர்களின் உரைக் கோட்பாடுகளில் ஒன்று. நாம் எல்லாப் பொதுப் பெயர்களும் -ஆர் விகுதி ஏற்று வருவதில்லை. அவை -அர் விகுதி ஏற்றும் உயர்சொற் கிளவியாக வந்துள்ளன. காதலர், அறிஞர், நாடர் போன்ற பலர்பால் பொதுப்பெயர்கள் உயர்சொற் கிளவிகளாகச் சங்க இலக்கியத்தில் வந்துள்ளன. உண்மையில் -ஆர் விகுதி ஏற்கும் பொதுப் பெயர்கள் மிகக் குறைவு (சண்முகம், 1971:39-42). எனவே, தொல்காப்பியர் கருத்துப்படி இயற்பெயர் என்பதில் அதிகப் பட்சம் சிறப்புப் பெயர், பொதுப் பெயர் ஆகிய இரண்டும் அடங்கினாலும், இந்தச் சூத்திரத்தில் சிறப்புப் பெயர்கள் மட்டுமே கொள்வது பொருத்தமானது. இதிலும் பிரச்சினை இருப்பது பிற்பகுதியில் விளக்கப்படும். உரையாசிரியர்கள் கொண்ட சினைப்பெயர், சினைமுதற்பெயர், முறைப்பெயர் ஆகியவை, சூத்திரக் கருத்துப்படி இங்கு அடங்கா.

உரையாசிரியர்கள், எல்லாவகைப் பெயர்களும் அடக்குவதற்கு 'இயற் பெயர்' என்பதற்குப் பல விதமாக - ஓரளவு செயற்கையாக விளக்கம் கொடுத்துள்ளார்கள். அதற்குக் காரணம் தாங்கள் அறிந்த எல்லா மொழி அமைப்பு உண்மைகளையும் தொல்காப்பியச் சூத்திரம் உள்ளடக்கியிருக்க வேண்டும் என்று கருதுவதுதான். இந்தச் சூத்திரம் குன்றக் கூறலாய், அமைந்திருப் பதற்கு, முன் சூத்திரத்தில் கூறியது போல இலக்கிய நோக்குக் காரணம் என்று சொல்லமுடியாது.

இளம்பூரணர் இயற்பெயர் என்பதில் உள்ள 'இயல்' என்பதை இயல்பு என்று கொண்டு, மொழிமாற்றி, சூத்திரத்தின் இறுதிச் சொல்லாகக் கொண்டு 'முடிதல் இயல்பாம்' என்று பொருள் உரைத்து விளக்கவுரையிலும் ஒரு பொழிப்புரை கொடுத்து எல்லாப் பெயர்களையும் அடக்கியுள்ளார்.

> 'பெயர்முன் ஆரைக் கிளவி பலர்க்குரி யெழுத்தின்
> வினையொடு முடித்தல் இயல்பாம் என எல்லாப்
> பெயரும் அடங்க மொழிமாற்றியுரைக்க'

என்பது அவரது விளக்கவுரை வாசகம்.

'ஈண்டு இயற்பெயர் என்றது இருதிணைக்கும்
அஃறிணை இருபாற்கும் உரிய பெயரை'

என்று சேனாவரையர் விளக்கம் எழுதியுள்ளார். இது பெயரியலில் 20) குறிப்பிட்ட இயற்பெயர் உள்ளிட்ட விரவுப் பெயர்கள் எல்லாவற்றையும் குறிக்கும். நச்சினார்க்கினியர் 'இயலும் பெயர்' என்று கொண்டு 'இருதிணைக்கும் இயலும் பெயர்க்கும், அஃறிணை இருபாற்கும்' என்று பொழிப்புரை எழுதியுள்ளார். இவை உரையாசிரியர்களின் சாமர்த்தியதைக் காட்டுபவையாகக் கொள்ளலாமே தவிர, சரியான உரை என்று கொள்ளமுடியாது. இவைகளுக்கு எல்லாம் காரணம் மேலே குறிப்பிட்டபடி தங்களுக்குத் தெரிந்த மொழி அமைப்பு எல்லாம் தொல்காப்பியச் சூத்திரம் உள்ளடக்கியிருக்க வேண்டும் என்ற அவர்களுடைய எண்ணந்தான். இலக்கணம் ஓர் அறிவியல் ஆய்வு என்பதால் ஓர் இலக்கண ஆசிரியனே மொழி அமைப்பின் எல்லா உண்மைகளையும் கூற வேண்டும்; கூற முடியும் என்று எதிர்பார்க்க வேண்டியதில்லை.

சங்க இலக்கிய வழக்கைப் பொறுத்தவரையில் சிறப்புப் பெயரான இயற்பெயர் பற்றிய இன்னொரு உண்மையும் சுட்டிக்காட்டத் தகுந்தது. -ர் விகுதி, திரிபு (Replacive) உருபனாக (கபிலர், பரி. 33:7), காமர் கலி. 94:33) -ஆர் என்பது சேர்க்கை உருபனாகக் கலித்தொகையிலும், (சாமனார் - 94:34) சிலப்பதிகாரத்திலும், (அசோதையார் - 17.28:3, கஞ்சனார் - 17.37:1 முதலியன) காணப்படுகின்றன. வரலாற்று நோக்கில் இரண்டு செய்திகள் கவனிக்கத்தகுந்தவை: தொல்காப்பியர் 1. -(அ)ர் விகுதி குறிப்பிடாதது. 2. சிறப்புப் பெயரான இயற்பெயர்களில் உயர்சொற்கிளவி பின்தமிழ் நூல்களில் மட்டும் காணப்படுவது. அகத்தியலிங்கம் (1983: 149), 'தொல்காப்பியர் காலத்திலேயே -ஆர் ஈற்றுச் சொற்கள் (பேச்சு) வழக்கில் வந்துவிட்டன என்றும், ஆனால் செய்யுள் நடையில் வரவில்லையோ என்றும் எண்ணலாம்' என்று சமாதானம் கூறியுள்ளார். இலக்கண உருவாக்க நோக்கில் -(அ)ர் திரிபு விகுதியாகவும் (காதலன் : காதலர்), சேர்க்கை விகுதியாகவும் (கிழத்தி: கிழத்தியர்; தந்தை: தந்தையர்) வர, -ஆர் சிறுபான்மை திரிபு விகுதியாகவும் (பார்ப்பான் (தொல். செய். 181) : பார்ப்பார் (தொல். செய். 189), பெரும்பான்மை சேர்க்கை விகுதியாகவும் (-அன் ஈற்றுச் சொற்கள் உள்பட - தொல்காப்பியன் : தொல்காப்பியனார்) வரும். எனவே

பெரும்பான்மை கருதி இந்தச் சூத்திரத்தைத் தொல்காப்பியர் அமைத்துவிட்டாரோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

அஃறிணைச் சொல், பலர்பால் விகுதி ஏற்று உயர்சொற் கிளவியாக வந்ததற்குக் 'கொடுங்கோல் கோவலர் பின்னின்று உய்த்தர இன்னே வருவர் நின் தாயர்' என்ற முல்லைப்பாட்டு அடிகளை (15-6) நச்சினார்க்கினியர் சான்று காட்டியதன் மூலம் விரவுப் பெயர்களும் பன்மை விகுதி ஏற்று உயர்சொற்கிளவியாக வரலாம் என்று மறைமுகமாகக் குறிப்பிட்டுள்ளார்.

உயர்சொற்கிளவி பற்றிய இரண்டு சூத்திரத்துக்கும் உள்ள வேறுபாடு என்ன? என்ற கேள்வியை உரையாசிரியர்கள் எழுப்பி மொழி அமைப்பில் ஒரு வேறுபாடு காட்ட முயற்சித்துள்ளார்கள். 'ஒருமைப் பெயர் முன்னர் ஒருமை சிதையாமல் ஆரைக்கிளவி வந்து பலரறிசொல்லான் முடிதலின், 'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியின்' (கிளவி. 27) வேறாதல் அறிக' என்பது சேனாவரையர் வாசகம். அதாவது -ஆர் சேர்க்கை விகுதியாக (சேந்தன் ஒருமை; சேந்தனார்) உயர்வு ஒருமை. எனவே ஒருமை சிதையவில்லை. ஆனால், பன்மைச் சொல்லில் -அர் (தோழர்) ஆண்பால் (தோழன்) / பெண்பால் (தோழி) விகுதியின் ஒருமை சிதைந்து பலர்பால் ஆகிறது என்பது சேனாவரையர் வாதம். இதை மொழியியல் நோக்கில், முன்னது சேர்க்கை (Additive) உருபன் என்றும், பின்னது திரிபு உருபன் (Replacive morpheme) என்றும் பொதுமைப்படுத்துவார்கள். சேர்க்கை உருபனில் வருவதால் பலர்பாலில் எப்போதும் ஒருமை சிதைந்து வரும் என்பது உண்மை இல்லை. பால் விகுதி வராத உயர்திணைச் சொற்களில் -அர் சேர்க்கை விகுதியாக, ஐ (தலைவன்), தாய், தந்தை, பெண்டு), பெண்பாற்சொற்களிலும் (அரசி, தோழி, மகள்) (அரசியர், தோழியர், மகளிர்) வரும்போது ஒருமை சிதையாமல் இருக்கும் மேலும் இயற்பெயர் என்பதைச் சிறப்புப்பெயர் (Proper noun) ஆகக் கொண்டாலும் அது முழு உண்மை இல்லை என்பது சுட்டிக்காட்டத் தகுந்தது. ஏனென்றால் சில சிறப்புப் பெயர்கள் (கபிலன்: கபிலர்-பரி. 33:7, காமன்: காமர்-கலி. 94:33) திரிபு விகுதி முறையிலும் உயர்சொற் கிளவியாக வந்துள்ளன. பொதுப் பெயர்களுக்கும் அது பொருந்தாது. பொதுப் பெயர்களில் (காதலர், அறிஞர்) திரிபு விகுதியாகவும் (காதலன், அறிஞன்), சேர்க்கை விகுதியாகவும் (ஐ- ஐயர் (தலைவர்), பெண்டு-பெண்டிர்; தாய்-தாயர்) வரும். எனவே சேனாவரையர் காட்டிய வேறுபாடு சிறப்பாக அமையவில்லை.

தெய்வச்சிலையார் கிளவியாக்கச் சூத்திரத்தின் கீழேயே இந்தக் கேள்வியை எழுப்பி இரண்டு சூத்திரத்துக்கும், வேறுபாடு காட்டியுள்ளார்.

> 'ஆண்டு (இடையியலில்) நம்பி, நங்கை, சாத்தன் என்னும் பெயர் தானே பால் காட்டுதலான் அதன்மேல் ஓர் இடைச்சொல்லாயிற்று. ஈண்டுப் (கிளவியாக்கத்தில்) பன்மைச் சொல்தானே ஒருமைக்கு வருதலின் அடங்காதாயிற்று என்க'

என்பது அவருடைய விளக்கம். அதாவது கிளவியாக்கத்தில் பதிலீட்டுப் பன்மைப்பெயர்கள் ஒருவரையோ அல்லது ஒன்றையோ குறிக்கும்போது அதற்குரிய பாலைத் தெரிந்து கொள்ள முடியாது. ஒருமைப் பொதுப்பெயர்களின் பாலை விகுதி மூலம் உணர்ந்துகொள்ளமுடியாது. எனவேதான் தொல்காப்பியரும் 'இருதிணைப் பிரிந்த ஐம்பால்கிளவி' என்ற சூத்திரத்தில் (பெயர். 7) பெயர்ச் சொற்களில் திணை-பால் பாகுபாடு அடிக்கூறுகள் (Selective Categories) என்று விளக்கி யுள்ளார் (முழு விவரத்துக்குப் பார்க்க, சண்முகம், 1986: 22 தொ.). இதைத்தான் தெய்வச்சிலையார் 'பெயர்தானே பால் காட்டுதல்' என்று குறிப்பிட்டுள்ளார். இதனால் -ஆர் விகுதி சேர்த்து உயர் சொற்கிளவியாக மாறும்போதும், அதன் பாலைத் தெரிந்து கொள்ளமுடியும். கிளவியாக்கச் சூத்திரம் பதிலீட்டுப் பெயர்களை மட்டும் குறிப்பதாகக் கொண்டதால், ஒருபோதும் பதிலீட்டுப் பெயர்களின் பாலை உணர்ந்துகொள்ள முடியாது என்று தெய்வச்சிலையார் கருதுகிறார். ஆனால் பொதுப் பெயர்களின் பன்மை வடிவங்களும் உயர்சொற்கிளவியாகக் கையாளமுடியும் என்று மேலே காட்டியதால், தெய்வச்சிலையாரின் கருத்து முழுவதும் பொருந்தாது.

அதே சமயத்தில் இரண்டு சூத்திரத்துக்கும் உள்ள முக்கிய வருண்னை வேறுபாடு சுட்டிக்காட்டத் தகுந்தது. முன்னது ஒரு வடிவம் - பன்மை வடிவம் ஒருமையை உணர்த்தும் என்று கூறுவது; பின்னது, ஒரு சொல்- இயற்பெயர் ஒரு விகுதி பெற்று (-ஆர்) எந்த வினைமுற்றை ஏற்கும் என்பது. இரண்டும் சொல்லும் கருத்தால் ஒற்றுமை உடையவையே தவிர அவைகளை விவரித்த விதம் வேறுபாடானது. இயற்பெயர் எப்போதும் பன்மை விகுதி ஏற்காது; அதுவே அதன் சிறப்புப் பண்பு (சண்முகம், 1984: 174).

எனவே இயற்பெயர் -ஆர் விகுதி ஏற்றுவந்தாலும், யாரும் அதைப் பன்மைச் சொல்லாகக் கருதமாட்டார்கள். ஆனால் பதிலீட்டுப் பெயர்கள், பொதுப்பெயர்கள் ஆகிய இரண்டின் பன்மை வடிவங்களைப் பேச்சுச் சூழல், ஒருவர் என்று எண்ணுப் பெயரைப் பதிலியாகக் கையாளுவது, ஒரு - என்ற பெயரடையை ஏற்று வருவது முதலிய அமைப்புக் காரணமாகவே உயர்வு ஒருமை என்று உணர்ந்துகொள்ள முடியும்.

### 9.2.3.3. பிற பெயர்கள்

காதலர், சான்றோர், ஆளர், அறிஞர் போன்ற பலர்பால் பொதுப் பெயர்கள் முன் பழந்தமிழிலும் பின் பழந்தமிழிலும் பலர்பாலாக வரும் முறைப்பெயர்கள் சிலப்பதிகாரத்தில் மட்டுமே (மகனார், (16:17), மகனார் (24:15. 2) உயர்சொற்கிளவி யாகக் காணப்படுகின்றன (அகத்தியலிங்கம், 1984: 154 தொ.).

நாம் இதுவரை பார்த்தது உயர்திணைச் சொற்கள் உயர் சொற்களாக வருவது பற்றித்தான். அஃறிணைச் சொற்கள் அப்படி வருவதற்கு உரையாசிரியர்கள் நரியார், யானையார், கிளியார் முதலிய உதாரணங்களைக் கொடுத்துள்ளார்கள். அவை சங்க இலக்கியத்தில் வந்துள்ளதாக யாரும் எடுத்துக்காட்ட வில்லை; கண்டுபிடிக்கவும் முடியவில்லை. அப்படியானால் தொல்காப்பியர் எந்த அடிப்படையில் அஃறிணைப் பெயர்களும் உயர்சொற்கிளவியாக வரும் என்று கூறினார் என்ற கேள்வி எழுகிறது. தொல்காப்பியரே,

> 'ஞாயிறு, திங்கள், அறிவே, நாணே,
> கடலே, கானே, விலங்கே, மரனே
> ..............................................................
> ..............................................................
> சொல்லுந போலவும், கேட்குந போலவும்
> சொல்லியாங்கு அமையும் என்மனார் புலவர் (செய். 198)

என்று கூறியுள்ளதால் அஃறிணைப் பொருள்களைப் பேசுபவ ராகவும், கேட்பவராகவும் குறிப்பிடும்போது பெயரில் பலர்பால் சொல்லும், வினைமுற்றில் பலர்பால் சொல்லும் கையாளுவதை உயர்சொற்கிளவியாகக் கருதாமல் - அதாவது அதிகாரம், மதிப்புப் போன்ற காரணங்களுக்காகப் பயன்படுத்துவதாகக் கொள்ளாமல், அவை மானிடர் போலச் செயல்படுவதாகக் கூறியதன்

பிரதிபலிப்பாக - (விலங்கு, மரம் போன்றவற்றை மனிதனாக ஆக்குவது- மானிட வாக்கம். இதை மேலைநாட்டு இலக்கிய ஆய்வாளர்கள், Phatic fallacy, என்பார்கள். தொல்காப்பியர் வடிவ நோக்கில் அஃறிணைச் சொற்களில் பலர்பால் சொல் ஒருமையாகப் பயன்படுவதை மனதில் கொண்டு உயர்சொற்கிளவி என்று பொதுமைப்படுத்திக் கூறியிருக்கலாம். எனவே சங்க இலக்கியத்தில் காணப்படா விட்டாலும், கொள்கை அளவில் உயர்திணை விகுதி பயன்படுத்துவதற்கு இந்தச் சூத்திரத்தின் மூலம் தொல்காப்பியர் வழிவகுத்துவிட்டார் எனலாம்.

### 9.2.3.4. உயர்வுப் பொருள் சொற்கள்

இளம்பூரணர் 'ஒருவர்' என்பதை 'உயர்திணை ஒருவர்' என்றும், 'ஒன்று' என்பதை 'அஃறிணை ஒன்று' என்றும் பொழிப்புரையில் குறிப்பிட்டதற்கு ஏற்ப, 'உயர்திணையை அஃறிணை போலச் சொல்லுதலும், அஃறிணையை உயர்திணை போலச் சொல்லுதலும் கொள்க' என்று ஒரு கூடுதலான செய்தியை விதப்புக் கிளவியால் எடுத்துக்காட்டி, அதற்கான காரணத்தையும் விளக்கிள்ளார்.

> 'என் பாவை வந்தது, போயிற்று என ஒருத்தியையும்,
> என் அன்னை வந்தாள், போயினாள் என ஓர்
> ஆவினையும் காதல் மிகுதியான் கூறுக எனக் கொள்க'

என்பது அவரது வாசகம். தெய்வச்சிலையார் ஒரு பசுவை எம் அன்னை வந்தாள் என்று கூறுவதையும், நச்சினார்க்கினியர் ஓர் எருதை நம்பி எனவும், ஒரு கிளியை நங்கை எனவும் அஃறிணையை உயர்திணை வாய்பாட்டால் கூறுவதையும் எடுத்துக் காட்டியுள்ளார்கள். இலக்கிய வழக்கையும் உலக வழக்கையும் சேர்த்துப் பார்க்கும்போது சேனாவரையர், தெய்வச்சிலையார், நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் அஃறிணையை உயர்திணை யாகக் கூறுவதை மட்டும் கொண்டது குன்றக் கூறலாக ஆகிவிடும். சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ணகியை 'மாசறு பொன்னே, வலம்புரி முத்தே, காசறு விரையே, கரும்பே, தேனே' என்று (2:73-4) பலவகையாகப் பாராட்டியது அஃறிணைப் பெயர்கள் உயர்திணைப் பெயர்களாகப் பயன்படுத்தியதற்குச் சான்றாகக் கொள்ளலாம். இப்படிப்பட்ட வழக்குகளுக்குக் கல்லாடர் கொடுத்த விளக்கம் சிறப்பாக உள்ளது. இவைகளை ஆகுபெயர்களாக ஏன் கருதக் கூடாது என்ற கேள்வியை எழுப்பிக் கொண்டு,

'ஒப்புள்வழிச் சொல்வது ஆகுபெயர்; இது காதல் உள்வழிக் கூறுவது என உணர்க'

என்பது கல்லாடருடைய வாசகம். அதாவது பேசுபவர் உயர்வாகக் கருதும் பொருள்களைத் தான் அன்பு வைத்திருப் பவர்களைக் குறிப்பதற்கு வழங்கும் வழக்கத்தை அவர் உரை காட்டுகிறது. அது இன்றும் உள்ளது. எனவே பேசும் பொருளை உயர்வாகக் கருதும் உணர்வின் வெளிப்பாடு. இலக்கண நிலையில் அஃறிணைச் சொல் (பசு மாடு) உயர்திணைச் சொல் பெறுவதும் (எம் அன்னை வந்தாள்), உயர்திணைச் சொல் (தலைவி), அஃறிணை விகுதி பெறுவதும் (என் பாவை வந்தது) ஆகிய இரண்டு முறையுமே உயர்வின் - அன்பின் வெளிப்பாடுதான்.

### 9.2.3.5. அடைகள்

உரையாசிரியர்கள் பெயரடைகள் பற்றியும் இங்கு விவாதித் துள்ளார்கள். இளம்பூரணர் 'வழக்கு' இனாகிய என்றதனால் கன்னி எயில் (அழியாத எயில்), கன்னி ஞாழல் (பூ) என்பன கொள்க' என்று மட்டும் கூற, சேனாவரையர் அதே உதாரணங்களைக் கொடுத்து 'அஃறிணையாய் நின்று உயர்திணை வாய்பாட்டால் கூறப்படுதல்' என்று விளக்கம் கொடுத்ததோடு 'பண்புகொள்பெயர்க்கொடை வழக்கினிடத்தும் பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன் என இல்குணம் அடுத்து உயர்சொல்லாய் வருதலும் கொள்க' என்று இன்னொரு வழக்கையும் எடுத்துக் காட்டியுள்ளார். கன்னி எயில், கன்னி ஞாழல் என்ற உதாரணங்களைப் பொறுத்தவரையில், கன்னி என்ற சொல்லை இளம்பெண் என்று கொண்டு எயில், ஞாழல் என்ற அஃறிணைச் சொற்களோடு சேர்ந்ததாகக் கருதியே விளக்கம் கொடுத் துள்ளார்கள். உண்மையில் கன்னி என்ற சொல் இளமை (கன்னித் தமிழ்- திவாகரம், 1980), முதன்மை (கன்னிப்போர் - திருக்கோவை) என்ற பொருள் மாற்றம் பெற்றதாகக் கருதவேண்டும். சிலம்பில் வரும் குமரி வாழை (16:42) என்பதிலும் குமரி என்பதை உயர்திணையாகக் கொள்ளவேண்டியதில்லை. எனவே அவர்களின் விளக்கம் பொருத்தமானதாகக் கொள்ளமுடியாது. அப்படியே பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன் போன்றவை இயற்பெயர் களாகக் கருதத் தகுந்தவை; எனவே அங்கு வந்துள்ள அடை பொருள் உடையதாக இருக்கவேண்டும் என்ற நியதி இல்லை. இங்கும் உரையாசிரியர்கள் விளக்கம் பொருந்தாது. அதாவது கன்னி எயில், பெருஞ்சாத்தன் போன்ற தொடர்களை உயர்சொற் கிளவியோடு தொடர்புபடுத்தியது பொருந்தாது.

## 9.3. சமூகப் பொருள்

உயர்சொற் கிளவி என்பதற்கு இளம்பூரணர் 'உயர்த்துச் சொல்லுதல்' என்று கூறிய விளக்கத்தையே பிற உரையாசிரியர்களும் ஏற்றுக் கொண்டுள்ளார்கள். இதன் சமூகக் காரணம் என்ன? என்று அறிந்துகொள்ளவேண்டும். தன்னையோ, கேட்பவரையோ அல்லது பேசுபவரையோ சமூக நிலையில் உயர்வாகக் கருதினால் உயர்சொற்கிளவியைப் பயன்படுத்துவார்கள். அப்படி உயர்வாகக் கருதுவதற்குப் பல காரணங்கள் இருக்கும். இந்தியச் சமூகத்தில், வயது, கல்வி, பொருள், பதவி போன்ற காரணங்களால் உயர்ந்தவர்களை உயர்சொற்கிளவியால் குறிக்கவேண்டும் என்பது இன்றைய சமூக நியதி. அரசர்கள், புலவர்கள் போன்றவர்கள் தங்களை உயர்சொற்கிளவியால் குறிப்பிட்டுக் கொள்வதும் மரபே. அதுபோல் சங்ககாலச் சமூக நியதி என்னவாக இருந்திருக்க முடியும் என்று மீட்டுருவாக்கம் செய்ய முயலவேண்டும். அதுவே அன்றைய சமூகச்சூழல். சங்க காலத்தில் புலவர்கள் அரசர்களை ஒருமையால் குறிப்பிட்டதற்கு இலக்கியத்தில் சான்று உண்டு (புறம். 1:12). அப்படியே தலைவி தலைவனை ஒருமையால் குறிப்பதற்கு மேலே சான்றுகள் காட்டப்பட்டன. அதே சமயத்தில் தலைவனைத் தலைவி பன்மையால் குறிப்பிடுவதே பெரும் பான்மை. தொல்காப்பியரும் தலைவி தலைவனைவிட 'மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே' என்று கூறியுள்ளார் (களவு. 2:4.). பொதுவாகச் சமூக மொழியியலார் (உ.ம். Trudgill, 1974) அதிகாரம் (Power), நெருக்கம் (Solidarity) என்ற இரண்டு காரணங்களால் பன்மை (உயர்வு)ச் சொல், ஒருமைச் சொல் வழங்கப்படும் என்பார்கள். இந்தியச் சூழலில் மதிப்பு (ஓர் எழுத்தாளரை உயர் சொற்கிளவியால் குறிப்பிடுவதற்கு மதிப்பே காரணம்). வெறுப்பு, கோபம் (தன்னைவிட உயர்ந்தவரை ஒருமைச் சொல்லாலும், தன்னைவிடத் தாழ்ந்தவரை உயர்சொற்கிளவி யாலும் கூறுவது) என்பவைகளையும் காரணங்களாகக் கொள்ளலாம். எனவே, தலைவி தலைவனை ஒருமையால் குறிப்பது, சில பாடல்களில் பேச்சின் சூழலும், சில பாடல்களில் நெருக்கமும் காரணம் என்று கொள்ளலாம்.

உயர்சொற்கிளவி இழித்தற்கண்ணும் வரும் என்று சேனாவரையரும், அவரை ஒட்டி நச்சினார்க்கினியரும் கூறியுள்ளார்கள். 'தாம் வந்தார் தொண்டனார்' .....உயர் சொல் தானே குறிப்பு நிலையால் இழிபு விளக்கிற்று' (கிளவி. 27) என்பது

சேனாவரையர் வாசகம். அதாவது சமூக நியதிப்படி ஒருமையால் குறிப்பிட வேண்டியவனை ஒரு காரணத்துக்காகப் பன்மையால் சொன்னாலும், கேட்பவன் இழித்து - கிண்டல் செய்து பேசுவதாகவே உணர்ந்துகொள்வான். இலக்கண நோக்கில் பன்மை- (உயர்சொற்கிளவி) இழிசொற்கிளவியாகவும் பயன்படுகிறது. திருக்குறளில் கயமை அதிகாரத்தில் வரும் பல குறள்கள் (தேவரே போல்வர் கயவர் அவருந்தாம், மேவன செய்தொழுக லான் - 1073 போன்றவை) சான்று. இதை உயர்வு ஒருமை என்பது போல இழிவு ஒருமை என்று குறிப்பிடலாம்.

தொல்காப்பியர் ஒருமைச் சொல் பன்மைக்கு வரலாம் என்றும் (எச்சம். 64) குறிப்பிட்டுள்ளார். உரையாசிரியர்கள் கொடுத்த இரண்டு உதாரணங்களும் முறைப் பெயராகவே வந்துள்ளன.

> *அங்கலுழ் மாமை அகுதை தந்தை*
> *அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்* (அகம். 96. 11-2)
>
> ..................
>
> *புலையன் எறிந்த பூசற் றண்ணுமை*
> *ஏவல் இளையர் தாய்வயிறு கரிப்ப* (அகம். )

இங்கும் முதல் பாடலில் சோழர் தந்தை என்பது சோழர் தந்தையர் என்றும், இரண்டாவது பாடலில் இளையர் தாய் என்பது இளையர் தாயர் என்றும் இருக்கவேண்டும் என்று விளக்கியுள்ளார்கள். அதாவது ஒருமைப் பெயர் (தந்தை, தாய்) பன்மைக்குப் பதிலாக (தாயர், தந்தையர்) வந்துள்ளது என்பது அவர்கள் கருத்து. முறைப் பெயர்கள் நெருக்கத்தின் அடிப்படையில் ஒருமையாய்ப் பயன்படுத்தப்பட்டனவோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

### 9.4. வழு அமைதி

இந்தச் சூத்திரத்தின்மூலம் வெளிப்படும் மொழி அமைப்புப் பற்றிய உரையாசிரியர்களின் இன்னொரு கருத்தும் சுட்டிக்காட்டத் தகுந்தது. அவர்கள் எல்லோரும் இது ஒரு வழு அமைதியை விளக்குவதாகக் கொண்டுள்ளார்கள். 'வழீஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று' என்பது இளம்பூரணரின் உரை முன்னுரை. "இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல' என்றதனான் இலக்கணம் அன்மையும், 'வழக்கினாகிய உயர் சொற் கிளவி' என்றதனான் வழுவன்மையும் கூறினார்; கூறவே

வழுவமைதி என்றவாறாம்' என்பது சேனாவரையர் வாசகம். இதன் அடிப்படை என்ன? ஓர் இலக்கணக் கூறு ஒரு பொருளை - அதுவும் அதற்குரிய பொருளை மட்டுமே உணர்த்த வேண்டும்; அப்படி மீறி வந்ததை இலக்கண ஆசிரியர்கள் விளக்குவதே வழு அமைதி என்பதே அவர்கள் கருத்து. இது மொழி அமைப்பில் இறுக்கத்தைக் காட்டுவது. மொழி பேசுபவனின் சுதந்திரத்தை அல்லது படைப்பாற்றலைக் கட்டுப்படுத்துவது. தொல்காப்பியரே முதலில் 'செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்' என்று வரையறுத்துக் கூறினாலும் (கிளவி. 13), அடுத்த இரண்டு சூத்திரங்களில் மாறியும் வரலாம் (வினாவும் செப்பே வினா எதிர் வரினே) என்றும் அது 'அப்பொருள் புணர்ந்த கிளவியான' என்றும் கூறுவதால் பேசுபவன் பொருள் புலப்படும்படிப் பேசவேண்டும் என்பதே முக்கியம். எனவே, வழு அமைதி என்ற கருத்து தொல்காப்பியருக்கு உடன்பாடு ஆனதாகக் கருதமுடியாது (சண்முகம், 1978). இதனால் ஒரு கருத்தை ஒன்றுக்கு மேற்பட்ட வகையில் கூறலாம்; ஓர் இலக்கணக் கூறை ஒன்றுக்கும் மேற்பட்ட முறையில் பயன்படுத்தலாம். இந்த நிலையில் வழு அமைதி என்ற உரையாசிரியர்கள் கருத்து இரண்டு உண்மைகளைப் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம். 1. இடைக் காலத்தில் இலக்கணக்கூறுக்கு முக்கியத்துவம் கொடுத்து அதன் பல வகைப் பயன்பாட்டுக்குக் கட்டுப்பாடு விதித்தனர். அதன்மூலம் பேசுபவனுக்கு மொழியைப் பயன்படுத்துவதில் சுதந்திரம் இல்லை என்று ஆகிறது. 2. மொழியியல் கோட்பாட்டு நிலையிலும் மொழி அமைப்பு என்பது ஒருமுகநெறி (Monolithic system) உடையது அல்ல; பன்முகநெறி (Polylithic system) உடையது என்ற கருத்தே இன்று பரவலாக ஒத்துக்கொள்ளப் படுகிறது. இந்த நோக்கில் பார்க்கும்போது உரையாசிரியர்களை மொழி அமைப்பு ஒருமுகநெறி உடையது என்ற கருத்து உடையவர்களாகக் கருதலாம்.

### 9.5. துறை வழக்கு

தொல்காப்பியர் மொழியின் கட்டமைப்பை விளக்கியதோடு, சில இடங்களில் மாறுபட்ட அல்லது முரண்பட்ட வழக்குகள் சிலவற்றிற்கு அவைகளுக்கு உரிய துறை வழக்குகளையும் குறிப்பிட்டுள்ளார். அந்த முறையில், உயர்சொற்கிளவி, 'வழக்கின் ஆகியது; இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல' என்பதே அவர் கருத்து. இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல என்பதற்குச் செய்யுள்

(வழக்கு) என்பதே பொருள். ஆனால் உரையாசிரியர்கள் இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல என்பதற்கு நேர்ப்பொருள் கொண்டு விட்டதால் 'உயர்சொற்கிளவி இலக்கியத்தில் வருவதற்கு எந்த விதச் சமாதானமும் கூறாமல் போய்விட்டார்கள். பதிலீட்டுப் பெயர்கள், பொதுப் பெயர்கள் ஆகியவைகளில் உயர்சொற்கிளவி சங்க இலக்கியத்தில் பரவலாகக் காணப்படுவது முன்னரே எடுத்துக்காட்டப்பட்டது. அப்படி இருந்தும் தொல்காப்பியர் ஏன் செய்யுள் வழக்கு அல்ல என்று கூறினார் என்ற கேள்வி எழுகிறது. இங்குச் சமூக நோக்கு, இலக்கண நோக்கு என்று இரண்டு முறையில் விடை தேடலாம்.

சமூக நோக்கில் உயர்சொற்கிளவி சமூகத்தில் இருக்கும் உயர்வு-தாழ்வுகளை மொழி பிரதிபலிப்பதைப் புலப்படுத்துகிறது. தொல்காப்பியரே ஒருபொருள் பலமொழிச் சொற்களில் உயர்ந்தவர் வழக்கு, இழிந்தவர் வழக்கு என்று சுட்டிக்காட்டி யுள்ளார். ஈ, தா, கொடு ஆகிய மூன்று சொற்களும் 'இரவின் கிளவி' - யாசித்தல் குறிக்கும் சொற்கள் என்று முதலில் குறிப்பிட்டு (எச்சம். 48), ஈ என்பது இழிந்தோன் உயர்ந்தோனிடம் கூறுவது (49); கொடு என்பது உயர்ந்தோன் இழிந்தோனிடம் கூறுவது (50) என்று விளக்கியுள்ளது தமிழ்ச் சமூகத்தில் இருந்த உயர்வு-தாழ்வு மொழியில் பிரதிபலித்ததைத் தொல்காப்பியரும் ஏற்றுக் கொண்டதை வெளிப்படுத்துகிறது. அப்படி இருக்கும்போது, உயர்சொற்கிளவி மட்டும் (பேச்சு) வழக்கில் பிரதிபலிக்கலாம்; செய்யுளில் அது பிரதிபலிக்கவேண்டாம் என்று ஏன் தொல்காப்பியர் கூறுகிறார் என்ற கேள்வி பிறக்கிறது. இதைச் சரியாகப் புரிந்துகொள்ளத் தொல்காப்பியர் ஏனைய இடங்களில் செய்யுள் - வழக்கு என்ற வேறுபாட்டை எந்தெந்தக் காரணங் களுக்குப் பயன்படுத்தியுள்ளார் என்று பார்ப்போம்.

செய்யுள் என்பது உரைநடையையும், கவிதையையும் - பொதுவாக எழுத்து மொழியையும் குறிக்கும். ஆனால் செய்யுள் - வழக்கு என்று மாறுபடுத்தும்போது செய்யுள் என்பது இலக்கிய உத்தியாக வழக்குக்கு மாறுபட்டவைகளையும், வரலாற்று நோக்கில் பழைய கூறுகளையும் குறிக்கிறது.

கிளவியாக்கத்தில் (38) முதலில் ஒரு கிளவியில் இயற்பெயரும், சுட்டுப்பெயரும் சேர்ந்து வருமானால் முன்னால் இயற்பெயரும், அடுத்துச் சுட்டுப்பெயரும் வரும் என்று விளக்கி விட்டு, அடுத்த சூத்திரத்தில், 'முற்படக் கிளத்தல் செய்யுளுள்

உரித்தே' என்று குறிப்பிட்டுள்ளார். எனவே இது சுட்டுப்பெயர்க் கிளவி பாடலின் முன் பகுதியில் வருவதைக் குறிப்பிடுகிறது. இலக்கியத்திலும் இப்படிப்பட்ட பாடல்கள் காணப்படுகின்றன (குறு. 5, புறம். 13). முதலில் சுட்டுப்பெயரைக் கூறினால் அது யாரைக் குறிக்கிறது என்று புரிந்து கொள்ளமுடியாது. ஆனால், அது இலக்கியத்தில் வரும்போது வாசகரைத் தொடர்ந்து படிக்க வைக்கும் எதிர்பார்ப்பு உத்தியாகக் கருதப்படுகிறது.

இன்னொரு சூத்திரத்தில் (கிளவி. 51) உயர்திணையும், அஃறிணையும் கலந்து எண்ணப்படும்போது செய்யுளில் அஃறிணை முடிவு பெறும் என்று கூறியுள்ளார். சேனாவரையரும் பிற உரையாசிரியர்களும் உயர்திணை முடிவு பெற்ற பாடல்களையும் எடுத்துக்காட்டியுள்ளார்கள். இது பேசுவோரின் மனநிலையை - உயர்வாகக் கருதுகிறார்களா? அல்லது தாழ்வாகக் கருதுகிறார்களா? என்பதைப் புலப்படுத்துவதாகக் கருதலாம். நச்சினார்க்கினியர் 'திணை விராய் எண்ணி அஃறிணையானும், உயர்திணையானும் முடிந்தது தலைமை பற்றியும் பன்மை பற்றியும், இழிபு பற்றியும் என உணர்க' என்று பொதுமைப் படுத்தியிருப்பது பொருத்தமானதே. தெய்வச்சிலையார் 'சில வயினான் வழக்கினுள்ளும் விரவித் தன்மையும், பன்மையும் பற்றி வந்த அஃறிணையான் முடியவும் பெறும்' என்று குறிப்பிட்டுள்ளார். எனவே இந்தச் சூத்திரத்தைப் பொறுத்தவரையில் இரண்டு கேள்விகள் எழுகின்றன : தொல்காப்பியர் ஏன் 1. அஃறிணை முடிபு பற்றி மட்டும் குறிப்பிட்டு, உயர்திணை முடிபைக் கூறவில்லை? 2. இதைச் செய்யுளுக்கு மட்டும் என்று வரையறுத்தார்.

எச்சவியலின் முதலில் (1-6) செய்யுள் ஈட்டச் சொற்கள் இவை என விளக்குவது செய்யுளின் சொல்தேர்வு பற்றியது. செய்யுளில் சொற்கள் வடிவ மாற்றங்கள் (வலித்தல், மெலித்தல் போன்றவை) பெறும் என்று ஒரு சூத்திரத்திலும் (7), தொடரியல் அமைப்பு மாறுபடும் என்பதை மொழிபுணர்இயல்பு என்று 6 சூத்திரங்களிலும் (8-13) விளக்கியுள்ளது இலக்கிய உத்தி என்றே கருதலாம்.

செய்யுள் - வழக்கு என்று கூறியவைகள் சிலவற்றை, மொழிப் பழமை என்ற வகையில் அடக்கலாம்போலத் தோன்றுகிறது. வேற்றுமை மயங்கியலில் (25) சில வேற்றுமை உருபுகளின் (கு, ஐ, ஆன்) மாற்று வடிவங்களை விளக்கியுள்ளார்.

இதில் இரண்டாம் வேற்றுமை வடிவமாக -அ (26) கூறியிருப்பது வரலாற்று நோக்கில் -அம் என்று கொள்ளப்பட்டு, தொல் திராவிட வடிவமாகக் கருதத் தகுந்தது (சண்முகம், 1971: 371). பெயரியலில் (41) சில பெயர்ச் சொற்கள் செய்யுளில் ஆகாரம் ஓகாரமாகத் திரிந்து வரும் என்று குறிப்பிட்டுள்ளார். இந்தக் கருத்து வினையியலினுள் (14) குறிப்பிடப்பட்டுள்ளது. இவை பழைய வழக்கு என்றே கருதவேண்டியிருக்கிறது. எழுத்ததி காரத்தில் செய்யுள் வழக்காகக் கூறிய பல வடிவங்கள் (அகரச் சுட்டு வடிவம் - ஆ (உயிர்ம. 6), பொன் - பொலம் (புள்ளிம. 61) தொன்மை வடிவங்களாகக் கருதத் தகுந்தவை.

மேலே காட்டிய 'இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க் கொடை' என்ற சூத்திரத்தில், வழக்கு என்பது செய்யுளுக்கு மாறுபட்டது என்பது நேரடியாகக் குறிப்பிடப்பட்டிருந்தாலும், 'இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை' (பேச்சு) வழக்கிலும் காணப்படுவதால் இதைச் செய்யுள் பண்பு, வழக்கில் காணப்படுவதாகக் கொள்ளவேண்டும் என்று விளக்குகிறார்கள். செயற்கைப் பொருள் காரணக்கிளவியும், ஆக்கச் சொல்லும் பெற்று வரவேண்டும் என்று முதலில் கூறிவிட்டு (கிளவி. 20, 21), அடுத்துக் காரணக் கிளவி இல்லாமலும் ஆக்கச் சொல் 'வழக்கினுள்ளே' என்று (22) கூறியதும் விவாதத்துக்கு உரியது. ஏனென்றால் காரணக்கிளவி இல்லாமலும் செய்யுளிலும் வரலாம்.

இந்த நோக்கில் பார்க்கும்போது செய்யுளில் உயர்சொற் கிளவி பயன்படுத்தாதது பழைய வழக்கு என்று கொள்ளலாம். சமூக நோக்கில் பார்க்கும்போது, தொல்காப்பியர் இலக்கியத்திலும் சமூக ஏற்றத் தாழ்வு பிரதிபலிப்பதை விரும்பவில்லை என்று கொள்ளலாம் போலத் தோன்றினாலும் ஈ, தா, கொடு ஆகிய சொற்களைக் கையாளுவதில் உயர்வு-தாழ்வு இருப்பதை ஏற்றுக்கொண்டு வருணித்துள்ளதால் அதை ஒத்துக் கொள்ளமுடியாது.

இலக்கண நோக்கில் பார்த்தால், ஓர் இலக்கணக் கூறை ஒன்றுக்கு மேற்பட்ட வகையில் கையாளலாம் என்பதை இந்தச் சூத்திரம் (கிளவி. 27) உணர்த்துகிறது. தொல்காப்பியத்தில் இப்படிப்பட்ட சூத்திரங்கள் இன்னும் பல உண்டு. 'வினாவும் செப்பே வினாஎதிர் வரினே' (கிளவி. 14), ஆகுபெயர் (வே.ம. 31), இறந்த காலம் சில சூழல்களில் எதிர்காலத்தை உணர்த்துவது

(வினை. 42), வினாச் சொல் எதிர்மறையை உணர்த்துவது (வினை. 47), செயப்படுபொருளைச் செய்தது போலக் கிளத்தல் (வினை. 49), திணை துணிந்து பால் துணியாத போது பன்மை வினைமுற்றைப் (பலர்பால், பலவின்பால்) பயன்படுத்தலாம் என்றும் தொல்காப்பியர் (கிளவி. 23) குறிப்பிட்டுள்ளார். அப்படியானால் 'இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல' என்பதை (கிளவி. 27) வெறும் இலக்கண நிலையில் ஏற்றுக்கொள்ளவில்லை என்று கூறுவது பொருந்தாது.

## 9.6. முடிவுரை

தொல்காப்பியர் உயர்சொற்கிளவி என்பது பலர்பால் (உண்மையில் மூவிடப் பன்மைப் பெயர்களையும் பலர்பால் பொதுப் பெயர்களையும்) ஒருவரையும் ஒன்றனையும் குறிப்பதாகவே கொண்டுள்ளார்; ஆனால் சூத்திர வாசகங்கள் - குறிப்பாக 'ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவி' என்பது இருண்மையாக அமைந்துவிட்டதால் அந்த உண்மையைத் தெளிவாக உணரமுடியாமல் போய்விட்டது என்று கருதவேண்டியிருக்கிறது. அதற்கு ஒருமுகப் போக்கு என்ற இலக்கிய உத்தியே காரணம் என்று சமாதானம் கூறலாம். உயர்சொற்கிளவியை இலக்கிய வழக்கில் பயன்படுத்தக் கூடாது என்று தொல்காப்பியர் தயக்கம் காட்டியதற்கான காரணம் புரியவில்லை. இடையியலில் கூறிய இயற்பெயர்களை உயர்சொற்கிளவிகளாக அமைக்கச் சேர்க்கை விகுதியாக -ஆர் பெறுவதையே கூறித் திரிபு விகுதியாக -ர் (கபிலன் : கபிலர்) வருவதைக் குறிப்பிடவில்லை.

தொல்காப்பியர் பன்மை வடிவத்தை யார்? (அதாவது பேசுபவரா? அல்லது கேட்பவரா? என்று விதந்து கூறவில்லை. ஆனால் உரையாசிரியர்கள் மூவிடப் பன்மை வடிவங்களையும் கொடுத்ததால் பேசுபவரும், கேட்பவரும் உயர்சொற்கிளவி பயன்படுத்தலாம் என்று உணர்த்திவிட்டார்கள். புதிதாக இழிவுப் பன்மை (தொண்டனார் வந்தார்) எடுத்துக்காட்டியது ஏற்றுக் கொள்ளத் தகுந்ததே. இதைத் தொல்காப்பியர் கவனிக்கவில்லையா? வேண்டும் என்றே சொல்லவில்லையா என்று தெரியவில்லை. அதே சமயத்தில் திணை மாறியும் (கன்னி எயில்), பெயரடையாகவும் (பெருஞ்சாத்தன்) வருவது பற்றி உரையாசிரியர்கள் கூறியது பொருத்தமானதாகக் கொள்ளமுடியாது.

பொதுவாக உரையாசிரியர்கள் தொல்காப்பியத்தை எல்லாக் காலத்துக்கும் பொருந்தும் என்று அதன் பெருமையை அனாவசியமாக உயர்த்த நினைப்பதும் வழு அமைதி என்று கூறி உயர்சொற்கிளவிக்கு இரண்டாம் பட்ச அந்தஸ்து கொடுப்பதும் பொருந்தாது. தொல்காப்பியம் சங்ககாலத் தமிழுக்கு உரிய இலக்கணம்; ஓர் இலக்கணக்கூறு (பலர்பால் வடிவம்) ஒன்றுக்கு மேற்பட்ட முறையில் (பலர்பால் சொல்லாகவும் உயர்சொற்கிளவி யாகவும்) கையாளுவது என்ற முறையில் இயல்பானது என்பதே சரி. இதற்குப் பல உதாரணங்கள் தொல்காப்பியத்திலேயே உண்டு (வினை. 47, 48, 49 முதலியவை). மொழி அமைப்பையும், மொழியின் பயன்பாட்டையும் இலக்கணம் உணர்த்துகிறது என்ற பொது உண்மையையும் புலப்படுத்தி, இலக்கணம் புலப்படுத்தல் (Communicative) முறையை அறிந்துகொள்வதற்கும் பயன்படும் என்ற உண்மையையும் தெளிவுப்படுத்துகிறது.

இன்று நாம் தொல்காப்பிய அடிப்படையிலும், உரைகள் அடிப்படையிலும் சங்க காலத்தில் பலர்பால் பெயர்களும், மூவிடப் பன்மைப்பெயர்களும், சேர்க்கை விகுதியும், திரிபு விகுதியும் பெற்ற இயற்பெயர்களும் (சிறப்புப் பெயர்கள்) உயர் சொற்கிளவியாக வருவதை உணர்ந்து கொள்கிறோம். அஃறிணைப் பெயர்கள் -ஆர் விகுதி பெற்று வருவதை உயர்சொற் கிளவியாகக் கருதாமல், கதைகளில் பேசுபதுபோலவும், கேட்பது போலவும் மனிதராகச் செயல்படுவதாகச் சொல்வதின் பிரதி பலிப்பு என்று கொள்வதே பொருந்தும். உரைகள் அடிப்படையில் இழிவு ஒருமை இருப்பதும் ஏற்றுக்கொள்ளத் தகுந்ததே.

சங்க இலக்கியப் பாடல்கள் கூற்று அடிப்படையில் அமைந்ததால் பேசுவோர் - கேட்போர் என்ற முறையில் பார்க்கும் போது ஒருமை - ஒருமை; பன்மை-ஒருமை; பன்மை-பன்மை என்று மூன்று நிலைகளிலும் தலைவன்-தலைவியர் குறிப்பிட்டுக் கொள்வதைக் காணமுடிகிறது. ஒருமை-ஒருமை, பயன்பாடு இருவரும் ஒத்த மதிப்பு உடையவர்கள் என்பதைப் புலப்படுத்து வதோடு நெருக்கத்தையும், சில சமயங்களில் கோபத்தையும் புலப்படுத்துகிறது. பன்மை-பன்மை பயன்பாடு ஒத்த உயர் சமூக நிலையையும் ஒருவரை ஒருவர் உயர்வாக மதிக்கிற பண்பையும் புலப்படுத்துவதாக ஊகிக்கத் தோன்றுகிறது. ஒருமை (தலைவி) - பன்மை (தலைவன்) என்பது ஆண்களுக்குச் சமூகத்தில் இருந்த சமூக உயர்மதிப்பின் வெளிப்பாடு.

# 10
# மொழிபுணர் இயல்பு

## *10.1. முன்னுரை*

தொல்காப்பியம் பேச்சு மொழிக்கும் (வழக்கு) எழுத்து மொழிக்கும் (செய்யுள்) இலக்கணம் என்று அதன் பாயிரம் உணர்த்துவதற்கு ஏற்ப, ஆங்காங்கே அந்த இரண்டு வகைகளின் சிறப்புக் கூறுகளைத் தனித்தனியே விளக்கிச் சென்றுள்ளது என்பது முன்னரே பல இடங்களில் சுட்டிக்காட்டப்பட்டது. கிளவியாக்கத்திலேயே இரண்டு வாக்கியத்துக்கு இடையே இட (முன்பின்) மாற்றம் செய்யுள் மொழிக்கு உரியதாகத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். எச்சவியலில் முழுச் செய்யுளில் நடைபெறும் அடி, சீர் மாற்றங்களை **மொழிபுணர் இயல்பு** என்று குறிப்பிட்டு அதை வகைப்படுத்தி 6(887- 892) சூத்திரங்களில் விளக்கியுள்ளார். அது தொடரியல் மாற்றிலக்கண ஆய்வுக்கு முன்னோடி போல அமைந்துள்ளதால் அவை இங்கு ஆராயப்படுகின்றன. மொழி மாற்றங்கள் (Transformations) பேசுவோன் மனநிலையை - எதற்கு அழுத்தம் கொடுக்கவேண்டும் என்று நினைக்கும் மனநிலையைப் புலப்படுத்துவதாக இப்போது கருதப்படுகிறது. செய்யுள் மொழியில் இடமாற்றம், சொல் கெடுதல் போன்றவை பல பயன்பாடுகளை உடையதாகக் கருதப்படுவதால் மொழிமாற்றத்துக்கான காரணங்களும் இங்கு ஆராயப்படுகின்றன.

தொல்காப்பியர் 'மொழிபுணர் இயல்பு' என்ற தொடரை எழுத்ததிகாரப் புணரியலிலும் (6.10), சொல்லதிகார எச்ச வியலிலும் (8.2) கையாண்டுள்ளார். மேலும் **செய்யுள் கண்ணிய தொடர்மொழி** என்ற தொடரும் (உயிர்மயங்கு. 11) காணப்படுகிறது. எச்சவியல் மொழி புணர் இயல்பு என்பதைப் பிற்கால ஆசிரியர் பலரும், தற்கால அறிஞர்களும் பொருள்கோள் என்றே அழைக்கிறார்கள். தொல்காப்பியர் செய்யுளின் தொடரியல் வேறுபட்டது என்ற கருத்து உடையவர் என்பது புலனாகிறது. பொருள்கோளின் (பிற்காலத்தார் வழங்கும் பொருளில்

எளிமையாக இருப்பதால் அதுவே கையாளப்படுகிறது) வகைகளை எச்சவியலிலும் (8-13), நிரனிறை என்ற ஒரு பொருள் கோள் உவமையாக அமையும் முறையை உவமையியலிலும் (38), தொடையாக அமையும் முறையைச் செய்யுளியலிலும் (87) விளக்கியுள்ளார். தொல்காப்பியரும் 'பொருள்கோள்' என்ற தொடரைப் பொருளதிகார மெய்ப்பாட்டியலில் (273) பயன்படுத்தி யுள்ளார். பொருள்கோளோடு தொடர்புடைய இன்னொரு கருத்து **மாட்டு** (செய்யுள். 202) என்பது. எனவே தொல்காப்பியரின் பொருள்கோள் கோட்பாட்டை அறிந்துகொள்ள **மொழிபுணர் இயல்பு** என்பதன் சரியான பொருளையும், **பொருள்கோள், மாட்டு** ஆகியவைகளின் பொருளையும், அவைகளுக்கிடையே உள்ள வேறுபாட்டையும் தெரிந்துகொண்டு பொருள்கோள் பற்றிய சூத்திரங்களையும் ஆராய வேண்டும்.

இங்கு முதலில் எழுத்ததிகாரத்திலும், சொல்லதிகாரத்திலும் **மொழிபுணர் இயல்பு** என்று கூறியதன் காரணமும், அதற்கும் தொல்காப்பியர் கையாண்ட பொருள்கோள், மாட்டு ஆகிய இரண்டுக்கும் உள்ள வேறுபாடும், பொருள்கோள் பற்றிய சூத்திரங்கள் புலப்படுத்தும் சில பொது உண்மைகளும், அடுத்துப் பொருள்கோள் வகைகளும் அவைகளின் பயன்பாடும் விளக்கப் படும். இங்குப் பெரும்பான்மையும், சங்க இலக்கிய உதாரணங்களைப் பயன்படுத்தியே, தொல்காப்பியரின் பொருள்கோள் கோட்பாடு அறிந்துகொள்ள முயற்சிக்கப்பட்டுள்ளது.

### 10.2. ஆய்வு வரலாறு

பிற்காலத் தமிழ் இலக்கணங்கள் பொருள்கோளைச் சொல் இலக்கணம் (நேமிநாதம், நன்னூல் முதலானவை), யாப்பிலக் கணம் (யாப்பருங்கலக்காரிகை, யாப்பருங்கலவிருத்தி), அணி இலக்கணம் (தொன்னூல் விளக்கம், முத்துவீரியம் முதலியன) ஆகியவைகளின் கீழ் விவரித்துள்ளன. 1975 வரை சில ஆய்வுக் கட்டுரைகளே வந்துள்ளன. அந்த நிலையில் 1975இல், அரங்க ராசன் (1977) தனது எம்.பில். பட்டத்துக்காகப் பொருள்கோள் என்ற தலைப்பில் மேற்கொண்ட ஆய்வு, பொருள்கோளை வருணனை நோக்கிலும் உரையாசிரியரும் பிறரும் தந்த விளக்கங்கள், அதன் பயன்கள், வரலாற்று நோக்கிலும் (இலக்கண ஆசிரியர்கள், உரையாசிரியர்கள், தற்கால அறிஞர்கள் ஆகியவர் களின் கருத்துகள்) விளக்குகிறது. இதுவே பொருள்கோள் பற்றி வந்த தனி ஆய்வு நூல். 1981இல் கிருட்டினமூர்த்தி (1990) தனது

முனைவர் பட்டத்திற்காக மேற்கொண்ட தொல்காப்பிய ஆய்வு வரலாற்றில் பொருள்கோள் பற்றி ஒரு சிறு குறிப்பு (ப. 262) மட்டுமே உள்ளது. 1985 வரை வெளிவந்த எழுத்ததிகார, சொல்லதிகார ஆய்வடங்கல்களில் (பட்டாபிராமன், 1992) பொருள்கோள் பற்றி ஒரு கட்டுரையும் காணப்படவில்லை. காளிமுத்துவின் (1979) 'குறுந்தொகையில் முரண் தொடை' என்ற கட்டுரையும், காளிதாசின் (1989) 'நிரனிறை யணி' என்ற கட்டுரையும் பொருள்கோளோடு ஓரளவு தொடர்புடையவை. குறளில் பொருள்கோள் என்ற கட்டுரை (சண்முகம், 2002) அண்மையில் வெளிவந்துள்ளது.

### 10.3. மொழிபுணர் இயல்பு

மேலே குறிப்பிட்டபடி, தொல்காப்பியர் எழுத்ததிகாரத்திலும், சொல்லதிகாரத்திலும் ஒரே தொடரைக் கையாண்டதன் சிறப்பை அறிந்துகொள்ள அங்கு விவரிக்கப்பட்ட செய்திகளைப் பார்ப்போம்.

#### 10.3.1. எழுத்ததிகாரம்

புணரியலில் இரண்டு சொற்கள் அதுவும் பெயரும், வினையும் தொடரியல் உறவோடு (வேற்றுமை, அல்வழி) சேரும்போது ஏற்படும் மாற்றத்தை இயல்பு, விகாரம் (மெய் பிறிதாதல், மிகுதல், குன்றல்) என்பதை 'மொழிபுணர் இயல்பு' என்றும் (6.10), தொடரியல் உறவு இல்லாமல் வருவதையும் மருவின் பாத்திய மயங்கியன்மொழி (9.1) என்றும் குறிப்பிடுகிறது. அங்குச் செய்யுளில் சொற்கள் சேருவதைப் பற்றிப் பேசுவதாகவே நச்சினார்க்கினியர் கருதுகிறார். அதனாலேயே இங்குக் காட்டிய இரண்டு உதாரணங்களை (அகம். 4, புறம். 6) மொழிமாற்று பற்றிய சூத்திர உரையிலும் (எச்சம். 13) அவர் எடுத்துக்காட்டியுள்ளார். இங்குப் பொதுவாகச் சொற்கள் எவை (பெயர், வினை), எப்படி (வேற்றுமை, அல்வழி உறவு) புணருகின்றன; அப்படிச் சேரும்போது ஏற்படும் எழுத்து மாற்றங்கள் என்னென்ன என்று விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

#### 10.3.2. சொல்லதிகாரம்

மொழிபுணர் இயல்பு என்பது தொடரியலைக் குறிக்கிறது என்பது தெளிவு. தொல்காப்பியர் எச்சவியலில் அதன் வகைகளை விளக்கும்போது சீர், அடி என்ற சொற்களைக் கையாளுவதால் (எச்சம், 10, 11, 12) அது செய்யுளைப் பற்றியது

என்பது விளங்குகிறது. மேலும், இதற்கு முன்னுள்ள ஏழு சூத்திரங்களில் முதல் ஆறு சூத்திரங்கள் **செய்யுள் ஈட்டச் சொல்லையும்** அதன் வகைகளையும், ஏழாவது சூத்திரத்தில் **'செய்யுள் விகாரத்'**தையும் பேசுவதாலும் இவை செய்யுளாக்கத்தை-செய்யுளாக்கத்தில் தொடரியல் அமைப்பை விளக்குவன என்பது உறுதியாகிறது. எனவே எச்சவியலில் விளக்கும் **மொழிபுணர் இயல்பு,** செய்யுளின் தொடரியலில் ஏற்படும் சொற்களின் இட மாற்றங்களை வருணிப்பதுதான். உண்மையில் இங்கு ஒரு செய்யுளில் வரும் ஒன்றுக்கு மேற்பட்ட வாக்கியங்களும் அடங்கு வதால் தொடரியலுக்கு மேலான பனுவல் ஆய்வோடும் (இது Text analysis என்பதற்கு இணையானது) தொடர்புடையது. கருத்தாடல் (Discourse) ஆய்வோடுங் கூடத் தொடர்புடையது. ஆனாலும், தொல்காப்பியர் இங்குச் சொற்களோ அல்லது வாக்கியங்களோ புணரும் முறை பற்றிப் பொதுமைப்படுத்தாமல், அவைகளின் வகைகளை மட்டும் குறிப்பிட்டுள்ளார். அதாவது எழுத்ததிகார மொழிபுணர்இயல்பின் சொற்கள் புணரும்போது ஏற்படும் மாற்றங்களை இயல்பு, விகாரம் என்று கூறி விகார வகைகளை விளக்கியவர் இங்கு இயல்பு, விகாரம் என்று பாகுபடுத்தாமல், வகைகளை மட்டும் விளக்கிச் சென்றுள்ளார்.

### *10.3.3.* மொழியியல்

மாற்றிலக்கண மொழியியலார் இடமாற்றம் அல்லது முன்பின் மாற்றம் (Permutation), கெடுதல் (Deletion), தோன்றுதல் (Insertion), பதிலிடுதல் (Substitution) ஆகிய மொழிமாற்றங்கள் (Transformations) நடைபெறும் என்று கூறுவார்கள். இந்த முறையில் தொல்காப்பியர் 'இடமாற்றம்' பற்றி மட்டுமே இங்கு விளக்கியுள்ளார் என்று நாம் பொதுமைப்படுத்தலாம். அதாவது இயல்பு, விகாரம் ஆகிய இரண்டில் விகாரத்தின் ஒரு வகையான இடமாற்றத்தை மட்டும் விவரித்துள்ளார். ஆனால், பிற்கால இலக்கண ஆசிரியர்கள் அளைமறி பாப்பு, தாப்பிசை ஆகியவைகளை விவரித்ததன் மூலம் 'கெடுதல்' என்ற இன்னொரு விகாரத்தையும் 'யாற்றொழுக்கு' அல்லது யாற்றுநீர் என்பதன் மூலம் இயல்பையும் விளக்கியுள்ளார்கள்.

இலக்கண ஆசிரியர்கள் கூறும் பொருள்கோளுக்கும் மாற்றிலக்கண மொழியியல் விளக்கும் இடமாற்றத்துக்கும் (Transformations) அடிப்படையான கருத்து வேறுபாடு உண்டு. பொருள்கோள் என்பது பாட்டிலுள்ள சொற்களை அதாவது அதன் புற வடிவத்தை வரிசை முறை மாற்றி அதன் திரள்

பொருளைப் புரிந்துகொள்ளும் முறை; அதை அன்வயப்படுத்துதல் என்பார்கள். அது ஒரு வகையில் புதைநிலை வடிவம் காண்பதுதான். மாற்றிலக்கண மொழியியலில் வாக்கியத்தின் புற வடிவத்துக்குப் பொருள் அடிப்படையில் ஒரு புதைநிலை வடிவம் கற்பித்து அந்தப் புதைநிலை வடிவம் என்னென்ன மாற்றம் பெற்றுப் புற வடிவமாக மாறியது என்றும் விளக்கும். மொழியியல் நோக்கில் பொருள்கோள் என்பது ஒரு விதமான புதைநிலை காண்பதுதான். புறவடிவமாக எப்படி மாறியது? ஏன் மாறியது? மாறியதன் அர்த்தம் என்ன என்ற கேள்விகள் கேட்டு விடை காணப் பொருள்கோளில் வாய்ப்பு இல்லை. உதாரணமாக '**கண்டனென் கற்பினுக்கு அணியைக் கண்களால்**' என்ற கம்பராமாயண அடியைப் பொருள்கோள் ஆய்வு கற்பினுக்கு அணியைக் கண்களால் கண்டனென் என்று மொழிமாற்றுச் செய்வதோடு நின்றுவிடும். மொழியியல் ஆய்வு கற்பினுக்கு அணியைக் கண்களால் கண்டனென் என்பதைப் புதைநிலை வடிவம் என்று கொண்டு, பயனிலை (கண்டனென்) முன்னிறுத்தம் செய்யப்பட்டிருப்பதாக விளக்கும். நடையியல் அல்லது மொழியியல் திறனாய்வு ஆய்வே, கேட்பவன் மனநிலையை உணர்ந்து அவனுக்கு முதலில் தான் நேரில் பார்த்த செய்தியை அறிவிக்கும் வகையில் பயனிலை முன்னிறுத்தம் செய்யப் பட்டிருக்கிறது என்று விளக்கும். உண்மையில் இந்த முன்னிறுத்த மாற்றம் கதை மாந்தரின் உளவியல் பாங்கை மட்டும் அல்லாமல் கவிஞன் உளவியல் உணர்ந்தவன் என்பதையும் புலப்படுத்தும்.

### 10.4. உரையாசிரியர்களின் விளக்கம்

**மொழிபுணர் இயல்பு** என்ற சொல்லதிகாரத் தொடருக்கான உரையாசிரியர்கள் விளக்கத்தில் நான்கு வகையான கருத்துகள் காணப்படுகின்றன. அவைகளை 1. இளம்பூரணர் 'இயல்பு' என்றும், 2. சேனாவரையர் 'விகாரம்' என்றும், 3. நச்சினார்க்கினியர் 'இயல்பும், விகாரமும்' என்றும், 4. தெய்வச்சிலையார் 'பொருளை உணர்த்தும் முறை' என்றும் கொள்வதாகப் பொதுமைப்படுத்தலாம்.

#### 10.4.1. இயல்பு

**மொழிபுணர் இயல்பு** என்பதற்கு இளம்பூரணர் 'நிரனிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று என நான்கு வகையான் மொழிகள் தம்முள் புணரும் செய்யுளகத்து' என்று பொழிப்புரை எழுதியுள்ளதால் அது பற்றி ஒன்றும் மதிப்பீடு

செய்யவில்லை என்பது புலனாகிறது. பிற உரையாசிரியர்கள் கருத்துகளைப் பார்க்கும்போது நாம் இளம்பூரணர் கருத்தை 'இயல்பு' என்று பொதுமைப்படுத்தலாம் போலத் தோன்றுகிறது.

### 10.4.2. விகாரம்

சேனாவரையர் சூத்திர உரை முன்னுரையில் 'செய்யுளிடத்து விகார வகையான் மொழிகள் தம்முள் புணருமாறு கூறுகின்றார்' என்று எழுதி, 'நான்கு சொல்லும் செய்யுளிடத்துத் தம்முள் புணருமுறைமை' என்று பொழிப்புரை எழுதியுள்ளார். அதாவது விகாரம் செய்யுளுக்கு முறைமை என்பது அவருடைய கருத்து. செய்யுளில் நிரனிறை, சுண்ணம் போன்றவை அமைப்பது விகாரம். விகாரம் என்பது ஓர் இலட்சிய நிலையிலிருந்து மாறுபட்டது என்று பொருள். அதாவது எழுவாய் + செயப்படு பொருள் + பயனிலை என்று அமையவேண்டிய வாக்கியம், செய்யுளில் செயப்படுபொருள் + பயனிலை + எழுவாய் என்றோ, அல்லது வேறு விதமாகவோ வருவது விகாரம். காரணவாக்கியம் + காரிய வாக்கியம் என்று அமையவேண்டியது முறைமாறிக் காணப்படுவதும் விகாரமே. அதே சமயத்தில், அது செய்யுளுக்கு - படைப்புக்கு முறைமை. இங்குச் சேனாவரையர் இந்த விகாரத்தின் சிறப்பு என்ன என்று விளக்காதது அல்லது ஆராயாதது ஏனோ? இன்றைய அறிஞர்கள் அதன் மூலம் புலவன் பல கூடுதல் கருத்துகளை உணர்த்துகிறான் என்ற கருத்து உடையவர்கள். மேலே விளக்கிய **கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்** என்ற கம்பராமாயண அடி மொழி மாற்று மூலம் விகாரமாக இருப்பது கேட்பவனின் மனநிலையை உணர்ந்து அவனுக்கு முக்கியமாகத் தெரிய வேண்டிய செய்தியைப் பேசுபவன் முதலில் உணர்த்திய தன்மையைப் புலப்படுத்துகிறது. இங்கு இலக்கிய ஆய்வுக்கான ஒரு வழிக் காட்டுதல் இருப்பது கவனிக்கத்தகுந்தது.

### 10.4.3. இயல்பும் விகாரமும்

'செய்யுள் செய்வழி அதன் பொருட்கிடை கூறுகின்றது' என்பது நச்சினார்க்கினியரின் உரை முன்னுரை. அவர் **மொழிபுணர் இயல்பு** என்பதை 'இயல்பு புணர்மொழி' என்று எடுத்துக்கொண்டே 'இயற்கையாகவே தம்முள் கூடிப் பொருள் உணர்த்தும் சொற்கள் அங்ஙனம் இயற்கையாகக் கூடிப் பொருள் உணர்த்தாது விகாரப்பட்டுப் பொருள் உணர்த்துங்கால் அவ் விகார வகை ........ நான்கு' என்று பொழிப்புரை எழுதியுள்ளார்.

உய்த்துணர்ந்து கொள்ளப் பிறிதொரு பொருள் வரும்' என்று விளக்கமும் ஒட்டணியாக வரும் இரண்டு குறள்களையும் உதாரணமும் காட்டியுள்ளார். சேகனாவரையர் அப்படிப்பட்ட பாடல்களைக் குறிப்பெச்சம் என்று கூறியுள்ளார். ஒரு நிலையில் உவமானம் இருந்து உவமேயம் இல்லாத பாடல் என்று கொள்ளலாம். குறுந்தொகையில் 'ஞாயிறு பட்ட அகல்வாய் வானத்து' என்ற பாடல் (92) இந்த வகையைச் சார்ந்தது. எனவே இப்படிப்பட்ட பாடல்களைக் குறிப்பெச்சம் என்று கொள்ளலாமா என்று நினைக்கலாம். தொல்காப்பியர் அடிவரையறை இல்லாத ஆறில் (செய். 162) கூற்றிடை வைத்த குறிப்பு (செய். 163.6) என்ற ஒன்றைக் குறிப்பிட்டு அதன் விளக்கமாக

> எழுத்தொடும் சொல்லொடும் புணரா தாகிப்
> பொருட்புறத் ததுவே குறிப்புமொழி யென்ப

என்று (செய். 177) கூறுவதால் ஒட்டணியைக் குறிப்பெச்சமாகக் கொள்ளத் தூண்டுகிறது.

இங்குச் சொல்லெச்சம் கூற்றெச்சம் என்றும், இசையெச்சம் என்பது இசையோட்டத்தால் மாறுபட்ட பொருளை எச்சகமாக உணர்த்துவது என்றும், குறிப்பெச்சம் ஒட்டணியாக வருவது என்றும் கொள்ளலாம் என்று கருதப்பட்டுள்ளது.

### 11.6. முடிவுரை

பிரிநிலை எச்சம், ஒழியிசை எச்சம், எதிர்மறை எச்சம், வினையெச்சம், பெயரெச்சம் ஆகிய ஐந்துக்கும் தெய்வச்சிலையாரின் கருத்துப் பொருத்தமானதாகத் தோன்றுகிறது. ஆனாலும் வினையெச்சம், பெயரெச்சம் ஆகிய இரண்டுக்கும் புதிய கருத்தும் முன்வைக்கப்பட்டுள்ளது. உம்மை எச்சம் என்பதற்கு இளம்பூரணர் கருத்துப் பொருந்துகிறது. சொல்லெச்சம் என்பதற்கு நச்சினார்க்கினியிரின் ஒரு கருத்தும், குறிப்பெச்சம் என்பதற்குச் சேனாவரையரின் ஒரு கருத்தும் பொருத்தமாகத் தோன்றுகின்றன. எனவென் எச்சத்திற்கு ஒன்றுக்கு மேற்பட்ட கருத்துகள் பொருந்தும் முறை விவாதிக்கப்பட்டுள்ளது. இசையெச்சம் என்பதற்குப் புதிய கருத்து முன்வைக்கப்பட்டுள்ளது.

பொதுவாக, எஞ்சுபொருட் கிளவி இன்னும் தீவிர ஆய்வுக்கும் விவாதத்துக்கும் உரியது.

# 12
# உரையாசிரியர்களின் தொடரியல் கோட்பாடு

### *12.1. முன்னுரை*

இலக்கண நூலாசிரியர்கள் தங்கள் இலக்கணக் கோட்பாட்டை விதந்து சொல்வதில்லை. எனவே அவர்கள் கோட்பாட்டை அறிந்துகொள்ள இரண்டு வழிகள் இருக்கின்றன. 1. அந்த நூலின் உரையாசிரியர்களின் வழியே அறிந்து கொள்வது அதிலும் சிக்கல் இல்லாமல் இல்லை; ஏனென்றால் அவர்கள் சொந்த அறிவையும், அவர்கள் கால அறிவையும் ஒட்டியே விளக்குவதால் அவர்களுக்குள்ளேயே கருத்து மாறுபாடு காணப் படுவது. 2. தற்கால மொழியியல் அறிவை ஒட்டி அறிந்துகொள்ள முயல்வது. தொடரியலைப் பொறுத்தவரையில் வளர்ச்சி பூதாகாரமாய் உள்ளதால் அவைகளின் சில அடிப்படைக் கோட் பாடுகளையே இங்குப் பொருத்திப் பார்க்கமுடியும்.

பொதுவாக இன்றைய தொடரியல் ஆய்வில் அண்மை உறுப்பு ஆய்வு (Immediate Constituent Analysis), மாற்றிலக்கண மொழியியல் ஆய்வு (Transformational Grammar) ஆகிய இரண்டு கோட்பாடுகள் மிக முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன.

உரையாசிரியர்களின் சொல்லதிகாரப் பொதுவிளக்கத்திலும், சில சூத்திரங்களின் விளக்கத்திலும் சில தொடரியல் பொதுச் சிந்தனைகள் புதைந்துள்ளன. அவைகளில் மேலே குறிப்பிட்ட இரண்டு கோட்பாடுகளின் ஆணிவேர்களாகக் காண முடிவதை விளக்குவதே இந்தக் கட்டுரையின் நோக்கம்.

### *12.2. பொது விளக்கம்*

சொல்லதிகாரப் பொதுவிளக்கத்தில் காணப்படும் தொடரியல் கருத்துகளில் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கல்லாடரும் கூறுவதைச் சொல் சேர்க்கை நிலை என்றும் சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் கூறுவதைப் பாகுபாட்டு நிலை என்றும் பாகுபடுத்திப் பார்க்கலாம். ஆனாலும் அவைகளுக்குள் சிறுசிறு வேறுபாடுகள் உள்ளன.

### 12.2.1. சேர்க்கை நிலை

இளம்பூரணர் கிளவியாக்க முதல் சூத்திர உரை விளக்கத்தில் உயர்திணை என்ற தொடரை விளக்கும்போது,

> 'ஒரு சொல் முன் ஒரு சொல் வருங்கால் தொகை நிலை வகையான் வருதலும், எண்ணுநிலை வகையான் வருதலும், பயனிலை வகையான் வருதலும் என மூன்று வகையான் அடங்கும். அவற்றுள் தொகை நிலை வகையான் வந்தது யானைக்கோடு என்பது; எண்ணுநிலையான் வந்தது நிலனும் நீரும் என்பது; பயனிலை வகையான் வந்தது சாத்தன் உண்டான் என்பது.

இங்கு 'ஒரு சொல் முன் ஒரு சொல் வருதல்' என்பதால் சேர்க்கை நிலை என்று பொதுமைப்படுத்தப்பட்டிருக்கிறது. உண்மையில் இந்தக் கருத்து களவியல் உரையில் (முதல் நூற்பா)' ஒரு சொல் முன் ஒரு சொல் வருங்கால் பயனிலை வகையானும் தொகை நிலை வகையானும், எண்ணுநிலை வகையானும் என மூன்றனுள் ஒன்றுபற்றி அன்றே வருவது என்று காணப்படுகிறது. சேனாவரையர் கூறும் வகைகள் வடமொழிக் கருத்து என்று தெளிவாகத் தெரிவதால் இந்த மூன்று வகைகளை வெள்ளை வாரணன் (1971: 2) 'தமிழ் இலக்கண மரபு' என்பார்.

நச்சினார்க்கினியர் இந்தச் சேர்க்கை முறையையும் உதாரணங்களையும் ஒத்துக் கொண்டாலும் எண்ணு நிலையான் வந்தது என்பதற்கு மட்டும் நிலம் நீர் என்று தொகையாக உதாரணம் கொடுத்துள்ளார்.

கல்லாடரும் (கிளவி 1 உரை விளக்கம்) முதலில் இளம்பூரணர் கருத்தை மதிப்பீடு செய்து, புதிதாக இரண்டு கருத்துகளைக் குறிப்பிட்டுள்ளார்.

> 1) ஒரு சொல் முன் ஒரு சொல் வருங்கால் தொகைநிலை வகையான் வருதலும், எண்ணுநிலை வகையான் வருதலும், பயனிலை வகையான் வருதலும் என மூன்று வகை அல்லது இல்லை. 2) இதற்கு விதி உரையிற் கோடல் எனும் தந்திர உத்தி, 3) அவற்றுள் தொகைநிலையான் வந்தது 'யானைக் கோடு' என்பது; எண்ணுநிலை வகையான் வந்தது 'நிலனும் நீரும்'

என்பது; பயனிலைவகையான் வந்தது 'சாத்தன் வந்தான்' என்பது'. 4அ) மற்று எச்சவகை, அடுக்கு வகை, பொருள்கோள் வகை, ஆக்க வகை, இடைச் சொல் வகை, உரிச்சொல் வகை என்றாற் போலப் 4ஆ) பிறவகையும் உள எனின், நால்வகைச் சொல்லினும் சிறப்புடைய பெயரினையும், வினையிற் சிறப்புடைய முற்றுச் சொல்லினையும் பற்றி, வழக்கிடத்தும் பெரும்பான்மையும் வருவன அவையே ஆகலின், அம்மூன்றல்லது இல்லை என்றார் போலும். 5) அவையாவன: எச்சவகை, உண்டு வந்தான், உண்ட சாத்தன் என்றால் போல்வன. அடுக்கு வகை, பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ என்றாற் போல்வன. பொருள்கோள் வகை, சுரையாழ அம்மி மிதப்ப என்றாற் போல்வன. இடைச்சொல் வகை, யானோ தஞ்சம் பெரும என்றாற் போல்வன. உரிச்சொல் வகை, செய்யார் தேஎந் தோமரல் (உள்ளபடியே) கலிப்பா என்பன'

என்பன கல்லாடர் வாசகம். அவர் வாசகத்தில் முதல் கருத்தும் மூன்றாவது கருத்தும் இளம்பூரணர் கருத்துகள். இரண்டாவது கருத்து, அதாவது மூன்று வகைப்பாகுபாடு மூலநூலில் இல்லை, உரையாசிரியர் கண்டு கூறியது என்பது நாலாவது கருத்து ஆறு புது வகைகளைக் கூறுவது. அவைகளில் எச்ச வகையில் வினையெச்சத் தொடரும் பெயரெச்சத் தொடரும் அடங்கும். அடுக்குத் தொடர் என்பது சொல் அடுக்கி வருவது. தொல்காப்பியரும் தொகை பற்றிப் பேசும்போது பல வகை அடுக்குகளைச் சுட்டியுள்ளார். இசைநிறை அடுக்கு நாலு முறையும் (எச்சம். 27), விரை சொல் அடுக்கு மூன்று முறையும் (28), வரும். அத்தோடு அசைநிலை அடுக்கும் (29) வினைமுற்று அடுக்கும் (33) வரும் என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். பொருள்கோள் வகை என்பது கருத்தாடலில் இயல்பு முறையிலிருந்து மாறி வருவது. பொதுவாக அதை மொழி மாற்று என்ற பொது நிலையில் அடக்கலாம். தொடரியல் ஆய்வில் மாற்றங்கள் (Transformations) இருப்பது இங்கு வற்புறுத்தப் படுகிறது. கல்லாடர் தொடர் ஆய்வில் பொருள்கோளை ஒரு வகையாகக் கூறியது கோட்பாட்டு நிலை சிறப்பானது. ஆக்க வகை என்பது வினைமுற்று அல்லது பயனிலை 'ஆகு' என்ற வினை ஏற்று வருவது. அதனால் அது செயற்கைப் பண்பு

(செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல் என்பது தொல்காப்பியம் (கிளவி. 20). அதையும் மொழி மாற்று அடிப்படையில்தான் விளக்க முடியும். யானோ தஞ்சம் பெரும என்ற இடைச்சொல் தொடரில் தஞ்சம் முடிக்கும் சொல்லாக உள்ளது. எனவே சில இடைச்சொற்கள் பயனிலையாகச் செயல்படுகின்றன என்ற உண்மை வற்புறுத்தப்படுவதாகக் கொள்ளலாம். வெள்ளைவாரணனும் (1972:342) 'எச்சம், இடைச்சொல், உரிச்சொல் ஆகியவைகளோடு வரும் சொற்களைப் பயனிலையாகக் கருதலாம் என்பார்.' அதே சமயத்தில் கொன்னூர், மற்று அறியலாம் என்பவை மரபுப்படி இடைச்சொல் தொடர்தான். இங்குக் கொன் என்ற இடைச்சொல் பெயரடையாகவும் மற்று என்ற இடைச்சொல் வினையடையாகவும் வந்துள்ளன. செய்யார் தேஎந் தோமரல் கலிப்ப என்பதில் தோமரல் என்று உரிச்சொல்லாக இருக்கவேண்டும். சிவலிங்கனார் (1982: அ.கு.) அது தெருமரல் என்று இருக்க வேண்டும் என்பார். உண்மையில் அது வினையடையாக வந்துள்ளது. தவப்பல என்பதும் உரித்தொடரே. அது பெயரடையாக வந்துள்ளது. எப்படி இருந்தாலும் தொடரியல் நோக்கில் பெயரடை, வினையடை என்பது முக்கியமானது. 4ஆ கருத்து இன்னும் புதிய தொடர்கள் இருக்கின்றன என்பது. 5வது கருத்து இப்படிப் பல வகை இருந்தும் மூன்று வகை மட்டும் கூறியதற்கு ஒரு வகைச் சமாதானம். அதிலும் அவருக்கு முழு திருப்தி இல்லை என்பதை 'என்றார் போலும்' என்ற தொடர் புலப்படுத்துகிறது. கல்லாடர் உரை புதிய சிந்தனையை எழுப்பாதது தமிழில் இலக்கண ஆய்வில் ஏற்பட்ட தொய்வைக் காட்டும் அல்லது ஆய்வு திசை மாறிப் போனதையும் காட்டும். உதாரணமாக இரண்டு சொற்கள் சேர்ந்து வருவது தொகையாக இருக்க வேண்டும் என்ற நியதி இல்லை என்பது முக்கியக் கருத்து. அதனால்தான் தெய்வச்சிலையார் உயர்திணை என்ற தொடரை விளக்குவதற்குத் தொகைநிலை தொகாநிலை என்ற புதிய கருத்தமைவை (கிளவி. 1) முன்மொழிந்துள்ளார்.

> 'ஒரு சொல் முன் ஒரு சொல் வருங்கால்
> தொகைநிலை வகையான் வருதலும் தொகாநிலை
> வகையான் வருதலும் என இரண்டு அல்லது இல்லை'

என்பது அவர் வாசகம். எனவே கல்லாருடைய எச்ச வகையும், உரிச்சொல் வகையும் தொடர் தொகாநிலையில் உள்வட்டத் தொடராகக் கொள்ளலாம். அடுக்குத் தொடர் ஒரு வகையில்

எண்ணு நிலையில் உம்மைத் தொடராகக் கொள்ளலாம். கல்லாடர் காட்டிய இடைச்சொல் வகை பயனிலை வகையிலும் வெளிவட்டத் தொடரிலும் அமையும். அதையும் தெய்வச் சிலையார் விளக்கியிருப்பது பின்பகுதியில் விவரிக்கப்படும்.

தொடரியல் ஆய்வுச் சிந்தனை வளர்ந்துவந்ததைக் கல்லாடர் உரை காட்டுகிறது. ஆனாலும் புதுவகைத் தொடர் களை எடுத்துக்காட்டி அவைகளைக் கோட்பாட்டு நோக்கில் விளக்கும் முயற்சியை யாரும் மேற்கொள்ளவில்லை. எனவே, இளம்பூரணர், நச்சினார்க்கினியர், கல்லாடர் ஆகிய மூவரும் குறிப்பிட்ட மூன்று வகையின் மொழியியல் அடிப்படையைப் பார்ப்போம்.

1. தொகைநிலை என்பது ஒரு வகையில் சொல் சேர்க்கை என்ற முறையில் தொடராக்கத்தோடு சம்பந்தப்பட்டதுதான் என்றாலும், அதன் இன்னொரு பண்பான 'எல்லாச் சொல்லும் ஒரு சொல் நடைய' என்ற தொல்காப்பியர் கருத்துப்படி (903) அதை ஒரு சொல்லின் மாற்றாக (Substitution) கருதமுடியும்.

| | |
|---|---|
| யானைக்கோடு | வந்தது |
| யானை | வந்தது |
| கோடு | வந்தது |

எனவே அங்குப் படிநிலை உறவு இருப்பது அறியத் தகுந்தது. புளூம்பீல்டு' (1930:169) ஒரு மொழியின் இலக்கண வடிவங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம் என்றும், அவைகளில் ஒன்று மாற்று என்றும் குறிப்பிட்டுள்ளார். எனவே தொகை நிலை என்பது ஒரு வகையில் சொல் சேர்க்கையை அதாவது ஒரு குறிப்பிட்ட தொடரமைப்பை நேரடியாகக் குறிப்பிடுகிறது. இன்னொரு வகையில், ஒரு சொல்லால் மாற்றுகிற அதன் ஆற்றலையும் உணர்த்துவதால் தொடரியல் ஆய்வில் மேற் கொள்ளக்கூடிய படிநிலைப் பண்பையும் புலப்படுத்திவிடுகிறது.

அந்த அடிப்படையில்தான் ஐரோப்பாவில் அண்மை உறுப்பு ஆய்வு (Immediate Constituent analysis) பிற்காலத்தில் வளர்ந்தது. உண்மையில் உள்வட்டத் தொடர் (Endocentric construction) என்ற கருத்தும் புதைந்துள்ளது. அன்மொழித் தொகை தவிர ஏனைய தொகைகள் உள்வட்டத் தொடர்கள்தாம்.[2]

பயனிலை வகையை வெளிவட்டத் தொடர் (Exocentric construction) வகையாகக் கருதலாம். எண்ணுநிலை என்பது உம்மைத் தொடர் (Co-ordinate construction) என்று அழைக்கப்படும். 20ஆம் நூற்றாண்டில் அமைப்பியல் நோக்கில் தொடரியலை ஆராய்பவர்கள் (உதாரணம், Hockett, 1958: 184) உள்வட்டத் தொடர், வெளிவட்டத் தொடர், உம்மைத் தொடர் Co-ordinate) என்று மூன்று வகைகளையே குறிப்பிட்டுள்ளார்கள். (P. 191). எனவே இளம்பூரணர் சொல்லும் வகைப்பாடு ஓரளவு அண்மை உறுப்புக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டதாகக் கருதலாம்.

உம்மை நிலை என்பது தொடர்கள் மறித்து வருவது. முடிவற்ற ஒன்று என்ற முறையில் தொடராக்கத்தின் மீளுமைப் பண்பின் (Recursion) அடையாளமாகவும் கொள்ளலாம். கல்லாடர் குறிப்பிட்டபடி அவை பெயர்த் தொடரின் பண்பை மட்டுமே மனதில் கொண்டுள்ளதுபோலத் தோன்றுகிறது.

### 12.2.2. பாகுபாட்டு நிலை

> 1) சொல் தான் இரண்டு வகைப்படும். தனிமொழியும் தொடர் மொழியும் என. அவற்றுள் (2) தனி மொழியாவது, சமய ஆற்றலால் பொருள் விளக்குவது.

என்பது சேனாவரையர் வாசகம் (கிளவி. முன்னுரை). இங்கு 'வகைப்பாடு' என்று பொதுமைப்படுத்தப்பட்டிருக்கிறது.

> 1) சொற்களைப் பொருள் நிலைமை நோக்கித் தொடர்மொழி, தனிமொழி என இருவகைப்படுத்து, பொருள் உணர்த்துவன தனிமொழி ஆதலால் தொடர் மொழி என வகுத்ததனாற் பயன் என்னை? எனின், பொருள் உணர்த்துதற்குச் சிறப்புடையன தொடர் மொழி என்று கொள்க. என்னை? சிறந்தவாறு? ' எனின், சாத்தன் என்றவழிப் பொருண்மை மாத்திரம் உணர்த்துதல் அல்லது கேட்டார்க்கு ஒரு பயன்பட நில்லாமையின் சாத்தன் உண்டான் எனப் பயன்பட வருஉந் தொடர் மொழியே பொருள் இனிது விளக்குவது என்க'

என்ற தெய்வச்சிலையார் விளக்கத்தில் (கிளவியாக்க முன்னுரை) பொருள் இரண்டு அர்த்தத்தில் கையாளப்பட்டுள்ளது என்பதைப்

புரிந்துகொள்ளவேண்டும். 1. அகராதிப் பொருள் (Meaning). 2. குறிக்கும் பொருள் (Referent). அதாவது பயன்பட நில்லாமையின் என்பது மொழி என்பதே கருத்தாடலுக்குப் பயன்பட வேண்டும் என்பதே. அந்த நிலையில் மொழி வாக்கியமாகப் பயன்படும் என்ற கருத்து அடிப்படையிலும் சாத்தன் உண்டான் என்பதே ஒரு கருத்தை உணர்த்துகிறது என்ற முறையிலும் அதுவே சிறப்பு என்று கொண்டுள்ளார்.

இங்கு முக்கியமாகக் கவனிக்க வேண்டியது சொல் என்பது வார்த்தை (Word) என்ற பொருளில் கையாளப்படாமல் கிளவி (Utterance) என்ற பொருளில் கையாளப்பட்டிருப்பதாகக் கருத வேண்டும் என்பதுதான். ஆனாலும், பொருள்நிலை நோக்கிப் பகுப்பது' என்பது பொருந்தாது. ஏனென்றால் பேரன் என்பதும் மகனின் மகன் என்பதும் பொருள் நிலையில் ஒன்றுதான். ஆனால் முன்னது தனிமொழி, பின்னது தொடர் மொழி. அப்படியே வினையிலும் வேண்டு, விரும்பிக் கேள், என்பதும் ஒரு பொருள் உடையவையே. ஆனால் முன்னது தனிமொழி, பின்னது தொடர் மொழி. எனவே பொருள்நிலையில் சொற்களைத் தனிமொழி, தொடர்மொழி என்று பாகுபடுத்துவது பொருந்தாது.

### *12.2.2.1. சேனாவரையர்*

இளம்பூரணர் கருத்தை வெறும் அமைப்பியல் தொடரியல் நோக்கு என்றால், சேனாவரையர் கருத்தைத் தொடரியலும் ஓரளவு பொருண்மையியலும் கலந்தது எனலாம்.

இளம்பூரணர் கருத்தின் குறையை உள்ளூர உணர்ந்ததால் தான் சேனாவரையர் அந்தக் கருத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. தவறு வேறு, குன்றக்கூறல் வேறு. சேனாவரையர் வேறு பல இடங்களில் உரையாசிரியரின் குறையை - உரை பொருந் தாமையைச் சுட்டிக்காட்டியவர் இங்கு ஏன் மதிப்பீடு செய்யாமல் போய்விட்டார் என்று தெரியவில்லை. இருந்தாலும் அவர் ஒரு புதிய கருத்தை முன்மொழிந்துள்ளது சுட்டிக்காட்டத்தகுந்தது.

> (1) தொடர் மொழியாவது அவாய்நிலையானும், தகுதியானும், அண்மைநிலையானும் இயைந்து பொருள் விளக்கும். (2) தனிமொழி ஈட்டம் - பெயர்ச் சொல்லும் வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் எனத் தனிமொழி நான்கு வகைப் படும். மரம் என்பது பெயர்ச் சொல், உண்டான்

> என்பது வினைச்சொல், மற்று என்பது இடைச் சொல், நனி என்பது உரிச்சொல். (3) இருமொழித் தொடரும் பன்மொழித் தொடரும் எனத் தொடர் மொழி இரண்டு வகைப்படும். சாத்தன் வந்தான் என்பது இருமொழித் தொடர். அறம் வேண்டி அரசன் உலகம் புரத்தான் என்பது பன்மொழித் தொடர்.

என்பது அவரது வாசகம். இங்குத் தொடர்மொழிப் பாகுபாட்டுக்குச் சேனாவரையர் மட்டும் அல்லாமல் இந்தப் பாகுபாட்டை ஒத்துக்கொள்ளும் நச்சினார்க்கினியரும் ஏன் உதாரணம் தரவில்லை என்று தெரியவில்லை.

இரண்டாவது கருத்தான தொடர்மொழி என்பது 'பொருள் விளக்கும் தனிமொழி ஈட்டம்' என்பதும் மனிதன் செயற்கையாகச் சொற்களைச் சேர்த்துப் பொருளை உணர்த்துவதற்குக் கையாளு கிறான் என்பதும் பொருத்தமானவையே. பொருள் விளக்கும் சொல் சேர்க்கை (Combination or Concatenation) என்ற அடிப்படைக் கருத்துப் பெறப்படுகிறது.

தகுதி, அவாய்நிலை, அண்மைநிலை என்ற கருத்தமைவுகள் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டபடி வடமொழி இலக்கண மரபைத் தழுவியவை. அவை முறையே யோக்யதா, ஆகாம்க்ஷா, ஆசத்தி அல்லது சந்நிதி என்று பெயர் பெறும். இவை எப்படித் தொடரியல் ஆய்வுக்குத் துணையாக இருக்கின்றன என்று பார்க்க வேண்டும்.

அவாய்நிலை என்பது ஒரு சொல் இன்னொரு சொல்லோடு சேர்ந்து பொருள் முடித்தற்குரிய சொல்லை அவாவி நிற்பது என்று கருதப்படுகிறது (உ-ம். சுந்தரமூர்த்தி 1981:53). வினைச் சொல்லைப் பொறுத்த வரையில் செயப்படுபொருள் குன்றிய வினை, குன்றா வினை என்று பாகுபாடு ஒரு வகை அவாய் நிலை எனலாம். வினைச் சொற்களின் அவாய் நிலையால் நிறைவு செய்வதைக் காரகம் என்பார் வடமொழியாளர். பெயர் சொற்களிலும் அதன் பொருட் புலனுக்கு ஏற்பச் சில வகை வினைகள் வரும். அதாவது சொற்கள் அடுத்து வரும் சொற்களில் உள்ள பரந்த கட்டுப்பாட்டைக் குறிப்பதாகக் கொள்ளலாம். எழுவாய் - பயனிலை திணை பால் இயைபையும் அவாய் நிலையாகக் கொள்ளலாம்.

தகுதி என்பது பொருத்தமான சொல்லால் சொல்வது என்று விளக்கி நீரால் நனை, தீயால் சுடு போன்ற உதாரணங்களைக் கொடுக்கிறார்கள். இங்கு நனை, சுடு என்றாலே அவைகளுக்கு உரிய பெயரைக் கொள்ளலாம். இது ஒரு வகையான தேர்வுக் கட்டுப்பாடுதான். தா, கொடு போன்ற வினைகள் நாலாம் வேற்றுமை ஏற்கும் மூவிடப் பெயரில் கட்டுப்பாடு உண்டு. இங்குத் தொடரியல் நோக்கில் தேர்வுக் கட்டுப்பாடும், மொழிக்கு உரிய தனித்துவமும் அடங்கியுள்ளன.

அண்மை நிலை என்பதற்குச் சேர்ந்து நிற்றல் என்று பொருள் கூறி, வாக்கியத்திலுள்ள சொற்களைக் கேட்போர்க்குப் பொருள் விளங்கும் அளவாக இயைத்து விரைவாகக் கூறுதல் என்று விளக்கியுள்ளார். 'அரசன் தன் பகைவர் மேல் படையெடுத்துச் சென்றான்' என்பதில் ஒவ்வொரு சொல்லையும் மூன்று அல்லது நான்கு நிமிடம் நிறுத்திப் பேசினால் கேட்போன் பொருள் உணரத் தடுமாறுவான், அதனால் பொருள் உணருமாறு சொற்களைச் சேர்த்துக் கூறவேண்டும் என்பது மரபு வழி விளக்கம் (பூவராகம் பிள்ளை, 1966). இதில் தொடரியல் சிறப்பு எதுவும் இல்லை மாறாக இது அண்மை உறுப்பு ஆய்வின் ஓர் அடிப்படை உண்மையை உணர்த்துவதாகக் கொள்ளலாம். உரையாசிரியர்களே உண்ட சாத்தன் தந்தை என்ற தொடர் பொருள் மயக்கம் தருவதாக (தெய்வ. வினை. 38) விளக்கியுள்ளார்கள். இங்கு, சாத்தன் தந்தை என்ற சொற்கள் அடுத்தடுத்து இருந்தாலும் இலக்கண நோக்கில் சாத்தன் என்ற சொல் எதற்கு அண்மையாக இருக்கிறது என்ற முறையில் பொருள் மாறுபடும் என்பதை உணர்ந்துள்ளார்கள். உண்டது சாத்தனாக இருந்தால் உண்ட என்பதற்கு அண்மை நிலை உறுப்பாகச் சாத்தன் அமைந்து, உண்டவன் சாத்தன் அவனுடைய தந்தை என்று பொருள்படும். உண்டவன் தந்தை என்றால் சாத்தன் தந்தைக்கு அண்மை உறுப்பாக அமைந்து பொருள் மாறுபடும்.







சாத்தன் முதல் படத்தில் உண்ட என்ற சொல்லோடும், இரண்டாவது படத்தில் தந்தை என்ற சொல்லோடும் அண்மை

நிலை உடையதாக இருப்பதே பொருள் மாறுபாட்டுக்குக் காரணம் என்பது புலனாகும். எனவே அண்மை நிலை என்பது அண்மை உறுப்புக் கோட்பாட்டின் அடிப்படை எனலாம்.

*12.2.2.2. தெய்வச்சிலையார்*

மேலே குறிப்பிட்டபடி தொடர் மொழியை அல்வழித் தொடர், வேற்றுமைத் தொடர் எனப் பாகுபடுத்தியிருப்பது இலக்கண உறவு நிலையில் ஆகும். இது ஒரு வகைப் பாகுபாடே. அவருடைய விளக்கம் தொடரியல் உறவு (வேற்றுமை, அல்வழி) பற்றிக் குறிப்பிடுகிறது. இதுவும் துவக்கநிலை ஆய்வே.

தெய்வச்சிலையார் கிளவியாக்க முதல் சூத்திர உரையில் தொகைநிலைத் தொடர் / தொகாநிலைத் தொடர் என்று இன்னொரு கருத்தை முன் மொழிந்துள்ளார்.

> 'ஒரு சொல் முன் ஒரு சொல் வருங்கால் தொகைநிலை வகையான் வருதலும் தொகாநிலை வகையான் வருதலும் என இரண்டு அல்லது இல்லை. அவற்றுள் தொகைநிலை வகையான் வந்தன யானைக் கோடு, பொன்மேனி, கொல் யானை, கருங்குதிரை, உவாப்பதினான்கு, பொற்றொடி என்பன. தொகா நிலை வகையான் வந்தன: சாத்தன் உண்டான், சாத்தனை வெட்டினான், உண்டான் சாத்தன், உண்டு வந்தான், நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் என்பன'

என்பது அவரது வாசகம். இங்குத் தொகைநிலை என்பதற்கு மாறாகத் தொகாநிலை என்ற தொடர் உண்டாக்கப்பட்டுள்ளது. நன்னூலார் இப்படி நேரடியாகப் பகுக்காவிட்டாலும் அந்தப் பாகுபாட்டை ('தொகைநிலைத் தொடர்' சூ. 361), 'தொகாநிலை' சூ. 374) இரண்டு சூத்திரங்களில் தனித்தனியே குறிப்பிட்டுள்ளார். தெய்வச்சிலையார் தொகைநிலைத் தொடருக்குக் கொடுத்த உதாரணங்களில் அன்மொழித் தொகையான பொற்றொடி தவிர ஏனையவை உள்வட்டத் தொடர்களாகக் கொள்ளலாம். அன்மொழித் தொகை வெளிவட்டத் தொடர் ஆகும்.

மாற்றிலக்கண மொழியியலாரில் ஒரு பிரிவினரான அகராதிச் சிந்தனையாளர் ஒரு சொல் ஒலி அமைப்புக் கூறுகள், இலக்கணக் கூறுகள், பொருண்மைக் கூறுகள் என்று மூன்று வகையான கூறுகளை (Features) உடையதாகக் கருதுவார்கள்

(தமிழில் செ. சண்முகம், 1998: 34 தொ.). நாம் இங்கு இலக்கணக் கூறுகள், பொருண்மைக் கூறுகள் ஆகிய இரண்டு கூறுகள் பற்றி ஓரளவு விரிவாகப் பார்ப்போம்.

இலக்கணக் கூறில் பொது இலக்கணப் பண்பு என்பது சில சொற்கள் சில சொற்களை மட்டுமே தம்முடன் வரத் தகுத்தவை எனக் காட்டும். அப்படி ஒரு சொல்லைச் சார்ந்து வரும் பிற அலகு, சார்அலகு (Complement) எனப்படும். இந்த நிலையில் அவாய் நிலை என்பது ஒரு சொல் எந்த வகைச் சொல்லை அவாவி நிற்கும் என்று பார்ப்பதுதான்.

பெயரெச்சம் பெயரையும், வினையெச்சம் வினையையும் அவாவி நிற்பது போல ஒரு பெயர் இன்னொரு பெயரையோ அல்லது வினையையோ அவாவி நிற்பதாகக் கொள்ளலாம். இங்கு வினைச்சொல் அடிப்படையில் இன்று விரிவாக ஆராயப் படுகிறது. அவாய் நிலை என்பது தொடரியல் ஆய்வின் ஆரம்ப நிலையைக் குறிப்பது.

ஆங்கில மொழியில் வினையின் இலக்கண அலகேற்புப் பண்புகளாக, சொற்களைப் பெயர்த் தொடர் (ஆடு/முருகன்), வேற்றுமைத் தொடர், (முருகனை நம்பினேன்) வாக்கியம் (என் அணி வெற்றி பெற வாழ்த்தினான், யார் வருகிறார்கள் என்று கேட்டான்), குறு வாக்கியம் (புதிதாக உன்னை நாங்கள் சேர்த்துக் கொள்கிறோம்) ஆகியவைகளை ஏற்பலாகக் கொள்கிறார்கள் (செ. சண்முகம், 1998: 37-43).

இங்கு இரண்டு செய்திகள் சுட்டிக்காட்டத் தகுந்தவை, 1. முன் சொன்ன தொகை நிலை, பயனிலை, எண்ணு நிலை ஆகியவை சொற்கள் சேர்க்கை முறை பற்றி இருந்தாலும், தொகைநிலையில் தொடரியலுக்கு அடிப்படையான பதிலிடுவது (Substitution) புதைந்துள்ளது என்று காட்டப்பட்டது. பின்னது (சேர்க்கை நிலை) அகராதிப் பண்பை ஒட்டியது. ஆனாலும் அண்மை நிலை என்பதில் அண்மை உறுப்பாய்வின் ஆணி வேராகத் தொடரியல் நோக்குப் புதைந்துள்ளது. முன்னதை (பாகுபாட்டு நிலை) விடப் பொதுமை மிகுந்தது; நுண்மை நிறைந்தது என்றாலும், தொடரியல் அமைப்பின் பல உண்மைகள் (திணைபால் இயைபு, தொடரமைப்பில் நடைபெறும் பல மொழி மாற்றுகள் (Transformations) போன்றவைகளை விளக்காததால் குறை உடையதே.

### 12.2.3. சேர்க்கையும் பாகுபாடும்

> 'சொல்தான் தனிமொழியும் தொடர்மொழியும் என இருவகைப்படும். . . . தொடர் மொழி இருமொழித் தொடரும் பன்மொழித் தொடரும் என இருவகைப்படும். அவை தொடருங்கால் பயனிலை வகையானும் தொகைநிலை வகையானும் எண்ணுநிலை வகையானும் தொடரும். இனி, வடநூலார் கூறியவாறே அவாய் நிலையானும், அண்மைநிலையானும், தகுதியானும், தொடரும்' (உள்ளபடியே)

என்பது நச்சினார்க்கினியர் வாசகம். இங்கு இளம்பூரணர் கருத்தும் சேனாவரையர் கருத்தும் இணைக்கப்பட்டுள்ளன.

### 12.3. உதாரண விளக்கம்

எல்லா உரையாசிரியர்களும் சில உதாரணங்களை விளக்குமுகமாக அண்மை உறுப்பு ஆய்வின் அடிப்படையை உள்ளூற உணர்ந்து இரண்டு வகையான அமைப்பு உறவைப் புலப்படுத்தியுள்ளார்கள். தெய்வச்சிலையார் மட்டுமே அண்மை உறுப்பு உறவு பற்றிக் கோட்பாடு நிலையிலும், மாற்றிலக்கண மொழியியல் கோட்பாடான இடமாற்றம் (Permutation), பதிலீட்டு மாற்றம் (Substitution) என்ற மாற்றங்களை மொழி மாற்று என்ற பெயரால் பொதுநிலையிலும் விளக்கியுள்ளார். சேனாவரையர் மாற்றிலக்கணக் கோட்பாடான புதைநிலை, புறநிலை என்பதைச் சொல்லியல் நோக்கில் புலப்படுத்தியுள்ளார் (பார்க்க. ப. 256-7).

### 12.3.1. அண்மை உறுப்பு உறவு

எல்லா உரையாசிரியர்களும்

> அடைசினை முதலென முறை மூன்றும் மயங்காமை
> நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல் (கிளவி. 26)

என்ற சூத்திரத்திலும், கூடுதலாகச் சேனாவரையர் உம்மைத் தொகைச் சூத்திரத்திலும், தெய்வச்சிலையார் வேற்றுமைத் தொகைச் சூத்திரம், வினையியல் சூத்திரம் (38), எச்சவியல் சூத்திரம் ஆகிய மூன்றிலும் அண்மை உறுப்பு உறவு பற்றி விவாதித்துள்ளார்கள்.

வண்ணச்சினைச்சொல் என்பது ஒரு வகைப் பெயர்த் தொடர். அந்தச் சூத்திரம் வண்ணம் + சினை + முதல் என்ற சொற்கள் அடுத்தடுத்து வரும் என்பதைக் கூறுகிறது. ஆனால் சூத்திர வாசகத்தைக் கவனமாகப் பார்க்கும்போது வண்ணம்

என்பதற்குப் பதிலாக 'அடை' என்ற சொல் கையாளப் பட்டுள்ளதைக் காணலாம். உண்மையில் வண்ணம் என்பது அகராதியியல் பொருட் புலன் (Semantic field) நோக்கு; அடை என்பது தொடரியல் நோக்கு. எனவே இரண்டு வித நோக்கில் கூறியதன் சிறப்பு என்ன என்ற கேள்வி எழுகிறது. இதைச் சேனாவரையர் பொருண்மையியல் பிரச்சினையாகவும் குறிப்பாகப் பொது, சிறப்பு என்ற சொல் வகைப்பாடு மாறுபாடாகவும், கல்லாடர் பொதுவான சொல் மாறுபாட்டுப் பிரச்சினையாகவும் பார்க்கப் பிற உரையாசிரியர்கள் அது பற்றி ஒன்றும் குறிப்பிடாமல் போய்விட்டார்கள். மேலும் எல்லா உரையாசிரியர்களும் வேறு வாய்பாட்டில் வரும் சில தொடர்களையும் இந்தச் சூத்திரத்தில் அடக்க முயற்சித்துள்ளார்கள். அந்த விவாதத்தில் அண்மை உறுப்பு உறவு பற்றிய சிந்தனையின் ஆழம் காணப்படுகிறது.

### 12.3.1.1. அடை/வண்ணம்

அடை என்பது ஒரு பொருளது குணம் என்ற விளக்கம் மட்டுமே இளம்பூரணர் உரையில் காணப்படுகிறது. அடை என்பதற்குப் பொழிப்புரையிலேயே பண்புச் சொல் என்று சேனாவரையர் பொருள் எழுதி இரண்டுக்கும் (அடை = குணம், வண்ணம்) உள்ள மாறுபாட்டை மனதில் கொண்டு

> 'வடிவு முதலாகிய பிற பண்பும் உளவேனும் வண்ணப் பண்பினது வழக்குப் பயிற்சி நோக்கி வண்ணச் சினைச்சொல் என்றார்'

என்று சமாதானம் கூறியுள்ளார். தெய்வச்சிலையார் சூத்திரத்தின் உட்கிடைகளை விளக்குமுகமாகக் கூறுவதாவது

> 'இதனாற் பெற்ற பொருள் என்னையெனின், பொருட்கு உளதாகிய பண்பும் சினையும் பொரு ளோடு அடுத்துக் கூறக் கருதுவானாயின் பொருள் மேல் செல்லாது சினைமேல் செல்லும் என்பது அறிவித்தற்கு என்க. உதாரணம் செங்கால் நாரை வண்ணம் சினைமேல் ஏறி முதலொடு முடிந்தது'

என்ற தெய்வச்சிலையார் விளக்கத்தில் 'பொருள்மேல் செல்லாது சினைமேல் செல்லும் என்பது அறிவித்தற்கு என்க' என்ற பொது விளக்கமும் 'வண்ணம் சினைமேல் ஏறி முதலொடு முடிந்தது' என்ற உதாரண விளக்கமும் தொடரின் அண்மை நிலை உறவைச் சூசகமாகக் கூறுவன. அதாவது வண்ணம் சினையை மட்டும்தான் தழுவுகிறது என்பதுதான் அண்மை உறுப்பு உறவின் ஓர் அடிப்படை.




என்ற வரைபடம் தெய்வச்சிலையாரின் கருத்தை விளக்கும்.

> 'அடை, சினை, முதல் என்றும் பின்பும் (உள்ள படியே) வண்ணச்சினைச்சொல் என்றது என்னை யெனின்; முற்கூறியது இலக்கண வாய்பாடு ஆகலான், அவ்விலக்கணமுடையது இது என வேண்டுதலின் அவ்விலக்கணத்தான் அவ்விலக்கணம் உடைய பொருட்குக் குறியிட்டார் என உணர்க'

என்ற கல்லாடர் உரை விளக்கத்தில் அடை/வண்ணம் என்ற சொல் மாறுபாட்டை உணர்ந்து முன்னது (அடை 'இலக்கண வாய்பாடு' என்றது சிறப்பானது அதாவது சினை, முதல் என்பவை பொருள் அடிப்படையில் செய்யும் சொல்லியல் பாகுபாடு, ஆனால் அடை என்பது இலக்கணச் செயல்பாட்டை ஒட்டிச் செய்யும் தொடரியல் பாகுபாடு. அதாவது பெயர், வினை என்பது சொல்லியல் பாகுபாடு, அதையே எழுவாய், பயனிலை என்று பகுப்பது தொடரியல் பாகுபாடு. பின்னது அவைகளின் செயல் பாட்டை ஒட்டிய பாகுபாடு. எனவே அடை என்று தொல்காப்பியர் கூறியதன்மூலம் அவரே அண்மை உறுப்பு உறவு பற்றிய ஒரு கருத்தைப் புலப்படுத்திவிட்டார் என்பது அறியத் தகுந்தது.

அடுத்து, உரையாசிரியர்கள் மொழியில் காணப்படும் சில மாறுபட்ட உதாரணங்களை எடுத்துக்கொண்டு விளக்கும்போது, புதிய தொடரமைப்பையும் அண்மை உறுப்பு உறவு பற்றிய சிந்தனையையும் வெளிப்படுத்தியுள்ளது சிறப்பானது.

### 12.3.2. எதிர் உதாரணங்கள்

உரையாசிரியர்கள் மாறுபட்ட அமைப்பு உடையவை என்று கொடுத்த உதாரணங்களில் (எதிர் உதாரணங்கள்) மூன்று வகையான அல்லது மாறுபட்ட கோட்பாடு புதைந்துள்ளது. 1) அடுக்குத் தொடர் அல்லது மீளுமைப் பண்பு உடையவை, 2) ஒருங்கு தொகுதல், 3) மயங்கி அல்லது மாறி வருவது. அவை பின்பகுதியில் தனித்தனியே ஆராயப்படும்.

#### 12.3.2.1. மீளுமைப் பண்பு உடையவை

தொல்காப்பியர் பல வகையான அடுக்குத் தொடர்களைத் தனிநிலையிலும் (கண்டீர், கேட்டீர் போன்றவை 908), பொது

நிலையிலும் (விரைசொல்லடுக்கு (907), வினையெச்சம் - 718) விளக்கியுள்ளார். ஆனால் தொடர்கள் அடுக்கி வருவதைப் பேசவில்லை. இப்போது மொழியின் ஒரு பொதுப் பண்பாகப் பல நிலையில் அடுக்கி வருவதை மீளுமைப் பண்பு (Recurring feature) என்ற தொடரியல் பொதுப் பண்பாக மாற்றிலக்கண மொழியியலார் விளக்குகிறார்கள்.

மொழியில் இரண்டு பண்புப் பெயர்த் தொடர்கள் இணைந்து முதலோடு வருவதையும், இரண்டு சினைப்பெயர்கள் பண்பு இணைந்து முதல் பெயரோடு வருதலையும் கண்டு பொதுமைப்படுத்தி அதற்கு ஆதரவாகப் பிற்கால நூற்பா ஒன்றையும் உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டியுள்ளார்கள். இதுவும் ஒரு வகையில் மீளுமைப் பண்பைப் புலப்படுத்துவது தான்.

### *12.3.2.2. இளம்பூரணர்*

> 'இரு குணம் அடுக்கி முதலொடு வருதலும், இரு குணம் அடுக்கிச் சினையொடு வருதலும் கொள்க'.
>
> முதலொடு குணம்இரண்டு அடுக்குதல் வழக்கியல்
> சினையொடு அடுக்கல் செய்யு ளாறே
>
> என்பது புறச் சூத்திரம். உதாரணம் - இளம்பெருங் கூத்தன் என வரும் வழக்கினுள் சிறுபைந்தூவிச் செங்காற் பேடை (அகம். 57) என வரும். செய்யுட் கண் இளம்பெருங்கூத்தன் என்றக்கால் 'இளமை பெருமையை நோக்கி நின்றதன்று, கூத்தன் என்னும் பெயரையே நோக்கி நின்றது என உணர்க'

என்பது இளம்பூரணருடைய வாசகம் (கிளவி. 26). இளம்பெருங் கூத்தன் என்பது அவருடைய கருத்துப்படி வழக்கினுள் இரண்டு பண்புச் சொற்கள் (இளம், பெரும்) அடுக்கி முதலொடு (கூத்தன்) வந்தன. 'இளமை பெருமையை நோக்கி நின்றதன்று கூத்தன் என்னும் பெயரையே நோக்கி நின்றது' என்ற தொடர் அண்மை உறுப்பாய்வின் அடிப்படையை இளம்பூரணர் உணர்ந்ததைப் புலப்படுத்தகிறது. அதைக் கீழ்க்கண்ட வரைபடம் விளக்கும்.



அது அண்மை உறுப்பு நோக்கில் பொருந்துமாயினும் பொருள் நிலையில் இளம் கூத்தன், பெரும் கூத்தன் என்ற இரண்டு தொடர்களே உம்மைத் தொகையாக அமைந்து பெயரோடு இணைகின்றன. அதாவது தொடரியலில் அடைச் சொல் மீளுகைப் பண்பாக (Recursive) அமைந்து இருப்பதை உணர்ந்ததை இது புலப்படுத்துகிறது. அல்லது இரண்டு தொகைகளின் (இளம் கூத்தன், பெரும் கூத்தன்) இணைந்து ஒத்த பெயர்ச் சொல் கெட்டு உருவான தொடராகவும் கொள்ளலாம். அந்த நிலையில் அண்மை உறுப்பு ஆய்வு குறைவு உடையதாகக் கருதியதாலேயே மாற்றிலக்கண மொழியியல் ஆய்வு தோன்றியது. சேனாவரையர் உம்மைத் தொடரை 'ஒருங்கு தொக்க'தாகக் கருதலாம் என்று கூறியதும் பிற்பகுதியில் விளக்கப்படும்.

இளம்பூரணர் இதை வழக்குக்கு உரியது என்பது பொருந்தாது. ஏனெனில் சங்க இலக்கியத்திலேயே 'நீல மென்சிறை வள்ளுகிர்ப் பறவை' (குறுந்தொகை 201:3) என்று வந்துள்ள தொடருக்கு உரையாசிரியர்கள் (நீல மெல்லிய சிறகு) என்று பொருள் எழுதியுள்ளதால் இரண்டு அடையோடு ஒரு சினையும் ஓர் அடையோடு இன்னொரு சினையும் முதலோடு சேர்ந்து வந்துள்ளன என்று ஆகும். கொடுமென் சிறைய (குறு. 352: 2) 'வளைந்த மெல்லிய இறகு' என்ற தொடரிலும் சினை இரண்டு அடை பெற்று வந்துள்ளது (அகத்தியலிங்கம் 1985, 108).

'சிறுபைந்தூவிச் செங்காற் பேடை' என்பது செய்யுளில் இரண்டு குணம் சேர்ந்து சினையை அடுத்து வந்ததற்கு இளம்பூரணர் கொடுத்த உதாரணம். அது சிறிய மெல்லிய இறகு உடைய சிவந்த காலை உடைய பெண் (வெளவால்) என்ற பொருளை உடையது. உண்மையில் தூவி, கால் என்ற இரண்டு சினைப்பெயர்கள் உள்ளன. சிறுபைந்தூவி பேடை, செங்காற் பேடை என்பதே பொருள். அதாவது சிறுபைந்தூவி என்ற சினைத் தொடரில் சிறு, பைம் என்ற இரண்டு பண்புச் சொற்களும் தூவி என்ற சினைப் பெயரைத் தழுவுகின்றன. உண்மையில் சிறு, பைம் என்பவை வண்ணப் பெயர்கள் அல்ல: பண்பு அடை என்ற முறையிலேயே வந்துள்ளன. முழுத் தொடரும் இரண்டு சினைப்பெயரையும் (தூவி, கால்) ஒரு முதல் பெயரையும் (பேடை) பெற்றுள்ளன. அந்த இரண்டு சினைப் பெயர்களும் அடை பெற்றுள்ளன. அவைகளில் முதல் சினை (தூவி) இரண்டு அடைகளையும் (சிறு, பைம்) இரண்டாவது

சினை (கால்) ஓர் அடையையும் (செம்) பெற்று முதலோடு (பேடை) வந்துள்ளன. அதாவது இரண்டு பண்பு (சிறு, பைம்) +சினை (தூவி) + வண்ணம் (செம்) + சினை (கால்) + முதல் (பேடை) என்று புறநிலை அமைப்பை உடையது. அதை இரண்டு சினைத் தொடர் + முதல் என்றும் அதில் முதல் சினைத் தொடர் இரண்டு பண்பு பெற்று வந்துள்ளது என்றும் கொண்டு முழுநிலையில் தொடர்நிலை உம்மைத் தொடர் (Phrasal Conjunction) என்றும் விளக்க வேண்டும். முதல் சினைத் தொடரில் இரண்டு பண்பு வந்துள்ளது சொல் நிலையில் உம்மைத் தொடர் (Word Conjunction) ஆகும். இந்த முறையில் இளம் பெருங்கூத்தன் என்பதும் சொல்நிலை உம்மைத் தொடர்தான்.

உண்மையில் தொடரியல் என்பது சொற்களின் சேர்க்கையாக மட்டும் கருதாமல் தொடர்களின் சேர்க்கையாகவும் கருதவேண்டும் என்று பல காரணங்களால் நிரூபித்துள்ளார்கள். இங்குச் சினைச் சொற்கள் உம்மைத் தொடர்களாக முதலோடு சேர்ந்துள்ளன. இளம்பூரணர் மட்டும் அல்லாமல் பிற உரையாசிரியர்களும் மீளுகைத் தொடரியல் பண்பை உலக வழக்கு, செய்யுள் வழக்கு என்ற முறையில் விளக்கியதால் தொடரியல் சிந்தனை வளராமல் போய்விட்டது என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

### 12.3.2.3. சேனாவரையர்

இவர் இரண்டு விதமான எதிர் உதாரணங்களை எடுத்துக் காட்டி விளக்கியுள்ளார்.

> 'கால் செந்நாரை, தலைப்பெருஞ் சாத்தன் என முறை
> மயங்கி வரின் மரபு வழுவாம் என்க'

என்பதில் சினை + அடை + முதல் என்ற வரிசையில் வந்துள்ளது. செய்யுளில் வந்துள்ள இன்னொரு உதாரணத்தைக் கொடுத்து 'செய்யுளுள் மயங்கியும் வரப்பெறும் என்று கூறியது 'மயங்கி வருதல்' என்ற தலைப்பில் விளக்கப்படும்.

சேனாவரையர் காட்டிய இரண்டாவது உதாரணம் 'பெருந் தோள் சிறு நுசுப்பின் பேரமர்க் கண் பேதை' என்பது அதை இளம்பூரணர் கருத்து விளக்கமாக ஒன்றைக் குறிப்பிட்டு அதை மறுத்துள்ளார்.

> 'மூன்றாம் வழிமுதல் கிடவாது பின்னும் அடையும்
> சினையும் புணர்த்தமையான் வண்ணச் சினைச் சொல்

செய்யுளுள் மயங்கி வந்தது என்று உரையாசிரியர் கூறினார்'

என்று குறிப்பிட்டு அது பொருந்தாது என்பதற்கு மறுப்பாக மூன்று மாற்றுக் கருத்துகளை முன்வைத்துள்ளார்.

> அ) 'மூன்றாம் வழிப் புணர்க்கப்படும் பேதை என்னும் முதல்சொல்' பேரமர்க்கண் என்னும் தொகையோடு வேற்றுமைப் பொருள்படத் தொக்கு (பேரமர்க் கண்ணுடைய பேதை), அத் தொகை,'சிறு நுசுப்பு என்னும் தொகையோடும் அப்பொருள்படத் தொக்கு (நுசுப் புடைய பேதை), ஒரு சொல்லாய்ப் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்றாற் போல, மூன்றாம் வழிப் பிற சொல் அடுத்துப் பேதை என்னும் முதல் கிடந்ததெனவே படுதலின் மயக்கம் இல்லை'

என்பது அவரது வாசகம். இங்கு இரண்டு தொடரியல் உண்மைகள் புதைந்துள்ளன. அ) இடது கிளை அண்மை உறவு (Left branching) அதாவது பேரமர்க்கட்பேதை என்பது ஒரு வேற்றுமைத் தொடர் (பேரமர்க்கண்ணுடைய பேதை) எல்லாத் தொகையும் ஒரு சொன்னடைய (எச்சம். 24) என்ற கருத்துப்படி அது சிறு நுசுப்பின் என்ற தொடரோடு இணைகிறது. அதுவும் ஒரு வேற்றுமைத் தொடரே. அதுவும் ஒரு சொல்லாக அமையப் பெருந்தோள் என்ற இன்னொரு தொடரோடு சேரும். இதன் வரைபடம் கீழ்க்கண்டபடி அமையும்.




இதை இடது கிளைப் பிரிவு என்று அழைக்கலாம்.

> ஆ) பெருந்தோள் ஆகிய மூன்றும் பல பெயர் உம்மைத் தொகைப்படத் தம்முள் தொக்கு ஒரு சொல்லாய்ப் பின் பேதை என்பதனோடு வேற்றுமை தொக்கன

என்பது இரண்டாவது மாற்றுத் தொகை. அதன் வரைபடம் கீழ்க்கண்டபடி அமையும்.

பெருந் தோள் சிறு நுசுப்பிற் பேரமர்க்கண் பேதை



இதன்படி மூன்று சினைத் தொடரும் தம்முள் உம்மைத் தொடராக இணைந்து பின் முதல் சொல்லோடு இணைந் துள்ளன. இதை மொழியியலார் பன்மை அண்மை உறுப்பு உறவு (Multiple Immediate Constituents) என்பார்கள் (Hockett. 1956: 154). முன்னது முழு வண்ணச்சினைச் சொல் உம்மைத் தொடராக இணைந்து மாற்றம் பெறுவது; பின்னது மூன்று சினைத் தொடர் இணைந்து முதலோடு சேருவது. இதைத்தான் 'ஒருங்கு தொகுதல்' என்பார் சேனாவரையர்.

> இ) 'அவை உம்மைத் தொகைபடத் தொகாது நின்று பேதை என்பதனோடு வேற்றுமைத் தொகைபட ஒருங்கு தொக்கன எனினும் தம்முள் இயையாது பேதை என்பதேனோடு இயைதலின் ஆண்டும் மயக்கம் இன்மை அறிக'

என்பது மூன்றாவது மாற்று விளக்கம். அதாவது மூன்று வேற்றுமைத் தொகைகள் (பெறுந்தோட்பேதை, சிறுநுசுப்பின் பேதை, பேரமர்க்கண் பேதை) உம்மைத் தொகைகளாக இணைக்கப்பட்டிருக்கின்றன.

பெருந்தோள் சிறுநுசுப்பிற் பேரமர்க்கட் பேதை



இதை வலது கிளைப் பிரிவு அண்மை உறுப்பு என்று கொள்ளலாம்.

உம்மைத் தொடர் ஒரு வகையில் மொழியின் மீளுமைப் பண்பைப் புலப்படுத்துகிறது. இது மாற்றிலக்கண மொழியியல் கோட்பாட்டில் மொழியின் அடிப்படைக் கோட்பாடாகக் கூறும் ஒரு பண்பு. சேனாவரையர் இந்த உண்மையை உணர்ந்தவர் என்பதை எச்சவியலில் (21) புலவிற் கொண்டை போன்ற உம்மைத் தொடர்களில் 'மூன்று பெயரும் ஒருங்கு தொக்கன' என்று கூறுவதும் வலியுறுத்தும்.

மேலும் சேனாவரையர் அவைகளின் துறை வழக்குப் பற்றியும், பொருள் பங்கு பற்றியும் விளக்கியுள்ளார்.

> 'இவ்வாறு வருதல் வழக்கிற்கும் உரித்தோ எனின் அடுக்கிய அடையும் சினையும் பொதுமை நீக்குதற்கு அன்றி அணிகுறித்து நின்றலிற் செய்யுட்கே உரித்து என்பது'

என்ற விளக்கத்தில் 'அடையும் சினையும் பொதுமை நீக்குதற்கு வரும்' என்பது இனம் சுட்டுபவை (Restrictive) என்றும், மாறாகப் பொதுமை நீக்குதற்கு அன்றி அணி குறித்து வருதல் என்பது இனம் கூட்டாது (Non-restrictive) அலங்காரமாக வரும் என்றும் கொள்ளலாம்.

சேனாவரையர் உம்மைத் தொகை (எச்சம். 21) பற்றிய சூத்திர உரையில் வலது கிளை அண்மை உறுப்பு உறவு பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

> 'வேற்றுமைத் தொகை முதலாயின பல சொல்லால் தொகுதல் சிறுபான்மை ...... கற்சுனைக் குவளை இதழ், பெருந்தோட் பேதை எனப் பிற தொகையும் பல சொல்லால் வருமால் எனின் கல் என்பதும் சுனை என்பதும் கற்சுனை எனத் தொக்கு ஒரு சொல்லாய், பின் குவளை என்பதனோடு தொக்கு ஒரு சொல்லாய்ப் பின் இதழ் என்பதனோடு தொக்குக் கற்சுனைக் குவளை இதழ் என ஒன்று ஆயிற்று. பெருந்தோள் என்னும் தொகை ஒரு சொல்லாய்ப் பேதை என்பதனோடு தொக்குப் பொருத் தோட் பேதை என ஒன்று ஆயிற்று. அவை இவ்வாற்றான் அல்லது தொகாமையின் இரு சொல் தொகையே ஆம்'

என்று கூறும்போது வலது கிளை அண்மை உறுப்பு தெளிவாக உள்ளது. மேலும் அண்மை. உறுப்பு ஆய்வில் இரண்டு உறுப்புகளே கொள்ளப்படும் என்பதும் தெளிவாகிறது.

கற்சுனைக் குவளை இதழ் பெருந்தோட் பேதை



### 12.3.2.4. தெய்வச்சிலையார்

இன்னொரு நோக்கில் தெய்வச்சிலையார் (கிளவி. 26) உரை விளக்கம் அகராதியின் இலக்கணப் பாகுபாடும் (Lexical categories) அமைப்பியல் உறவும் (Structural relations) விளக்கப் பட்டுள்ளதாகவும் கொள்ள வைக்கிறது.

> 'வண்ணம் பெற்ற சினையை உடைய பெயர்ச்சொல் முற்பட அடையும், அதன் பின் சினையும் அதன் பின் முதலுமாகி அம்முறை மயங்காமை வழக்குப் பெற்றியலும் ... இதனாற் பெற்ற பொருள் என்னை எனின் பொருட்கு உளதாகிய பண்பும் சினையும் பொருளோடு அடுத்துக் கூறக் கருதுவானாயின் பொருண் மேல் செல்லாது சினை மேல் செல்லும் என்பது அறிவித்தற்கு என்க' (கிளவி. 26)

என்னும் பதவுரையில் 'பொருண் மேல் செல்லாது சினை மேல் செல்லும்' என்ற தொடர் அடையும் சினையும் ஒரு தொடராக அமைந்தே முதலோடு சேருகிறது என்று கூறி, செங்கால் நாரை என்ற உதாரணத்தைத் தந்து 'வண்ணம் சினை மேல் ஏறி முதலொடு முடிந்தது' என்று விளக்கியது. அண்மை உறுப்பு ஆய்வின் அடிப்படையை உணர்ந்தது என்று மேலே விளக்கப் பட்டது. இது பெயர்த் தொடர் வலது கிளைப் பிரிவாக (Right branching) அமைகிறது. மாறாக இடது கிளை அவர் ஒத்துக் கொள்ளாததால் உறுதியாகிறது.

> 'கருங்கோட்டு யானை எனப் பண்பினை முதலோடு அடுத்துக் கூறக் கருதுவானாயின் கருமை யானையின் மேல்செல்லாது கோட்டின் மேற்செல்லுதலின் இம்முறை நடைபெறாததாயிற்று'

என்பது அவர் வாசகம். இடது கைப் பிரிவு என்று மொழியியலார் விளக்கிச் சரியான தொடராக ஏற்றுக் கொள்வார்கள்.




உண்மையில் கரிய யானை, கோட்டு யானை என்று இரண்டு அடை அடுத்து வந்ததாகக் கொள்ளலாம். அவரே இரண்டு அடை அடுத்து வரலாம் என்பதை ஒத்துக் கொண்டுள்ளார்.

ஆனாலும் பொருள் கொள்வதற்கு ஏற்ப அண்மை உறுப்பு உறவு மாறுபடுகிறது.

> 'அடை என்று பொதுப்படக் கூறியவதனால் ஒரு பொருண் மேல் அடை இரண்டு வருதலும் கொள்க. கருநெடுங்கூந்தல் காரிகை என வரும்'

என்பது தெய்வச்சிலையார் வாசகம். உண்மையில் இங்குக் கரும் கூந்தல், நெடும் கூந்தல் என்ற இரண்டு தொடர் உம்மை நிலையில் தொடர்ந்து முதலை (கூந்தல்) இணையும்.




இங்கு இருநிலைகளிலும் பொருள் மாறுபடவில்லை. கருங்கோட்டு யானை, கருந்நெடுங் கூந்தல் என்ற இரண்டு தொடர்களிலும் இரண்டு பண்புகள் தொடர்ந்து வந்தாலும் பொருளும், அண்மை உறுப்பும் மாறுபடுகின்றன. ஆனால் தெய்வச்சிலையார் பொருள் மாறுபடும் விதத்தைச் சரியாக விளக்கினாலும் முன்னது நடைபெறாததாயிற்று என்று கூறுவதால் வலது கிளை மட்டுமே சரி என்று கருதுகிறார் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. வலது, இடது கிளை அண்மை உறுப்பு என்ற இரண்டும் தமிழிலும் பிற மொழியிலும் உண்டு.

பேசுவோன் கருத்தை விட, தொடரமைப்பே பொருளை நிர்ணயிக்கும் என்ற கருத்தையும் தெய்வச்சிலையார் குறிப்பிடுகிறார்.

> 'பொருட்கு உளதாகிய பண்பும் சினையும் பொருளோடு அடுத்துக் கூறக் கருதுவானாயின் பொருள் மேல் செல்லாது சினை மேல் செல்லும்'

என்று பொதுவாகவும்

> 'கருங்கோட்டு யானை எனப் பண்பினை முதலொடு அடுத்துக் கூறக் கருதுவானாயின் கருமை யானையின் மேற்செல்லாது கோட்டின் மேற் செல்லுதலின் இம்முறை நடைபெறாதாயிற்று'

என்று சிறப்பாகவும் குறிப்பிட்டுள்ளார்.

வினையியலில் (38) அண்மை உறுப்பு மயக்கமாக வருவதற்குக் காட்டிய உதாரணம் (உண்ட சாத்தன் தந்தை) மேலே விளக்கப்பட்டது).

தெய்வச்சிலையார் அடுத்தடுத்து வரும் சொற்களே தொடராக அமையும் என்ற கருத்தை வேற்றுமைத் தொகை பற்றிய சூத்திரத்தில் (எச்சவியல் 16) மிக அழுத்தமாகவும் விரிவாகவும் குறிப்பிட்டுள்ளார். அங்கு அவர் அண்மை உறுப்புக்குப் **பூந்தொடை** என்னும் பெயரிட்டு இருப்பதும் சிறப்பாகக் குறிப்பிடத்தகுந்தது.

பொதுவாகத் தொகைச் சொற்கள் என்பது இரண்டு பெயரும் ஒட்டிச் சொல்லாக வருவது என்பதில் கருத்து வேறுபாடு இல்லை. ஆனால் அந்தக் கருத்தமைவைத் தெய்வச்சிலையார் வேறு பல வகையான தொடருக்கும் நீட்டித்துள்ளார்.

> 'உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
> பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு
> ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிரொளி
> உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள்
> செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
> மறுவில் கற்பின் வாணுதல் கணவன்

என்ற திருமுருகாற்றுப்படை முதல் ஆறு அடிகளை எடுத்துக் கொண்டு அவைகளின் தொடராக்க முறைகளை விரிவாக விளக்கியுள்ளார்.

> (அவை) 'பல சொல்லாகி வந்து கணவன் என்பதனோடு முடிந்து கிடத்தலான், இரண்டு சொல் ஒரு தொகையாம் என்றல் பொருந்தாதால் எனின்; **எவ்வாறு வரினும் இரண்டு சொல்லாகி வந்தல்லது ஒட்டுப்படாது என்று கொள்க.** இஃது ஆயவாறு என்னை எனின், **பூந்தொடை** போலக் கொள்க. அஃது இரண்டாயவாறு என்னையெனின், முற்பட இரண்டு பூவை எடுத்து ஒன்றாகக் கட்டும். அதன் பின் அவ்விரண்டும் ஒன்றாகி நின்ற தொடையோடே கூடப் பின்னும் ஒரு பூவை எடுத்துக் கட்டும்/ அதன் பின் அம் மூன்று பூவும் ஒன்றாகக் கட்டப்பட்ட தொடைகளைப் பின்னும் இரண்டு பின்னாகச் சேர்த்தது ஒன்றாக்கும். இவ்வாறே

> எல்லாப் பூவும் இரண்டு ஒன்றாக இணைத்ததாம் சொற்றொடையும் ஒட்டுப்படுங்கால் அவ்வாறு வரும் என்று கொள்க'

என்பது பொது நிலை விளக்கம். இங்கு மூன்று செய்திகள் சுட்டிக் காட்டத் தகுந்தவை: 1) எப்படி வந்தாலும் இரண்டு அலகுகளே அண்மை உறுப்பு ஆய்வில் பயன்படும் என்பது. 2) தெய்வச் சிலையார் உருவகத்தை முழுமைப்படுத்த மாலை என்ற உயர் அலகு அமைக்க வேண்டும். பூ, தொடை என்று இரண்டு உறுப்புகளைக் குறிப்பிட்டாலும் தொடையால் மாலை என்ற உயர்நிலை உறுப்புப் புதைந்துள்ளது. பூவால் தொடை தயாரித்த பிறகே தொடைகளை இணைத்து மாலை உருவாக்கப்படும். 3) தொடை தயாரித்த நிலையிலேயே அல்லது வரிசையிலேயே மாலை உருவாக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. தொடைகளை மாற்றி மாலை கட்டுவதுபோல மொழியிலும் மாற்றிக் கட்டலாம் என்ற கருத்தை அவருடைய முருகாற்றுப்படை அடிகளின் விளக்கமே புலப்படுத்துகிறது. செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை என்பது ஒரு தொடை, உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாள் என்பது ஒரு தொடை அவைகளை ......நோன்றாள் ....தடக்கை என்றே விளக்குகிறார். அதாவது மாலையாக்குகிறார். எனவே தொடையாக்க முறை வரிசையிலிருந்து மாற்றி மாலையாக்கலாம், மாலையாக்க வரிசை மாறுபடலாம் என்பதும் உணரத் தகுந்தது.

> 'உலகம் உவப்ப .. வாணுதல் கணவன்' என்பது இரண்டு ஒன்றாக ஒட்டியவாறு என்னையெனின்: உலகம் என்பது உலகத்துள்ளார்க்குப் பெயராகி உவப்ப என்னும் செயவென் எச்சத்தோடு முடிந்தது. வலனாக என்னும் எச்சத்துக்கண் ஆக என்பது செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. தொக்கு நின்ற காலத்தும் அதற்கு இயல்பு முற்பட்ட நிலைமை என்று கொள்க. என் போல எனின் வாலும் செவியும் இழந்த ஞமலியைப் பின்னும் ஞமலி என்றே வழங்கினாற் போல.. உவப்ப வலனாக என்னும் செயவென்யெச்சமும் ஏர்பு என நிகழ்காலங் குறித்த செயவென்யெச்சமும் திரிதரு என்னும் பெயரெச்சத் தோடு முடிந்தன.
>
> பலரால் என்னும் மூன்றாம் வேற்றுமை ஏற்ற பெயர் உருபு தொக வருதல் எனும் இலக்கணத்தால்

தொக்குப் பலர் என நின்றது. அது புகழப்பட்ட என்பதற்கு அடையாகி நின்றது. அடையெனினும் விசேடணம் எனினும் ஒக்கும். புகழப்பட்ட என்னும் பெயரெச்சம் உண்சோறு என்றாற் போலப் பொருள் மேல் வந்து வினைத்தொகையாகிப் புகழ் ஞாயிறு என ஒட்டி ஒரு சொல்லாகி நின்றது. அது திரிதரு என்னும் பெயரெச்சத்திற்கு முடிபாயிற்று. ஞாயிறு என்பதற்கு முன்னுள்ள சொல்லெல்லாம் தொகுத்து நோக்க, ஞாயிற்றிற்கு அடையாகி நின்றது. ஞாயிற்றை என்னும் உருபு தொக்குநின்றது. கடலின் கண் என்னும் உருபு தொக்குநின்றது. கண்டாங்கு என்பது கண்டாற் போலும் என்னும் உவமப் பொருள் உணர நின்றது. இத்துணையும் உணர்த்தப் பட்டது உதய ஞாயிறு போல என்னும் பொருண்மை.

ஓவற என்பது ஓவு = ஒழிவு. அற என்பது இல்லையாக என்னும் செயவென் எச்ச வாய்பாடு. . . அற என்பது இமைக்கும் என்னும் பெயரெச்சத்தோடு முடிந்தது. சேணின்கண் என்பது சேண் என உருபு தொக்கு நின்றது. அது விளங்கும் என்பதற்கு அடையாகி நின்றது. அவிர் என்பது விளக்கத்தின் மிகுதியைக் குறித்து வந்து ஒளி என்னும் பெயரோடு வினைத்தொகையாகி விளங்கவிரொளி என ஒரு சொல் நீர்மைப்பட்டது. அஃது இமைக்கும் என்னும் பெயரெச்சத்திற்கு முடிபாயிற்று.

உலகம் என்பது முதலாக இத்துணையும் கூறப்பட்டது ஞாயிறு போல் விளங்கும் ஒளி என ஒளிக்கு அடை கூறுதலான் அவ் வொளியோடே எல்லாச் சொல்லும் முற்றி நின்றன'

. . . . . . . உறுநர்த் தாங்கிய மதனுடை நோன் தாள்.... ஒரு சொல் நீர்மைப்பட்டது. . . (செறுநர்த் தேய்த்த) செல்லுறழ் தடக்கை ஒரு சொல் நீர்மைப்பட்டது .... மறுவில் கற்பின் வாணுதல் என. . . ஒரு சொல் நடை ஆயிற்று மறுவில் கற்பின் வாணுதல் கணவன். . . ஒரு பெயராயிற்று. . .'

என்று தொடர்களாகப் பிரித்து அவை ஒன்றுசேரும் முறையை வருணித்துள்ளார்.

செல்லுறழ் தடக்கைக் கணவன் என... ஒரு சொல் நீர்மைக்கப்பட்டது. அது மதனுடை நோன் தாள் என்பதனோடும் அவ்வாறே ஒட்டி நோன்தாள் தடக்கைக் கணவன் என ஒரு சொல்நடை ஆயிற்று. அது சேண் விளங்கு அவிர் ஒளி என்பதனோடும் அவ்வாறே ஒட்டிச் சேண் விளங்கு அவிர் ஒளி நோன்தாள் தடக்கைக் கணவன் என ஒரு சொல் நடை ஆயிற்று.

*12.3.2.5. கல்லாடர்*

> இளம் பெருங்கூத்தன், பெரும்பலாக்கோடு என்னும்
> தொடக்கத்தன வேண்டியவாறு வரப்பெறும்

என்ற சேனாவரையர் விளக்கம் சிறப்பாகக் கொள்ளமுடியாது என்று மேலே காட்டப்பட்டது. ஆனால் கல்லாடர் அதே உதாரணங்களை எடுத்துக்காட்டி மயங்கி வருதலில் இன்னொரு முறை உள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார் (கிளவி. 26).

> 'பெரும்பலாக் கோடு, பெரு வழுதுணங்காய் என
> மயங்கியும் வருமாலோ எனின், 'அவை சொல்லுவான்
> கருத்து வேறு; பெரும்பலா, பெரு வழுதுணை எனப்
> பெருமை முதல் மேல் நோக்கி நின்றமையின்'

என்பது அவருடைய விளக்கம் (கிளவி. 26) அது சரியானது; ஒத்துக்கொள்ளக் கூடியது. அண்மை உறுப்பு உறவு ஓர் அடிப்படையை விளக்குகிறது. வலது கிளை என்ற முறையில் அமைந்துள்ளது. ஆனாலும் இங்குப் பொருள் நிலையில் மட்டுமே முதல், சினை என்று மாறி வந்ததாகத் தோன்றினாலும் தொடரியல் நிலையில் 'கோடு தலைச்சொல். பலா அடையாக வந்து அது இன்னொரு அடையை ஏற்றுள்ளது. எனவே தொடரியல் நிலையில் முதல்-சினை என்பதும் சிறப்பு இல்லை. எனவே பொருள் நிலை உறவும் தொடரியல் உறவும் மாறுபடும் என்று மொழியியலில் வற்புறுத்தப்படுகிறது[3]. எனவே அண்மை உறுப்பு உறவு, மொழி அமைப்பின் முழு உண்மையையும் வெளிப்படுத்த உதவவில்லை என்று கருதியே மாற்றிலக்கணக் கோட்பாடு உருவாக்கப்பட்டது.

கல்லாடர், சினை ஓர் அடையும் முதல் இரண்டு அடையும் சேர்ந்து வந்த இன்னொரு வகையான தொடரை எடுத்துக்காட்டி அது ஒரு மயங்கு தொடர் என்றும் அழி வழக்கு (உள்ளபடியே இழி வழக்கு?) என்றும் முதலில் மறுத்துப்

பின்னர்ச் செய்யுளியலில் மட்டும் வரும் என்றும் கொள்ளலாம் என்பார்.

> 'பெருந்தலைப் புல்லாநல்லேறு எனவும் நெட்டிலை விளவின் கட்டெங்கு எனவும் அ) மயங்கியும் வருமால் எனின், ஆ) அவ்வாறு மயங்கக் கூறுவன கண்டன்றே இவ்விலக்கணம் எழுந்தது. இதனால் அதனை அழி வழக்கு என்று மறுக்க. இ) பெருந் தலையினை உடையதும் வெறும் புல்லா நல்லேறும் (உள்ளபடியே. பதிப்பாசிரியரே இங்குக் கேள்விக்குறி போட்டுள்ளார்). வேறு பொருள்கொண்டு இயையுமால் அதுவும் எனின், அவ்வாறு பொருட்கோடல் செய்யுட்கு அல்லது இன்று என்று மறுக்க'

என்பது அவருடைய வாசகம். இங்குச் சினை ஓர் அடையும் (பெரும்) முதல் இரண்டு அடையும் (புல்லா, நல்) சேர்ந்து வந்த புதிய வகையான தொடரை எடுத்துக்காட்டியது சிறப்பானது. அவர் இந்தச் சூத்திர நோக்கில் மயங்கி வருவதாகக் (அ) கொண்டார். வழுக் களைந்து இலக்கணம் அமைத்தல் என்ற முறையிலும், பேச்சு மொழியில் ஏற்படும் வழுக்களைக் களைதல் இலக்கணத்தின் கடமை என்ற முறையிலும் இரண்டாவது (ஆ) கருத்து அமைந்துள்ளது. மூன்றாவது (இ) கருத்து பெருந்தலையினை உடையதும் புல்லாத நல்ல பண்பை உடையதுமான ஏறு என்று விளக்கினால் மேலே குறிப்பிட்டபடி சினை ஓர் அடையும் முதல் இரண்டு அடையும் ஏற்று வந்தது என்று ஆகும். இதுவும் தொடர்நிலை உம்மைத் தொடரே. இரண்டாவது உறுப்பில் (புல்லா நல்லேறு) ஒரு சொல் நிலை உம்மை உள்ளது.




இங்குச் சினையாகிய தலை ஓர் அடையும் முதலாகிய ஏறு இரண்டு அடையும் பெற்றுள்ளன.

ஆசிரியர் கூறிய இலக்கணத்துக்கு மாறாக வந்த பல உதாரணங்களை உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டி, சிறப்புப் பற்றி ஓதினார், பெரும்பான்மை பற்றி ஓதினார் என்று அமைதி

கூறுவார்கள். இந்தச் சூத்திரத்தில் 'மயங்குதல்' என்று கூறியதால் மாறுபட்டு வருபவைகளை மயங்கி வரும் என்று தெய்வச்சிலையார் ஒழிந்த உரையாசிரியர்கள் குறிப்பிடத் தெய்வச்சிலையார் மேலும் சில இடங்களில் அந்தத் தொடரைக் கையாண்டுள்ளதால் அது கோட்பாடு அளவில் சிறப்புப் பெறுகிறது.

### 12.3.3. ஒருங்குதொகுதல்

தொகை என்பது இரண்டு சொல் தொக்கு வருவதுதான் இரண்டு சொல்லுக்கு அதிகமான சொற்கள் சேர்ந்து வரும்போது இரண்டு இரண்டு சொல்லாகச் சேர்த்து தொகும். அதாவது முதல் இரண்டு சொல் சேர்ந்து தொகையாகி அது மூன்றாவது சொல்வோடு தொகும். அந்த உண்மையைச் சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் நேரடியாகக் குறிப்பிட்டுள்ளார்கள்.

சேனாவரையர் கற்சுனைக் குவளை இதழ் என்ற நாலு சொல் தொகையை எடுத்துக்காட்டி, அது கற் சுனை என்று முதலில் தொகையாகி எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய என்பதால் கற்சுனை, என்ற ஒரு சொல் போல ஆகிக் குவளை என்ற இன்னொரு சொல் சேர்ந்து கற்சுனைக் குவளை என்ற தொகையாகி, பின்னர்க் கற்சுனைக்குவளை ஒரு சொல் நீர்மைத்தாய் இதழ் என்ற இன்னொரு சொல்லோடு சேரும் என்பது மேலே விளக்கப்பட்டது. எனவே தான் 'இவ்வாற்றான் அல்லது தொகைமையின் இருசொல் தொகையேயாம்' என்று சேனாவரையர் பொதுமைப்படுத்திவிட்டார். ஆனால் உம்மைத் தொகையில் இரண்டுக்கு மேற்பட்ட சொற்கள் சேருவதை 'மூன்று பெயரும் ஒருங்கு தொக்கன, என்று சேனாவரையர் கூறுவது மொழியியலார் கூறும் பன்மை அண்மை உறுப்புகள் (Multiple Immediate Constituents) என்ற புது வகையைச் சாரும். இங்கும் அந்த முடிபுக்கு வருவதற்கு உம்மைத் தொகையில் மூன்று சொற்கள் சேர்ந்து வரும் இரண்டு இயலுமையை (Possibility) எடுத்துக்காட்டி அவை இரண்டிலும் பொருள் மாறுபடவில்லை என்று கூறியே 'மூன்று பெயரும் ஒருங்கு தொக்கன' என்ற முடிபுக்கு வந்துள்ளார்.

> புலிவிற்கெண்டை என்புழி மூன்று பெயரும் தொகும் என்னாது முதற் பெயர் ஒழித்தும், இறுதிப் பெயர் ஒழித்தும் ஏனையிரண்டும் தம்முள் தொக்கு ஒரு சொல்லாய்ப் பின் மற்றையதனோடு தொகும்

எனின் முன்தொகும் இரண்டற்கும் ஓரியைபு
வேறுபாடு இன்மையானும் அவை மூன்று பெயரும்
ஒருங்கு தொக்கன எனவே படும் என்பது

என்பது சேனாவரையரது வாசகம் (எச்சம். 21) அதாவது புலி + விற் கெண்டை என்றோ அல்லது புலிவில் + கெண்டை என்றோ தொகலாம். அந்த இரண்டு முறையும் ஒரே பொருளை உணர்த்தும்.







ஆனால் பிற உதாரணங்களில் இப்படிப்பட்ட மாறுபட்ட அமைப்பு மாறுபட்ட பொருளையே தரும். உதாரணமாகச் செங்கால் நாரை என்பது செங்கால் என்று சேர்ந்து நாரை என்பதனோடு சேர்ந்தது என்றால் சிவந்த காலை உடைய நாரை என்று பொருள். கால் நாரை என்று சேர்ந்தபின் செம் என்பதனோடு சேர்ந்தால் காலை உடைய நாரை சிவப்பு என்று பொருள்படும். புலி வில் கெண்டை என்ற தொகை அப்படிப் பொருள் மாறுபடாததால் 'மூன்று பெயரும் ஒருங்கு தொக்கன' என்ற முடிவுக்கு வர வேண்டியதாயிற்று என்று கூறியது தருக்க ரீதியிலான சிந்தனையால் அண்மை உறுப்பு உறவில் மூன்றும் ஒருங்கு தொகுதல் என்ற புது வகையை ஏற்படுத்திவிட்டார். எனவே 'ஒருங்கு தொக்கன' என்பதை மொழியியலார் கூறும் பன்மை அண்மை உறுப்புகள் (Multiple Immediate Constituents) எனலாம். அது ஒரு கோட்பாட்டு நிலையில் சிறப்பான கருத்து. அதைக் கீழ்க்கண்டபடி மொழியலார் விளக்குவார்கள்.




*12.4. மயங்கி வருதல்*

சேனாவரையர் இலக்கியத்தில் வண்ணம் + சினை + முதல் என்று வராமல் சினை + வண்ணம் + வினை என்று வரும் உதாரணம் உள்ள அடியையும் அடுத்த அடியையும் காட்டி மொழி அமைப்பு நிலையிலேயே விளக்க முயன்றுள்ளார்.

(கவிசெந் தாழிக் குவிப்புறத் திருந்த)
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவர

வாய்வன் காக்கையும் கூடி
பேஎ யாயமொடு பெட்டாங்கு வழங்கும்

என்ற புறநானூற்று அடிகளை (238:1-4) எடுத்துக்காட்டிச் 'செய்யுளில் மயங்கியும் வரப்பெறும் என்றவாறாம் (சேனாவரையர் முதல் அடியைக் குறிப்பிடவில்லை).

> செவி செஞ்சேவல்... என்னும் பொருள்பட நின்றமையின் வண்ணச்சினைச் சொல் மயக்கம் ஆயின. அஃதேல் சினை அடையாகிய செம்மையும் முதல் அடை ஆயினவாறு என்னை எனின் சினையொடு முதற்கு ஒற்றுமை உண்மையான் அவை முதலொடும் இயைவு உடைய'

என்ற விளக்கம் (கிளவி. 26) சிறப்பானதாகக் கொள்ள முடியாது. இலக்கிய நோக்கில் பார்க்கும்போது - முன்னுள்ள அடியைக் கருத்தில் கொள்ளும்போது, இங்கு ஓசை நயத்துக்காகக் குறிப்பாக - எதுகைக்காக, கவி செந்தாழி (கவிந்த சிவந்த தாழி)/(செவி செஞ்சேவல்) என்று மாற்றப்பட்டுள்ளதோ என்று நினைக்கத் தோன்றுகிறது. அப்படியே 'வல் வாய் காக்கை' என்பது வாய்வல் காக்கை என்று மாற்றப்பட்டிருப்பது பின்வரும் அடியில் 'பேஎ யாய மொடு' என்ற அடியோடு எதுகைத் தொடை (இன எதுகை) அமைத்தற்கே என்று நினைக்க வேண்டியிருக்கிறது. எனவே அவைகளை எதிர் உதாரணங்களாகக் கொள்வது சிறப்பு இல்லை. அவைகளைச் செய்யுள் தொடர் விகாரம் என்று கொள்ளலாம்.

நச்சினார்க்கினியர் அதே உதாரணத்தைக் கொடுத்துச் சேனாவரையருடைய விளக்கத்தை எளிமைப்படுத்திக் கொடுத்துள்ளார்.

> 'மயங்கியும் வரும் ஆயிற்று. சினையொடு முதற்கு ஒற்றுமை உடைமையான் முதலொடும் இயைந்தன'

என்பது அவரது வாசகம் (கிளவி. 26). இந்த விளக்கத்தில் சிறப்பு எதுவும் இல்லை. உண்மையில் மொழி மாற்று என்று கொள்வதே சிறப்பு. செய்யுளில் வந்துள்ளதால் தொடை நயம் கருதியது என்று கூடுதல் விளக்கம் வேண்டுமானால் கொடுக்கலாம்.

### 12.5. மாறி வருதல்

தெய்வச்சிலையார் செவி செஞ்சேவல் என்ற அதே உதாரணத்தைத் தந்து

'முறை மயங்கி வந்ததால் எனின் ஆண்டுச் செஞ் செவி என்பது முறைமாறி நின்றது என்க'

என்பதில் முறை மாறி நின்றது என்ற தொடர் மாற்றிலக்கணத்தின் (Transformational grammar) ஆணி வேரான இடமாற்றம் என்ற கருத்தமைவைப் புலப்படுத்துவதைக் காணலாம். எனவே அது கோட்பாட்டு நிலையில் முக்கியமானது. அது இடமாற்றம் (Permutation) என்ற மாற்றத்தைச் (Transformation) சாரும்.

அவர் இன்னும் இரண்டு இடங்களில் மொழிமாற்று குறிப்பிட்டாலும், அவை ஓர் இடத்தில் இடமாற்றத்தையும் மற்றொரு இடத்தில் பதிலீட்டு மாற்றத்தையும் (Substitution) உணர்த்தும்.

முதல் வேற்றுமையை விளக்கும்போது தொல்காப்பியர், அது கொண்டுமுடியும் சொற்களைப் பொதுமைப்படுத்திப் பொருண்மை சுட்டல், வினைநிலை உரைத்தல், வினாவிற்கு ஏற்றல், பண்புகொள வருதல், பெயர்கொள வருதல் என்று விளக்கியதோடு 'அன்றி அனைத்தும் பெயர்ப் பயனிலை என்றும் குறிப்பிட்டுள்ளார் (வேற்றுமை. 4).

| | |
|---|---|
| பொருண்மை சுட்டல் | = சாத்தன் உளன் |
| வினைகொள வருதல் | = சாத்தன் செல்க |
| வினைநிலை உரைத்தல் | = சாத்தன் சென்றான் |
| வினாவிற்கு ஏற்றல் | = சாத்தன் யாவன்? / யாண்டையன் |
| பண்புகொள வருதல் | = சாத்தன் கரியன் / நெடியன் |
| பெயர்கொள வருதல் | = சாத்தன் வணிகன் / முடவன் |

'அன்றி அனைத்தும் பெயர் முடிபு என்னாது பயனிலை என்றதனால் பயனிலை பெயர்க்கு முன்னிற்றலே அன்றிப் பின்னிற்றலும் ஆம் என்று கொள்க. எடுத்துக்காட்டு : உளன் சாத்தன், செல்க சாத்தன், வந்தான் சாத்தன், யாண்டையான் சாத்தன், கரியன் சாத்தன், வணிகன் சாத்தன், என வரும்'

என்ற தெய்வச்சிலையாரின் முதல் பகுதி வாசகம் எழுவாய்ப் பின்னிறுத்தம் (அல்லது பயனிலை முன்னிறுத்தம்) என்ற கருத்தை ஒத்துக் கொள்கிறது. இதுவும் ஒரு வகையில் தொடரியல் மாற்றம் தான். அப்படி இல்லாமல் அதை இன்னொரு புதுவகையான வினைமுற்று + பெயர் என்ற தொடரியல் வகையாகக் கருதலாம் என்பது சிலர் கருத்து. அதை எடுத்துக்காட்டித் தன்னுடைய இயற்கைக்கு மாறாக வன்மையாக மறுத்துள்ளார்.

'ஈண்டுக் காட்டப்பட்ட உதாரணத்துள்ளுள் வினை பற்றி வருவன எல்லாம் (உளன் சாத்தன், செல்க சாத்தன், வந்தான் சாத்தன்) 1) முற்றுச்சொல் பெயர் கொண்டு முடிந்ததாம், பயனிலை மாறி நின்றன ஆகா எனின், 2) முற்றுச் சொல் எனவே முடிந்த சொல் என்பது பெறுதும், அது பின்னும் மற்றொரு சொல்லை அவாவி நிற்கும் என்றல் பொருந்தாமை யானும், 3)

மற்றுச்சொல் நோக்கா மரபின அனைத்தும்
முற்றிநிற்பது முற்றியன் மொழியே

என அகத்தியனார் ஓதுதலானும், 4) மொழி மாறுதல் இலக்கணமாக எச்சவியலுள் ஓதுகின்றமை யாலும் 5) அது சொல் அறியாதார் உரை என்க'

என்பது தெய்வச்சிலையார் வாசகம் (விவாதத்தில் குறிப்பிடுவதற்காக எண் கொடுக்கப்பட்டுள்ளது). அம்மூன்று தொடர்களையும் வினைமுற்று + பெயர் என்று கொள்ளலாம் என்பது முதல் கருத்து. அதுதான் மாற்றுக் கருத்து. அதனால் பொதுமை மிகுகிறது. பொருண்மை சுட்டல், வியங்கொள வருதல், வினைநிலை உரைத்தல் என்று மூன்று வகை கொள்வதற்குப் பதிலாக வினைமுற்று + பெயர் என்று கொள்வது எளிமையானது. பொதுமையானது என்று அவர்கள் எண்ணியிருக்கவேண்டும். அப்படியானால் அது ஒரு புதுவகைத் தொடரியல் கட்டாக (Construction) அமையும். அப்போது எது சரி என்ற கேள்வி எழுகிறது. அதற்குத் தெய்வச்சிலையார் மூன்று விதமாகப் பதில் அளித்துள்ளார். முதல் கருத்து மாற்றுக் கருத்தான வினைமுற்று+ பெயர் என்ற கருத்தின் குறைகளைச் சுட்டிக்காட்டுவது. அங்கு இரண்டு விதமாக மறுத்துள்ளார். அ) வினைமுற்று என்ற தொடரின் நேர்ப்பொருள் அடிப்படை : முற்றுச்சொல் என்பதே முடிந்த சொல் என்று பொருள். எனவே அது இன்னொரு சொல்லைக் கொண்டு முடிந்தது என்பது பொருந்தாது என்பது (2 ஆவது கருத்து: ஆ) இன்னொரு அறிஞர் கருத்தை மேற்கோள் காட்டுவது. இங்கு அகத்திய சூத்திரம் மேற்கோள் காட்டப் பட்டுள்ளது. (3ஆவது கருத்து) இ) தொல்காப்பியத்திலேயே தன்னுடைய கருத்து கூறப்பட்டிருக்கிறது என்பது (4) ஆவது கருத்து). அதாவது தொல்காப்பியர் எச்சவியலில் (8) பொருள் கோளை மொழிபுணர் இயல்பு என்று குறிப்பிட்டு அதன் ஒரு வகையாக மொழிமாற்று என்று குறிப்பிட்டிருப்பது தன்னுடைய கருத்துக்கு ஆதரவு என்பது தெய்வச்சிலையார் எண்ணம்.

